உ

கணபதிதுணை

மறைஞானசம்பந்தநாயனார்

அருளிச்செய்த

# சிவதருமோத்தரம்

மூலமுமுரையும்

இவை

திருநெல்வேலி

சாலிவாடீசுரஓதுவாமூர்த்திகளால்

பலபுத்தகங்களைக்கொண்டுபரிசோதித்து

திருநெல்வேலி

அம்பலவாணகவிராஜரவர்கள்

கு சிவராமமுதலியாரவர்கள்

புதூர் வள்ளிநாயகம்பிள்ளையவர்கள்

இவர்களது

முத்தமிழாகர

அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டன

பிரபவ௵ மார்கழி௴

௧௮௬௭ ம் ௵ டிசம்பர் ௴

உ

சிவமயம்

# திருநெல்வேலி

# சாலிவாடீசுரவோதுவாமூர்த்திகளால்

இயற்றிய

## நிலைமண்டிலவாசிரியம்

திருவளர்கமலத் துருவளர்பொகுட்டினில்
வீற்றிருந் துயிர்களைத்தோற்றல்செய்வேதனுஞ்
சக்கரம்விரும்பித்தாரைசாத்துமெட்
டக்கரத்தமைந்தவச்சுதமூர்த்தியும்
வேண்டியபொருளைவிரும்பிக்கொடுக்குஞ்
சேண்டிகழ்கற்பகச்செழுநிழற்கோவு
முப்பான்மூன்றுகோடிமுதல்வருந்
துப்பார்முனிவருமொப்பில்சித்தரு
மிருக்குமுதலாவிருக்குநான்மறைகளுங்
காமிகமுதலாத்தோமிலாகமமு
மந்திரமுதலாத்தந்தவாறங்கமுஞ்
சைவமாதிமெய்வருபுராணமும்
பன்னருச்சனைபதிதொறும்பயின்று
நன்றமத்தைநாவாலோதியு
மிந்நாள்காறுமியற்கையிஃதென்
றுள்ளந்தானுவானுள்ளியோதற்
கெள்ளளவேனுமியையாதென்றுங்
குணமுங்குறியுங்குறிக்கக்குறிபடா
வணமடியிடைமுடிமருவுதலின்றி
யொப்புமுயர்வுமொருவியொளிருஞ்
செப்பருஞ்சோதிச்சின்மயவடிவாய்ப்
புராதனபூரணபுண்ணியபுனித

நிராமயமாகியநிட்களசிவமே
விண்ணுலகத்தும்விரிநீர்சூழ்ந்த
மண்ணுலகத்துமற்றெவ்வுலகத்து
மண்ணியமெய்ம்மையடியவர்தமக்கு
மெண்ணிலடங்காவிச்சைகாரணத்தாற்
கண்ணியகாமக்குரோதலோப
மோகமதமாச்சரியமூழ்கி
யூகங்குறைந்துநல்லொழுக்கந்தவிர்ந்து
மையுண்கண்ணியர்வலையிற்பட்டு
நைவுண்டுகிடக்குநாயினுஞ்சிறிய
வென்போலியர்க்குமின்னருள்புரிந்து
பொன்போகமுதலாப்பொருந்துபயன்கள்
வேண்டுவார்வேண்டுவதாண்டாண்டுதவி
யிருவினையகற்றியிணையிலாவின்ப
மருவியபேரானந்தவாழ்வினை
யருளுதற்காகத்திருவுளங்கொண்டு
சகளமுநிட்களசகளமுமாகிப்
பாண்டிநாடேபழம்பதியென்னுங்
காண்டற்குரியகன்னிநாட்டிற்
புத்தியுஞ்சித்தியுநித்தியமுதவிக்
கருணைபெருகியபொருனைநதியுந்
திங்கண்மும்மாரிபெய்மங்குன்முழவதிரக்
குயிற்குலம்பாடமயிற்குலமாடச்
சாலிக்கதிர்கள்சாமரையிரட்டப்
பாலிற்றிகழ்வளைபாற்றொலிதிரட்டக்
கொன்றைபொன்சொரியப்புன்குபொரிதூவ
மீயுர்பாசடைமிளிர்குடையெடுப்பச்
சேயிதழ்த்தாமரைச்செழுந்தவிசிருந்து
வளமையன்னமிளமைப்பேடையை

போதாதென்றுளத்தாதரவுடனப் *
பாண்டியனன்றுவேண்டவளர்ந்தும் *
வேதசன்மாவாமாதிசைவ *
னில்லத்தேற்றநெல்லைக்கொண்டு *
கோயிலினழகார்வாயிலுளுலர்த்திச் *
சிந்துபூந்துறைக்கந்தநீர்கொணர்வா *
னேகுற்றுழிச்சூன்மேகம்பரந்து *
சோனைமாமழைசொரியக்கண்டு *
நானினியென்செய்கோநயமுறுபூசைக் *
கென்றுவிரைந்துசென்றுபார்க்கவச் *
சாலிக்குவேலிகோலுநீர்கண்டு *
நெல்லுக்குவேலிசெய்நின்மலனேயெனச் *
சொல்லித்துதிக்கநல்லருள்கொடுத்தும் *
பிரமாண்டத்துக்கொருமாதாவாங் *
காந்திமதித்தாய்தேர்ந்துசிவாகம *
முப்பத்திரண்டறமிப்படியியற்றிக் *
கம்பைமாநதியினைம்புலனடக்கிப் *
புரிதவங்கண்டுதரியாதுவந்து *
வாலியநிறத்துமால்விடைமீது *
காட்சிகொடுத்துக்கலந்துமணந்தும் *
பூட்சியிற்பொலிந்துபொருந்துமுயிர்க *
ளீட்சிசெய்வினையினீங்கியின்புற் *
றிம்மைமறுமைவீடென்னுமுப்பயன்களுந் *
தம்மகம்பொருந்தச்சந்தததான *
நாதபாண்டியநீதமன்னவனைய் *
மறுவறுதேவவருடமூவுலகு *
மறுபதிறைபிரமாண்டருள்செய்துங் *
கலைமுழுதுணர்ந்தமலையமாமுனிக்குப் *
பணக்கோலமறைத்துமணக்கோலங்காட்டியுந் *
தாருகவன்த்தவர்ச்சேருமகங்கெடக் *

கங்காளவேடனாய்ச்செங்கைபலியிரந்து
மேலுமனந்தலீலைகள்புரிந்து
மெழுந்தருணெல்லையெம்பிரானருளா
லித்தலத்திதுகாறெம்மனோரியற்ற
வுத்தமக்கருமமுனாற்றுபுசெய்வா
னெத்தலத்தோர்களுமேத்திடுகவிஞனா
முத்துக்குமாரசுவாமிமுன்புசெய்
மெய்த்தவத்துதித்துவிளங்கிடுபாலன்
றீனரக்ஷகராந்தானநாதருக்கும்
வேந்திமவான்றவக்காந்திமதிக்கும்
பொற்பகம்பிரியாக்கற்பகங்கமல
வாகனமமைத்துமாகனம்பொருந்திய
சுந்தரமூர்த்திச்செந்தமிழ்க்கவிஞனாங்
கனிட்டபிதாமனத்தினிட்டமாய்நடப்போன்
குடக்கநிறைந்தகொள்கைபோன்றென்று
மடக்கமும்பொறையுமமைந்திடுசீல
னைந்திலக்கணமுஞ்சந்தம்விரும்பி
வந்துகேட்குநர்க்குவழங்குமம்பல
வாணனெனும்பெயர்பூணுகவிஞனும்
மலைக்கொடிமலைபுணாமுலைச்சுவடணிந்து
மாவடியமர்ந்தசேவுயர்கொடியன்
றொண்டைநாடிச்செய்தொண்டைநாட்டம்
புலியூர்சோலைப்புலியூர்க்கோட்டத்
தென்றும்புகழ்மிகுகுன்றத்தூர்வாழ்
கோக்குழாம்பரவுஞ்சேக்கிழார்கோத்திரன்
வேதாந்தஞ்சித்தாந்தம்விளங்கிடு
பேதாபேதப்பிறிவறிந்தஈசர்க்
கமைச்சனாந்தியாகராசனருந்தவத்
தமைப்பினிலுதித்தவழகியசற்குணன்

வேணுவனத்தமர்தாணுவாம்பொருண்
மறையவர்சிறார்க்குத்துறைபலவாகிய
வேதமுதற்கலையோதுவித்தருளுமத்
திருவிளையாட்டைப்பெருவிருப்புற்றாச்
செய்திகபரமுறாய்திறம்பெற்றோன்
கல்விவினோதன்கலந்தநட்பினர்க்குக்
கவராமனத்தொடுகருதியதுதவுஞ்
சிவராமனெனுஞ்சீரபிதாமனும்
மதுவூர்சோலைப்புதுவூர்மருவு
மிராமசுவாமியெனும்பெருவள்ளல்
தராதலத்துவந்துசெய்தவப்பயக்காதலன்
முறுக்கலர்சோலைக்குறுக்குத்துறைநதித்
திருவுருமாமலைமருவியகுமரன்
பச்சைசாத்தியெழுந்தருள்பவனியை
முச்சகம்புகழச்சச்சையன்பாற்செய்
சுப்பிரமணியனைப்புநற்கனிட்டன்
அரியகலைகளகத்தமைவுறப்பயின்
றரியமாந்தர்க்குணர்த்தவல்லவ
னுள்ளிநாடோறுமுறவினர்க்குதவும்
வள்ளிநாயகமாகியமகிபனு
மொத்துத்தம்பொருளுத்தாஞ்செலுத்துபு
வுத்தமக்கருவிகளித்தலம்வரவழைஇ
முத்தமிழாகரவித்தகவச்சுக்
கூடமென்றியற்பெயர்குனித்துநிறீஇச்
சிவதருமோத்தரவுவமையிலுரைமுத
லிலக்கணமிலக்கியந்தலக்கண்விளக்கிய
வச்சுக்கூடமறமுதற்பயன்கொடுத்
திச்சகத்தென்றுமினிதுமல்குகவே

நிலைமண்டிலவாசிரியமுற்றும்.

அகராதிமுற்றும்



உ

சிவமயம்

# சிவதருமோத்தரவுரை

## சிறப்புப்பாயிரம்

### கடவுள்வாழ்த்து



### கணபதிவணக்கம்

மலைக்குமகள்பெற்றமகனைக்கயமுகத்தனைமனத்தெழுதியா ※
னலற்பிணிபிறப்பறவணுக்களையகத்தியமுனிக்கருளிறை ※
னுலப்பில்கருணைக்கடலுருத்திரனுருத்தனிலுதித்தகுமா ※
※ னிலக்குமியலைக்கவியினைக்கவுமுரைப்பனுலகிட்டமுறவே ※

என்பது — யான், மலையரையன்மகள்பெற்றமைந்தனாகியயானைமுகத்தையுடையவிநாயகனைமனத்திலேதியானித்துவற்றாதகிருபாசமுத்திரமாகியவுருத்திரனது திருமேனியிற்றோன்றியகுமாரக்கடவுளானவன்றனதருளினாலான்மாக்களுக் காணவாதியாலுண்டானபிறவிநோய்தீர்த்தற்பொருட்டகத்தியமகாவிருடிக்குபதேசித்தசிவதருமோத்தரத்தைக்கலிவலிகெடவுலகங்கதிபெறவுமுரையாநின்றேனென்றவாறு —யானென்னுமெழுவாயுரைப்பலென்னுமல்வீற்றுத்தன்மைவினைமுற்றுடன்முடிந்தது - அணுக்களையென்னுமையுருபு - ஈண்டுநான்கனுருபாய்மயங்கிற்று.

### சிவபெருமான்வணக்கம்

திருமாலும்போதனுந்தேவருமாமுனிவருமோசெறிந்துபோற்ற ※
மருவாரும்பொழிலிலவுந்தில்லைமணிமன்றுடன்மகிழ்வான்றனை ※
யுருவாகித்தானுயிர்கட்குருவாகியளித்தடக்கியுய்யச்செய்யும் ※
பெருமானைநிருமலனைச்சேவனையடிபணிந்துளத்திற்பேணுவாமே ※

---

※ இலக்கல் - விளக்கல் - ஈண்டுபதேசப்பொருட்டாய்நின்றது

எ - து — நாரணனும்பிரமாவுந்தேவருமுனிவருநெருங்கிநின்றுதுதிசெய்யமலை நிறைந்தசோலைகள் சூழுந்தில்லைமணிமன்றின்கணின்று நிருத்தஞ்செய்யமகிழ்வோனுமாய்த்தானே திருமேனிதரித்தான்மாக்களைச்சிருட்டித்துத்திதித்துச்சங்கரித்தநுக்கிரகஞ்செய்யும் பெருமானுமாயநாதிமலமுத்தனுமாயிருக்கிற சிவனையவனது சீபாதகமலத்தில்யாம்வணங்கியெமதுள்ளத்தின்கட்டியாணிப்பாமென்ற வாறு. ஓகாரம்-அசைநிலை [க]

சின்மயனைச்சிவனைமலவலிதொலையவிஞ்ஞானகலர்க்குஞ்செப்புந் \
* சொன்மயனைத்துகளிலியைத்துலையிலியைப்புலியரவுஞ்சுரர்க்கொப்பாரு \
பொன்மயனும்புகழவருள்புரிவானையனைத்துயிரும்பொருந்திப்பேதுந் \
மின்மயனைப்பதம்பணிவாரொணியவர மெணியபடியெய்...வாரோ. \

எ-து - ஞானமயனுமாய்மலவலிகெடப்பிரணவர்முதலிய ✠ விஞ்ஞானகலர்க்குமருளிச்செய்ததிவ்வியாகமத்தைவடிவாயுடையனுமாய் மலரகிதனுமாயொப்பிலாதவனுமாய்வியாக்கிர பாதபதஞ்சலிகளுந்தேவர்களுக் கொப்பாகியதில்லை மூவாயிரவருமிரணியவன்ம நாயனுரும்பணியவவர்களுக் கநுக்கிரகஞ்செய்வோனுமாய்ச்சருவான்மாக்களிடத்து மிரண்டறவியாபித்துப்பேதமற்றிருப்போனுமாயிருக்கிறசிவனையவனது சீபாதகமலத்திற்பணியுமவர்கள் கருதினவரத்தைக்கருதினபடியேபொருந்துவர்களென்ற வாறு.

விஞ்ஞானகலர்க்குமென்றவும்மையால் மண்டலர்முதலியபிரளயாகலர்க்குமெனவறிக [உ]

## சத்திவணக்கம்

அப்பாலைக்கப்பாலைக்கப்பாலாயறிவரியவமலைதன்னை *\
யெப்பாலுந்தானுகித்தொழிலைந்துமியற்றுந்தேவியற்றுவாளை *\
முப்போதுமலர்தூவிமுடிசாய்த்துமனத்தகத்துமுன்னுவாரைத் *\
தப்பாதேபிறப்பறுக்குஞ்சிவகாமசவுந்தரியைப்பணிவாந்தாண்மூன் *

எ - து, மாயைபெருமாயையெனக்கூறியவிரண்டினுக்குமப்பாலாயான்மாக்களறிதற்கரிதாய்மலமில்லாத சிவசத்தியுமாய்ச்சருவவியாபியுமாய் ஐந்தொழிலுந்தான்செய் யாமற்றன்சன்னிதிமாத்திரத்திலே காரியப்படுத்துமவளுமாய்த்தனது சீபாதங்களின் மூன்றுகாலங்களுமலர்களைத்தூவி யிதையகமலத்திற்றியானித்து

*சொல்லென்பதாகுபெயராயாகமத்தையுணர்த்திற்று

✠—விஞ்ஞானகலர். பிரளயாகலர். சகலரென்னுமூவகையான்மபேதங்களைச்சித்துவப்பிரகாசம். ௩௰௭. ம்பாட்டிற்கண்டுகொள்க

வணக்கஞ் செய்யுமடியாருடையபிறப்பை நிச்சயமாகவறுப்பவளுமாயிருக்கிற சிவகாமசவுந்தரியையவளது பாதகமலத்தின் முன்யாம்பணிவாமென்றவாறு.

✠ அப்பாலைக்கப்பாலைக்கப்பாலானையாரூரிற்கண்டடியேனயர்த்தவாறேயென்ப தனாலறிக. [௩]

### காரைக்காலம்மைமுதலாயினோர்வணக்கம்

ஆலவனத்தமலனடங்கண்டுவந்தகாரைக்காலம்மைதன்னைப் *
பாலருந்தியுமைமுலையிற்பதிகவிதம்பலபகர்ந்தபாலன்றன்னைச் *
சூலையினைச்சிவனருளாற்றுடைத்தானைத்தடுத்தாண்டான்றோழன்றன்னை *
மாலைமணிவாசகனைமற்றையடியவரையுமுடிவணங்குவாமே *

எ-து. திருவாலங்காடென்னுந்திருப்பதியின்கண்ணின்றும் பரமசிவன்முஞ்சமாமுனிகார்க்கோடராகிய நாகராசாவிவர்களுக்குத்திருநடஞ்செய்யுமூலதாண்டவத்தைத்தெரிசித்துச்சந்தோஷித்தகாரைக்காலம்மையையுஞ், சீகாழியிற் பெரியநாயகியார்திருமுலைப்பாலையமுதுசெய்ததனாற்றிருஞானமுண்டாய்ப் பலசந்தத்தாற்றிருப்பதிகங்களையருளிச்செய்ததிருஞானசம்பந்தநாயனாரையும், வீரட்டேசுரனருளினாலேசூலைநோய்நீங்கியதிருநாவுக்கரசரையுந், தடுத்தாட்கொள்ளுஞ்சிவனுக்குத்தோழனான சுந்தரப்பெருமாணாயனாரையும், ரத்னமாலைபோன்றவாசகத்தையுடையவாதவூராளியையுந், தண்டேசுரர்முதலாகியபத்தர்களையுமவர்கள்பாதத்தில்வணக்கஞ்செய்வாமென்றவாறு. [௪]

### வாழ்த்து

வானவரும்பூசுரருமாதவருங்கோதனமுமன்னிவாழ்க *
கானமதினடமாடியடியார்க்கும்பதமருந்துங்கருணையாரு *
மூனமறவோங்கிடுகவுலகினைமனுமுறையாலோம்புமன்னர் *
தானவினையொடுதழைகதிங்கடொறுமும்மாரிபொழிகதானே *

எ-து. வெளி,சூத்திரம், வெளிப்படுசொல்லேகிளத்தல்வேண்டா வெளிப்படவாராகிளத்தல்வேண்டுமென்பதனாலறிக, சூ- கடவுண்முனிவரும்பசுவும்பார்ப்பாரு

---

அப்பர்

✠ மெய்ப்பால்வெண்ணீறணிந்தமேனியானை வெண்பளிங்கினுட்பதித்தசோதியானை, யொப்பானையொப்பிலாவொருவன்றன்னை யுத்தமனை நித்திலத்தையுலகமெல்லாம்,வைப்பானைக்களைவானை வருவிப்பானைவல்வினையேன்மனத்தகத்தேமன்னினானை, யப்பாலைக்கப்பாலைக்கப்பாலானையாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே.

மரசருமறையு நாடுமென்ப என்றார் தொல்காப்பியனாராதலானிக்கருத்தைப்பற்றி யிவ்வாசிரியரும்வாழ்த்துக்கூறியதெனவறிக. [illegible]

## அவையடக்கம்

சீரியருஞ்சீரியரையல்லாரைத்தனச்சிறுமைசெப்புவாரோ ※
ஆரியருமாரியரையல்லாரைக்குலப்பழுதுமறைவரோ ※
வீரியரும்வீரியரையல்லாரைவலியின்மைவிளம்புவாரோ ※
சூரியருஞ்சூரியரையல்லாரைச்சொற்றவறுங்கூறுவாரோ ※

எ-து தனவான்களுந்தனமில்லாதவர்களைத்தனச்சிறுமையுடையரென்று சொல்லுவர்களோ, சாதிமான்களுமாய்ப்பூச்சியருமாயிருக்கிறவர்கள் சாதியில்லாதவர்களைக்குலப்பழுதுஞ்சொல்லுவர்களோ, வெற்றிப் பாட்டினையுடையவர்களாகிய வீரத்துவமில்லாதகோழையரை யேழையென்று சொல்லுவர்களோ, அதுபோலப்பஞ்சவிலக்கணமுதலியவற்றைக்கற்றுக்கூரிய புத்தியையுடையவர்கள் அஃதில்லாதவெம்போல்வார்சொன்னசொல்லுக்குங் குற்றஞ்சொல்லுவர்களோ சொல்லார்களென்றவாறு.

ஆரியர்அறிவுடையோர் - ஏகார - ஓகாரங்கள் - எதிர்மறைக்கண்வந்தன கு. அவையடக்கியலேயரிறபத்தெரியின்; வல்லுநர்கூறினும்வாய்மைகொளமினென், றெல்லாமாந்தர்க்கும்வழிமொழிந்தன் றேனென்றார்தொல்காப்பியனார். [illegible]

## இந்நூற்சிறப்பும்வரலாறுந்தொகுத்துணர்த்துகின்றார்

ஆதிநடுவந்தமிலானமலனுயிர்க்கழுக்கறுக்கவறைந்தவாய்மை ※
வேதமுதலுணர்ந்தகுகன்விரைமலர்த்தாளகத்தியன்றன்சிரமேற்சேர்த்த ※
போதகனேவனைத்துயிர்க்கும்புலமாக்குநெறிபுகலவென்னவக்கு ※
ஞேதியருள்சிவதருமோத்தரநூலைத்தொகைசெய்துரைப்பாமியாமே ※

எ-து. யாம், முதனடுவீறில்லாத நின்மலனுயிர்களுக்குள்ள பாசங்களையறுக்கையின் பொருட்டருளிச்செய்த வேதாகமமுதலியவற்றின் ஞானத்தையுணர்ந்த சுப்பிரமணியனுடைய மணம்பொருந்திய செந்தாமரைமலர்போன்ற பாதங்களைவணங்கிஞானாசாரியனே சருவான்மாக்களுக்கு மறிவுண்டாகும்படி திருவுளம்பற்றுவாயாக வென்றகத்தியன்விண்ணப்பஞ்செய்யவதற்கவ்வாசிரியன்திருவுளம்பற்றிய சிவதருமோத்தர மென்னுஞ்சிவாகமத்தைச் சுருக்கித் தொகுத்துத்தமிழாற்சொல்லாநின்றோ மென்றவாறு.

தொகைசெய்துமென்றவும்மையால்,வகுத்துமெனவறிக அகத்தியனுக்கிய

ள்ளோராய்வந்தூநினது திருவடிகளைத்தெரிசிக்கில் அவர்களடையும்பலமேன்னவென்
சொல்லுகேனென்றவாறு [௯]

என்றினியவாய்மைகளியம்பியிறைகூற ॥
வன்றுமைதனக்கிலநீடியுமறிந்தா ॥
யின்றுயிர்தனக்குறுதிநீயருளெனக்கே ॥
யொன்றியருணின்றமையிலுன்றொடிரவோனே ॥

எ. து. வாரீர்மகாபெலத்தையுடையவரே மூன்றுட்பார்வதியார்க்குப்பரமே
சுரன்றிவ்வியாகமங்களையருளிச் செய்யவப்பொழுதெல்லாவற்றையுங்கேட்டறிந்தீ
ர் தேவரீர்சிவனதுகிருபையுடன்பொருந்தியிருக்கையாலிப்பொழுதுயிர்க்குறுதியா
னநூலையெனக்குத்திருவுளஞ்செய்வீராகவென்றவாறு [௰]

என்றுமுனிசண்முகனையேசறவுபேசி ॥
நின்றுபினுமாதரவுநீட நிறைகூட ॥
வன்றுவினவுந்திறமனைத்தையுமடித்தே ॥
யின்றறைவல்பாசவிருளீடறவிளைத்தே ॥

எ. து. அகத்தியமுனியானவர்இப்படியேகருதிக்கந்தனைத்தோத்திரஞ்செய்து
நின்றுபின்புசிரத்தையானதுமேன்மேலும் வளர்ந்துசெல்லவுமிவனுடையவ
க்கத்துடன்பொருந்தியன்றுவினவியதிறமெல்லாவற்றையுங்கிசாரித்தாள்மாக்கள்
பாசவிருண்மெலிந்துகெடும்படிக்கிப்பொழுதுசொல்லாநின்றேனென்றவாறு [௰௧]

உத்தமசுரர்க்கதிபனூனவிளையோட்டும் ॥
வித்தகவிசாகமயில்வாகனவிண்மேவும் ॥
புத்தியொடுமுத்திதருபோதகபுலானுண் ॥
சத்திதரயான்வினவல்கேட்டுவிடைசாற்றாய் ॥

எ. து. வெளி [௰௨]

தக்கசிவதன்மநெறிதன்றனளிதாய ॥
மிக்கசிவதன்மநெறியாதுவிபரீத ॥
முக்குணர்வுதித்திடவுளாக்குமுளையாதோ ॥
நக்கனடியர்ச்சனையும்யாதிவைநவிற்றாய் ॥

எ. து. தகுதிப்பாட்டினையுடையசிவபுண்ணியங்களுக்குள் சிறந்தனவாகி
தாய மிகுந்தபலத்தைக்கொடுக்குஞ் சிவதன்மத்தின் முறைமையாது, வாக்கியம்

களைத்தியானஞ்செய்துபின்பு முனிவரனே நின்மலனாகியசிவன் பக்குவான்மாக்களிற்சிறிதுபேர்சிவதன்மங்களையறிந்தனுட்டித்ததனாற், சிவலோகத்தையடையவும் அதிபக்குவரிற்சிவஞானத்தினாலே யாணவமுதலியவாதையைப் போக்கித்தற்சொரூபதெரிசனப்படுத்தனது திருவடியையடையவுஞ், சிருட்டிகாலத்திற் சிவனருளிச்செய்தகாமிகமுதலிய திவ்வியாகமமிருபத்தெட்டினுட் சந்தானசருவோத்தமென்னுமூலாகமத்தினுபபேதமாகிய ஈசானஞ். சிவதன்மம் சிவதருமோத்தரம் திவ்வியப்புரோக்தம் குபேரமெனக்கூறியவைந்தினுட் சிவதருமோத்தரமென்னுமுபாகமத்தை ஐயந்திரிவுநீங்கயாஞ் சொல்லாநின்றேமதனைக் கேட்பாயாகவென்றவாறு.

மலமுமென்றவும்மையாற் கன்மமாயையுமெனவறிக -ஏகாரம்- ஈற்றசை இஃதுபபேதமென்பதனை ஆகமத்திற்சருவோத்தத்துபபேதமெனப் பின்னர்க்கூறுகின்றார். [ரு]

சூ. வணக்கமதிகாரமென்றிரண்டுஞ்சொல்லச்சிறப்பென்னுபாயிரமாகுஞ்சீர், ஆயிரமுகத்தாலகன்றதாயினும் பாயிரமில்லதுபனுவலன்றே- என்பதனாற்பாயிரமுரைத்துநூலுரைத்தன்மரபெனக்கொள் க-யாதாமோர்நூற்குப் பொருளுரைக்குங்கால் காண்டிகைவகையானுமுரைவகையானுமுரைக்கப்பெறும் - ஈண்டிந்நூற்குக்கூறியதியாதெனில்-சூ - சூத்திரத்துட்பொருளன்றியுமியாப்பின் றியமையாதியல்பவையெல்லாமொன்றவுரைப்பதுரையெனப்படுமே-பொழிப் பேயகலநுட்பமெச்சமென்றப்பானான்கேயுரைக்குறுப்பாகும் -பொழிப்பேபொருளை யொருப்படுத்துரைத்தல், விரித்துரைதானேயகலமென்ப நுட்பமப்பொருட் கேற்பவுணர்த்தல்.உய்த்தபொருளாயகன்று நிற்பதனையெடுத் துரைப்பதுவேயெச்சமாகும்,இதனிற்பொழிப்பென்பது, தொகுத்துணர்த்தல், அகலமென்பது, விரித்துணர்த்தல், நுட்பமென்பது கடாவிடைகூறல், எச்சமென்பதுகடாவறத்துணிந் தபொருள், இதனுளொரோவழியாற்சிறப்புப்பாயிரங்கூறியதெனவறிக.

## முதலாவதுபரமதருமாதியியல்

இவ்வோத்தென்னபெயர்த்தோவெனின்,பரமதருமமாகியசிரத்தைமுதலியவிதியைக்கூறுகையாற் பரமதருமாதியியலென்னும்பெயர்த்து - சூ. இயலேசாயலுந்தமிழ்நடையுமாகும் என்பதனாலிதனைத்தமிழ்நடையாற் கூறுதலாலியலென்றார், மேலித்தலைச்செய்யுளென்னுதலிற்றோவெனின் றுத்தமுறையானேசிவதருமத்துக்குமூலஞ்சிரத்தையென்றுணர்த்துதனுதலிற்று.

ஆதரவேபரமானவறமதாகுமாதிநடுவெந்தமிவற்றனைத்துமாகு ※
மாதரவற்றவரீகையறமேயாகாதாதலினலாதரவேமூலமாகு ※
மாதரவேபிரகிருதியான்மாவீசனெனும்பொருளுமறிவிக்குமமலன்றுளு ※
மாதரவேயடைவிக்குமாதலாலேயனைத்தினுக்குமாதரவேமூலமாமே ※

எ - து - வெளி, சிரத்தைக்குப்பரியாயப்பெயர் பத்தியெனவும்பாவமெனவும் பரமப்பிரீதியெனவுஞ் சிவதன்மத்தினொருப்பாடெனவும்பிரதிபத்தியெனவும் ஐந்துவிதப்படும்அவைகளையாண்டாண்டுவந்துழிக்காண்க. ஆதரவு-எ-துசிரத்தை [யசு]

மேலதனைவற்புறுத்தியுணர்த்துகின்றார்

மகவினையாலாகத்தின்வருத்தந்தன்னான் மாநிதியான்மற்றுமுளபொருள்களாலுந், தகைபெறுவானவராலுங்காதலின்றேற்சாதிக்கப்படுவதலத்தருமந்தானே, யுவகையுறவாதரவாற்சிறிதேதேனு மூதவியிடுமறமதனும் பெரிதுண்டாகு, மகமெகலுமாதரவேயரியபேறென்றறியாதாரென்பெறுவரன்றேவன்றே.

எ - து யாகாதிகன்மத்திலேயாதல்கிருச் சிரசாந்திராயணமுதலியவற்றாற் சரீரத்தைவாடுதல்பண்ணியாதல் மிகுந்ததிரவியத்தாலாதல் நவரத்னமுதலியபொருள்களினாலாதல்சிரத் தையில்லாதவிடத்துத்தகைமைபாடுடையதேவர்களாலுஞ்சிவதன்மங்கள்சாதிக்கப்படுவதல் லயாதொருவர்சிரத்தையுடனேயற்பமேதாயினுந்தானஞ்செய்யிலதனாலேமிகுந்தபலத்தைக்கொடுக்குந்தன்மையுண்டாம் ஆதலான்மனநெகிழ்ச்சியுடையவாதரவே பெறற்கரியபேறென்றறியமாட்டாதார் என்னபலத்தையடையப்போகிறார்கள் ஐயோஐயோவென்றவாறு.

வானவராலும்பெறற்கரிதெனவேயேனையோராலுஞ்சாதிக்கப்பெறாதென்பதாம் - ஏகாரம் - ஈற்றசை அன்றேவன்றே எ-துஇரக்கத்தின்கண்வந்தகுறிப்பு [யஎ]

சிவவாக்கியத்தினதுவிசிட்டமுணர்த்துகிறார்

முனிவரனேசிவதருமமூலஞ்சொன்றேமொழிந்திடுவெவ்வாக்கியங்கேண் மோகம் போகப், புனிதமுறமனமொருமைப்புத்திதானும்பொய் யகலமெய்யகலப்பொள்ளலாக்கைத், துனி தொலையத்தனையினைவிற்சோதிபாதங்கூ டிடச்சிரம் படர்ந்துதொடர்ந்துநின்ற, வினைவிளையவிலையுறவேகே ட்பார்தங்கள்விளக்கெனமெய்ப்பொருளையதுவிளக்குமுள்ளே.

எ - து- வாராய்முனிகளுக்குச்சிறப்பினையுடையவனே சிவதன்மத்துக்குச்சிர த்தைதானேமூலமென்றுசொன்னேனுஞ், சிவனருளிச்செய்தசிவவாக்கியத்தையாசை யுடன் கேட்போருடைய சுகதுக்கங்கண் முற்றுதலாலுண்டாகியமோகங்கெடவு, மனங்கவராது நிச்சயிப்பிக்கும்புத்தியுமென்னவே யந்தக்கரணங்கள்சுத்திபெறவு ம், பொய்யானதவறைப்பொருந்தாமல்விட்டுப்போகவுமெய்யானதவறிடத்திற்பொ ருந்தியெங்கும்பரம்பவு, நவத்துவாரத்தினையுடையசரீரத்தையெடுக்கும் துக்கமொ ழியவுந், தனக்கொப்பொருவருமில்லாதசிவனது சிபாதத்தைத்தலையிற்றரிக்கவும், பிரவாகரூபியாயசெனனங்கடோறுந், தொடராநின்றகன்மக்ஷயம்பிறக்கவும், விள க்கானதுவிசுவத்திற்பதார்த்தங்களை விளக்குவதுபோலப்பக்குவான்மாக்களுடைய விதையகமலத்திற்பதிபதார்த்தமுதலியபொருள்களை விளக்கவு, மந்தச்சிவவாக்கி யத்தைச்சொல்லாநின்றேமதனைக்கேட்பாயாகவென்றவாறு. [௰.௫]

கபிலர்பதஞ்சலிமுதலாயினோர்வாக்கியங்கள்பிரமாணமல்லவோவெனினவர் கண்மலத்தோடு கூடினவர்களாதலாலவர்கள் வாக்கியம் ஆப்தமானபிரமாணமல் லவாதலாற்சருவஞ்ஞனசிவனது திருவாக்கேபோகமோக்ஷங்களைக் கொடுக்கு மென்றுணர்த்துகின்றார்.

அமலவரனருளியசொல்வாக்கியமேயாதுதானருக்கத்தாலக்கரத்தாலதி கமற்பஞ், சமலருரையதுபோலவிபரீதஞ்சிறிதுஞ்சாற்றுதேயுள்ளபடி சாற் றுஞ்சாற்று, மமலனையுமணுக்களையுமண்டபேதமனைத்தினையுமறிவிக்குமாத லாலே, பவமொருவுநெறிதன்னைப்பயக்கும்போகம்பாலிக்குந் தானமுதுய்ப்ப கர்தலாலே

எ - து மலமில்லாதசிவனருளிச்செய்ததிருவாக்கேவிசிட்டமானவாக்கியம், அந்தவாக்கியமானதெழுத்தினாற் சுருக்கமும்பொருளினாற்பெருமையுமாயிருக்கு, மஃதன்றியிராகத்துவேஷத்துடனே கூடினவான்மாக்களுடையவைபோல விபரீதஞ் சிறிதுஞ்சொல்லாமலுள்ளபடியே சொல்லுமஃதன்றிப்பதியையுமான்மாக்களையு ம்பாசமாகிய வண்டபேதமனைத்தினையுமறிவியாநிற்குமதன்றியுமனுபவிக்க வே ற்றைச்சொல்லுகையாலே போகத்தையுங்கொடுக்கு, மந்தப்போகம் போசித்துத் தொலைந்தபின்னர்ச்செனனமரணப்பட்டுழலாமற் பரமமானமோக்ஷத்தையுங்கொ டுக்குமென்றவாறு.

உள்ளபடியேசொல்லுமதியாதெனில்-சூ-பா-கணிதத்து மற்றுந்துர்க்கணா

கசடின்மை, யெனுஞ்சனிறுபோலமற்றெல் லாஞானவுரிகவாக்கியமாவது* ஆகாங்க்ஷைமுதலியவிலக்கணமுடையது. [௰௧]

இங்ஙனஞ்சிவவாக்கியப்பிரமாணங்கூறியநூலுட்சொல்லுமந்திரத்தின் விசிட்டமானமந்திரமீதென்றுணர்த்துகின்றார்

ஆதிதனிலோமென்னும் பதமதாகவந்தமதிற்சிவாயவொலி யீவாங்கு நிற்க, வோங்கியவொரெழுத்தினையுமுடைத்தேதாதிநமவோமென்னும்பதப்பொரு டானுயிர்கட்கெல்லாம், போதகனாய்ப்பொருவிலியாய்நிற்குமீசன் பதிதனை வன்னத்திரிதமைந்தமற்றை, யேதமிலாவஞ்செழுத்தின்பொருளே யென்னவிருபாலுமாயிரடையுமிவற்றுளென்றாம்,

எ - து அந்தச்சிவவாக்கியத்துட்கூறியபஞ்சாக்கரமானசாதியிலேமென்னு பதமும் அந்தத்திலேசிவாயவென்னும்பதமும், நடுவின்நமவென்னும்பதமுமிருக்க, வுச்சரியாநின்றவாறக்கரத்தையுமுடையதா, மித்தவமென்னும்பதத்தின்பொருளை விசாரிக்கிற்சருவான்மாக்களுக்குமறிவையினாக்குமவனுமாய்த்தனக்கொப்பொருவரு மில்லாதவனுமாய்ச்சருவவியாபியாய்வாச்சியார்த்தமாயிருக்கிறசிவன்குற்றமில்லாத மற்றவஞ்செழுத்தின்பொருள், அந்தச்சிவனுடையவீசானமுதலியசத்திகளைக்குமா மித்தப்பதங்களாலேயந்தப் பொருள்களைக்கருதியுச்சரிக்கிலான்மாக்களெந்தக்காலமும், போகமோக்ஷங்களிரண்டையுமடைவார்களென்றவாறு [௨௰]

அந்தப்பிரணவத்தின்மகிமையுணர்த்துகின்றார்

ஓமென்னும்பதமதனில்வேதமாதிருப்பனிக்குமாவசித்துமக்குமா போ, வோமென்னும்பதத்தையுணர்த்தாராமேபோதினர்கள் வேதாதியு ளாகவெல்லா, வோமென்னும்பதப்பொருளையுணர்த்தார் தாமேயுணர்ந்தா ரும்வேதாதிபொருண்மைக்கூ, வோமென்னும்பதமொழிந்தஞ்செழுத்தாமதர் க்கொழுங்குடையாருத்திராக்ஷமாலைபே,

---

* ஆகாங்க்ஷை, யோக்கியதை, சன்னிதி, இம்மூன்றும், வாக்கியப்பொருளுணர்ச் சிக்கேது, ஆகாங்க்ஷை, எ-து அவாய்நிலை, யோக்கியதை, எ-து தகுதி, சன்னிதி, எ-து அண்மை, அவாய்நிலை, ஒருபதந்தன்னோடியைபுடையதொருபதமில்லாதவழித்தாழ்வுபெ றுதல், தகுதி, பொருட்குவாதுயின்மை, அண்மை, பதங்களைப்பொருளிடையீடாக விலையாக்கூறுதல், இவற்றின்விரிவெல்லாந்தருக்கசங்கிரகவுரையிற்காண்க

எ - து ஆலம்வித்திலேநின்றுஞ்சாகோபசாகைகள்தோன்றுமாறுபோல ஓமென்னும்பதத்திலேவேதமுதலாயநூல்களெல்லாந், தோன்றுமாகையா, லோமென்னும்பதத்தையுச்சரித்தவர்களைவேதமுதலாயநூல்களெல்லாமோதினவர்களாந்தக்கரணங்களொருமிப்ப, வோமென்னும்பதத்தினின்றபொருளாகியசிவத்தையறிந்தவர்களேவேதமுதலாகியநூல்களிற்சொல்லும்பொருள்களெல்லாவையுமுணர்ந்தவர்களாதலாற்பார்ப்பார் முதலியனாலுவன்னத்துண்மாதருஞ்சற்சூத்திரருமந்தவேதமாதாவாகியபிரணவத்தைநீக்கிநின்றவஞ்செழுத்தையுமேயுச்சரிக்கலாமென்றவாறு [உக]

இதுவுமது

இருளுலகிலறவுலவுமிரவியின்றேலிசையாது பொருளொடுகண்ணொளியுண்டேனும். பொருவரியவோங்காரப்பொருளொன்றின்றேற் பொறியிலங்காதனைத்துயிர்க்கும் பொறியுண்டேனு. மருளதனையணுக்களுக்குமாற்றியென்றுமதியருளும்பரமசிவன்வாக்கைக்கூறுங்.குருபரனுமோங்காரப்பொருளேயென்றுகொண்டாரேன் மும்மலமும்விண்டார்தாமே

எ-து பூமியின்கணந்தகாரங்கெடவுலவாநின்றவாதித்தனில்லையாயிற்கண்ணுணர்தனக்கெனவொளியுண்டாயினும்பொருளொடுபொருந்திக் காணமாட்டாதது போல, வொப்பில்லாதசூக்குமபஞ்சாக்கர மாகியவோங்காரம்பிரமாமுதலாயினுரையதிட்டித்துக்கொண்டுமனமுதலியவற்றையகரமுதலியவ க்கரங்களைக் கொண்டுகாரியப்படுத்தாவிடத்தான்மாக்கள்க ருவிகரணங்களுடன்கூடியிருந்தார்களாயினு, மந்தக்கருவிகரணங்கள்சீவியாதாதலாலான்மாக் களுக்காணவவிருளை நீக்கியெங்காளுமறிவைவிளங்கப்பண்ணும்பரமசிவ ன்றிருவாக்கையுபதேசிக்குஞானசாரியனுமந்தப்பிரணவத்தின்பொருளேயெ ன்றுட்கொண்டவர்களே,மலமாயாகன்மங்களை நீங்கினவர்களென்றவாறு

*அவ்வுடனுவ்வுமவ்வுமனம்புத்தியாங்காரங்கள்
செவ்வியவிந்துநாதஞ்சித்தமோடுள்ளமாகு
மாவ்வெனுமெழுத்தாமைந்துமுணர்வுதித்தொடுங்குமாறு

---

* சிவஞானசித்தியாரில். சம்சூத்திரத்தில்.ருடம் கவி-

பவ்வமுந்திரையும்போலும்பார்க்கிலிப்பண்புந்தோன்றும்
என்பதனுலறிக [௨௨]

முதற்கட்டொகுத்துப்போந்தவாசிரியர்சிவதன்மம்பரிபாலனமாகையின் பொருட்டிராசாவுக்குபதேசிக்குமியல்புமவனதுசிறப்புமுணர்த்துகின்றார்

ஐயமறவிபரீதமதுவுமீசனருண்மொழியையாராய்ந்தவனகனுசான் ※
வையகமுமுய்யவுனிச்சைவதன்மமன்னவனுக்களிக்கவவன்மருவுநீதி ※
யெய்திவிடுமுலகச்சமெய்தலாலுமெல்லோருமிருபயனுமெய்தலாலே ※
சைவநெறிதனையனையற்களித்தவாசான்சகத்தினுக்குந்தேசிகனேசாற்றுங்கா
லே

எ-து. சிவனருளிச்செய்த வேதாகமங்களையை யந்திரிவறவுணர்ந்து பாவமில்லாதவாசிரியரானவரு,முலகத்திலுள்ளவான்மாக்களீடேறும்படிகருதிச்சிவதன்மங்களைவிசாரித்து இராசாவுக் குப்போதிக்க, அந்தவிராசாவானவன்சாமபேததான தண்டமென்னுநீதியைப் பொருந்திநடப்பன்,அவ்வீநிதிவழிநடக்கவே யுலகத்திலுள்ளவான்மாக்களு நீதிவழிநடவாதோரைத் தண்டிப்பனென்னும் பயம்பொருந்தியறத்தின்கனெழுகுவர்கள்,அங்ஙனநீதிவழிநடக்குமிராசாவுமான்மாக்களும்புத்திமுத்திகளையுடைதலா லிராசாவுக்குச்சிவதீக்கையைச்செய்து சிவதன்மத்தின்வழிநிறுவினவாசிரியனது மகிமையைச்சொல்லு மிடத்தவனே யுலகத்துக்கெல்லாமாசிரியனென்றவாறு.

வையகமுமென்றவும்மையாலி ராசாவுமெனவறிக-அச்சமெய்தலாலுமென்றவும்மையாலியல்பானும் பத்தியானுமெனவறிக [௨௩]

அந்தவிராசாவானவன் உலகத்துள்ளோரை நீதிவழிநடத்துமுறையுணர்த்துகின்றார்

பூபதியுநான்முறையிற்புவியுளோரைப்புரிவிக்கவழுவாதுபுரிந்தார்தாமும், பூபதியைச்சிவனெனவேபுந்திசெய்வர்பொருந் திடுவர்தன்மார்த்தகாமம்பூமேற், பூபதியுமித் தகையேபுரிவார்தம்பாற்பொருள்கொள்கவொருகூறுபுவிக்கைந்தாக்கிப், பூபதியைநியாயத்திற் பொருந்தாதியார் பொருளவனைமுறைநிறுவிற்பொருந்தானுங்கே,

எ-து. இராசாவானவன் பூமியின்கணுள்ளவான்மாக்களை மனுநீதிவழியேயவரவர்சாதிக்கொத்த தவறங்களைச்செய்விக்கக்கடவன்,அங்ஙன்முறையிறழாதறங்களை

ச்செய்தவான்மாக்களுமந்தவரசனைச்சிவனென்றேபுத் திபண்ணக்கடவர்கள், அப் படிபுத்திபண்ணிஞோர்களிந்தப் பூமியிலேதானேயறம்பொருளின்பங்களைப்பெறு வர்கள்அரசனுமிந்தமனுநூன்முறையேயொழுகுமவரிடத் தப்பொருளை யாறுகூறு க்கிக் குடிக்கைந்துகூறுந் தனக்கொருகூறுமாகக்கொள்ள க்கடவனறநெறியிலொ ழுகாததீவினையோர்பாற்கொள்ளும் பொருளரசனை நரகத்தில்வீழும்படி செலுத் துமாதலாற் பொருளனைத்துங் கொள்ளக்கருதாமலந்தத் தீவினையோர்களக்குற்றத் துக்குத்தக்கதண்டஞ்செய்துவாங்கியறநெறியினிறுத்துவ துமிவ்வரசனதியல்பை டையானென்றவாறு. [உ௪]

குருவானவனிராசாவுக்குத்தன்மபுத்தி வருவிக்குமுபாயமு மத்தக்குரவனு க்கிவன்செய்யுங் கைம்மாறுவேறில்லையென்பதுமுணர்த்துகின்றார்

பார்த்திபனுங் காமத்திற்பொருளிற்சாலப் பற்றுடையனெனிற்குரவன் பரிவுகூர்ந்து, தீர்த்திடுகமந்திரத் தாலவுடதாதிந்திறத்திலேமே யமத்தினவன் சிந்தைசெல்லப், பார்த்திடுகபரயோகம்பின்புநல்கப் பரயோகமளித்துவினை ப்பகைசாராமற், காத்தகுரவனுக்கிவன்செய்கைம் மாறுண்டோ காசினியும் பொருளனைத்துங் கைம்மாறன்றே,

எ - து. இராசாவானவன் காமவிகாரத்திலுந்தனக்கேதுவேதிலு மிகுந்தவாசை யுடையனாகிற் குரு வானவனிராசாவுக்கிப் படிபொல்லாதபுத்திவந்ததே யென்றிர ங்கியதுபோம்படிமந்திரவாதத்தாலு, மருந்துமுதலியவற்றாலும், தீர்த்தவ்வேந்தனை துமனமறத்தின்கட்செல்லும்வண்ணமுணர்த்திப் பின்புமேலானஞானயோகங்களை யுபதேசித்திரக்ஷிக்கக்கடவனங்ஙனஞானயோகத்தையளித்துவினைப் பகையேறுவ ண்ணமிரக்ஷித்தவாசிரியனுக் குலகமுமுலகத் திலுண்டானபொருள்களுங்கைம்மா றல்லவேயாதலாலவற்கரசன்செய்யும்பிரத்தியுபகாரமில்லையென்றவாறு ஓகாரம்விகுதியின்கண்வந்தது, ஔடதாதியென்பதருண்மகரியுமெனக்கூட்டுக [உ௫]

வேதாகமங்களின்முறைமையுமவற்றையுணராதார்பயன் பெருமையுமுணர்த்துகின்றார்.

அம்பாயுநரர்க்கென்றேயமலன்வேதமாதிகளைக்கொடுத்தவற்றாதாரமா துமிவற்றை,நிற்பாருஞ் சிலர்நில்லாக்குரம்பைதன்னை நிலையெனவேகருதிய வப்பசுநூறனைக்,கற்பாருஞ் சிலரமலன்கழறும்வாக்கைக் கருதாதேயவனது டிக்கமலந்தன்னைப், பொறபாருங்கருணையிருன்மற்றைநூலாம் பொருந்துத லுமரிதுமலம்போக்கருனும்

எ-து நின்மலனாகியசதாசிவதேவநாயனார்பாதகண்டத்திலிருக்குமாணிடர்க்குவா னளற்பமென்றுகருதிவேதாகமங் களைச்சுருக்கித்தமதுபஞ்சவத்திரத்தாற்காமிகா திதிவ்வியாகமங்களையருளிச்செய்தார், இப்படிச்சுருங் கச்சொல்லியிருக் கவுமதனை யோதியதிற்பொருளையறியாமலிருப்பாருஞ்சிலருளர்நீர்க்குமிழிபோலநிலையில்லாத சரீரத் தைதநிலையென்றுகருதிப்பிறப்பிறப புக்கேதுவாகியபொல் லாதபசுநூலையே பொருளென்றதனைக்கற்பாருஞ்சிலருளர்ஆதலாற்சிவன்திருவுளம்பற்றியவேதாகம ங்களைப்பொலிவுபெற்றிருக்கிறதிருவருளினாலேயாராயாததற்கன்னியமானபசுநூல் களையாராயவதனாற்சிவனதுதிருவடித்தாமரைகளையடைதலுமும்மலங்களைநீக்கலுமரிதென்றவாறு [உசு]

பதிமுதலியபதார்த்தமநாதியென்றுணர்த்துகின்றார்

ஆதியலச்செம்பினுக்குக்களிம்புதானுமாராயிலதற்கதுவுமநாதியாகு
மாதியலமூலமலமனுக் கட்கெல்லாமாணவமுமாருயிர்கட்கநாதியாகு
மாதியலப்பசுபாசமரிக் கவல்லவமலனுமாருயிர்கருமேயநாதியாகு
மாதியலவுலகத்தையடைக்கித்தன்பாலா க்குவநும்விளையுமுயிர்க்கநாதியா
மே ※

எ-துசெம்பினுக்குக்களிம்புமாதியல்ல,அதனைவிசாரிக்குமிடத்துஅநாதியேஅதுபோ லஆன்மாக்களுக்கெல்லாமாணவமுமொருகாலத்திலுண்டாயதன்றுஅதுவும், வியா பியாயிருக்கிறவுயிர்களுக் கநாதியேபக்குவான்மாக் களுடையபாசத் துக்குவயிரி யாயுள்ளசிவனுமான்மாக்களுமாதியல்லவநாதியேதன்னிடத் திலேநின்றும்வியாத் தியாத்மிகமாகவுலகத்தையுண்டாக்கிமீளவுஞ்சத்தியாத்மிகமாகத் தன்னிடத்திற்கா ரியவுருவங்களையொடுக்குமிருவிதமாயையுமாதியல் லவநாதியேகன்மமுமாதியல்ல ச்சென்னன்றோறுந்தொடர்ந்துதொடர்ந்து வருகையாற் பிரவாகாநாதியாயேவரு மென்றவாறு

ஆதியென்பது ஒருகாலத்துண்டாயது, அநாதியென்பதுசகசம் [உஎ]

அந்தச்சிவவாக்கியத்தைப்பக்குவான்மாவுக் குணர்த்தாதுஅபக் குவர்க்குணர்த்திற் குற்றமுணர்த்துகின்றார்

போதகனுமும்மலமும்போக்கித்தன்னுட் பொருவரியபரம்பொருளைப் புணரவென்னு,மாதவனுக்குரைகவிறைபமலன்வாக்கை மற்றையவர்க்குரை யற்கமனத்துக்கெட்டா,வாதியருள்வாக்கியத்தையருத்த த்தன்னை யருந்திய

ற்புகழ்முதலாலயர்த்துங்கூறிற்,பாதகனேபோதகனுமவர்களோடும் பற்றிடுவ
னெரிநிரையமங்கார்பற்றே

எ. து. ஆணவமுதலியமலங்களைநீக்கித்தன்னிடத்தில்வியாத்தியினாலேயன்னி யமாய்கிற்கும்ஒப்பில்லாதசிவனையடைதற்குவிரும்பும்பெரியதவத்தினையுடைய மாணாக்கர்க்காசிரியனானவன்கருத்தாவாகியசிவனதுதிருவாக்கையுபதேசிக்க,அல்லாத அபக்குவர்க்குணர்த்தக்கடவனல்லன். அவர்களுக்குமனோவாக்குக்கெட்டாதசிவனருளிச்செய்ததிவ்வியாகமவாக்கியத்தைத்தான் அதிற்சொல்லும்பொருளைத்தான்ஐசுவரியநிமித்தமாகவும்,புகழ்முதலியநிமித்தமாகவுமறந்து முறைப் பணியினாற்சப்போதகனுமிகுந்தபாவான்மாவேயாயந்தமாணாக்கரோடேதானு மெரிவாய்நிரையத்தையடைவன் அதினின்றுமவர்களைக்கரையேற்றுவார்யார்தாமென்றவாறு.

புகழ்முதலால் - என்பதனால் - மக்கள்சுற்றமென்னுங்காதலாலும் அரசன் முதலியோர்பயத்தாலும்மாறுகோளாலுமெனவறிக. [உ௮]

சிவபூசைக்குவேண்டுமுபயோகங்களுக்குட்டலைமையாகியபஞ்ச

கௌவியத்தின்முறைமைபுணர்த்துகின்றார்,

வேறு

அறைந்தனமமலன்வாக்கையானிடையாறுஞ்சொல்வாந் ✽
சிறந்தபிசிவபூசைக்குத்தேடரும்பொருள்களென்றே ✽
யிறந்தவரொன்போடாமையீண்டெழின்மார்பிற்பூண்டு ✽
புறம்புனத்தாடிபொற்றாள்புரிந்துமாதவபோதத்தில் ✽

எ - து - வாராய்மிகுந்ததபசினையுடையானேசிவனது திருவாக்கின்மகிமையைச்சொன்னோமேற்பசுவின்கணுளவாகிய கௌவியங்களாறினையுஞ் சொல்லாநின்றோம்,இவற்றைச்சங்காரகாலத்திலிறந்துபோனஅரியயன்முதலினோரெலும்புடனாமையோட்டையுமெழில்பெருகியமார்பின்கண்ணணிந் துசடலையின்கணுடாடின்றசிவனதுபொற்பாதத்தைவிரும்பிச்செய் யுஞ்சிவார்ச்சனைக் குத்தேடுமரியபொருளென்றுகின்னறிவின்கட்சிறப்பினோடுமறியக்கடவையென்றவாறு. [உ௯]

அந்தக்கௌவியமுண்டாவதற்குக்காரணமுணர்த்துகின்றார்

அமரருமசுரர்தாமுமமிர்துணக்கருதிவெற்பைத்

தமதுயர்பலத்தாற்றுங்கிக்கடைந்தபாற்கடலிற்றங்கிப்
பவமுறுமரியதேனுப் ❊ பஞ்சகம்பரமனாலே
யவன்முடிக்கருகமானவாறுமவ்வைந்தினாமே

எ - து தேவர்களுமசுரர்களுமமிர்தமுண்ணவிரும்பித்தங்களுடையவதி
த்தினாலேமகமேருவைமத்தாகவெடுத்து வாசுகியென்னுங்கயிற்றா ற்கடையப்ப
திருப்பாற்கடலிலேநின்றுஞ்சிவனருளினாலே, நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை,
னை, யெனக்கூறியவைவகைப்பசுவுந் தோன்றிப்பின்புபூமியின்கண்ணேசிவபூ
கும்யாகாதிகன்மங்களுக்குமாகவுற்பவித்தன, வந்தவைந்துபசுவின்கட்சிவன
ருமுடிக்குரிமையான, கோசலங், கோமயம், பால், தயிர், நெய், கோரோசனை,
கிய ✣ கௌவியங்களாறுமுண்டாமென்றவாறு. [

இதுவுமது.

உத்தமரோசனைந்துரைத்திடுமாறுமோரின்
வித்தகப்பொருள்கள்வேண்டும்பலத்தினைவிளைக்குமென்று
மத்தனையமலன்றன்னையாதரிப்பாருமார
வித்திறத்திசையத்தோன்றும்பொருள்களுமியம்புவாமே.

எ. து- பான்முதற்கோரோசனையீறாகவுரைத்தவாறுமாராயிற்சுத்தமாகிய
ருள்களே, செகந்பிதாவாகியசிவனையர்ச்சிக்குமவர்களுக் கும்புசிக்கவவரவர்வி
பியபோகங்களையெக்காலமுமுண்டாக்குமிப்படிக்கூறப்பட்டகௌவியங்களா
ம்பொருந்திநின்றுதோன்றும்பொருள்களையுமேற்சொல்லுவாமென்றவாறு
கோரோசனையைரோசனையெனத்தலைக்குறைத்தலாக்கினார், கோசலத்துக்குசு
வுண்டாகையாலுங், கோமயத்துக்குவியாதியோகையாலும், பாலுக்குச்சத்து
சமாகையாலுந், தயிருக்குப்புத்திரருண்டாகையாலு,நெய்க்கியாவராலுமதிக
யமுண்டாகையாலுங், கோரோசனைக்குவயதுஅதிகமுண்டாகையாலும்வேண்
லத்தினையெனச்சிறப்பித்தார்

மேற்கூறியவற்றைச்சத்காரியவாதமாகவிசாரித்துணர்த்துகின்றார்

---

❊ பஞ்சகம்-ஐந்தின்கூட்டம் ✣ கௌவியம்-பசுவின் கணுண்டாயது

கோமயமதனில்வில்வங்குதுமுறிகூடத்தோன்றும் *
பூமகளந்தவில்வம்புரிந்துநிற்பொருந்துமாற்றால் *
ருமமார்வில்வந்தானுஞ்சீபலமென்றேசாற்று *
நாமமும்புணருமீசர்திருமுடிக்கணியெய்தாகும் *

எ - து- கோமயத்தினின்றும்வில்வத்தனிருடன்றோன் [illegible]
ருமகள்விரும்பியதன்கண்ணிருக்குமுறையாலேமாலையாக [illegible]
வில்வஞ்சீபலமென்னும்பெயரைப்பெறும்- சிவனதுதிருமுடி [illegible]
குரியதாயும்விளங்குமென்றவாறு,

மற்றுள்ளபுட்பசாதிகளைப்போலக் காலகற்பனையின்றி [illegible]
தற்குரித்தாகையாலெந்நாளுமெனச்சிறப்பித்தார் [illegible]

இதுவுமது.

உற்பலகமலமூலம்பின்பதிலுங்குதித்திற் *
பொற்புறுகுங்குலியம்பொலிந்தெரும்புரியயாரு *
மற்புதன்றனக்குமற்றையனைவர்க்குமுணவதாகக் *
கற்புறுசெங்நெல்பாலிற்கதிரொடுகலந்துதோன்றும் *

எ - து வில்வந்தோன்றியபின்னீலோற்பலகமலமுதலிய [illegible]
கோமயத்தின்கண்ணுண்டாம், கோசலத்திகண்ணின்றுமெழின் [illegible]
தெல்லாரும்விரும்பவிளங்கித்தோன்றும், பாலிலேதின்றுந்தே [illegible]
வர்கண், மானிடர், முதாலானயாவர்க்குமுணவாகியசெந்நெல் [illegible]
ங்கள்கதிரோடுபொருந்தியும்பலிக்குமென்றவாறு. [illegible]

இதுவுமது

சந்தனமுதலாயுள்ளமங்கலத்ததிபிறநு *
மந்தரத்தமருண்ணுமமிர்தமுநவநீதத்தாற் *
சிந்தையார்சித்திபேதஞ்சிறக்கரோசனையுஞ்செய்ய *
மந்திவான்வண்ணன்மேனிக்குகமிவ்வாறுமாமே *

எ - து தயிரினிடத்திலேசந்தனமுதலிய மங்கலப [illegible]
வெண்ணெயினின்றும் விண்ணிலுள்ளதேவர்களுருந்தமமிர்தமுண்டாம், [illegible]

பொற்புறுபாயதானம்புரிப்பறுதநியின்போனஞ் ❊
சற்கரைதேனெய்கூட்டிச்சமைத்தவோதனமுந்தாமே ❊

எ - து - வெளி, இதனுள், உற்பலஞ்: செங்கழுநீர், குற்குலு, குங்குலியம் ஒளி, தீபம், பாயதானம் - பாலன்னம் [௩௭]

நிறைந்துறைநேயத்தோடுநிவேதனஞ்செய்கமற்றுஞ் ❊
சிறந்துளவுபசாரங்கள்செய்துசெய்முறைகடன்னிற் ❊
குறைந்துளவவைபுமீசபொறுத்தருளென்றுகூறித் ❊
திறம்பலவலமுஞ்செய்துதெண்டனப்பணிந்துசேர்ந்தே ❊

எ - து - வெளி, இதனுள், உபசாரமென்றது, பஞ்சோபசாரம், தசோபசாரம்-சோடசோபசாரமெனவறிக. [௩௮]

அண்டங்களனைத்துமாக்குமலர்மிசையயனேபோற்றி ❊
யண்டங்களனைத்துங்காக்குமரியெனுமதிபபோற்றி ❊
யண்டங்களனைத்துமாற்றுமதிபெலவரனேபோற்றி ❊
யண்டத்தின்பேதத்தப்பாலனுதியேயமலபோற்றி ❊

எ - து - வெளி. [௩௯]

ஆருயிரனைத்துமீன்றவன்னையேயத்தாபோற்றி ❊
யாருயிரனைத்துநீங்காவரும்பெரும்பொருளேபோற்றி ❊
யாருயிர்ப்பந்தபாசமறுத்தரு ❊ ளதுலபோற்றி ❊
யாருயிர்க்கமிர்தமானவன்பனேபோற்றிபோற்றி ❊

எ - து - வெளி, ஈன்றல், ஆன்மாக்களனாதியுமாய் நித்தியமுமாமாகையாலே விஞ்ஞானகலருட்டலைமையாகிய அணுசதாசிவர்முதலாயினார்க் குத்தனுவாதிகளைக் கொடுத்தலெனவறிக, அமிர்தமான, அன்பனென்பது, அமிர்தம்போலினிமைசெய் யுமன்பனெனப்பொருள்கொள்க [௪௦]

---

❊ அதுலம் - சமானமின்மை

எனத்துதிபியமடும்பத்தர்க்கிட்டமிம்மையினுஞ்செய்வன் ※
றனக்குயர்ந்தாரொத்தாரையிலன்சிவன்சகளத்துற்று ※
ளினைத்தருச்சனைசெய்துய்யநேசர்களாதலாலே ※
வினைப்பகைவெல்வார்செய்கவருச்சனைவிதியினாலே ※

எ - று - வெளி, மேறகூறியவினையெச்சங்களெல்லாமியம் புமென்னும்பேரெச்சவினையோடுமுடிந்தன, இம்மையினுமென்றவும்மை, மறுமையும் விளக்கிநின்றது, இச்செய்யுள்யாவர்க்குந்தோன்றாது நிட்களனாய்நின்றசிவன், சகளீகரித்தடியவர்பொருட்டுத்தியானாதிக்கெளியனானதலாற்பிறவித்துயரநீங் கவேண்டினோரருச்சனைசெய்துபிழைக்கவெனப்புத்திகூறினதாயிற்று. [சுக]

சிவபூசைசெய்வோரும் அதற்குபத்தியுடனேவல்செய்வோரும் பெறும்பயனுணர்த்துகின்றார்.

முற்றவத்தாலேபூசைமுற்றியபத்தர்மூவேழ் ※
சுற்றமுஞ்சுவர்க்கமெய்தத்துன்னுதற்கரிதேயாய ※
வற்புதனுலகந்தன்னைத்தாமடைந்திருப்பரன்பாற் ※
சொற்பணிசெய்தார்தாமுந்துரிசறுநெறியினாலே ※

எ - று - முற்செனனங்களிற்செய்த புண்ணியபலத்தினாலே விருப்பத்துடன் சிவபூசை செய்தவன்பராஞோர், தங் குலத்திலுள்ளமூவேழ்சுற் றமுந்தேவலோகத்திற்செல்லத்தாம்பிறராலணுகுதற்கரியசிவலோகத் தைச் சேர்ந்திருப்பர், அதற்கன் பினாலேயேவற்றொழில்செய்தோர்களும்; பிறவித் துயர்தீர்க்குநன்னெறியாகியஞானத்தோடுகூடிச்சிவலோகத்தையடைவர்களென்றவாறு.

அடைந்திருப்பரென்பது, இடைநிலைத்தீபகம், மூவேழ்சுற்றம் - எ-று - மாதுர்வர்க்கம் -எ- பிதிர்வர்க்கம் -எ- தன்வர்க்கம் -எ- ஆக உஎக [சுஉ]

அர்ச்சனைக்குபயோகமான தருக்கண்முதலியவுமருச்சனையைத்தெரிசித்தோர்பெறும்பலனுமுணர்த்துகின்றார்.

அர்ச்சனைக்குபயோகங்களாகியதருக்களாதி ※
கற்புறுசிவலோகத்தைக்கலப்பதேதிண்ணங்கண்டோ ※
ரற்புதன்பூசைதன்னையருவினையறுவரன்பாற் ※

றற்பரன்பூசைகண்டோர்சிவபுரமதனைச்சார்வார் ※

எ - து - வெளி, [௬௧.]

மேலதனைக்கேட்டோர்விரும்பினோரடையும்பலனுணர்த்துகின்றார்.

கேட்டுளார்மகிழச்சொல்வார்கிடைக்குமோவெமக்குமென்று ※
வேட்டுளாருபகாரங்கள்விளைத்துளாரிவருமெய்ய ※
னாட்டுளார்பிறக்கிலிம்மண்ணுபகராவராகித் ※
தேட்டுளார்சிவதன்மங்கள்வாதனைநிகழ்தலாலே ※

எ - து - சிவார்ச்சனையின்பெருமையைக்கேட்டுளோர், கேட்போருண்மகிழுவதனைச்சொல்வோர், நமக்குமிப்படிசிவார்ச்சனைசெய்யும்பேறுகிடைக்குமோவென்றுவிரும்பினோர், சிவபூசைக்குபகரணங்கள்கொடுத்துள்ளோர், இவர்களெல்லாருஞ்சிவலோகத்திற்சென்றுமவர்களாம்-அங்ஙனஞ்சிவலோகத்துள்ளபோகங்களையனுபவித்துமீண்டும்பூமியிலேதோற்றினிந்தலோகமெல்லாந்தாமேயாளுகின்றவேந்தராய்த்தோன்றுவர், தோன்றியுமுற்செனனத்திற்கேட்டல்வேட்டலுபகாரித்தலாகியநல்லவாதனைவிளங்குகையினாலேசிவதன்மங்களையேவிருப்பத்துடன்றேடிச்செய்வர்களென்றவாறு.

இவருமென்னுமும்மைபிறந்ததுதழீஇயவெச்சம் -பிறக்கில்- என்றமையாற்சிவலோகபோகத்தைவிரும்பாமையாற்பொசித்தவர்களாண்டிருந்துதாமேபரிபக்குவராய்ப்பரகதியடைவரென்பது விளக்கிநின்றது. [௬௨]

இங்கிதையேபரமமானதன்மமென்றுணர்த்துகின்றார்.

தமக்கபராதபேதஞ்சதமுறச்சாதித்தார்க்கு ※
மிமைப்பொழுதெனினுந்துன்பமியற்றிடாவினிமைதன்னை ※
யமைத்துநூலிதமிதென்றேயறைந்திடுமதனையாற்றி ※
சமைப்பதேதலைமையானதருமமென்றறிகதக்கார் ※

எ - து - வேதாகமநூல்கள், தமக்குயாதாமொருவர், வேறுவேறுகவெண்ணிறந்தகுற்றஞ்செய்யினுமவர்களுக்கொருகாற்கண்ணிமைக்கொட்டுமளவாயினுந்துக்கத்தைச்செய்யாமனன்மையேசெய்யுமின்பத்தையே பொருளாகப்படுத்தியதுவாயிருக்குமிதமாவதென்றுசொல்லாநிற்கும், ஆகையினாலேயத்தன்மையைமுற்படச்செய்தலேமேலான, அறமென்றுதகுதியையுடையோரறியக்கடவரென்றவாறு

அமைத்துச்சொல்லுமெனக்கூட்டுக. [௬௩]

சிவதன்மத்தின் விசிட்ட முணர்த்துகின்றார்

செப்பியவொப்பிலாத சிவதருமங்கடன்னைத் ※
தப்பறநினைப்போம்யாமுஞ் சந்திகடோறும்யாரு ※
மிப்படியெண்ணுவார் முன்னீட்டியவினைகளோட்டி ※
யொப்பிலாவுமையாள் பாகன்புரத்தினிதுறைவரன்றே ※

எ - து வாராய், அகத்தியனேயிங்ஙனங்கூறிய நிகரில்லாத சிவதன்மங்களை நாமுங்காலை, புச்சி, மாலை, யென்னுஞ்சந்திகண்மூன்றினுந் தப்பாமனினைப்போம், எம்போலிப்படி கருதுவாரியாவருமுற்செனனங்களிலார்ச்சித்த பாவங்களைப்போக்கி யிணையில்லாதவுமையையொருபாசத்திலேயுடையசிவனது சிவலோகத்திற் போகங்களைப் பொசித்திருப்பர் களென்றவாறு.
யாருமென்னு மும்மைமற்றுள்ளதேவர்களிருடிகண் முதலாயினோருமெனவறிக. [௩௬]

வேதத்துள்ளுமிச்சிவ்தன்மமேசிறப்பென்றுணர்த்துகின்றார்.

ஒப்பிலியருளிமுத்த தேறியவேதத்துள்ளுந் ※
செப்பியசிவதன்மங்கள் சிறந்தசேரியவேதேறுந் ※
தப்பிலாப்பலத்தினாலேதடவரைநிகராசான்றோர் ※
வைப்பெனவிவற்றைக்கொள்வர் மகற்பலவார்ந்தையாலே ※

எ - து - தனக்கொப் பாருமில்லாதவருளியே தின்மலனாயிருக்கிற சிவனருளிச்செய்த வேதத்தினுமிச்சிவதன்மங் களேதலைமையையுடையனவாயிருக்குமாங்களாயிருப்பனவென்று தெளியப்படும்படியதிருக்குமாங்களாயிருப் பினுந்தப்பாமற்றோற்றுவிக்கும்பலத்தினாலே மகமேருவைப்போலப்பெருத்திருப் பன, வுமையிருலே யறிவுடையோர்மகத்தாயிருக்கிற பலங் களினான்னிருப்பத்தாலேயவை யிற்றைத்தருமித்தச் சிவதன்மங் களேயென்றதனைச்சேமிக்கும்பொருள் போலக்கைக்கொள்வரென்றவாறு.
மகற்பலம்வடமொழித்திரிவு [௩௭]

முடிந்ததுமுடித்தலென்னுந்தந்திரவுத்தியாலுணர்த்துகின்றார்

என்றுபரமானதருமாதிகளிசைத்தான் ※

குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான்
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினைகைய
நின்றமுனியன்றுணரநிற்குணனினைந்தே

எ - து - வேடர்மகளாகிய வள்ளிநாயகிக் குத்தண்ணளிசெய்தபெருங்குமரக்கடவுளானவன், துறைநீதனாயிருக்கிறசிவனைத்தியானஞ்செய்து பஞ்சேந்திரியங்களையுஞ்செயித்துக் கொடியகன்மங்கள்கெடும் படிதவத்தின்கணின்றவகத்தியமாவிருடியறியும்வண்ணம்பரமமானசிவதன்மங் களிப்படியென் றருளிச்செய்தானென்றவாறு. [உ௪]

ரு. சருக்கமுடிவினுமிலம்பகமுடிவினும், விருத்தநடையாநேவழிசைப்பாரேல், என்னுமிலக்கணத்தாற்சிவத்துதியியமகத்தாலுணர்த்துகின்றார்.

வேறு

ஆனிடைப்பைந்தினையாடினனையம்பரமன்றினுமாடினனை
கானிடைவேடனுமானவனைகாசியென்மாநகரானவனை
வானிடைமுப்புரமாற்றினனைவார்சடைமேல்வருமாற்றினனை
யானெனுமாசுமிலாதவனையேனையமாசுமிலாதவனை

எ து- பசுவினிடத்துண்டாகிய பான்முதலிய கௌவியங்களைந்தினையுமாடா நின்றவனை, ஞானம்பரமென்னும் பொதுவினிடம்பண்ணினவனை, விசையன்த போபலத்தையளத்தற்பொருட்டுக் காட்டகத்துவேடவுருவங்கொண் டவனை, காசியென்னுநாமத்தையுடையதிருப் பதியையுடையவனை, பூமி, யந்தரிக்ஷமாகாசமென்னுமூவிடத்துண்டாகியமுப்புரத் தையெரித் தொழித்தவனை, நீண்டசடையின்மேலேயாயிரமுகத்தோடுவரு திழிபுங் கங்கையாற்றினையுடையவனை, யானென்பதற்குக்காரணமானவாணவவிருளில்லாதஞானுறித் தவனை, மற்றும்முன்னமாயைகன்மங்களுமில்லாதவனையென்றவாறு. [உரு]

இதுவுமது

அலைகடனஞ்சமருந்தினனையாணவநோய்க்குமருந்தினனை
தலைகலனாகத்தரித்தவனைசார்ந்தவர்பாசத்தரித்தவனை
சிலைசிலையாக்கியதெள்ளியனைதீம்பனைக்காயந்தெள்ளியனை
விலைபிலியானவெண்ணீற்றினனைவிபரீதமற்றவெண்ணீற்றினனை

எ-து- தேவர்களாலேமகமேருவைமத்தாக்கிக் கடையுமிடத்தலையாநின்றசமுத்திரத்திலெழுந்தவிடத்தையுண்டவனே, யாணவமுதலியபிணிக்குமருந்தாயிருப்பவனே, அயனதுசென்னியையாபரணமாகப் பூண்டவனே, திருவடிநீழலைப்பலகாற் றினைத்தோருடையபாசங்களையறுத்தவனே, மகமேருவைவில்லாக்கினவலியையுடையோனே, தாரகன், தாரகாக்ஷன்-வித்தியுன்மாலியாகியபொல்லாதமூவரையுமொருநொடியிலிகழ்ந்தெரித்தவனே-விலையில்லாததவளநிறத்தையுடையதிருநீற்றையணியுமவனே, ஐயந்திரிவில்லாதவேதாந்தத்துமுடிவாயுள்ளவனேயென்றவாறு

எண் எ-து உரையென்னுமளவை— [௫௰]

குமரகுருபரனது திருவாக்கின்பெருமைகூறுகின்றார்

மலத்தைவல்வினைதனைமனவலியைவதைக்கவல்லநன்மதியினையுதவுந்,
துலக்கவெண்பிறையணிசடைமுடியன்றனைப்பதந்தொழுமடியவர்துணை
வன், மலைக்குநன்மகண்மதிநுதல்கணவன்மலர்ப்பதம்பெறமுறலினுநிறுவு,
மலக்கணண்டர்களறவொருகரமுன்னைமைந்தசண்முகனருளியமொழியே,

எ-து- தேவர்களசுரவாதையாலுறுமனக்கலக்கந்திரும்படியவர்களைஇரோயொருதிருக்கையினையமைத்தருளிய சண்முகனென்னுந்திருநாமத்தையுடையோனருளிச்செய்ததிருமொழியான தான்மாக்களுக்குச்சகசமானவாணவமலத்தினையும்வலியினையுடையகன்மத்தையுமாயாகாரியமானமனமுதலியவந்தக்கரணங்களின்பெலத்தினையுங்கெடுக்கவல்லநல்லறிவினைக்கொடாநிற்கு- மஃதன்றிவிட்டுவிளங்காநின்றவெள்ளியவிளம்பிறையினையணியுஞ்சடாமகுடத்தையுடையனுமாய்த்தனதுபாதங்களிரண்டினையும்வணங்காநிற்கும்அடியவர்களுக்குயிர்த்துணைவனுமாயிமவானுக்குநல்லபுதல்வியாணபிறைபோலுநெற்றியையுடையமாதேவிக்குநாயகனுமாயிருக்கிறசிவனதுபாதமலர்களைப்பெறும்ஐக்கியத்திலுநிறுத்தும் மென்றவாறு [௫௧]

அகத்தியனைவணங்குதியென்றுமனத்தினுக்
குணர்த்துகின்றார்

நிலைத்தகண்டலமெளியநின்றுடியுநெருக்கியண்டர்கண்முனிவர்கள்பணியத்
தனத்தனந்தனதனதனதனவென்சதிக்கிசைந்திடநடமிடுசதுரன்
முனைத்தெழுந்தவர்புரமொருநொடியின்முருக்கிவென்றவனருளியமொழிக
ளனைத்தையுந்தருமருமுனியனகத்தியன்றிருவடிநினைமனமே

பருவமுற்றியபாவகமோர்ந்துபின் ※
னுருகியோதுகவோதருமுண்மையை ※
மருவிவாய்வருபாடையின்வல்லவர்க் ※
கரியவாரியத்தானுமறைகவே ※

எ - து ஆசிரியனானவன், நாலுசாதியிலுமுள்ளோர்பாற்பருவமுதிர்ச்சியி[illegible] யுண்டாம்பத்திசிரத்தைமுதலியவற்றையறிந்துபின்புதனை[illegible] ர்க்குச்சொல்லப்படாதஞானசாத்திரத்தையுபதேசிக்க. அதனைத்தவ்வாற்[illegible] தினெண்பூமியிலுள்ளோரும்பயின்றுவசனித்துவரும்பாஷையா[illegible] ருபாஷைவல்லோர்க் கந்தந்தப்பாஷையிலும்வடமொழிவல்லோர்க்கு[illegible] தற்கரியவடமொழியினாலு முபதேசிக்கக்கடவனென்றவாறு.

ஆரியத்தானுமென்றவும்மையாற், பிராகிருதம், சவுரசேனி, மாகதம், [illegible] சம், சூளிகாபைசாசி, அவப்பிரங்கிசம், தேசி, எனவறிக. [illegible]

இப்படியுபதேசஞ்செய்யுமாசிரியனை மாறுக்கன்சிவனென[illegible] றைமையுணர்த்துகின்றார்

ஒப்பிலாவொருவன்சிவனேறிய
வொப்பிலாவுரைதன்னையுரைத்தகந்
தொப்பிலாவுணர்வாக்கிடுமுத்தம
னொப்பிலாவரனேயெனவோர்கவே

எ, து, வெளி, இதனுளொப்பிலாவுணர்வாக்கிடுமுத்தமனென்பத[illegible] தஞானத்தையுண்டாக்கியவாசிரியன் [illegible]

பக்குவனுக்கும் அபக்குவனுக்கு ஞானநூலுணர்த்தியவாசிரிய[illegible] ணர்த்துகின்றார்

பருவமுற்றவர்பாலுபதேசிகன் ※
பரமனுக்குளவெண்குணம்பெறுவன் ※
பருவமற்றவர்பாலுபதேசிகன் ※
நரகிடைப்படிவானெடுநாளரோ ※

எ - து வெளி, எண்குணமாவன, சருவக்ஞைமுதல், [illegible]

யைப்பவுத்திரமுடிச்சாகமுடிந்தமாலைகீழாமதற்குத்தாமரைமணிவடந்தாழ்ந்தபல மதற்குப்படிகக்கல்லினாற்கடைந்தமணிதாழ்ந்த பலம்புத்திரசீவிடமுங்கடைந்து ருட்டினசங்குமணிவடமுமிறையும் விரலுமாராயிலொன்றுக்கொன்றுபலங்குறைய ம்போகத்தின்கண்விருப்புநீங்கியதுறவிகள்கண்டிமாலைமுதன்மாலையிலொன்றாக்கொ யினுமேலமேனோக்கித்தள்ளிச்செபிக்கவென்றவாறு. [௬௩]

இயங்கிற்பிராணனிடைநாடியிருமூன்றெழுத்துமியம்பிடுக ※
நயந்தார்போகம நுகயந்தார்வல நுநாடிநுனிவிலக ※
வியங்கிற்பிராணன்சுழுனைவழியிரண்டுமடைவாரியம்பிடுக ※
முயங்கவிளையார்முலையிணையைவல நுநாடிமுனைத்தெழினே ※

எ - து போகத்தையடையவிரும்பினோர்பிராணவாயுவானதிடைகலையென்னு நாடியிலேநடக்கிற்பிரணவத்தோடுகூடியமூலமந்திரமானஆறெழுத்தையுமுச்சரிக் கக்கடவரதனைவெறுத்தோர்பிங்கலைநாடியின்கட்பிராணவாயுவியங்கிலாறெழுத் தையுமுச்சரிக்கக்கடவர்புத்திமுத்தியிரண்டினையும் விரும்பினோர்சுழுமுனைநாடியி லேபிராணவாயுவானதியங்கிலந்தவாறெழுத் தமுச் சரிக்கக்கடவர் பிராணவாயு வானதுபிங்கலையிலேதோன்றியியங்குகிற காலத்திலிளையாராகியமடவாரதுமுலைத் துணையினையும்புணரக்கடவரென்றவாறு.

மாதரைக்கூடும்விதியீண்டுக்கூறிய தமற்றென் றுவிரித்தலென் னுங்குற்றமாகா தோவென்னில், ஒப்பின்முடித்தலென் னுந்தந்திரவுத்தியாற்கூறலையயாற்குற்றமின் றெனவறிக.

[௬௪]

மேனிறுத்தமுறையானேதியானயாகஞ்செய்யுமுறையு ணர்த்துகின்றார்.

பற்றிப்பரமன்றிருவுருவைப்பரிவாலொருமைப்பாடுள்ள ※
மற்றோர்பொருளின்மனம்பற்றுவண்ணந்தின்னைமுறைமையக ※
மற்றேதொடர்ந்தவிச்சின்னமடையாவறிவு பாவனைநீ ※
ரெற்றேயொழுகுமிறைவன்பாலற்றேயஃதென்றென்றுகவே ※

எ - து தியானயாகமாவது மனம்வேறொருவிடையங்களினும் பொருந்தா வண்ணந்தாரணையினிறுத்தியஞ்ஞானவிகற்பமற்றுள்ளமான அசைதாவிவாதல்விக்கிய லஃதெத்தனமைத்தென் னிலாற்றுநீரிடையறுதொழுமை ந்தன்மைத்தென்றுணை ர்கவென்றவாறு.

[௬௫]

மேனிருத்தமுறையானேஞானயாகத்தின்றிறமு
ணர்த்துகின்றார்.

ஒப்பிலமலன்றனைபுணர்த்து முறைமையையோதலோதுவித்தல் ※
செப்பும்பொருளைத்திரிவுமறத்தெளிகைபிறரைத்தெளிவிக்கை ※
தப்பாததனைமனத்தகத்தேதரிக்கையெனவுந்தானைந்தாம் ※
வைப்பாயருந்தாமருந்தாகிச்சிறந்தஞானமகவினையே ※

எ - து இணையில்லாதநின்மலனைசிவனையறிவிக் குந்திவ்வியாகமங்களைத் தானோதுதலும்பிறரையோதுவித்தலுமவையிற்றிற்சொல் லும்பொருளையையந்திரி வறத்தான்றெளிதலும்பிறரைத்தெளிவிக்கையுமந்தப் பொருளைநாடோறுமறவாது மனத்தின்கட்டரிக்கையுமெனவைந்துவிதமா, மிதுவேபக்குவான்மாக்களுக்கு வைப்புமாய், அபக்குவராலருந்தவொண்ணாதமருந்துமாய்த்தலைமைபெற்றஞான யாகத்தொழிலாவதென்றவாறு.

தேவாரம்.

கற்றல்கேட்டலுடையார் பெரியார்கழல்கையாற்றொழுதேத்தனவுங், கல் லாதார்காண்டற்கரியானை, எனவும், கல்லாநெஞ்சினில்லானீசன்சொல்லாதாரோ டல்லோநாமே, எனவுங்கூறியருளினாராகலினிதனையேவிசிட்டமாகக்கூறவேண்டி ற்று. [௭]

ஐவகையாகங்களொன்றுக்கொன்றுசிறப்பென்பதூஉமவை
யும்பலமித்தகைத்தென்பதூஉமுணர்த்துகின்றார்.

அமைந்தகருமயாகமுதலைந்துமொன்றுக்கொன்றதிகந் ※
சிறந்தபலமும்போகவிதஞ்சிந்தைசெய்தபயனெல்லா ※
மறைந்துதீயவினைமாய்கைவாதனுருவமெனவடிவை ※
மிறந்தும்பிறந்துமிளையாதேயிருக்கையென்னுமிவையைந்தும் ※

எ - து முற்கூறியகன்மயாகமுதலியஐவகையாகமுமொன்றுக் கொன்றுப லன்களதிகமாயிருக்கும், அஃதெவ்வாறெனில், கன்மயாகத்துக்குப்போகவி தமுந்தபோயாகத்துக்குச்சித்திகளுமந்திரயாகத்துக்குக்கொடியக ன்மங்களுந்பலியாதுகெடுதலுந்தியானயாகத்துக்குச்சிவனதுதிருவடிவுபோலவ டிவமுண்டாதலுஞ்ஞானயாகத்துக்குச்சென்னமரணங்களையடைந்திளையாமற்சாபு

ச்சியம்பெற்றிருக்கையுமெனக்கூறியவிவைகளோந்துமொன்றுக்கொன்றதிகபலன்க ளாம் எ - று

அஃதெங்ஙனமென்னிற்கன்மயாகத்தைப்பற்றத்தபோயாகம்பதின்மடங்கதி கமதனைப்பற்றமந்திரயாகம்பதின்மடங்கதிகமதனைப்பற்றத் தியானயாகநூறுமட ங்கதிகமதனைப்பற்றஞானயாகமளவில்லாதபலத்தைக்கொடுக்குமாதலால், ஞா னயாகமேவிசிட்டமெனவறிக. [அ]

மேனிறுத்தமுறையானேபரமயோகர்நிலையுணர்த்துகின்றார்

அஞ்சியாசைமுதலாயவவலபேதமனைத்தினையுந் ✻
துஞ்சிப்பிறக்குந்தொழிற்கிளைத்துத்தோன்றாத்துணைவனடித்தாங்கும் ✻
விஞ்சைக்குகையுள்வீற்றிருப்பர்பரமயோகவிரதியர்மெய்ந் ✻
நெஞ்சத்திவரைநினைப்பாரைநிரந்தவினையுநீங்கிடுமே ✻

எ - து காமக்குரோதமுதலியதுக்கபேதங்களனைத்தினுக்குநடுங்கிபிறந்துபி றக்குந்தொழிலுக்குவருந்தியவைநீங்கும்வண்ணம், அபக்குவர்க்குத்தோன்றாத் துணைவனனசிவனதுதிருவடியிலேநிலைபெறுதற்குக்காரணமானஞானமாகிறகு கையுள்வீற்றிருப்பார், மேலானயோகநிலைபெற்றதபோதனரிவர்திருமேனியையுள் ளத்தின்கணினைக்குமவரைத்தொடர்ந்தகன்மங்களும்விட்டுநீங்கும் - எ.று

வினையுமென்றவும்மையான்மாயைமுதலாயினவுமெனவறிக, செடிகொ ணேறுபின்னடையார்திறம்பார்வருதீமையுந்திருவாஞ்சியத்தடிகள்பாதமடைந்தாரா டைந்தாரடியார்களே, எனவறிக [கூ]

மேலவரைவழிபாடுசெய்யில்வரும்பலனுணர்த்துகின்றார்.

புரிந்தார்பரமஞானிதனைப்பூசைநசையாற்புகழுறவே ✻
பிரிந்தானுடலைப்பிரியாதேபெருமானுலகம்பெற்றிருப்பர் ✻
நிரந்தகற்பசதநியுதநிகழவதன்பினெடுமால்வாழ் ✻
பரந்தவுலகமதுபற்றியிருப்பர்விருப்பாற்பாங்குறவே ✻

எ - து அன்பினாலேமேலானஞானிகளையருச்சனைசெய்தோர்பூமியின்கட் டமக்குக்கீர்த்திநிலைபெறவூனுற்றான்னியவுடம்பினைநீங்கிச் சிவலோகத்தினையடை ந்ததனைவிட்டுநீங்காமற்கோடிகற்பஞ்செல்லுமளவுமுறைவர்கள், ஆண்டுப்போக ம்பொசித்துத்தொலைந்தவாறேநாராணன்வாழும்விரிந்தவுலகின்கணடைந்தன்பினு லேயவனதுசமீபமாகவாழ்வர் - எ று [ய]

இதுவுமது

உறைந்தேயொழிந்தவுலகத்துமோங்கும்போகவிதமுண்டு *
பிறந்தேபுவியிற்பிறழாதேபெரியோனடியைப்பேணுதலுஞ் *
சிறந்தேயவனுஞ்சிவஞானயோகந்தெருட்டத்தெருண்டுடனு *
மிறந்தேயிணையிலிறைவனுடனிரண்டற்றிருப்பரின்புறவே *

எ - து அங்ஙனம், நாராணனுலகத்திற்போகம்பொசித்துத்தொலைந்தவாறேயதனையல்லாதபிரமலோகம் பிரசாபதிலோகமிந்திரலோகங் கந்தருவலோகமியக்கலோகமிவையிற்றினுமடைவேவதிந்திருந்து ஆண்டாண்டுள் ளபோகபேதங்களைப் பொசித்துத்தொலைந்தவாறேபூமியின்கணுத்தமசாதியிற்றோன் றிமுன்விட் டகுறையினாலேயுள் ளம்வேறுபடாமற் பெரியஞானாசாரியனதுதிருவடியையடைந்துவழிபாடுசெய்துள்ளளவினந்தவாசாரியனுந்திருவுளமகிழ்ந்துசிவஞானயோகத்தையறிவிக்கத்தாமறிந்துஞானநிட் டையையடைந் துபின்பந் தத்தேகத்தைவிட்டுநீங்கினவாறேதனக்குநிகரில்லாதசிவனுடன்வேறறக் கலந்துசிவானந்தானுபவத்தையனுபவித்திருப்பர்கள். எ-று [௰௧]

ஞானநிட்டையையுடையோர்கள்விடையங்களிலொழுகினுமவையிற்றி
லழுந்தாரொன்றன்னோரதுசிறப்புணர்த்துகின்றார்

அமலனுருவமறிந்தார்கள்விடையபேதத்தடைந்தாலுங் *
கமலத்தமருநீர்போலக்கலப்பநில்லைக்கருதுங்காற் *
றமலத்தினையுந்தடுப்பார்கள்சமைக்கபூசையவர்தமக்கே *
விமலனவரைவிடலின்றிச்செய்தார்சிறப்பைவிரும்புவனே *

எ - து நின்மலனானசிவனதுசுபாவசொரூபத்தையுணர்ந்தஞாதாக்கள்விடையவிதங்களைப்பொருந்தினாரேயாயினுமதனையாராயுமிடத்தவர்கள் தாமரையிலையிற் பொருந்தியநீரதிற்றோய்வின்றிநின்றதுபோல, அந்தவிடையங்களிலழுந்தார்கள், தமது, ஆணவமலமுதலியவற்றையும்போக்குவர்களாதலாலந்தஞானவான்களுக்கேபூசைசெய்யக்கடவரஃதேதுகாரணத்தினாலெனின், மலரகிதனானசிவனந்தச் சிவஞானிகளைவிட்டு நீங்காதவர்களிடமாகநின்றுசெய்தார்செய்த பூசைகளைத்தானேவிரும்பியேற்றுக்கொள்ளுதலால் - எ று

அடைந்தாலுமென்னுமும்மையடையாமையைவிளக்கினதாகலின்-எதிர்மறை [௰௨]

பணியறநிற்றலாற்சிவஞானிகளிடத்துவினையேறுமைக்குத்திட்டா
ந்தமுமவரைப்புகழ்தலிகழ்தல்செய்தாரடையும்பலமுமுணர்த்துகின்றார்

மருந்தைச்சிறந்தமந்திரத்தைவல்லார்விடத்தைமாந்திடினும் ✻
வருந்தார்தமதுசெயன்மாளவரதன்பொருவில்வலியுணர்ந்தார் ✻
பொருந்தார்பாவபுண்ணியங்கள்புரிந்தேயிவரைப்புகழ்ந்தாரும் ✻
பிரிந்தேயிகழ்ந்துபேசுவாருமிவர்தம்வினையைப்பெறுவாரே ✻

எ - து அவுடதத்தையுமேலானமந்திரத்தையும்வல்லபேர்கள், நஞ்சினைப் பொசித்தாராயினுமதனால்வருத்தமுறாரதுபோலவொப்பில்லாதசிவனுடையஞான த்தையுணர்ந்தசிவஞானிகளும், எல்லாம், சிவன்செயலென்று, தம்செயன்மா ண்டிருக்கையினாலேயவர்கள் புண்ணியபாவங்களைச்செய்தாமதனால்வருஞ்சுகதுக் கத்தையடையார்களாந் தச்சிவஞானிகளைப்புகழ்ந்தபேரும் வேறுபட்டிகழ்ந்தபேரு மாகியவிவர்கள்தமக்குரியவினைப்பயன்களைப்பெறுவர் எ-று [௰௩]

ஒத்துப்புறனடைமுதலியவைந்தினுள்முற்கூறியசெய்யுளைக்குறித்து
ச்சூத்திரப்புறனடையுணர்த்துகின்றார்.

பண்ணான்பரமசிவஞானிபாவவிதரும்பயிற்றிடினு ✻
முண்ணான்பலமுமெனப்பனுவலுரைக்குமதனாலொருதலையே ✻
நண்ணேந்துயரமெனப்பெரியோர்நவையுமியற்றினசையாலே ✻
மண்ணாரவலமாசுனையமாற்றிவிடவேவல்லாரார் ✻

எ - து மேலானசிவஞானிபாவபேதங்களைச்செய்யானதுசெய்யினுமந்தத்தீ வினைப்பயன்களையனுபவியானென்று திவ்வியாகமங்கள்சொல்லுமாகையினாலே சிவஞானியானவன்பாவவிதஞ்செய்யாமைபுஞ்செய்யினஃதுண்ணாமையுநிச்சயம், அந்தச்சிவஞானிகளானோர்நாம் துயரத்தைப்பொருந்துவதில்லையேயெனக்கருதித் தமதுமனவிருப்பினாலேகாமாதிகுற்றங்களைச் செய்யினதனாலேயவர்க்குத்தீவினை யெய்தாதாயினும் பூமியின்கணிறையும்பொல்லாதவசைதோன்றுமதனைப் புறம்போ குதுமாற்றுதற்குவல்லார்யாவர் எ - று - ஏகாரம்தேற்றம்.
இயற்றினவெனவேயியற்றாமைவிளக்கிற்று [௰௪]

ஞானநிட்டையையுடையோரதனைவிட்டுக்கிரியைகளையனுட்
டிக்கிலவர்பரதத்துவத்தையறிந்தவரல்லவென்றுணர்த்துகின்றார்.

எய்தற்கரியபரம்பரனையிசைந்தார்கருமத்திசையார்கள் ※
செய்யிற்கருமஞ்சிறந்தபொருள்செறிந்தாரல்லர்செழுங்கனிதங் ※
கையிற்புகலுங்களைந்தவலக்காயைக்கவரக்கருதினரார் ※
வையத்தொளிகொண்மணியகற்றிவழுவாஞ்சிலையார்மகிழ்வாரோ ※

எ - து யாவராலும்பொருந்துதற்கரியசிவனைக்கூடிநேயத் தழுந்துவோர்கிரியையினைச்செய்யார்களதனை யனுட்டித்தாராயின்மேலானபொருளான சிவத்துடன் கூடிநிட்டையையடைந்தவரா்காா்ஞானயோகிகள்நேயத்தழுந்திலுமதனோடுகிரியையுங்கழுத்தாரோவெனின்யாதாமொருவர்தங்கையின்கட்கொழுவியவாழைமுதலியவற்றின்கனிகளெய்தினலதனைநுகராதுவிடுத்துச் சுவையில்லாதகாயினைக்கைக்கொண்டுநுகரவிரும்பினர்யாவரஃதன்றிவையத் தின்கண்ணொளிபொருந்தியபதுமராகமுதலியரத்னங்கள்வந்தெய்திலவையிற்றினைக்கைக்கொள்ளாதுவிடுத்துப்புல்லியகல்லினைக்கைக்கொண்டுமகிழ்வோர்யாவர் எ - று கனிபெற்றோர்காய்விரும்பாததன்மைபோலவுமணிபெற்றோர் சிலைவிரும்பாததன்மைபோலவு ஞானம்பெற்றோர்கிரியைவிரும்பாரெனக்கொள்க. [டுரு]

நேயத்தைப்பெறவேண்டினர்க்குக்காமாதிகுற்றங்களனு
கொணதென்பதுணர்த்துகின்றார்

ஆசைமுதலாமாசனைத்துமறுத்தேயுடலும்வெறுத்தரிய ※
தேசன்சிவன்பொற்பாதமலர்செறிந்தார்பிறப்பைமறந்தார்கள் ※
பேசற்கரியபெருமையினைப்பெற்றாரல்லர்கற்றாலும் ※
மாசுமலிந்தவாசையினான்மயங்கித்துயங்குமானிடரே ※

எ து காமமுதலியகுற்றமனைத்தினையுங்கெடுத்துயாக் கையும் வெறுத்துப்பிறராலறிதற்கரியஞானப்பிரகாசனனசிவனதுபொன் போன்றதிவருடிமலர்களைப்பற்றினவர்களேசெனனமரணத்தையொழிந்தோர்களங்ஙனஞ்செய் யாதழுக்குமிக்கவிராகத்தினலேயுள்ளமயங்கிவருந்துநரரானவர்கள்பெருநூல் களைக்கற்றாராயினுஞ்சொல்லுதற்கரியபிறவியறுதலைப்பெறார் எ று
பிறவியறுதலேபெருமைதருவதாகலினதனைப்பெருமையென்றுபசரித் துக்கூறினார் [டுசா]

சருவவியாபியாயிருக்கிறசிவன்பக்குவான்மாக்களுக்கல்லதறிய
ப்படானென்றுணர்த்துகின்றார்

காணார்மலத்தாற்கண்ணிழந்தார்கலந்தேயெங்குநிறைந்தானைச் *
சேணாிரவிதனைக்காணார்சிறந்தவிழியையிழந்தாருங் *
கோணாதினையும்பூணெனவேகொண்டானடியைக்கண்டார்கண் *
மாணாமூலமலவலியைமாய்த் தாரவன்றன்வலியாலே *

எ து கட்புலனையிழந் துநிற்குமவர்களாகாசத் தின்கணின்றெங்கும் பரம்புமாதித்தியனைக் காணமாட்டாதவாறு போலவாணவமலத் தினாலேயறிவாகியகண்ணினையிழந்தபேர்களெங்குங்கலந்துநிறைந்துநிற்கிறசிவனைக்காணமாட்டாராயினிப்படிக்காணப்படாதசிவனைக்கண்டவர்யாவரெனிலந்தச்சிவனதுசத்தியினாலேதம்மைமறைத்திருக்கும்பொல்லாதமூலமலமாகியவாணவமலசத் தியைக்கெடுத்துஞானக்கண்பெற்றோர்யாவர்சிலரவர்களேவளைந்தநாகத்தையாபரணமாப் பூண்டசிவனதுதிருவடியைக்கண்டவர்கள் எ—று [௰எ]

அந்தச்சிவஞானிகள் எந்தக்காலமுஞேயத்தைவிட்டுநீங்கார்களென்பதுணர்த்துகின்றார்

வானமதனைநீங்காதுவாயுவிரைந்துமதனைப்போன் *
ஞானமயனைநீங்கார்கண்ஞானத்தவருநடுக்கத்துந் *
தேனின்மொழியாரிணைத்தோளைத்திளைக்கும்பொழுதுஞ்சினஞ்செறிய *
வூனத்தினரையுவர்த்தொறுக்கும்பொழுதும்யாதாமொருபொழுதும் *

எ து வாயுவானதெங்குமோடியுந்தனக்காதாரமானவாகாசத் தைவிட்டுநீங்காது. அதுபோலச்சிவஞானிகளுந்தமக்கச்சமுண்டானகாலத்துந்தேன்போலுஞ்சொல்லினையுடையமடவார்திரண்டதோளிணையைக்கலந்தனுபவிக்கும் பொழுதுங்கோபமேலிடத்தமக்குக்குற்றஞ்செய்தோரைவெறுத்துத்தண்டிக்கும்பொழுதுமற்றுமுள்ளகாலத்தும்ஞானசொரூபியாயிருக்கிறசிவனைவிட்டுநீங்கார்கள் எ று [௰அ]

சிவஞானிகண்முதலாயினோர்க்குச்சிவன்றோன்றிநிற்குமுறையுணர்த்துகின்றார்

துயக்கந்துடைத்தஞானிகட்குத்தோன்றுமெங்குந்துகளில்லான் *
மயக்கமறுத்தயோகர்க்குமருவுமிதையமலர்மீதே *
பயக்கும்பலத்தைப்பாவகனிற்பார்ப்பார்தமக்குப்பாங்குறவே *
நயக்குமுருவின்மற்றையவர்நாடவுறைவனோடோறும் *

எ - து நின்மலனுனசிவன்விடையங்களிலேயறிவுவேறுபடுந்தன்மையை யொழித்தஞானவான்களுக்கெவ்விடத்துந்தோன்றிநிற்பன் அஞ்ஞானத்தைக்கெடுத்தயோகநிலையுடையோர்க் கவருடையவிதையகமலத்திற்றோன்றுவனந்தணர்க்குக்காருகபத்தியமாகவனீயந்தெக் கணக்கினீயமெனக்கூறியமூவிதமாகியவனல்களிற்றோன்றியவர்விரும்பியபலத்தைக்கொடுப்பன்மற்றுமுள்ளவான்மாக்களெந்நாளுந்தெரிசித் தற்குச்சிவலிங்கமுதலிய ஈயந்ததிருவுருக்களிலேயெழுந்தருளியிருப்பன் எ று [யக]

ஞானநிலையுயர்புங்கன்மநிலையிழிபுமுணர்த்துகின்றார்.

ஒளியபதுமராகங்கையுடையார்க்குவகையலதுண்டோ ✻
தெளியயோகசித்தர்க்குஞ்சிறப்பேயலதுசெலலுண்டோ ✻
புளியசிலையைப்பொறுத்தார்க்குப்பொருளோசிறிதுதுயர்பெரிது ✻
நெளிவுபெரிதுபலஞ்சிறிதுநிரந்தகருமநிலையார்க்கே ✻

எ து ஒளியினையுடையமாணிக்கத்தைக்கைக்கொண்டார்க்குமகிழ்ச்சியன்றித்துயருளதோ, வதுபோலத் தெளிவினையுடைய ஞானயோகஞ்சித் தித்தோர்க்குமின்பமேயன்றித் துன்பமுளதோ,புல் லியநிறத் தையுடையவம் மிக் கல்முதலியவற்றைச்சுமந்தோர்க்குவிலையாலெய்தும்பொருளோஅற் பம்அதனைச்சுமக்குந்துயரமோமிகுதியாயிருக்குமதுபோலப்பூசைசெபந்தியான மெனப்பரந்தகன்மநிலையினிற்போர்க்குப்பெறும்பலமற்பம்அடையுந்துயாம்பேரியது எ-று

உண்டோ எ-து இல்லையெனவிளக் கிநின் றமையாலெதிர்மறை செல்லலென்பதுடுசலலெனவிகாரமாயிற்று புல்லியவென் பதுபுளியவெனலகாரம் ளகாரமாயிற்று சித்தர் என்றது ஞானவான்களெனக்கொள்க [உய]

மேலந்தஞானவான்களெழுந்தருளியிருக்குமெல்லையின்விசிட்டமுணர்த்துகின்றார்

சிறந்தபரமசிவனுருவந்தெருண்டபரமசிவஞானி ✻
யுறைந்தவெல்லைவிற்கோடியளவும்பாவமொழிந்துவிடு ✻
நிறைந்தகங்கைநிகழிடத்துணீங்குமயுதமாறளவு ✻
மறைந்தவளவினருத்தத்துளகலும்பாவமரன்புரிக்கே ✻

எ - து சிறப்பினையுடையபரமசிவனதுசொரூபத்தை யுணர்ந்த மேலானசிவ ஞானியானவனெழுந் தருளியிருக்குமேல் ஒக்குக்கோடி விற்கிடையளவும்நீரால் நிறைந்தகங்கைநதிவிளங்குமெல்லைக்கறுபதினாயிரம் விற்கிடையளவுஞ்சிவாலயத் தெல்லைக்குமுப்பதினாயிரம்விற்கிடையளவும்பாவமெய்தாதகலும் எ-று [உக]

சிவஞானிகள்விசிட்டமுணர்த்துகின்றார்.

நீடும்பொருளொன்றுண்டெனவேநெஞ்சமதனுணிச்சயித்தார் ❋
ஆடுமுதகமாதீர்த்தமவனிதலத்திலனைவர்க்குங் ❋
கூடுமெல்லைசிவபூமிகொடியவினைகள்கெடநினைவார் ❋
தேடியவரையருச்சிக்கசிந்தைசெய்கசிறப்புறவே ❋

எ - து நிலைபெற்றுநிற்கும் பதியென்னும்பொருளொன்றுண்டென்றேயுளத் தினகணிச் சயித்தபெரியோர் களாடும்புனல்பூமியிலுள்ளோர்யாவர்க்குங்கங்கைமு தலியபெரியதீர்த் தங்களாமன்னோர்பொருந்துமெல்லையேசிவத்தலமாம்,கொடுமை யாகியபாவங்களைநீங் கவெண்ணுவோரந் தஞானவான்களைத் தேடிநன்றாகப்பூசிக்க வுமவர்கள்திருவுருக்களைத்தியானம்பண்ணவுங்கடவர் எ-று

ஞானந்திரைலோக்கியதுல்லபமென்பதாற்றேடியவரையருச்சிக்கவெனச்சிற ப்பித்தார் [உ௰௨]

ஒருபாயமிட்டையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

அகத்திற்புரிவாரருச்சனையையரியபலத்தையடைந்திடுவர் ❋
சகத்திற்புரிவார்சங்கரனைச்சார்வரதனிற்றணியபல ❋
மகத்துளேவல்புரிவார்க்குமதிகபலமேயவையன்பாற் ❋
சகத்திலேவல்புரிவார்க்குமதனிற்சிறுமைசார்ந்திடுமே ❋

எ - து வேந்தனதுமனையகத்தின்கண்ணே வல்செய்யுமவர்களுக்கவ்வேந்த னிடத்திலேநின்றுமதிகமானபலன்களெய்துமதற்குப்புறத்திலேயேவல்செய்வோர் க்கதற்குக்கீழாயபயனெய்துமதுபோலச்சிவனைத்தம்மிதையத்தினுள்ளேயருச்சனை செய்வோர்மேலாயபலத் தினை ப்பெறுவர்கள்புறம்பேயருச்சனைசெய்யுமவராதிற்கு ழ்ந் தபலத்தையடைவர்கள் ஏ று [உ௰௩]

பாரியாரும்பயிலாதபக்கமனையுட்பத்தாவைச் ❋
சேரவவனுமவடனக்குச்சித்தக்களிப்புஞ்செய்திடுவ ❋
னேரிலானைநின்மலனைநெஞ்சுணினைக்கிலவர்க்கவனும் ❋

பூரித்திடுவன்போகவிதம்பொல்லாமலமும்போக்குவனே

எ - து பாரியானவளொருவருஞ்செல்லாதவெல்லையினெடுத்தபள்ளி
யின் கட்டனதுகணவனையணுகஅந்தக்கணவனுமவளுக்குமனமகிழ்ச்சியை
ய்வனதுபோலத்தனக்கொப்பில்லாதமலரகிதனானசிவனையிதையகமலத்தி
யாணிக்கிலவர்களுக்கிந்தச்சரீராந்தத்திலேசிவனுந்திவ்வியபோகபேதங்களை
ததுபொசித்துத்தொலைந்தவாறே தீமையானவாணவமலத் தினையுநீக்கிமுத்
டுப்பன் - எ று

சித்தக்களிப்புமென்னுமும்மையாடைபூண்முதலியவற்றையுமளித்தல்க
று, மலமுமென்றவும்மைமாயைகன்மங்களையுமெனக்கொள்க, பக்கமென்
மொழித்திரிவாயிடமென்னும்பொருள்படநின்றது. [உ]

இன்னுமோருபாயநிட்டையுணர்த்துகின்றார்.

ஈரைந்தாயதிகைநடுவேயியமமாதிமலர்கொண்டே
யார்வங்கூரப்பூசனையையமலர்க்கியற்றுமவர்தாமும்
பேரன்புடையபெருமானுருலகிற்போகம்யெரிதருந் திச்
சாரும்பிறப்பிற்சிவஞானஞ்சார்ந்துசிவன்றாள்சார்வாரே

எ - து தேகத்திலுள்ளபத்துத்திக்குநடுவாகியவிதையத்திலுள்ளேயயிங்
முதலியமலர்கொண்டுநின்மலனானசிவனுக்குப்பூசையினையுள்ளன்புபெருகு
ணஞ்செய்யுமவருமான்மாக் களிடத்திலேபெருங்கருணையையுடையசிவனு
த்திற்சென்றமிருந்தபோகங்களைப்பொசித்துத்தொலை ந் தவாறேபூமியின்க
தெடுத்தசெனனத்திலேதானே சிவஞானத்தைப்பெற்றுச் சிவனதுதிருவடி
டைவர் - எ று - அயிங்கித்த - கொல்லாமை [உ]

சிவஞானத்தைப்பெறல்வேண்டுமென்றுவிரும்புவோ
ரெய்தும்பலமுணர்த்துகின்றார்.

நச்சிலெவருஞ்சிவஞானநம்பனமரும்புரிநண்ணித்
துய்ச்சேபோகவிதந்தொலைவிற்றேன்றிப்புவியிற்றரிசழியக்
கச்சேபுளியகாயத்தைக்களைகண்டமதுகணிற்கண்டு
விச்சைதனக்கும்விச்சாயவிமலன்கமலம்விரவுவரோ

எ - து யாவராகிலுஞ்சிவஞானத்தைப்பெறல்வேண் டுமென்றுவிரும்பினவர்கள், சிவலோகத்திற்சென்றங்குள்ளபோகபேதங்களைப் பொசித்துமுடிந்தவாறே பூமியின்கண்வந்துசெனித்துத்துன்பங்கள்கெடும்படிபுல் லியயாக்கையினைவெறுத் துக்களைகணாகியசிவனைத்தமதுஞானக்கண்ணாலேதெரிசித்துஞானத் துக்கும்வித்தா யிருக்கிறசிவனதுதிருவடித்தாமரையைவேறறக்கலந்திருப்பர் — எ று

[உசு]

விச்சை - எ-து - ஞானம் விச்சு - எ-து - வித்து

அந்தஞானவேட்கைமூவிதமென்றுமவற்றாற்பெறும்பயனி
ஃதென்றுமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

ஆசைதானுமூன்றுவிதமறியிலவையுங்கனிட்டாந்தம் ✻
பேசுங்கனிட்டவாதரவுபெற்றோர்மூன்றுபிறப்படைந்து ✻
தேசார்ஞானயோகத்தைச்செறிவர்பரமதேசிகனாற் ✻
பாசம்பிரியப்பரமானவின்பவெள்ளம்பருகுவரே ✻

எ - து அந்தவாசையாராயுமிடத்துஉத்தமம்மத்திமங்கனிட்டமென மூன்றுவிதப்படும் அதிற்பிற்கனிட்டவாதரவுபெற்றோர்மூன் றுசெனனம்பிறந்துமூன்றாவதுசெனனத்திலேபரமகுருவினருளினாலேயாணவமுதலியபாசங்களைநீங்கவொளிபரம்பியஞானயோகத்தைப்பெற்றுமேலானவானந்தவெள் ளத்திலேயனுபவிப்பர் - எ று - தான் - எது - அசை

[உஎ]

உடையாரிடைவேணுளத்தமலனுலகமதனையுகப்புறவே ✻
யடைவாரவனிதலத்திரண்டுபிறப்புமவலவுடலாசை ✻
விடுவார்பரமசிவஞானிவிளைத்தகருணைவெள்ளத்திற் ✻
படிவார்பரமசிவன்பாதம்பரிப்பார்பசுநோயரிப்பாரே ✻

எ - து சிவஞானத்திலேமத்திமமானவாதரவு உள்ளத்தினையுடையோர் மேன்மையுண்டாகச்சிவலோகத்தின்கணடைந்து பின்பு பூமியின்கணிரண்டுசெனனம்பிறந்திரண்டாவதுசெனனத்திலேயுக்கமான தேகவிருட்டினைகிட்டும்பரமசிவஞானியானவாசாரியன்வைத்தகிருபைக்கடலிலேபடிந்து மேலானசிவனதுதிருவடிகளைத்தமதுள்ளத்தின்கட்டரித்தாணவநோயைநீக்கி முத்தியடைவர் எ று

[உஅ]

வேண் விருப்பு

பெற்றோர்பெரியவாதரவு பெருமானுலகமதுபெற்றே ✻

மற்ருேருடலமண்ணுலகிலவாய்க்கமனத்தின்மயக்கினையு *
மற்றேயயலவொளிவெளியையறிந்தேபிறிந்தேயவ்வுடலம் *
பெற்றேபிரியாப்பெரும்பொருளைப் பிரியாரழியாப்பேரின்பம் *

எ - து சிவஞானத்திலே யுத்தமமான வாதரவுபெற்ருேர் சிவலோகத்தையடைந்துமீண்டுபூமியின்கட்பிறிதொருசரீரமெடுத்தங்ஙன மெடுத்தவச்சரீரத்திலே தானேயுள்ளத்தில்விருப்புவெறுப்பினையுமொழித்துநின்மலமானஞானவெளியினையுணர்ந்துபின்னரந்தச்சரீரத்தையுநீங்கித்தன்னைநீங்காது நிறைந்துநிற்கும்பரமசிவத்தினைப்பெற்றழியாதபேரானந்தத்தைநீங்காதனுபவிப்பர் எ - று [உக]

வேறு

என்றுகருமாதிபமகத்திறமிசைத்தான் *
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் *
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினையைய *
நின்றமுனியன்றுணரநிற்குணனினைந்தே *

எ - து வெளி [கூ0]

வேறு.

காமுறுவாரையுங்கண்ணினனே காமனைக்காய்தழற்கண்ணினனே *
நாமமுமாயிரம்பெற்றவனே நான்முகன்றன்னையும்பெற்றவனே *
யேமமுமென்றனக்கானவனேயேனமுமெய்சிலைக்கானவனே *
தேமொழியாளொருபாலினனேசிறுவனுக்கன்றருள்பாலினனே *

எ - து தன்னைவிரும்புமவரையுமடிமைக்கொண்டருளுதற்குக் கருதினேனே,காமனையெரித்தநெருப்புக்கண்ணையுடையோனே, ஆயிரந்திருநாமத்தைப்பொருந்தினேனே, நாலுமுகத்தையுடையபிரமாவையுஞ்சிருட்டித்தவனே, யெனக்கின்பமுமாயிருப்போனே, பன்றியையுமெய்யாநின்றவில்லையுடையவேடனுயினேனே தேன்போலுமொழியினையுடையவுமையாளையொருபாகத் திலுடையோனே, சிறியகுழந்தையானவுபமன்னியபகவானுக்குமுன் னூட்கொடுத்ததிருப்பாற்கடலையுடையோனே எ-று -

காமுறுவாரையுமென்றவு ம்மை: யுள்ளபடியுணர்வோரையேயன்றி யென்பது, அவாய்நிற்றலினெச்சவும்மை, நாமமுமென் னுமும்மைமுற்றுமமை,நான்முகன்றன்னையுமென் னுமும்மை நாரணனையுமெனவெதிரதுதழீஇயது, ஏமமுமென்

னுமும்மை, யெனச் குயிரானபசுரூபியாயிருத்தலேயன்றியென, எச்சந்தழீஇயிற் [கூக]
று - எனமுமென்னுமும்மையிழிவுசிறப்பு.

உன்னலன்வேள்வியுடைத்தவனேபுற்றதுஞடையுடைத்தவனே *
கன்னியர்தங்களைக்காதலனேகாமுறுவாரையுங்காதலனே *
பொன்னனமேனிபொறுத்தவனேபுன்மையவென்பொய்பொறுத்தவனே *
யென்னெனும்புன்மையிலாதவனேயானெனும்புன்மையிலாதவனே *

எ - து தன்னைநினையாததக்கனியாகத்தையழித்தோனே, பலநுணியாஞ்ஞு சேர்ந்தகாதையையுடையாகத்தரிக்குந்தபோதனனே, மதுராபுரியின்கண்வணிக கர்குலத்துக்கன்னிகைகளுக்குக் கணவனுமுள்ளோனே, தன்னைவிரும்புமடியாரை விரும்புவோனே, தானிட்களனுமிருந் தும்அடியவர்பொருட்டாகப்பொன்போன்ற திருமேனியைத்தரித்தவனே, பொல்லாதவெனதுவஞ் சனையைப்பொறுத்தருளி னோனே, யெனதென்னும்புறப்பற் றில்லாதோனே, யானென்னுமகப்பற்றில்லையா [கூஉ]
னஞானதித்தியனே - எ று -

வேறு.

அனகனச்சுதனரனுருத்திரனழகனட்டநிண்புயவீரன் *
பனிவரைக்குநன்மகடனக்குளம்பரிவுபட்டிடம்பருள்பாகன் *
தினகரற்குமுன்பலேயிறுத்தவன்சிரமறுத்தவனல்லோனைப் *
புனிதனற்புதன்புதல்வனற்பதம்புணர்விருப்பொடும்புகழ்வாமே *

எ - து பாவமில்லாதவனுமாயழிவில்லாதவனுமாய்ச்சங்காரகருத்தாவுமாயயான் மாக்கள்துன்பத்தைப்போக்குவோனுமாய்ச்சவுந்தரியனுமாய்த்திண்ணியவெட்டுத் தோள்களையுடையவலிபுடையோனுமாய்மிமவானுக் குநல்லமகளாகியபார்வதியார்க் குக்காதல்கொண்டுதிருமேனியிலேபாதியருளினோனுமாய்முன்னுட்டக்கனியாகத்து லேயாதித்தியனதுபல்லேயுதிர்த் தோனுமாய்ப்பதுமாசனத்திலிருக்கும்பிரமாவினது தலையையரிந்தவனுமாய் நித்தியசுத் தனுமாயதிசயமுள்ளோனுமாயிருக்கிற சிவனு டையமைந்தனனமுருகனதுநல் லதிருவடிகளைக் கூடுமாசையோடுந்துதிசெய்வாம் [கூங]
எ - று

தமலமோகமுந்தவிரவேயருந்தவருமாதவன்முதலோரும் *
விமலவீரசண்முகசூர்சரண்விடலைகாவெனுந்நிபியாரும் *
மமலனுதிசண்முகன்தாள்பணிந்தகிலநீநிபுமறிவான்வண் *

கமலனான்முகன்மதலைமாதவன்கருணையான்மலங்களைவாமே ※

எ - து ஒருவராலுஞ் செயற்கரிய தவத்தினையுடைய விருடிகளுமாதித்தியன் முதலிய முப்பத்துமுக்கோடிதேவர்களுந் தம்முடைய வாணவமலத்தால்வருமறியாமைமுதலியநீங்கும்வண்ணநின்றுமலமில்லாதவனே யந்தமலசத்தியைக்கெடுக்கும்வலியையுடையவனே யாறுமுகத்தையுடையவனே குகனே குறமகளைமணஞ்செய்துகானகத்திருப்பவனேநீயே புகலிடமெம்மைக்காப்பாயாகவென் றுதுதிக்குந்தோத்திரத்தைக்கைக்கொள்ளு மமலனுமாய் எவற்றிற்குமுதல்வனுமாயிருக்கிற சண்முகனுடையதிருவடிமலரைப்பணிந்தெல்லா ப்பொருளையுமறிந்தோனா யழகியதாமரைத்தவிசினையுடையநான்முகனுக்குப்புத்திரனுமாயிருக்கிற வகத்தியமாமுனிவனதருளினாலேமலமாயாகன்மங் களைப்போக்குவாம் எ - று

மலமோகமுமென் றவும்மையால் மதமுதலியஆணவகாரியம் ஆறுமெனவறிக [௩௪]

மூன்றாவது ஐவகையாக்கவியலுமுற்றும்



## நான்காவது பலவிசிட்டகாரணவியல்

மேலிவ்வோத்தென்னுதலிற்றோவெனின் முற்கூறிய கன்மயாகாதிபலன்களதிகமாதற்குக்காரணமானதேசகாலமுதலியவற்றையுணர்த்திற்றாகலாற் பலவிசிட்டகாரணவியலென்னும்பெயர்த்து இத்தலைச்செய்யுளென்னுதலிற்றோவெனின்பொதுமையானவறத்தினைச்சொல்வான்றுடங்கியகத்தியனை க்கந்தன்விளித்தனுதலிற்று

பிறப்பிலிபேதமில்லிபேணுவார்தம்மையென்று ※
மறப்பிலிமலர்த்தாண் மன்னுமனத்துறவுறவேவைகதுச் ※
சிறப்புறுதேசமாதிசெப்புவமுனிவகேளாக ※
வறத்தினைப்புரிந்தார்க்காகவரும்பயனதிகமாங்கும் ※

எ - து வாராய்முனிவரனே தனக்குற்பத்தியில்லானாயெவற்றினுமன்னியமின்றியிருப்பானாய்த்தன்னைவிரும்புமடியவரை யெக்காலுமறப்பில்லானாயிருக்கிறசிவனதுதாமரைமலர்போன் றதிருவடிகளைமனத்தின்கணிலைபெறவிருத்தியுத்தமமானதேசமுதலியவற்றை யுனக்குச்சொல்லாநின்றோம், அதனையறிவாயாகவதன்வழியறஞ்செய்வோர்க்குண்டாம்பயனிவ்வுலகத்தின் கணன்றிச்சுவர்க்கத்தின்கண்

[க]

னுமதிகமாகப்பலிக்கும் எ று

மேனிறுத்தமுறையானேதொகுத்தவற்றைத்தலேதடுமாற்றமென்னு ந்தந்திரவுத்தியானுணர்த்துகின்றார்

சிறந்தநற்றேசந்தன்னிற்றேடருங் காலங்கூட *
மறந்திடாவிதியினுலேவாய்த்தவாதரவுகூர *
வறந்தனையறிந்தவாய்மைப்பாத் திரமாவானங்கைச் *
செறிந்திடச்செய்தவற்பமுலகிலும்பெருகுந்திண் ணம் *

எ து உத்தமமாகியகாசிமுதலாகிய புண்ணியதலங்களிலேதேடுதற்கரிதாகி யகிராணமுதலியபுண்ணியகாலங்கள்பொருந்தவழுவாதவிதியினேடு பொருந்தின வாதரவுபெருக'அறமுதலியவற்றையுணர்ந்தசற்பாத்திரமான வன்கையிற்பொருந் தும்வண்ணமுபகரித்தபொருள் சிறிதேயாயினுமஃதுலகினும்பெரிதாமிதுசத்தியம் [உ]
எ று ஆலுருபை ஓடுவாகக்கொள்க

முன்னைச்செய்யுளிற்றெகுத்துக்கூறினரிச்செய்யுளிலதன்பயன்பிற ப்பித்துணாத்துகின்றார்

ஓங்கியவதனைச்செய்தவுத்தமர்சிவலோகத்துட் *
டாங்கியேபோகபேதம்பிரளேயசமையந்தன்னி *
னீங்கரும்பொருளைக்கண்டுநிறையுமவொருமைநேரத் *
தூங்குவரின்பந்தோன்றத்துகண்மலஞ்சோருமன்றே *

எ து பயனுலுயர்ந்தஅந்தஅற்பமாயின நன்மையை ஞானவான்கள்பாற்செ ய்தபெரியோர்கள்சிவலோகத்திற்சென்றுங்குள்ள போகவிதங்களையெய்திப்பின் னர்ச்சங்காரகாலத்திற் பொல்லாதமலத்தை நீங்கித்தம்மைவிட்டு நீங்காதசிவத் தைத்தெரிசித்துக்கடல் அலேயற்றடங்கினுற் போலவுள்ளத்துன்கண்ணமைவுபிறக் க ஐக்கியபாவத்துடனானந்தானுபவமுண்டாகநிலைபெற்றிருப்பர்கள் எ று [ங]

ஐவகையாகத்தோர்க்குதவும்பலத்துக்குக்காலவரையறையுணர்த்து கின்றார்

கருமிகட்கீகைநிற்குங்கலந்தொருபிறப்பிற்கற்ற *
பெரியராந்தவத்தோர்க்கீகைபிறப்பொருநூறுநிற்கும் *
மரியமந்திரத்தார்க்கீகையாயிரம்பிறப்புநிற்கு *

மூரியயோகிக்குஞானிக்கூழ்பேருழிநிற்கும் ※

எ - து கன்மயாகமுதலியஐவகையாகத்தோர்க்குங்கொடுத்தது, அடைவே ஒருசெனனம், நூறுசெனனம், ஆயிரஞ்செனனம், பிரமகற்பம், மகாசங்கார மானகாலமளவும், நின்றுபோகவிதங்களைக்கொடுக்குமென்றவாறு - யோகிக்கூழியெனவும், ஞானிக்குப்பேரூழியெனவும், பதமாற்றுக, போகவிதமென்பது, எஞ்சிற்று [௪]

தேசமுதலியவற்றிற்றானமுதலியகன்மங்கள்செய்யினதிகபலந் தருமென்பதுணர்த்துகின்றார்.

திருவெலையெழுவாயானகாரணஞ்சிறக்கவீகை ※
யெரியினையோம்பலீசற்காலயமியற்றலென்றும் ※
பரிவுறப்பூசைபண்ணலெனுமிவைநான்கும்பாங்கார் ※
தருமமேயிவற்றால்வேண்டும்பலமெலாந்தழைத்துச்சாரும் ※

எ - து புண்ணியதேசமுதலாகக் காலமுஞ்சிரத்தையும், பாத்திரமு மான பலவிசிட்டகாரணங்கள்சிறப்போடுபொருந்தவவ்விடங்களிற் றானஞ்செய்தலும், அக்கினிகாரியஞ்செய்தலுஞ்,சிவனுக்காலயமுண் டாக்கலு,மெக்காலமுமன்புபொருந்தவருச்சனைசெய்தலுமென்னுமித்தொழில்களுனான்குஞ்;சிவபுண்ணியங்களுட்டலைமையாம், இதனாற்றாம்வேண்டியபோகங்களெல்லாமிகவுண்டாம் - எ று [௫]

சற்பாத்திரவிசிட்டமுணர்த்துகின்றார்.

பாத்திரமாவான்பாவப்படுகடற்பட்டார்தம்மைத் ※
தீர்த்தமலேசன்வாழும்புரமெனுந்தீரஞ்சேர்ப்பான் ※
கூர்த்தமெய்ஞ்ஞானமென்னுங்கரத்தினைக்கொடுத்தேமற்றோர் ※
தீர்த்திடவல்லார்கைதானில்லவர்க்குண்டோசெய்கை ※

எ - து சற்பாத்திரமானவன், பாவமாகியஒலிபடுகடலினழுந்துவோர்க்குச்சத்தியஞானமாகிறகையினைக்கொடுத்துப்பாவப்படுகடலினையொழித்து மலரகிதனனசிவன்வாழுஞ்சிவலோகமென்னுங்கரையையடைவிப்பன், ஞானக்கையுடையோனன்றிப்பாவப்படுகடலையொழித்தெடுத்தற்குமற்றையோர்யார்தான்வல்லார், பிறருமெடுக்கவல்லர்காணுமென்னிற்கையிலாதார்க்குத்தொழிலுளதோ, அதுபோலச்சற்பாத்திரமல்லாதவன், பாவப்படுகடலினின்றுமெடுக்கமாட்டான் எ று - தமக்கு - எ து - தம்மையெனவுருபுமயங்கிற்று. [௬]

ஆன்மாக்களைஞானவான்களேகரையேற்றுவரவொழிந்தவஞ்ஞா
னிகள்கரையேற்றமாட்டாரென்பதுணர்த்துகின்றார்

அலைபுனலதனுளாழ்ந்தசிலைமரப்புணையாலன்றிச் ※
சிலையினாற்றீரந்தன்னைச்சேர்வதூஉமில்லைத்தேரிற் ※
றொலைவிலாப்பாவப்பௌவச்சுழியிடைச்சுழல்வார்தம்மை ※
நிலைமையாரன்றித்தீயார்நீக்கிவான்கரையினீட்டார் ※

எ - து அலையெறியாநின்றபெருநீரினுள்வீழ்ந்தமிழ்ந்தினகல்லானதைக்கரையேற்றவிசாரிக்கின் மரத்தாற்கட்டியதெப்பத்தினாலன்றிக்கல் லினாலேற்றப்படுத்தற்லாகாதவாறுபோலத்தொலையாதபாவக்கட லிற்சுழியாகியசெனனமரணங் களிற்சுழலுமான்மாக்களைச் சற்பாத்திரமாகியஞானவான் களே, கரையேற்றுவரன்றியசற்பாத்திரமானோர் அக்கடலினின் றுஞ்சுவர்க்கமாகியகரையிலேற்றமாட்டார் எ - று முற்கூறியஞானக்கையென்பதற்கேற்கநீட்டற்றொழில்கொடுத்தாரென்க [எ]

பாத்திரமென்னுஞ்சொல்லுக்குப்பொருளுணர்த்துகின்றார்.

பாவெனும்பதத்தினர்த்தம்பாவமென்கடலிற்பட்டார் ※
தேவனற்பதமென்றீரத்திருத்துவான்றிரத்தினர்த்தம் ※
பாவமென்கடற்பட்டாரைப்பரமர்தம்பதமென்பாரத் ※
தேவியேயிருத்துவானேபாத்திரமென்னப்பட்டான் ※

எ - து பாவென்னும்பதத்தின்பொருள், பாவமாகியகடலினுள்வீழ்ந்தோரென்றும், திரமென்னும்பதத்தின்பொருள், சிவனதுநல்லதிருவடிமலராகியகரையிலிருத்துவனென்றும், ஆகையாலேபாவமாகியகடலின்கண்வீழுந்தோரை, மேலானசிவனதுநல்லதிருவடிமலராகிறகரையிற்பொருந்தும்வண்ணஞ்செய்திருத்துமவனேபாத்திரமென்றுசொல்லப்பட்டான் - எ - று - [அ]

அந்தச்சற்பாத்திரமாயுள்ளோர்க்குப்பிச்சையிட்டார்பெ
றும்பயனுணர்த்துகின்றார்.

அருமறையாய்ந்தகோடியந்தணர்க்கருந்தவாய்ந்த ※
தருமமுஞ்சிறிதேயென்னத்தழைந்திடுந்தம்மையோர்க்கு ※
வொருமையயோகர்தங்கையுதவியபிச்சையுள்ளுநன் ※

பிரியவேபெறுவரின்பம்பிச்சையைப்பெறுவித்தாரே ❊

எ - று நாலுவேதங்களையுமாராய்ந்தகோடிபிராமணர்க்கறுசுவையோடுபொசிப்பித்தபுண்ணியமுமற்பமென்னும்வண்ணமான்மசொரூபத்தைத்தெரிசித்தவொருப்பாட்டினையுடையசிவயோகிகளுக் கிட்டவொருபிடிபிச்சையானது, பெருத்ததிகமாம், ஆதலாலவர்க்குப்பிச்சையைப்பெறும்வண்ணமிட்டோருட் குற்றமாகியவாணவாதிகணீங்கிப்பேரின்பத்தைப்பெறுவர் - எ - று [௧]

சிவயோகிகளையமுதுசெய்வித்ததுசிவனுக்காமென்பதுணர்த்துகின்றார்

அருந்துகவமலன்றன்னையகத்துணர்ந்தவராயன்னங் ❊
கருத்திருந்தவர்க்குச்செய்தபூசனைகடவுள்கொள்வ ❊
னொருத்தனுக்குபசாரங்களுடலிடையுலகர்செய்வர் ❊
பிரித்துடலுயிரைப்பேணும்பெற்றியையாரேபெற்றார் ❊

எ - று நின்மலனாகிய சிவனையுள்ளுயிராக த்தம்முள்ளத்தின்கணுணர்ந்த சிவயோகிகளுக்கன்னத்தையருத்துவிக்கக்கடவன ங்ஙனமவர்க்குச்செய்த பூசையைச்சிவன்அவர்களுள்ளத்தின் கணிருந்துகொண்டருளுவன் அஃதெங்ஙன மென்னினுலகத்திலுள்ளோர் யாதாமொருவனுக்குச்சந்தனமலர்முதலியவுபசாரங்களையவனதுசரீரத்தின்கட் செய்யவேயவனுயிர்க்குச்செய்ததாம் அதுபோலச்சிவயோகிகளுக்குச்செய்ததுசிவனுக்காம் உடலின்கட்செய்வதொழிந்துயிரின்கட்செய்யாரோவென்னினுலகத்திலேயெவர்தாமுடம்பினைநீக்கியுயிரைக்கண்டுபகரிக்குமுறைமைபெற்றவர் எ - று [௨]

மேலவர்களுக்குப்பிதிர்திவசங்களிலேயருத்துவித்தோரடையும்
பலமுணர்த்துகின்றார்

விடுத்துலகமலன்றன்னைவிரும்பியவிதுலர்க்கன்னங் ❊
கொடுத்தவரன்புகூரப்பிதிர்க்களைக்குறித்துநாளி ❊
லெடுத்தெழுமூன்றுசுற்றங்கீழ்க்கிடந்திளையாதென்று ❊
நடத்தொழினம்பனுட்டிவிருத்தியேயிருப்பர்நம்பால் ❊

எ - று பிதிர்க்களைநோக்கிய திவசங்களிலேயுலகவாஞ்சையை யொழித்துநின்மலனாகியசிவனைவிரும்பிய வொப்பில்லாததபோதனர்க்கன்புபெருகவமுதுசெ

விட்டுமிக்கதனையுண்கைபிர்க்கீயாதேயுண்கை ※
கட்டமுங்கடுமொழிகழிந்தவூன்காயந்தானு ※
மொட்டியேயுடலிற்றோன்றும்புழுவுமென்றுரைகவோர்ந்தே ※

எ - து யாதாமொருவர்தமக்குச்சமைத்த வன்னத்தைமுற்கூறிய சிவன்முதனால்வருமமுதுசெய்யும்படியன்பினாலே கொடுத்தந்தச்சேடத்தைப்பொசிக்கைஅமிர்தம்பொசித்தலோடொக்கும்இந்நால்வர்க்குமுதவாதுண்கை,மலமும்,விடமுமுயிர்நீங்கியகாயமானபிணமுமுடலின்கட்பொருந்தி த்தோன்றும்புழுவுமுண்டலொக்குமென்றவையிற்றை யுணர்ந்து அவர்களுக்கிடாமலுண்கையையொழிய க்கடவர் எ - று [௰௪]

முன்னைச்செய்யுளிலுழவாதியையைந்தென்றுமலகிடன்முதலைந்தென்று ந்தொகுத்தாரதனைவகுத்துணர்த்துகின்றார்

நிலத்துழுதல்கூலிவேலைசந்தையிற்கொண்டுவிற்கை ※
குலைத்தசொற்கூட்டுங்கோபஞ்சத்தியங்கூறலுள்ளு ※
மலக்கிடன்மெழுகலங்கியாக்கனீரரிசியென்றே ※
யிலக்கியத்தியம்பும்பத்துந்தமக்கெனிற்பாவமீட்டும் ※

எ - து புறம்பேசென்றுநிலத்தின்கணுழுதலுங்கூலிகொண்டுவேலைசெய்தலுஞ் சந்தையிற்கொண்டுவிற்கையு நாய்குலைத்தாற்போன்றசொல்லையுண்டாக்குங்கோபமும்பொய்யுரைத்தலு மில்லத்தின் கணிருந்தலகிடலு மெழுகலு நெருப்புமூட்டலு ந்தண்ணீரெடுத்தலு மரிசிகுற்றலுமென்று நூல்களிற்கூறுந்தொழில்கள்பத்துந்தமக்கென்றுகருதிச்செய்யிற்பாவங்கள்வரும் எ - று

இத்தொழில்களால்வரும் பாவம்யாதெனிற், புருடாரேருழுவுதொழில்செய்யுங்காற்செந்துக்கண்மாய்க் கையுமுழுமெருதுக்கு வருத்தமுதலியகுற்றமுமுளதாம், கூலிவேலைசெய்யுங்காலவ் வேலைத்தொழிலிருந்தச்செய்யாமையும்வேலைக்கழைப்பும்வெட்டல்கொத்தலிற் கொலையுமற்றுமுள்ளகுற்றமுமுளதாம், கொண்டுவிற்குமிடத்துப்பிறர்பொருளேறக் கோடலுந்தம்பொருள்குறையக்கொடுத்தலும், பொய்யுரைத்தலு, முதலியகுற் றமுமுளவாம்; கோபம்வருமிடத்துப்பிறர்க்கின்னாமையுந் தமக்குணர்வுகேடும், வன்சொல்லுமுதலியகுற் றமுளவாம், அசத்தியங்கூறுமிடத்துப்பிறர்க் கிடுக்கணும்பகையு, மச்சமும், பழியுமுதலியகுற்றமுளவாம், மகளிரலகிடன்முதலியவைத் தொழிற்கண்ணுஞ்செந்துக்கண்மாய்க்குங்குற்றமுளதா

பொருந்தியவன்பர்தம்மைப்பொருந்திடிற்பருப்புநெய்யு ✻
முறைந்தவவ்வருடந்தன்னிற்றசகுணமோங்குமாங்கே ✻

எ – று சிவன்முதலியநால்வரையுமன்பிறைமேலயமுதுசெய்வித்த, அவிழ்களி லோரவிழ், ஆயிரம்வருடஞ்சிவலோகத் திலிருக்கும்படிவைக்கும், அந்தஅவிழுட னேபருப்பு, நெய்யும், பொருந்துமாயினங்ஙனமருத் துவித்தவன்பர்தம்மைமுற் கூறியவருடத்திற்பதின்மடங்காகியபதினாயிரம்வருடஞ் சிவலோகத்திலேயுதிகமா கவிருத்துமென்றவாறு அவிழ் அன்னம். [௰௮]

இதுவுமது.

பொரித்தநற்கறியும்புல்நிற்றசதசகுணிதம்போனந் ✻
தரித்தசாட்டியமேயென்னிற்சததசகுணமுஞ்சாரும் ✻
பரித்தநற்கந்தபத்நஞ்சதசநகுணமும்பற்று ✻
மிரத்தநற்சாலியன்னமிபுதமேயெண்ணிலேன்றும் ✻

எ – று முற்கூறியபருப்புநெய்களுடனேநல் லபொரிக்கறியுங்கூடுமாயின்மு ன்னோரவிழுக்குக்கூறியவருடத்தினூறுமடங்கான நூறுயிரம்வருடஞ்சிவலோகத்தி லிருத்தும்அவர்களுக்குநிவேதிக்குமன்னமறுபதுநாளிலேவிளைந்தநெல் லினதன்ன மாயின், முன்னோரவிழுக்குக்கூறியவருடத்திலாயிரமடங்கானபத் துநூறுயிரம்வ ருடஞ்சிவலோகத்திலேபொருந்தவைக்கும், நன்மைபொருந்திய புழுகுசம்பாநெ ல்லினதன்னமாயின், முன்னோரவிழுக்குக்கூறியவருடத் திற்பதினாயிரமடங்கான கோடிவருடஞ்சிவலோகத்திற்பொருந் தும்வண்ணமிருத்தும், நல்லசெஞ்சாலிநெ ல்லினதன்னமாயின், முன்னோரவிழுக் குக்கூறியவருடத்தினூறுயிரமடங்கானபத் துக்கோடிவருடஞ்சிவலோகத்திலிருத்தும் – எ – று

ஏகாரம, தேற்றம், உரைத்தவ வ்வருடமென் டதுஞ்சிவலோகமென் பதும் அதிகாரம்பாரித்தமையால், யாண்டும்வருவித்துக்கொள் க, சாட்டிடம், அறுபதா ங்குறுவை, கந்தபத்நம், புழுகுசம்பாநெல் [௰௧]

இதுவுமது

சாலியின்விசிட்டராசசாலியார்சமைத்தவன்ன ✻
மேலையபலத்தின்மிக்கதசகுணம்விளைக்கு, நீண்டிங் ✻
கோலியபலங்களேறுங்கொழுவியநெய்யுங்கூடி ✻
மேலவேகறியுங்கூடிலேற்றமுன்னிசைத்தவாற்றும் ✻

பூமியின்கணிருக்கவுநரகத்தின்கட் டுருயுறுநின்றவிருபத் தொருசுற்றத்தையுமெடுத்துச்சிவலோகத்தில்வைத்தோராவரஃதேயன்றி த்தங்களுள்ளத்தின் கணினைந்தபடியேசற்புத்திரனையும்பெற்றுமனமகிழ்ச்சியும்பெருக க்கண்டிருப்பபொன்றவாறு [உஉ]

இதுவுமது

உயிர்க்குயிராகிநின்றவொருவனையுணர்ந்தயோகி ※
பயிக்கமுங்கொளவென்றெண்ணிப்பரிந்தவர்மனைமுன்பற்று ※
வியப்பெறுவோமென்றெண்ணியவர்குலத்துள்ளாராங்கே ※
பெயர்த்தடிநடமுஞ்செய்வர்பாடுவர்களிப்பும்பெற்றே ※

எ து உயிர்க்குயிராகிநிற்குஞ்சிவனைத்தெரிசித்தசிவயோகியானவன் பிச்சைகொள்ளக்கடவோமென்றெண்ணிப்பத்தசனங்களுடைய வில்லின்முன்பொருந்தவக்கணத்திலேதானேயவர்குலத்திலுள்ளோரான விருபத்தொருவர்க்கமும் யாமினிநரகத்தினின்றுங்கரையேறுவோமென நினைந்தவ்விடத்திலேதானே மனமகிழ்ச்சியையும்பெற்றுக்கால்பெயர்த்துக்கூத்துமாடி யதற்கேற்கப்பாடாநிற்பர் எறு நடமுமென்றவும்மையாற்கையாற்றட்டமுமிட்டென்றறிக உ௩]

அந்தச்சிவயோகிக்குச்செய்யும்பூசையைச்சிவனுமற்றுமுள்ளதேவர் கள்பிதிர்க்களுந்தமக்கெனக்கொள்வரென்றுணர்த்துகின்றார்

ஒழிவறவுறைந்துநின்றவொருவனையுணர்ந்தயோகிக் ※
கழகுறச்செய்தபூசையமலனுமயனுமாலு ※
மொழில்மிகுதேவர்தாமுமெமக்கெனக்கொள்வரொன்றும் ※
பிழைகெடப்பிதிர்க்கடாமுமெமக்கெனக் கொள்வர்பெற்றே ※

எ து வெளி [உச]

சிவயோகிபூசைக்குவினியோகப்படும்பொருள்கள்பெறும்பயனு மேவல்செய்வோர்நினைப்போர்பெறும்பயனு முணர்த்துகின்றார்

பூசனைக்குபயோகங்கள்பொருவிலிபுரத்தைப்புல்கு ※
நீசனையுணர்ந்தயோகர்க்கிறைஞ்சியேயேவல்செய்தார் ※
நேசமுநிறையநெஞ்சினினைத்தவர்தாமுநீக்கி ※
யாசினைச்சிவலோகத்தினரும்பயனருந்துவாரே ※

எ-று. சிவனைத்தெரிசித்தசிவயோகிகளைப் பூசைசெய்தற்குபயோகப்படுஞ்சந்தனமாமுதலியஎண்வகைக்கந்தமுங்கோட்டுப்பூமுதலியநால்வகைப்பூக்களுநெல்லுமுதலானவைகளுமொப்பில்லாதசிவனது புரத்தைச்சென்றடையுமவர்களைவணங்கியவரேவியபணிவிடைசெய்தோருமுள்ளத்திலேயன்புநிறையும்படியவரைத்தியானஞ்செய்தோருந்தம்மைத்துயர்செயுந்தீவினைக்குற்றங்களையொழித்துச்சிவலோகத்திலேசென்றுபெறற்கரியபோகங்களைப்பெற்றனுபவிப்பர் எ-று. [உரு]

தபோதனரையுமதிதிகளையுஞ்சிவனெனக்கண்டுவணங்கு
முறைமையுணர்த்துகின்றார்.

அவனியின்மனிதர்செய்கையறிவமென்றமலன்றானே ❊
தவனொனுருவந்தன்னைத்தரித்துவந்தானென்றெண்ணி ❊
யவர்களுக்ககத்தின்வந்தவதிதியர்க்கன்புகூரச் ❊
சுவைமொழிசொல்லிப்பூசைதுடங்கியேமுடிக்கசூழ்ந்தே ❊

எ-று. பூமியின்கண்மானிடர்துவழிபாட்டினையறியக்கடவோமென்றுநின்மலனாகியசிவன்,றானேதபோதனனொன்னுந்திருமேனியைத்தரித்துக்கொண்டெய்தினனென்றுகருதியந்தத்தபோதனர்க்கு,மற்றுந்தமதில்லின்கண்வந்தவதிதிகளுக்குமன்பானதுபெருகும்வண்ணமின்சொற்கூறியவர்களுக்குப்பாத்தியாசமனாற்கியமலர்முதலியவற்றாற்பூசையைத்துடங்கிமற்றுமுள்ளவுபசாரங்களும்விதிப்படிசெய்துமுடிக்கக்கடவன் - எ - று. [உசா]

இதுவுமது.

மலினராய்வந்தாரோனும்வடிவொடுவந்தாரோனு ❊
நிலைமைபினீங்காரோனுநீங்கியநிலையரோனு ❊
மலைவறுமன்பர்க்காதிக்கவர்களுக்கமைக்கபூசை ❊
புலையுடற்பொறையைப்போக்கப்பொருந்தியதிருந்தியாரே ❊

எ-று. ஈனவுடலாகியசுமையையொழித்தற்குவிரும்பியதிருத்தத்தையுடையோரானவர், தம்மில்லின்கணமுக்குமெய்யோடுகூடியிழிகுலத்தினராய்வந்தாராயினும், பரிசுத்தராய்வேடப்பலிப்பொடுநற்குலத்தினராய்வந்தாராயினுந், தாம்நிற்குநிலைமையினின்றும்வழுவாதோராய்வந்தாராயினு, மந்தநிலைமையினீங்கியவிரதபங்கராய்வந்தாராயினும், அவர்கள்-ஆதியாகியசிவனுக்குநிலைபெற்றஅன்பராயின்அவர்களுக்குப்பூசைசெய்யக்கடவர் எ-று. [உஎ]

றெற்றுவரியமதூதரெமக்குறவாருமில்லை ※
யுற்றவித்துயரந்தன்னையொழிக்கவென்றழிவருள்ளம் ※

எ - து அந்தத்தீயோர்முற்கூறியவெரிவாய்நரகமேயன்றிமற்றுள்ளநரக பேதங்களெல்லாவற்றினுந்தங்குலத்திலுள்ளோரானவிருபத்தொருசுற் றமுங்கூடி யுள்ளம்அலமரக்கலங்கியுணர்வுகெட்டுவீழாநிற்பர், அங்ஙனம்வீழ்ந் தந்தத்துயரம் பொருமனரகத்தினின்றுங்கரையேறுந்தோறுமியமதூதர்களின்றடித்தடித்துமீள வுந்தள்ளுவர்கள், அதனாலேயித்துயரத்தையொழிப்பதற்குறவாயுள்ளோரொரு வருமில்லையிதற்கென்செய்வோமென்றுமனமுஞ்சலிப்பர் எ-று [௫௰]

சிவஞானிக்கிடர்செய்யினரகவேதனையெய்துமாதலாலவரைவழி
பட்டுய்கவென்றுணர்த்துகின்றார்.

ஆதலான்முனிவர்தம்மையவமதிசெய்யாதஞ்சிப் ※
பூதலத்தோர்கள்பூவாற்புனலினாற்பரிவுபொங்கப் ※
பாதபூசனையும்பண்ணிப்பணிந்தவர்பணியுஞ்செய்து ※
நாதனேயிவர்களென்றுநாடுகவுளத்தெந்நாளும் ※

எ - து பொறிபுலன்களைமுனிந்தசிவஞானிகளுக்கிடர்செய்யின்நிரையத்து ன்பமேவருமாதலாலுலகிலுள்ளோர்கள் அம்முனிவோரைநிந்தியாதுபயந்துஅ ன்புபெருகநீரினாலும், பூவினாலுமவர்திருவடிகளைப் பூசைசெய்தவரேவியபணிவி டையுஞ்செய்தெக்காலமுந்தம்முள்ளத்தின்கட்சிவனேயிவர்களென் றுசிந்திக்கக்க டவர் எ-று [௫௧]

அசத்பாத்திரமாவாரின்னாரென்பதுணர்த்துகின்றார்.

பகர்ந்தனமுனிவமெய்ம்மைப்பாத்திரவிசிட்டந்தன்னைச் ※
சகந்தவொன்னக்கோலஞ்சமைந்துதற்பரனைச்சாரா ※
ரகந்தனிற்பிறப்புமஞ்சாரவரபாத்திரங்களென்றே ※
யிகழ்ந்திடுமிதுவுங்கேணீயினியுனக்கியம்பயாமே ※

எ - து வாராயகத்தியமுனிவனே முன்னஞ்சத்பாத்திரவிசிட்டத் தைச்சொன் னேமேல்அசத்பாத்திரமாவதியாதெனி லுலகத்திலுள் ளோரிவர்பெரியதபோதன ரென்றுசொல்லும்வண்ணம்வேடத்தைத்தரித்துச்சுட்டுணர்வுக்கெட் டாதசிவனைய டையாதவருமாயுள்ளத் தின்கட்சனனமரணத்துக்கு ப்பயப்படாதவருமானவர்

யாவர்சிலர் அவர்களையசத்பாத்திரங்களென்று வேதாகமங்களி கூறாநிற்கும் இந்த அசத்பாத்திரத்திலேசெய்ததானம்விளைக்கும் தீமையுமேலுமக்கியாகுஞ்சொல்லாகி ன்றேமதனைநீகேட்பாயாக என்று [௫௨]

அவர்களுக்குக்கொடுத்ததானம்பலன்கொடாமலழியுமென்பதுணை ர்த்துகின்றார்

மெய்யனைவிழைந்துபாசப்பகையினைவென்றயாரு ॥
மய்யவேவேனுமென்னு முள்ளமதிழந்துநின்ற ॥
பொய்யரைப்புரிந்தபூசைபலத்தினைப்பொருந்துமோதான் ॥
செய்ததுமவர்க்குப்பச்சைமட்கலநீரோதேரில் ॥

என்பது சத்தியசொரூபனான சிவனை விரும்பியாணவமுதலிய பாசப்பகையினை ச்செயித்துமுத்தராயாருங்களையேறவேனுமென்று கருதாங்கருத்தையிழந்துநின்ற வசத்தியர்க்குச்செய்தபூசை நல்வினைப்பயனைக்கொடுக்கமாட்டாது அதனையாராயி ன்அந்தவசத்பாத்திரத்துக் குச்செய்ததானம்பசுமட்கலத்தில்விட்டநீர்போலநில் லாதுடனேயழியும் என்று

தான் என்பது அசைநிலை [௫௩]

இதுவுமது

பழுதறுவித்தேயேனும் பவரிடைப்பயிரோயாகா ॥
வழலிடையன்றிநீற்றிறு குகிபலத்தையாக்கா ॥
விழைவிலாவலியையமேவுமெல்லியலின்பமேவான் ॥
வழுவுறுமவர்க்கோயீகைவரத்தினைச்செய்யுமோமாட்டா ॥

என்பது குற்றமற்றநல்லவித்தேயாயினும் மூவர்நிலத்தின்கண்விதைத்தாலதுபயி ராகமாட்டாதவாறுபோலவும்அக்கினியின்கண்ணேயன்றி சாம்பலின்கட்செய்த வாகுதிபலத்தைக்கொடுக்கமாட்டாத வாறுபோலவும்விரும்புதற்குரிய காமமில்லாத அலியினைப்புணரும்பெண்ணானவள் புணர்ச்சியின்பத்தைப்பெறுதலைபோலவும் குற்றம்பொருந்திய அசத்பாத்திரமாயுள்ளோர்க்குக் கொடுத்ததானமும் பலத்தி னைக்கொடுக்குமோகொடுக்கமாட்டாது என்று [௫௪]

சத்பாத்திரங்களையேற்றுமென்மைம அசத்பாத்திரங்களையேற்குமென்கு ன்றுமுவமைமுகத்தானுணர்த்துகின்றார்

பாத்திரமாக்கிக்கட்டிவிரும்பினைப்பண்டமேற்பி ॥

பாத்திரமதனுண்மிக்கபாத்திரம்பரமஞானி ✽
நீர்த்தவாசையிஞலியாயெனவவன்செப்பானன்றே ✽
கூர்த்தவாதரவிஞலேயவன்புடைகுறுகிக்கொண்ணீ ✽
நீர்த்தனேயென் றுமீவான்பலத்தினைத்தெரிக்கலாமே ✽

எ - து பாத்திரமாவன வற்றுள்விசிட்டமான பாத்திரஞ் சிவஞானியேயவன் பொருள்களினுள்ளவாசையொழித் தபடியிஞலே யாதாமொருவர்பாற்சென்றிந்து ப்பொருளையெனக்கீயக்கடவையென்று சொல்லாஞதலால் நன்மையேயமிகவுமு டையசிரத்தையிஞலேயந்தசிவஞானி யெழுந்தருளியிருக்குமெல்லையிலேசென்று சுத்தனேயடியேன்றரும்பொருளைநீகொள்ளக்கடவையென்றுசொல்லியுங்கொடுக் குந்தாதாவின்பலத்தையளவிடலாமோ எ று [௬௰]

மெய்ஞ்ஞானியுமஞ்ஞானியுமேற்குந்திறமதஞல் வரும்பயனும்பயனி
ன்மையுமுணர்த்துகின்ருர்

மெய்யினையுணர்ந்தஞானிவேண்வாவிடுத்தானேனு ✽
முய்யவேபிறருமுன்னியவர்கொடையுகப்பரேனராக் ✽
கையர்கடம்மைத்தாமேகாதலித்திரப்பரந்தப் ✽
பொய்யர்கைப்புகுத்திஞர்கள்பொருளினையிழந்தார்போட்டே ✽

எ - து உண்மையைத்தெரிசித்தசிவஞானியானவன், பொருண்மேலுள்ளவா சையைவிட்டாஞயினுந்தம்போலமற்றுள்ளவர்களும்பாகதியடையவேணுமென்று கருதியந்தத்தாதாக்கள் செய்யுந்தானத்தைவிரும்பிக்கொள்வன் அர் தவுண்மை யைத்தெரிசியாத,அஞ்ஞானிகள், தாதாவானவன்கதியடையவேணுமென்றுவிரும் பாதுதம்முடையபோசனர்த்தத்தைவிரும்பித்தானத்தினையேற்பாராதலாலந்த,அஞ் ஞானிகள்கையிலேதானஞ்செய் தோர்கள்தம் பொருளினையவமேபோட்டிழந்தவ ராவர்எ-று தாம் - எ-து - அசைநிலை [௬௧]

தாதாவானவன்சுவர்க்கமடைதற்கின்டோர்சிறப்புவிஇ
யுணர்த்துகின்ருர்.

காதலித்திவார்வானைக்கலப்பநூமவர்கைகாட்டு ✽
மாதலால்வானஞ்சேரவாதரவுடையாரஞ்சிப் ✽
பாதபூசனையும்பண்ணிப்பகர்ந்துசற்காரபாடை ✽
யோதனமாதியீகவதிதிகட்குறவிரேடே ✽

எ - து அறத்தைவிரும்பித்தானஞ்செய்வோர், சுவர்க்கத்தையடையுமுறைமைகாண்பதெங்ஙனமென்னில் அவர்கொடுக்குங்காலத்துமேலாகச்செல்லுங்கைதானேயவர்சுவர்க்கத்தின்மேற்செல்லுமுறைமையைக்காட்டும் ஆகையினாலே சுவர்க்கத்தையடையவேணுமென்னும் விருப்பத்தையுடையோரிரப்போரென்றிகழாமலதிதிகளுக்குப்பயபத்துபாதார்ச்சனையுஞ்செய்து நல்வார்த்தையுஞ்சொல்லியன்னமுதலானவற்றையன்பினோடேகொடுக்கக்கடவர் - எ-று [௬௨]

தரித்திரற்குக்கொடாதான்சிறப்புடையனல்லனென்றுணர்த்துகின்றார்

செறிந்துதாவென்றுநின்றமிடியனைச்சிறியனாக்கி *
யுறைந்துளான்பெரியனெங்ஙனென்றுளத்தாகஞ்செய்வான் *
சிறந்ததாதாவேயல்லன்செட்டிவன்செய்கையெல்லா *
மிறந்திடுந்தருமமேற்றுமிடியருமின்றேலெங்கும் *

எ - து தன்னைக்கிட்டியெனக்கீயக்கடவையென்றுசொல்லியிழிவாகிநின்றிடுந்தரித்திரனை, யிவனற்பனென்றெண்ணிச்செல்வத்தையுடையபெரியவனெங்கேயிராநின்றானென்றுகருதியவற்குக்கொடுத்தற்குத்தன்னுள்ளத்தின் கண்விசாரிப்போன், அருளான்மிக்கதாதாவாகான், இவன்கொடுக்குங்கொடையெல்லாம், அவன்பாற்றனக்குமோருதியங்கருதியசெட்டாம், இங்ஙனஞ்செல்வனையிகழ்ந்து மிடியனைச்சிறப்பித்ததென்னெனில், எங்குஞ்சென்றிரக்குமிடியருமில்லையாயின் ஏற்பாரற்றுத்தன்மமானதுலகின்கணில்லாதுநாசமாமாதலாற்றரித்திரற்கேதானஞ்செய்யக்கடவன் எ-று [௬௩]

அதற்குமேலுமோர்சிறப்புவிதியுணர்த்துகின்றார்.

பொருளரிதாயிற்கேட்டார்க்கின்சொலுமரிதோபோந்தால் *
விரைவுடனெழுகையோடல்வியந்தெதிர்கொள்கையிடத் *
துரிமையிலிருத்தல்பாதபூசனையுகப்புச்செய்கை *
பிரிபொழுதுடனேசெல்கையெனுமிவையேழும்பேறே *

எ - து தன்பால்வந்துகேட்குமிரப்போர்க்குக்கொடுக்கும்பொருளில்லையாயினவர்க்குச்சொல்லுநல்வார்த்தையுமில்லாததோ ஆதலால்நல்வார்த்தையாயினுஞ்சொல்லக்கடவன், தன்பாற்பெரியோர்கள்வந்தகாலத்துவிரைவினோடெழுந்திருக்கை; யோடிச்செல்லல்கண்டவுடனெழுந்தருளப்பெற்றதேயெனக்கொண்டாடியெதிர்கொள்கை, அவரிருக்குமதற்குரிமையுடையவாதனத்திருத்தல், பாத

த்திலருச்சிக்கை, இன்றல்லவோவெனதுகிரகஞ், சுத்தமாயிற்றென்றவைரையுயர்த்திப்புகழ்தல், அவர்களெழுந்தருளும்பொழுதுபதினறடிதூரம்பின்சென்று வழிவிடுகை, யெனக்கூறுமிவைகளேழுமுத்தியடைதற்குக்காரணமாம் எ-று

ஒகாரம் - ஒழியிசைக்கண்வந்தது, போந்தாலென்னும் வினைக்கு எழுவாய்விரிக்க. [௪௪]

தாதாவுமவன்கையிலேற்றானுமடையும்பலமுணர்த்துகின்றார்.

இரக்கமாதரவுகூரவீபவன்கையிலேற்று ✲
விருப்பனேயிந்தாஞேடுமீசனதுலகமெய்தி ✲
யிரக்கமாதரவிலான் கையேற்றவனீந்தாஞேடு ✲
மிருப்பனேநிரயந்தன்னுளெண்ணிமுன்வினையெய்த்தே ✲

எ-து அருளுமாதரவும்பெருகக்கொடுக்குந் தாதாவின்கையிலேயேற்றவன் அந்தத்தாதாவினேடுஞ் சிவலோகத்திலேசென்றிருப்பன் அருளுமாதரவுமில்லாத தாதாவின்கையிலேயேற்றவன், அந்தத்தாதாவினேடுநிரயத்தின்கட்சென்று முன்செய்தபாவத்தைவிசாரித்துவாடியிருப்பன் - எ-று [௪௫]

மேற்புண்ணியதலங்களையெடுத்தேழுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு.

கொடுக்குஞ்செய்கையர்தம்மையுங்கூறினம் ✲
விடுக்குஞ்செய்கையர்தம்மையும்வெண்ணிற ✲
விடைக்கும்பாகன்விமலன்விரும்பிய ✲
விடத்தையுமிசைப்பாமினியாமரோ ✲

எ து தாதாக்கள்முறைமையும் அதாதாக்கள்முறைமையும் வகுத்துச்சொன்னேம்மேல்வெள்ளைநிறத்தையுடைய விடபத்தைச்செலுத்துவோனுமாய் நின்மலனுமானசிவனேவிரும்பியெழுந்தருளியிருக்கும் புண்ணியதலங்களையுஞ் சொல்லுவயாம்சொல்லாநின்ரேம் எ று

விடைக்குப்பாகனென்பதனைவிடைக்கும் பாகனெனமெலிக்கும் வழிமெலித்தல் அரோ அசை [௪௬]

வேறு

தீர்த்தமார்சிவகாசிநிகழ்குருக் ✲

கேத்திரம்பிரயாகைகிளரலர் ❊
பூத்தபுட்கரணுதிபுளிதர்க ❊
ளார்த்தகங்கையலைகடலாதியும் ❊

எ து வெளி [சஎ]

கரப்பில்லாநைமிசாரணியங்கவின் ❊
பருப்பதம்வேதபர்ப்பதங்கோகன்னம் ❊
அரத்தமேனியாரியரமம்பையும் ❊
விருத்தவேதியர்வெண்ணையும்பெண்ணையும் ❊

எ து வெளி [சஅ]

ஒற்றியூர்திருவோத்தூர்விளைவய ❊
லுற்றவூறலுயர்புகழ் வான்மியூர் ❊
வெற்றியூர்திருப்பாசூர்விரிஞ்சையுங் ❊
கற்றமுற்றினர்காரிவனமுமே ❊

எ து வெளி [ச ]

கனகமாமுகலிக்கரைகாஞ்சிநல் ❊
லனகராமுதுகுன்றருணாசலம் ❊
முனிவர்சேர்கூடலூக்கிடைமாமரு ❊
துனருமுக்கரையூர்புலியூருமே ❊

எ - து வெளி [ரு௦]

காழிமுவலையாறுதென்கண்டியூர் ❊
வீழிவேதவனந்திருவிற்குடி ❊
வாழைமல்குவலஞ்சுழிவாஞ்சியந் ❊
தாழைநீடுவெண்காடுசாய்க்காடுமே ❊

எ - து வெளி [ருக]

எழிலுமார்பரங்குன்றிராமீச்சுரம் *
பொழிலுமார்மதுராபுரிபூவணம் *
அழகுமாருநெல்வேலியஞ்சைக்களங் *
குழகன்புக்கொளியூர்கொடிக்குன்றமே *

எ - து வெளி (ருஉ)

கோதனங்கள்குவிந்தவிடங்களு *
மாதபோதனர்வாழுமடங்களு *
மீதில்வேட்கையர்க்கேய்விடமின்னுமுண் *
டோதுவாங்காலபேதமுமோர்கவே *

எ - து இங்ஙனங்கூறியபுண்ணியதலங்களும்-பசுக்கள்திரண்டவெல்லைகளும் தபோதனர்களெழுந்தருளியிருக்குந்திருமடங்களு-மிதுபோலத்தானஞ்செய்கிறதி லேவிருப்பத்தையுடையோர்க்குப் பலனதிகமாதற்குப் பொருந்தியதலங்களின்ன முமுளதாம்.முறைமையாகேனயினிக்காலபேதங் களையுஞ்சொல்லாநின்றோமவைகளை யறிவாயாக எ - று (ருங)

காலவிசிட்டமுணர்த்துகின்றார்.

அரவமாதித்தன்றன்னைபடர்ந்திட *
விரவும்வேலையும்வெண்மதிதன்னையு *
மிருமையானவயனமுமீபவர்க் *
குரியவேலைகண்மற்றுமுண்டோர்கவே *

எ - து வெளி—இருமையானவயனம் - தைமாதப்பிறப்பு-ஆடிமாதப்பிறப் புமற்றுமுண்டென்பதனால் - சித்திரைவிசு - ஐப்பசிவிசு - ஆமாவாசி - பூரணை - திருவாதிரை -விதிபாதயோகமுதலாயினவெனக (ருச)

ஆதரவின்விசிட்டமுணர்த்துகிறார்.

உரைத்தனங்காலபேதமுமோர்கவுட் *
சிரத்தைதன்னையுஞ்செப்புவஞ்சிந்தையுட் *
பரித்தமெய்மைப்பரமப்பிரீதியே *
குருத்தபத்தியுமற்றதன்கூற்றரோ *

எ - று. இங்ஙனங்காலவிதங்களுஞ்சொன்னோமேலுள்ளத்தின்கணுளவானவாதரவையும் - அதன்பரியாயத்தையுஞ் - சொல்லாநின்றோமதனையறிவாயாக ஆதரவானது - தம்முள்ளத்தின்கணுண்மையோடுகூடினமேலானமகிழ்ச்சியெனவும் - பெருத்தவன்பு - எனவுமற்றமுளபரியாயப்பெயரினையும்பெறும் - எ - று. மற்றென்பது சுட்டியதற்கினமென்பதனுலதற்கினமாகியசிவதன்மம்பாவமாதியென்னுமூன்றுமந்தவாதரவுக்குப்பரியாயப்பெயரெனவறிக அரோ - அசை - [௫௫]

மேன்முடிந்ததுமுடித்தலென்னுந்தந்திரவுத்தியாலுணர்த்துகின்றார்

சிறந்ததேசமுங்காலமுஞ்சிங்தையுட் ※
பிறந்தகாதலும்பெற்றவர்நற்றவர்க் ※
கறைந்தநூல்விதியர்ச்சனையாக்குக ※
நிறைந்துவானெனவேபலநீடுமே ※

எ - று. உத்தமமாகியகாசிமுதலியதேசமுங் - கிரகணங்கண்முதலியபுண்ணியகாலமு - முள்ளத்திண்கட்பொருந்தியமகிழ்ச்சிமுதலானவாதரவும் - எய்தப்பெற்றோர்நல்லதவத்தினையுடையசத்பாத்திரங்களுக்குவேதாகமங்களிற்சொன்னவிதிப்படியேயர்ச்சனைசெய்துதானஞ்செய்யக்கடவர் - அங்ஙனமவர்களுக்குச்செய்ததானபலன்களாகாசம்போலவிசாலமாய்ப்பெருகிய நியாமனிலைபெறும் எ - று. [௫௬]

வேறு.

என்றுபயன்மேன்மைதருகாரணமிசைத்தான் ※
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் ※
வென்றபுலனைந்தினையும்வெய்யவினைநைய ※
நின்றமுனியன்றனையநிற்குணனினைந்தே ※

எ - று. வெளி [௫௭]

சிவந்ததியுணர்த்துகின்றார்.

வானவர்நாடருமாதவனோமானவிருட்டறுமாதவனே ※
கானமர்வேடனுமானவனேகடிதெனவேசெலுமானவனே ※
யேனமுமானவெனன்னலனேயெம்முளத்தாக்கிடுமெண்ணலனே ※
யூனமர்வெண்டலையுண்டவனேயுத்தமர்நெஞ்சகத்துண்டவனே ※

எ - து வாராய்முனிவரின்மிக்கோனானவகத்தியனே - யுள்ளத்தைநயீராதி ன்றவியாதியானதுசரீரத்தின்கட்பொருந்தி முயற்சியைப்பொழித்தாநிற்குமாதலி ல்லாதோருந், தவவலிபொருந்தியென்னையடிமையாகவுடையசிவஞானிகளுஞ்சிவலோ கத்திற்சென்றுமகிழ்ச்சியோடிருக்கும் வண்ணஞ்சிவனருளிச்செய்த சிவதரும மெல்லாவற்றையு, மிகவுமையந்திரிவறமேற்சொல்லாநின்றேம், அதனைக்கேட்பா யாக - எ - று முனிவு - முயற்சி - யீடு - வலி (க)

முற்கூறியசிவதருமம்நிலைநின்றுபகரிக்குமுறையுணர்த்துகின்றார்.

அற்புதனமலன்கூறுமறம்பலவயிங்கிதாதி ※
கற்பொடுங்கலந்துநாளுபலத்தினைக்கருதுவார்க்குத் ※
தற்பரனருளினாலேதருவனவனந்தகால ※
நிற்பனதொன்றுதொட்டேயன்பளாநீங்காப்பாங்கால் ※

எ - து கண்டோர்க்குஅதிசயத்தைவிளைப்பானாய்-நின்மலனாயிருக்கிற - சிவ னருளிச்செய்தவறங்கள்பலவுமுளஅவற்றுட்கொல்லாமைமுதலியசிவதன்மங்கள் பத்தும் - எல்லாத்தன்மத்துக்குமேலாய்ச்செய்தோனைப்பற்றிநிற்குங்கற்பின்மன் மையோடும்பொருந்திச்சிவனருளினாலேநானாவிதமானபலத்தைநகிரும்பினோர்க்கு விரும்பினபடியேகொடுக்கும் - அஃதுமன்றித்தம்மையியற்றுமன்பனைநீங்காதவு ரிமையினாலேபிரவாகரூபியாகத்தொன்றுதொட்டெண்ணிறந்தகாலமழுகுபெற நிலைபெற்றுநிற்பனவாம் எ - று (உ)

அந்தஅயிங்கிதாதியைவகுத்துணர்த்துகின்றார்.

அயிங்கிதைபொறையேமெய்ம்மையறைதலேயரியமானை ※
யுயர்ந்தவாதரவேயுள்ளமொடுக்கலேகொடுக்கைதானே ※
வியந்தவர்ச்சனையேமெய்யூன்வெறுத்துறுதவமேமேனி ※
நயந்தபாவனையேயென்னத்தசமிவைநன்றெந்நாளும் ※

எ - து கொல்லாமையும்பொறையுஞ் - சத்தியவாக்கும் -பெறற்கரியமானை மாகியபழிபாவத்துக்கஞ்சுதலும் - புண்ணியங்களிலேமிருந்த - ஆதரவும் - உள் ளமுதலியவற்றையொடுக்குமடக்கமுடைமையும் - கொடையும்-யாவருமியம்பு சொல்லுஞ்சிவார்ச்சனையும் - ஊனிறைந்தசரீரத்தைவெறுத்துச்செய்யுந்தவமுஞ்- சதாசிவாதிவிக்கிரகங்களைவிரும்பினதியானமும் - ஆகத்தருமங்கள்பத்து - இந்த த்தருமங்கள் - எக்காலமுநன்மையைத்தருவனவாம் - எ - று (௩)

அரிவையர்போகந்தன்னிலாதரவுடையராகிப் ✻
பரமனைப்பரிவாற்பூசையறுதினம்பண்ணினோரும் ✻
விரவியசோமலோகம்வேண்டியபடியேதாங்கண் ✻
முருகவிழ் குழலார்தம்மையின்புறமுயங்குவாரே ✻

எ - து மடவார்களோடுகூடியனுபவிக்கும்போகத்திலேயாசையுடையராய் மேலானசிவனையாறுநாள் அன்பினோடேபூசைசெய்தோருஞ், சோமசம்பந்தமானசௌமியபுவனத்தையடைந்துதாங்கள்விரும்பியபடியேமணம்விரியாநின்றஅளகத்தையுடையமடவார்களையின்பமுறும்படி கூடியாண்டனுபவித்திருப்பர் எ - று [௰௨]

விழைவினராகிப்போகவிதந்தனில்விமலன்றன்னை ✻
யெழுதினமருச்சித்தாரு மிருப்பர்கள்விருப்பமெய்தி ✻
வழுவறுபோகபேத மருவிடவொருவலின்றி ✻
பிழையறுபிரசைவேந்தன் பெரும்பதியதனைப்பெற்றே ✻

எ - து பலவிதமானபோகங்களிலே விருப்பத்தையுடையராய் மலரகிதனானசிவனையேழுநாட் பூசைபண்ணினோருங் குற்றமற்ற ✠ பிராகேசுரமென்னும் பெரியபுவனத்தையடைந்து நல்லபோகவிதங்களுண்டாக விருப்பத்தோடுபொருந்தியதனை நீங்காதிருப்பர் எ - று (௰௩)

திருந்தியவேதகாயத் திரியினாற்றினமோரெட்டும் ✻
அரன்பதமருச்சித்தாரு மலரினாலார்வங்கூரப் ✻
பொருந்தியேபிரமலோகம் போகபேதங்களெல்லாம் ✻
அருந்தியேயிருப்பர்தங்க ளாசையுமகலவாங்கே ✻

எ - து வேதகாயத்திரியினாலும் பூக்களாலும் சிவனது திருவடியையெட்டுநாளருச்சித்தோர்களும் ஆசைபெருகப் ✠ பிராமிய புவனத்தை யடைந்து ஆங்குள்ளபோகபேதங்களெல்லாந் தங்களிடத்துண்டாகியவாசைதீரப் பொசித்திருப்பர்கள் எ - று
ஏகாரங்கள் அசைநிலை இவ்வெட்டும்புத்திதத்துவத்திற் புண்ணியாட்டகமெனை

✠ பிராகேசுரம் பிரசாபதியுலகு ✠ பிராமியம் பிரமலோகம்

வறிக (௰௪)

ஒருவனைமூவனொன்று மொன்பதுநினைமுமன்பாற் *
பரமனையருச்சித்தாரும் பாம்பணைப்பள்ளிவள்ளல் *
புரமதுபொருந்திவாழ்வர் போகபேதங்கள்பொங்க *
வரியனையாவுமில்லை யவர்தமக்கமலனாலே *

எ - று மால்பிரமரைப்பசுவர்க்கமென்று பிரியாது பதியாகியசிவனோடு கூட்டிமும்மூர்த்திகளையுமொருகடவுளென்று சம புத்திபண்ணிமேலாய சிவனை யுள்ளன்பினாலே யொன்பதுநாளருச்சனைசெய்வராயின் அவர்கள் நின்மலனாகிய சிவனருளினாலே யரவணையிலே துயிலுந் திருமாலினது குணதத்துவத்தில் வைகுண்டபுவனத்தையடைந்தாங்குள்ள போகவிதங்கள்பெருகஅவைகளை நுகர்ந்துவாழ்வர்கள், அவ்விடத்தவர்களுக்குப்பெறற் கரியபொருள்களொன்று மில்லை எ - று
இச்செய்யுளளவுங்குற்றத்தோடு கூடிச்செய்தார் பூசையின்பயனுணர்த்தியவாறுகண்டுகொள்க (௰௫)

மேற்குற்றமறப்பூசைசெய்தோர்க்கேசிவலோகமெய்துமென்பதுணர்த்துகின்றார்

செப்பியவிதற்குமீது சிவபுரமதனைச்சேர்வர் *
ஒப்பிலாவொருவன்றன்னை யொருமையவுணர்ச்சிகூரத் *
தப்பறப்புரிந்தபூசைத் தபோதனர்தாமுமாங்கண் *
எப்பயனரியதாக வியம்புவதெளியதேனும் *

எ - று இங்ஙனங்கூறியவைகுண்டபுவனத்துக்கு மேலேசிவபுரம்விளங்காநிற்கும், அந்தச்சிவலோகத்தை ச்சிவனே கடவுளென்றொருமைப்பாடுபொருந்தியவறிவுமேவிடத்தனக்குநிகரில்லாத சிவனைநாளுநிகமற வருச்சனைசெய்யுந் தவத்தையுடையோர்களேயடைவர், அவர்களுக்கவ்விடத்திலெந்தப்போகந்தான்பெறற்கரியதாகச்சொல்லுவோமாதலாலெல்லாப்போகமுமெளிதாகவேவரும் எ - று (௰௬)

அந்தச்சிவலோகத்தின்சிறப்புணர்த்துகின்றார்

தினகரருதையகோடி தேசெனத்திகழ்ந்ததேர்கள் *
இனையவென்றளக்குமெண்ணை யிகழ்ந்தெழிலிசையநிற்கும் *
மனைநினைவதனில்வேண்டு மகிழ்ச்சியும்வாய்க்கச்செய்யுந் *
தனைநிகரில்லிதங்கும் புரிவளஞ்சாற்றனாமே *

எ - து. கோடிசூரியருதயஞ்செய்த பிரகாசம்போலவிளங்காநின்றவிமானங் களிவ்வளவென்றளவிடுமளவைக்கடந்தழகு பொருந்தவெங்குநெருங்கி நிற்குஞ்சி வபுரமானது அவ்விடத்திருப்போர்தங்கண்மனநினைவின் கண்விரும்பியசுகபோக ங்களையும் வாய்க்கும்வண்ண முண்டாக்கு மாகையினாலே தனக்குநிகரில்லாதசிவ னெழுந்தருளியிருக்குஞ்சிவபுரத்தின்வளப்பத்தையொருவராலு மளவிட்டுச்சொ ல்லப்படாது எ - று. ஏகாரம் எதிர்மறை (௰௭)

சிவனெழுந்தருளியிருக்குந்திருப்பதியின் மரித்தவான்மவர்க்கங்க ளசிவலோகமடையுமென்றாற் சிவனையன்போடுகூடிப்பூசைசெய் தோர்சிவலோகமடைவது சொல்லவேண்டாமை யென்பதுணர்த் துகின்றார்

தெரிப்பருந்தேவதேவன் றிருப்பதிவட்டந்தன்னின் *
மரித்திடுஞ்சராசரங்கள் சிவபுரமதனுள்வாழு *
மருச்சனைபுரிந்தமற்றை யன்பர்களடைந்துவாழ்கை *
தெரித்திடவேண்டுமேயோ தெருண்டநற்சிந்தையார்க்கே *

எ - து வெளி (௰௮)

கண்டுபாவித்துப்பூசைசெய்தோர்பெறும்பயனுணர்த்துகின்றார்

உண்டொரொண்பொருளென்றுள்ளத் தோர்கிலார்தாமுமோர்ந்து *
பண்டிதர்பணியக்கண்டு பணிந்திடிற்பரமவென்னிற் *
றண்டரளங்கள்போலுந் தாரகாதேசந்தன்னில் *
எண்டிகழ்நாலேழ்கோடி யிரதபேதத்துளேய்வார் *

எ - து. சடசித்துக்களெல்லாவற்றினையு மாளுமொரு ஒள்ளிய கடவுளுண்டெ ன்றுதம்முள்ளத்தின்கண்ணறியாதமூடரும் அந்தப்பொருளை யுண்டென்றுணர்ந் தஞாதாக்கள்வணங்கக்கண்டுதாமும்வணங்கினும் பரமவென்றுதுதிப்பினும் அவர் கள்குளிர்மையுடைய முத்துக்கள் போலுமொளியினையுடைய நக்ஷத்திர பதத்தி லே எண்டொகைவிளங்காநின்றவிருபத்தெட்டுக்கோடி விமானங்களுடனுடனே பொருந்திவாழ்வர் எ - று. (௰௯)

சிவதன்மங்களைத்தமக்கியன்றமட்டியற்றிச்செய்தோர்பெறும்பயனுண ர்த்துகின்றார்

முத்தனை மூனைத்தவாறு முகத்தனை முதல்வன்றன்னை ※
மொய்த்தகண்மயிலின்மேலை முருகனை முன்னுவாரோ ※

எ - து வெளி (௨௩.)

இருப்பர்கள் குமரன்வாழு மெல்லையிலெல்லையில்லா ※
விருப்புறப்போகபேத மேவிடவிதற்குமீதே ※
யிருப்பார்களுமையைத்தங்கள் கருத்தினுளிருத்தினோர்கள் ※
பொருப்பெழுமருக்கர் கோடிநிறமெனப்புந்திசெய்தே ※

எ - து முற்கூறியசிறப்பினையுடைய குமாரக்கடவுளைத்தியானஞ்செய்வோர்கள் அக்குமரன்வாழும் புவனத்திலே சென்று தாங்கள்விரும்பிய படியேயனைவிதங்களுமான போகங்களெல்லாம்பொருந்த விருப்பார்கள் உமாபரமேசுவரியையுடையசிவபெருமான் கண்ணுதிக்குங்கோடிசூரியப்பிரகாசம்போலத்தியானஞ்செய்து தம்முள்ளத்தின் கண்வைத்தோர்கள் அந்தக்கந்தலோகத்துக்கு மேலானஉமாபுவனத்தின்கணிருந்துவாழ்வர்கள - எ - று (௨௪.)

மேலிருத்தமுறையானே மகாசிவலோகத்தின் கணுறைவாரின்னாரெனவுணர்த்துகின்றார்

தெளிபளிங்கனையமேனி திரிநயனங்கைத்தங்கு ※
மொளிவளர்சூலமாலை யுதாரகையபையவங்கை ※
நளிசடையுடையநாதனடியிணை யகத்துணைச்சி ※
யுளினருமவனையொப்பச்சிவபுரத்துறைவருய்ந்தே ※

எ - து அழுக்கற்றுநின்மலமான படிகம்போன்ற திருமேனியையு மூன்றுதிருநயனங்களையுமொளிவளராநின்றசூலமுஞ் செபமாலையும் பொருந்துமேலிரண்டு கைகளிரண்டினையும் வரதமும் அபயமும்பொருந்தியகீழிரண்டுகைகளிரண்டினையு மெருங்கியசடாமகுடத்தினையு முடையசிவனது திருவடியிணையையுள்ளத்தின்கண்வைத்திருந்து பித்தியானிப்போரு மந்தச்சிவனுக்குநிகராக ச்சாரூபம்பெற்றுமகிழ்ச்சியடைந்து மகாசிவலோகத்தின் கணிருப்பார் எ - று

உளினருமென்றவும்மையால்வணங்குவோருமெனவுமிக (௨௫.)

மகாசிவலோகத்தையடைந்தோர் மீளப்பூமியின்கட் பிறவாமன் முத்தியை யடைவரென்றுணர்த்துகின்றார்

மேலைய சிவலோகத்துள் விரவினரொருமைமேவி *
ஞாலமு மடையார்ஞாலவிறுதியை நாசமாக்குங் *
காலமுமனையவுள்ளக் கருப்பினையறுத்துக்காட்டு *
மூலபண்டாரந்தன்னை முகந்துகந்திருப்பர்முத்தர் *

எ - து. மேலாயவிந்தச்சிவலோகத்தின்கண் அடைந்தோரவ்விடத்திலேதானே ஞானயோகத்திலொருமைப்பாட்டைப்பொருந்திமீண்டு பூமியின்கண்ணும்பிறவா ராய்ச் ✠ சிவாதிபிருதுவியந்தமானவெவற்றினையுநசிப்பிக்குஞ் சங்காரகாலம்வரும் பொழுதுமுள்ளத்தின்கட்கரியவிருளான வாணவபாசங்களை யொழித்துச்சிவ ஞமேலைகாண்பிக்குமூலபண்டாரமாகிய ஞானானந்தசுவானுபவத்தைப் பொருந்தித் தலைமைபெற்றுமுத்தராயிருப்பர் எ - று.

(இ) மூலபண்டாரம் வழங்குகின்றான் வந்துமுந்துமினே என்பதுணர்ந்தறிக [உ௫]

மேல் மாட்டெறிந்தொழுகலென்னுந் தந்திரவுத்தியாற் பைசாசமு தலாயினோர்க்குச்சித்திப்பதங்களை யுணர்த்துகின்றார்

அந்தியவியலிறைக்குமயலயவியலின்போக *
பந்தியைப்பகர்வாமெட்டுச்சித்தியும்பரிவகூர *
விந்தநல்லியலின்ஞான்று மெட்டெனப்பட்டசித்தி *
முந்தியோபைசாசாதி க்குமுறைமொழிவாமோர்ந்தே *

எ - து. சுற்றினின்ற கோபுரவியலுக்கு மகத்தயலாகிய பரிகாரவியலுக்குமய லானசிவஞானயோகவியலிலேயட்டாங்கயோகவொழுக்கினையு மகன்றுவுண்டாம

---

✠ பூதம் ௫ புலன் ௫ ஞானேந்திரியம் ௫ கன்மேந்திரியம் ௫ அந்தக்கரணம் ௪ ஆக ஆத்துமதத்துவம் உ௪ காலம் நியதிகலை வித்தை இராகம் புருடன் மாயை ஆக வித்தியாதத்துவம் ௭ சுத்தவித்தை ஈசுரம் சாதாக்கியம் சத்திசிவம் ஆகச்சிவ தத்துவம் ௫

(இ) திருவாசகம் திருப்பாண்டிப்பதிகம்

காலமுண்டாகவே காதல்செய்துய்ம்மின் கருதரிய
ஞாலமுண்டானொடு நான்முகன் வானவர் நண்ணரிய
ஆலமுண்டானெங்கள் பாண்டிப்பிரான்றன்னடியவர்க்கு
மூலபண்டாரம் வழங்குகின்றான் வந்துமுந்துமினே

ட்டமாசித்தியினையும்விருப்பமிகும்வண்ணஞ்சொல்வோம் அஃதன்றி ஈண்டிமைபொருந்தியவிந்தச்சிவதருமவியலுள்ளும்பைசாசமுதலிய புவனங்களிலுள்ளோர்க்கெட்டுசித்திகளுமேறியேறிவருமுறையையாராய்ந்துசொல்லாநின்றோம் எ – று (௨௬)

பைசாசாதிகளுக்குச்சித்திகள் குணங்களேறிக்குறைந்து சீவிக்குமுறையைமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

எட்டெனப்பட்டசித்திமிசைந்திடும்பைசாசாதி ✻
சிட்டர்கள்சேருமெல்லைசிவபுரமிறுதிதன்னி ✻
லொட்டியகுணமுமேன்மேலுயர்ந்துயர்ந்தொழுகுமோரில் ✻
விட்டொளிர்குணத்தின்மேன்மைவிளங்கிடவிளம்புவாமே ✻

எ – து புத்திதத்துவத்திற்பொருந்தியதேவயோனியாகியபைசாசமுதலிய புவனத்தைப்பொருந்தியுயர்ந்தோர்கள் சேருமேலாயசிவலோகமீறான பதங்களிலேயெட்டுச்சித்தியுமதனோடுகூடிய குணங்களு மொருபுவனத்திலிருப்பாரைப்பற்றவொருபுவனத்திலிருப்பார்க்குமேன்மேலுமதிகமதிகமாயுண்டாம், அஃதெங்ஙனமென்னிற, பைசாசபுவனத்திருப்போர்க்கெண்குணமு, மிராக்கதபுவனத்திருப்போர்க்குப்பதினாறுகுணமு, மியக்கபுவனத்திருப்போர்க்கிருபத்தினாலுகுணமுங், கந்தருவபுவனத்திலிருப்போர்க்குமுப்பத்திரண்டுகுணமு, மிந்திரபுவனத்திலிருப்போர்க்குநாற்பதுகுணமும், சௌமியபுவனத்திருப்போர்க்குநாற்பத்தெட்டுக்குணமும், பிராஜேசுரபுவனத்திருப்போர்க்குஅன்பத்தாறுகுணமும்,பிராமியபுவனத்திருப்போர்க்குஅறுபத்நாலுகுணமும், அவ்வாறுசிவலோகமீறானபதங்களிலிருப்பார்க்குமேறியேறிவரும், அதனைவிளங்கவாராயில்விட்டுவிளங்காநின்றகுணத்தின்விசிட்டத்தைமேற்சொல்லாநின்றோம் எ – று [௨௭]

திருமான்முதலாயினோர்க்குக்குணங்களேறிக்குறைந்து சீவிக்குமுறையுணர்த்துகின்றார்.

மண்புனலனல்கால்வானமனமகங்காரம்புத்தி ✻
பெண்குணமூலமென்னுமொன்பதும்விசேடித்தோங்கிக் ✻
கண்கமலத்தமாலைக்கலந்துளேவிளக்குமெட்டே ✻
வண்கமலத்தோனுள்ளேமருவியேவிளக்குமன்றே ✻

எ – து பிருதிவிமுதலியவைந்துமனமகங்காரம்புத்தியுமொளிரியகுணத்து

க்குபாதானம்மானபிரகிருதியுமெனக்கூறுமிந்தவொன்பதுதத்துவங்களுஞ்செந்தாமரைக்கண்ணையுடைய நாரணனைப்பொருந்தி யவனிதையத்தினுள்ளேமிகவுஞ்செறிந்துநின்றறிவைவிளக்காநிற்கும், குணநீங்கலாகநின்றவெட்டுத்தத்துவங்களையழகியதாமரைமலரின்கணிருப்போனுனநான்முகனுடையவிதையத்தினு ள் ே ள பொருந்தி நின்றறிவைவிளக்கும் எ - று
அன்று - எ - து - அசை [உஅ]

புந்தியையல்லாவெல்லாம் பொருந்தியபிரசவேந்தன் ※
சிந்தையைந்தெருட்டுமிந்த த்திறத்தினிற்கீழுந்தோர்க ※
முந்தியேயிருந்தார்பேற்றை முற்றியவினையினாலே ※
பிந்தியேசெறிந்தார்தாமு மகிழ்வுறப்பெறுவரன்றே ※

எ து புத்திதத்துவமல்லாத கீழ்நின்றவேழுந் தம்மைப்புணர்ந்தபிராஜேசனதுசித்தத்தைப்பொருந்திநின்றறிவைவிளக்கு,மிந்தப்படியேகீழுள்ளபுவனத்தோர்க்குமடைவிலொவ்வொருதத்துவங்குறைந்துநின்றறிவை விளக்குமென்றுணாயக்கடவையிப்பதங்களிலேமுற்காலத்திலேசென்றிருப்போர்பெறும்பயன்களைப்பூமியின்கண்செய்தநல்வினையினாலேபின்புசென்றடைவோருமுள்ளமகிழ்ச்சியுண்டாகப் பெறுவர் - எ - று - [உக]

சிவனைக்குறித்துச்செய்ததுபழுதுபோகாதுபலத்தைவிளைக்குமென்றும்பலத்தைக்கொடுப்பன்சிவனென்றுமுவமைமுகத்தாலுணர்த்துகின்றார்.

தளாயினையிலக்கதாகவெய்திந்தகற்றவருதற்றே ※
யரனையுங்குறித்துச்செய்தவினைபழுதாகாதற்றே ※
பரமனுஞ்செய்தார்செய்நிப்பலத்தினைக்கொடுப்பன்பாங்காற் ※
குருலகுவென்னும்பேதம்வினைதொறுங்குறித்துக்கொண்டே ※

எ - து வெளி - இதனுள் - குரு - எ - து - அதிசம் - லகு - எ - து அற்பம் [நூ]

மேன்முடிந்ததுமுடிந்தலென்னுந்தந்திரவுத்தியாலுணர்த்துகின்றார்

[மரு]

வேறு.

என்றுதருமத்தொடுபலத்திறமிசைத்தான் *
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் *
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினைநைய *
நின்றமுனியன்றுணரநிற்குணனினைந்தே *

எ - து - வெளி [௯௧]

மேற்சிவத்துதியுணர்த்துகின்றார்

வேறு.

உற்றவர்தீவினையோட்டினனேயுண்பலிதேர்தலையோட்டினனே *
யெற்றுபுனற்சடையேற்றினனேயிடுடைக்கொல்லைவெள்ளேற்றினனே *
கற்றவருக்கறங்காட்டினனேகடுநடமாடிடுகாட்டினனே *
பற்றியவர்க்கருள்பாட்டினனேபாங்கிலவென்னையும்பாட்டினனே *

எ - து தன்னையடைந்தோரதுகொடியபாவங்களைத் தொடர்ச்சியறக்கெடுத்தோனே, தலையோட்டின்கண்ணுண்ணற்குரியபிச்சையையங்கங்கேசென்றுதேடுவோனே, திரையெறியாநின்றகங்கையாற்றினைத்திருச்சடையின்கணேற்றிமுடித்தோனே, முல்லைநிலத்தின்கணுளதாயவலியினையுடையவெண்மையாகியவிடபத்தையுடையோனே, தன்பாற்கற்றோரானசனகர்முதலியோர்க்கறமுதலியநான்கினையுமறிவித்தோனே, சங்காரநிருத்தத்தைச்செய்யுஞ்சுடலையையுடையோனே, யெப்பொருளையுந்துறந்துதன்னைப்பற்றி நிற்போர்க்குமுத்தியையருளும்பெருமையையுடையோனே, பாடுதற்குரியனல்லாதவென்னையும் பாடுவித்தப்பாட்டினைக்கொண்டருளினோனே என்றவாறு [௯௨]

இதுவுமது.

கழலெனநாகமுங்கட்டினனேகண்ணினின்விழித்துடுங்கட்டினனே *
நல்வீணையின்வாசகனேமயலெனக்கற்றிடும்வாசகனே *
யிற்சாயலோர்பாலினனேசாலத்தழைத்தகொம்பாலினனே *
பூமொனமேவினனேவெம்புரமெய்தடுமேவினனே *

எ - து திருவடிமலரிலேவீரக்கழல்போலப்பாம்பினையுமணிந்தோனே, பக்குவான்மாக்களைத்திருக்கடைக்கண்ணானோக்கியவர்கள் பாசத்தைச்சேதிப்போனே, தெளியாதசொல்லையுடைய நல்லவீணையினொலியையுடையோனே, யெனக்குமனமயக்கமறுதற்குக்காரணமானசிவாகமவாக்கியங்களையுடையோனே, தோகைமயில்போலுஞ்சாயலையுடையவுமையையொருபாகத்திலுடையோனே, மிகவுந்தழைத்தகோடரங்களையுடையவடதருவினீழலையுடையோனே, திருவீழிமிழலையையுந்தனதுதிருப்பதியாகவுறைந்தோனே, கொடியமுப்புரத்தினையெய்துநீறாக்கும்பினையுடையோனே எ - து [௩௩]

மேற்குமரன்றுதியுணர்த்துகின்றார்

வேறு.

வாடாவனமுலைதோடார்கூரிகுழல்வாளார்விழியிணையுமைபாக ✽
னாடாவயனரிதேடாவடிமுடியோராதயர்வுறவருளீசன் ✽
காடேயிடமெனநாடாநடநவில்காதார்குழையினனடிசேர்தற் ✽
கீடாரிருவினைகூடாவகைதருமேராரறுமுகனியனூலே ✽

எ - து அழகுநிறைந்தசண்முகனருளிச்செய்தவிந்நூலானது, தளராதவழகையுடையமுலையினையும்பூக்கணிறைந்தசுருண்டவளகத்தினையும்வாள்போன்ற இரண்டுவிழியினையுமுடையவுமையைத்தன்பாகத்திலே யுடையோனுமயனுமரியுந்தம்மில்மாறுபட்டடியுமுடியுந்தேடிக்காணமாட்டாதுமயங்கிநிற்பவவர்களுக் கனுக்கிரகஞ்செய்யுமிறைவனுமயச்சங்காரகாலத்தின் கட்சுடுகாடேயிடமாகக்கருதித்திருநடஞ்செய்யுங்காதின்கணணிந்தசங்கக்குழையையுடையோனானசிவனதுதிருவடியை, யாமடைதற்கு, வலிபொருந்தியவிருவினையுமேறாவண்ணம்ஞானத்தைத்தரும் எ - று [௩௪]

அகத்தியன்றுதியுணர்த்துகின்றார்.

கயலாரிணைவிழியுமையாரிணைமுலைகலவாவவொடுகளியாரோ ✽
யயலாரவரிவரயலாரலெனுமறியாமையுநனியறுவாரோ ✽
வியலார்கயிலைநன்மலைவாழ்விமலனவிரையார்மலரடிவிழைவாரோ ✽
புயலார்வளமுறுபொதிமாமலைமுனிபுகழேவிழைவொடுபுகல்வாரோ ✽

எ - து எந்நாளுமேகங்கணிறைந்தவளமைபொருந்திய பொதியமாமலையின்கண்வாழும் அகத்தியமுனிவனது கீர்த்தியையாசையாலேதுதிப்போர், கயல்போன்றவிரண்டுகண்ணினையுடையமடவாராதுமுலையிணைகளைப்புணர்ந்தவர்களோடுமனமகிழார், அஃதன்றியவர்நமக்கன்னியரிவர்நமக்கன்னியரல்லரென்றுகருதுமஞ்ஞானத்தைமிகவுமொழிப்பார்அஃதன்றிவிசாலம்பொருந்தியநல்லகயிலைமலையின்கண்வாழுநின்மலனானசிவனது மணம்பொருந்தியதிருவடிமலரையும்விரும்புந்தன்மையுடையோராவர் எ - று

விழைவொடுபுகல்வாரென்பதனையெழுவாயாக்கியேனையமூன்றினையும் பயனிலையாகக்கொள்க - ஏகாரங்கள் - அசைநிலை [௩௫]

ஐந்தாவது சிவதருமவியலுரை முற்றும்



## ஆறாவது பாவவியல்

மேலிவ்வோத்தென்னுதலிற்றோவெனின்ஓத்துநுதலியதூஉமோத்தினதுபெயருரைப்பவேவிளங்கும் - ஆயினிவ்வோத்தென்னபெயர்த்தோவெனினிரயமெய்துவோரியற்றும் பாவபேதங்களைக்கூறிற்றாகலாற்பாவவியலென்னும்பெயர்த்து, இதனுளித்தலைச்செய்யுளென்னுதலிற்றோவெனின்னதுரைப்பாமெனமுன்மொழிந்துகோடலையுணர்த்துதனுதலிற்று.

முனிவரதருமபேதமொழிந்தனம்பலங்கண் முற்று *
மினிநிரயத்தையெய்வாரியற்றிடும்பாவபேத *
முனையுரைசெய்வாமோர்நீயுடலிறுவாயினுக்குந் *
துனிவினைத்துரிசுநீங்கக்கேட்டிடுஞ்சூழ்ச்சியார்க்கும் *

எ - து வாராயிருடிகளின்மிக்கோனே, முன்னையியலுட் சிவதருமபேதங்களையுமவற்றினாலுண்டாம்பலன்களைவற்றினையுஞ்சொன்னோம், மேலிந்தவியலினையும்பூசித்துக்கேட்குங்கருத்தினையுடையோர்க்கு, மனம்வாக்குக்காயங்களினாலு

ண்டாகும்பொல்லாததீவினைத்துயரநீங்கும்வண்ணநரகமெய்துவோர்செய்யும்பாவபேதங்களையுனக்குச்சொல்லாநின்றேம், மதனைநீகேட்பாயாக எ - று உன்னையென்னுயிரண்டாமுருபு நான்காவதாய்மயங்கிற்று [௧]

பாவஞ்செய்வோரின்னதொன்பதூஉமப்பாவபேதமித்துணைத்தென்
பதூஉமுணர்த்துகின்றார்

புரிந்துளார்பாவமுன்னும் புக்குமாநிரயம்மீண்டு ❊
மிருந்தவாதனையினாலே யியற்றுவர்பாவம்பின்னும் ❊
விரிந்திடுமனேககோடி விதமுறப்பாவமெல்லாந் ❊
தெரிந்திடிற்றூலமாதி திரிவிதமாகிச்சேரும் ❊

எ - து முற்செனனத்தினும் பாவத்தைச்செய்தோர்கள் நரகத்தின்கட்புகுந்தனுபவித்துத்திரும்பவுமந்தவாசனாபலத்தினாலேபூமியின்கட்செனித்துப்பின்னும்பாவத்தையேசெய்வர்கள்அந்தப்பாவவிதங்களைவிரிக்கினனேககோடிவிதமாக விரியுமதனைத்தொகுத்தறியிற்றூலமுதன் மூவிதமாகிப்பொருந்தும் எ - று [௨]

தூலமாதியிவையென்பதூஉமவற்றுட்டூலகன்மமேயீண்டுக்கூறுவதூஉ
மென்பதூஉமுணர்த்துகின்றார்

தூலமேசூக்கந்தானே சூக்குமதரமேயென்றிங் ❊
கேலவேமூன்றுகூறா மிவற்றினுட்டூலந்தன்னைக் ❊
கோலியேதொகுத்திந்நூலிற் கூறுவமஃதுங்கூறின் ❊
மாறுறுமனமேவாக்கே வடிவமேயெனவுமூன்றாம் ❊

எ - து முற்கூறியபாவவிதந்தூலமென்றுஞ்சூக்குமமென்றுஞ் சூக்குமதரமென்றுமிவ்விடத்துமூன்றுபேதமாய்ப்பொருந்துமிந் நமூன்றினுள்ளுந்தூலபேதத்தையேயமைத்துத்தொகுத்திந்நூலின்கட் சொல்லாநின்றேம் அதனையறியுமிடத்துமயக்கம்பொருந்தியமனத்தாலும் வாக்காலும் காயத்தாலும்வருவனவென மூவிதமாம் எ - று

ஏகாரங்கள் எண்ணின்கண்ணும்அசைநிலைக்கண்ணும்வந்தன [௩]

முதற்கட்டொகுத்துக்கூட்டோர்ந்தமனதிகண்மூன்றுமோவ்வொன்றுந
ான்குபேதமாமென்பதூஉமவை கொடுக்கும்பயனிஃதென்பதூஉ
முணர்த்துகின்றார்

பேசிய தூலபேதந் தனித்தனி நான்குபேத ※
மேசமுந் நான்குபேத முற்றுமம் மூன்றுமின்னு ※
மாசிலோ ரறியும்வேலை விரிந்திடு மனேகமாக ※
நாசமா நரகபேதத் துயரினைக் கொடுக்கு நாளின் ※

எ - து முன்னர்க்கூறிய தூலபேதமென்னு மிரேளுவாக்குக்காயங்களோவ்வொன்றானும் விதமாம் அவையிற்றைத் தொகைக்கூண்டு பன்னிரண்டு விதமாக முடியு மந்தமனாதிகண் மூன்றுங் குற்றமற்ற பெரியோர்களராயுங் காலின்னமும் மனேகவிதமாக விரியு மங்ஙனம் விரியும் பாவபலம் நரகவிதங்களிலே யான்மாக்களுக்குத் துக்கத்தை விளைத்தனுபவித்துத் தொலைந்தவர் தேதாம் நசிக்கும் எ - று. [௪]

நிருத்தமுறையானே மனத்தினாலுண்டாம் பாவவிதங்க ணான்குமி
வையென்பதுணர்த்துகின்றார்

அன்னியன் மனையாடன்னை யணையுமத் திரவுகூர ※
வுன்னுதல் பலார்தங்களுடைமையுங் கொள்ளவுன்னல் ※
பின்னையுமவர் தம்பண்டம் பிறழவு நவிக்கப்பேணை ※
லென்னுமிம் மூன்றுங்கொல்ல வெண்ணலுமனத்தினிட்டம் ※

எ - து பிறனொருவனுடைய மனைவியை க்கூடவேணுமென்னுமாசையாலேயதற்கேற்றசெயல்களை நினைத்தலும் பிறருடையவுடைமையைத் தாமெடுத்துக்கொள்ளுதற்குவிசாரித்தலும் அவர்களுடையவுடைமையைச் சேதமாக்கவிசாரித்தலும் பிறிதொருயிரைக்கொல்ல நினைத்தலும் ஆகநான்கு மனத்தினாலுண்டாம் பாவவிதங்களாம் எ - று. [௫]

வாக்காலியற்றும் பாவங்கணான்குங் காயத்தினாலியற்றும் பாவங்கணான்குமிவையென்பதூஉம் பின்னருமனாதிகளாலதிபாதகமுதலாயுள்ளன விரியுமென்பதூஉமிரண்டு செய்யுளாலுணர்த்துகின்றார்

அழுகையுங் கோளும் பொய்யு மயலபவாதந்தானும் ※
வழுவியவாக்கின் பேத மற்றையன் மனையாடோளைத் ※
தழுவுதறமித்துக் கோறல் சராசரபேதந்தன்னைப் ※
பழிபடு பண்டமுங்கை பரர்பொருளதனைப்பற்றல் ※

எ - து. அகாரணத்தாலழுகையுங் கோட்சொல்லும் பொய்யுரைத்தலும் பிறன்பழிகூறலுமான விந்நான்கும் வாக்கினால்வரும்பாவ விதமாம் பிறனொருவன்மனைவியைப்புணர்தலு நடப்பனவுநிற்பனவுமானவுயிரின் விதங்களையடித்துக்கொல்லுதலும்நல்லோராலிந்திக்கப்படுமுணவுகளையுண்டலும் பிறர்பொருளைக்கவர்தலும் எ - று. [௬]

என்னுமிந்நான்குங்காயத் திட்டியபாவபேதம் *
யன்னிருபேதமாக மனுநியைப்பகர்ந்தாமின்னு *
மன்னியமனுநிமூன்று மலினதிபாதகாதி *
யென்னவேவிரியுநொய்தி னவற்றையுமியம்புவாமே *

எ - து இப்படிமுற்கூறியகன்மநான்குங் காயத்தினால்வரும்பாவவிதமாமிப்படியேமனவாக்குக்காயங்களால் வருந்தூலபாவவிதங்களைப்பன்னிரண்டுவிதமாகச்சொன்னோம்; அஃதன்றியின்னமு நிலைபெற்றமனுநிகள் மூவிதத்தாலுமழுக்கினையுடையவதிபாதகமுதலிய பாவங்களுண்டாகும்வண்ணம்விரிவனவாமவற்றையுஞ் சுருக்கமாகச்சொல்லாநின்றோம் எ - று.

ஆதியென்பதனால் மகாபாதகமு முப்பாதகங்களுமவையிற்றினது துல்லியங்களுமெனக்கொள்க [௭]

முதற்கட்டொகுத்தவற்றுளதிபாதகமீதென்பதுணர்த்துகின்றார்

தாரகன்றன்னைச்சாதத் தடங்கடற்றளர்வார்தம்மைப் *
பாரகன்றனையும்பாரும் படைத்தவன்றனையும்பாங்காற் *
காரகன்றன்னைவாங்குங் கடவுளைக்கயந்தநெஞ்சர் *
நாரகர்மீளுநாளும் பிறிதியனவிற்றுவாமே *

எ - து பிறவியாகியபெரியகடலின்கணமிழ்ந்தி வருந்துமவரை யக்கடலினின்றுங்கடப்பிக்குமவனுமுலகத்தைத்தாங்குமவனுன மாயனையும் யோனிபேதங்களையுமன்றிப்பிருதிவிமுதலிய பஞ்சபூததூலகாரியங்களையுஞ் சிருட்டிக்குமவனுனநான்முகனையு முறைவழுவாமலுண்டாக்குங் காரணசொரூபனுயவர்களிருவரையுமீளத்தன்னிடத்திலொடுக்குஞ் சங்காரகருத்தாவாயிருக்கிற சிவனைத்தூஷணஞ்செய்திகழ்ந்தமனத்தினையுடையவதிபாதகர் நரகத்தின்கண்ணெடுங்காலங்கிடப்பர்க

ள், அதினின்றுமவர்கள் திரும்புங்காலத்தை வரையறுத்திந்தவியலுக்கயலாண்சு வர்க்கநரகவியலின்கட்சொல்லாநின்றேம் எ று

தாரகன் கடப்பிப்போன், பாரகன் தாங்குமவன், காரகன பண்ணுமவன் நாரகர் நரகத்திற்கிடக்குமவர்கள் [அ]

இதுவுமது

ஒப்பிலியனாதி முத்த னோதியவேதமாகிக் ※
கொப்புயர்புரைப்பார்நிந்தையுரைப்பவருன்னுவாரும் ※
வெப்பரிநிரையந்தன்னுள்வீழ்ந்துவெந்துருகிவியா ※
ரெப்பொழுதேறுவாமென்றிளைத்திளைத்தேங்குவாரே ※

எ - து தனக்குநிகரில்லாதவனாதிமலமுத்தனானசிவனருள்ச்செய்தவேதாகமங்களுக்கொப்பாகவுமதற்கதிகமாகவும் பிறிதொருநூலைச்சொல்லுமவரும், அந்தவேதாகமங்களை நிந்தைசொல்லுமவரு, நிந்தையையமனத்திலேநினைக்குமவரும், வெம்மையையுடையவெரிவாய்நரகத்தின்கண்வீழ்ந்துடம்பெல்லாம்வெந்தானலாமுருகியிங்ஙனந்துயருறவுமந்தயாதனாசரீரத்தினின்றுநீங்காராயிந்தநரகத்தினின்றுமெக்காலங்கரையேறுவோமென்றுவாடிவாடியேக்கமுமடைவர் - எ-று
வியாமை - யுயிர்விடாமை [௯]

இதுவுமது.

ஒப்பிலியனாதிமுத்தனோதியபனுவலோர்ந்து ※
தப்பறச்சாற்றுமாசான்றன்னையுமிகழ்ந்துசாற்றில் ※
வெப்பெரிநிரையந்தன்னில்வீந்துவெந்துருகிவியா ※
ரெப்பொழுதேறுவாமென்றிளைத்திளைத்தேங்குவாரே ※

எ து தனக்குநிகரில்லாதவனாதிமலமுத்தனாகிய சிவனருள்ச்செய்தவேதாகமங்களையாராய்ந்தையந்திரிவறவுபதேசிக்குமாசாரியனையுமவமதித்துநிந்தைசொல்லுவாராயினவர்களும் வெம்மையுடைய வெரிவாய் நிரையத்தின் கண் வீழ்ந்து முன்னர்க்கூறியதுயரினையுறுவர்கள் எ று

இதுவுமது

அரன்றிரவியத்தையாசா னரும்பொருளதனையார்க்கும் ✻
பரம்பரன்பகர்ந்தவாக்கைப்பரித்தபுத்தகத்தைப் பற்றிக் ✻
கரந்தவாமுன்னஞ்சொன்ன கரிசர்களொருமூவர்க்கும் ✻
வரும்பலமுடையர்பாவ மனைத்தையுமருவினோரே ✻

எ - து சிவத்திரவியத்தையுங் குருத்திரவியத்தையும் யாவருக்குமே லானசிவனருளிச்செய்ததிருவாக்கினை யெழுதினமுறையையும்விரும்பிக்களவு செய்தோர்முற்கூறியசிவநிந்தகர் வேதநிந்தகர் குருநிந்தகரானமூவர்க்கும்வரு ந்தீவினைப்பயன்களையுடையராவரதன்றி யெல்லாப்பாவத்தையுஞ்செய்தோரு மாவர் எ - று (௰௧)

அதிபாதகஞ்சொல்லிமுடித்து அதிபாதகதுல்லியபேதஞ்சொல்லத் தொடங்குகின்றார்

வேறு

அறைந்தவிவர்களனைவர்களு மதிபாதகரோயெனவறிக ✻
சிறந்தவினையேதீவினையு ளதிபாதகந்தானெனத்தெளிக ✻
நிறைந்ததுயரோநெடுநாளே யிதனிற்பலமுமெனநினைக ✻
பிறிந்தவதிபாதகபேதந் தனையுமினியாம்பேசுவமே ✻

எ து இங்ஙனங் கூறிப்போந்த சிவநிந்தகர் முதலான வீவர்களெல்லாருமதி **பாத**கரென்றறிவாயாக இதுதீமையானபாவங்களுள் அதிகோரபாவமென்றறியக் கடவை யிதனான்மிகுந்ததுயரமு மனுபவிக்குங்காலமுநெடுங்காலமென்றறியக்கட வை யிதன்கூறான அதிபாதகபேதத்தையுமேற்சொல்லாநின்றோம் எ று
அதிபாதகரோசிறந்தவினையேயென்னுமேகாரமிரண்டுந் தேற்றம்நிறைந்ததுயரோநெ டுநாளேயென்னு மேகாரமிரண்டுமெண்ணின்கண்வந்தன (௰௨)

அதிபாதகதுல்லியபேதத்தைப்பத்துச்செய்யுளாலுணர்த்துகின்றார்

அரிகரமுஞ்சிவதனத்தை யபகாரகனையதரித்தே ✻
லரிவித்திடுகவிருநிதிய மளித்தும்வலியாரவராலே ✻
யரிதேலதுமப்புரிவிட் டகல்கவகலாதுறைவாரோ ✻
லுரியாரதிபாதகத்தவனுக் கொப்பார்நிரயத்தெய்ப்பாரே ✻

௰௩

எ - து சிவத்திரவியத்தையபகரித்தவனை த்தலையைச்சேதிக்கக்கடவர்அவனைத் தன்னாற்செய்யவலியில்லையாயின்வெகுதனங் கொடுத்தாயினும் பலவான்களாலே சேதிப்பிக்கக்கடவர் அதுவுங்கூடாதாயி னந்தத்தலத்தைவிட்டு வேறொருதேசத்தி ன்கட்செல்லக்கடவர் அங்ஙனமறுதேசத்திற் செல்லாமலவ்வூரிலதற்கனுமதித்திரு ப்பார்களாயின்அவர்களையிந்த வதிபாதகஞ்செய்தோனு க்கொத்தற்குரியராய்நர கத்தின்கணமிழ்ந்தியிளைப்பார் எ - று

சிரமுமென்றவும்மையாற்கரமுதலியவுறுப்புக்களுமெனவறிக (௰௩)

சிவனையிகழுஞ்சிறியாரையனையர்சிவனைப்பூசனையை *
யுவகையுறவேகண்களிக்க வுருகிப்பரவாதுழல்வாரும் *
அவனைச்சிவன்றாளருச்சகனை யன்புசெய்யாதகல்வாரும் *
புவனத்ததிபன்பவனத்துணியமத்தலநுபுகுவாரும் *

எ - து சிவனையும் அவனது அருச்சனையையுமுள்ள மகிழ்ச்சிபொருந்தும்வண் ணங்கண்களிப்பக்கண்டதனான் மனநெகிழ்ந்து துதிசெய்யாதிருப்போரும் அந்தச் சிவனையுமவனை யருச்சிக்கும் பூசகனையும் பத்திபண்ணுதுவிட்டுநீங்குவோரும் இரு நூற்றிருபத்துநாலுபுவனத்துக்கு மதிபனானசிவனெழுந்தருளியிருக்குந்திருக்கோ யிலினாசாரநியமங்ளோடுசெல்லுமதன்றி யனாசாரங்களோடே புகுவோருஞ் சிவ னைநிந்திக்குமற்பரானவதிபாதகரையொப்பர் எ - று (௰௪)

பரமன்றிருமுன்னமுன்முன்னும் பரமகுரவன்றிருமுன்னும் *
ஒருமையுறவேவறுமைபினு முதவாதவருஞ்சிறிதேதும் *
அரிதுபொருடான்பச்சிலையு மரிதோவஃதுமரிதாகிற் *
றிரணமதனைத்திருமுன்னெ மாற்றலரிதோசெயலாலே *

எ - து சிவசன்னிதியிலுஞ் சிவாக்கினியின்முன்னு மேலானஞானசாரியனது சன்னிதியினுந்தமக்குவறுமையெய்தின காலத்தினுமேதேனுஞ் சிறிதுதமக்கியன்ற மரியாதியொருப்பாடுபொருந்த க்கொடாதோரும் அங்ஙனங்கொடுத்தற்குப்பொ ருளரிதாகிற் பச்சிலையுங்கிடையாததோ வதுவுங்கூடாதாயிலவர்கள்சன்னிதியிற்கி டக்குஞ்செற்றையைக்கருத்துடனேதிருவலகுமுதலியவற்றாற்போக்குதலுமரிதோ வரிதன்றேயாதலா லிதனுளொன்றை ச்செய்யாதோருஞ் சிவநிந்தகருக்கொ ப்பர் எ - று

ஓகாரம் எதிர்மறை (௰௫)

பொருவில்பொருளைப்புணர்ந்தாரை யல்லாரெல்லாம்பூரணையி *

லிரவியுடனேயிளமதிய மிசையும்பொழுதுமிணையிலியு *
மெரியுமியலுங்குருபரனு மிருக்குமிடத்தையலகிட்டு *
வினையின்விதத்தான்மெழுகிட்டு விதியாற்பூசைபுரியாரும் *

எ - து தனக்குநிகரில்லாதசிவத்தைக்கூடிநிட்டைபுரியுஞ் சிவஞானிகளல்லாதோரெல்லாரும் பூரணையிலுமாதித்தியனோடு கலைதேய்ந்த விளம்பிறைபொருந்துங்காலமான அமாவாசையினுமொப்பிலாதசிவனுஞ் சிவாக்கினியுஞ் சிவாகமமுமேலானவாசாரியனுமெழுந்தருளியிருக்குந் தலங்களைத் திருவலகிட்டுமெழுகிச்சந்தனமுதலியசுகந்தவர்க்கங்களினாலே விதிப்படியருச்சனை செய்யாதோருஞ் சிவநிந்தகருக்கொப்பர் எ - று (௰௬)

இந்தமுறைபிலியற்றாரு மியற்றிநியதிபிழந்தாரும் *
பந்தமானபசுபாசப் பகையைக்கெடுக்கும்பரம்பரனைச் *
சிந்தைக்கரியசிவமுதலைத் துயக்கமறவேதெருண்டாரை *
நிந்தைநிகழ்த்துநிறையில்லாக் கல்லாப்பொல்லாநீசருமே *

எ - து இங்ஙனங்கூறிப்போந்த திறத்தோரன்றி யாசாரியராலே சங்கற்பித்தநுட்டித்துவரும்விரதங்களைவிட்டோரும் ஆன்மாக்களிடத்தநாதிசம்பந்தமானவாணவபாசமானபகையைப்போக்கும் பரம்பரனுயவர்க்கு மனத்துக்கெட்டாதசிவமாகியமுதலைத் தம்முடையவஞ்ஞான நீங்கும்படியுணர்ந்த ஞானவான்களை நிந்தைசொல்லுநிறையில்லாத அறநூல்கல்லாத பொல்லாதஅற்பருஞ் சிவநிந்தகருக்கொப்பர் எ - று

சிவனையிகழுஞ்சிறியாரையனையாரென்பதனையெவ்விடத்தும்வருவிக்க [௰௭)

நிந்தைநிகரின்ஞானத்தை நிகழ்த்துமவரை நிகர்ப்பார்தஞ் *
சிந்தைநிகழவருச்சனையைச் செய்யாதறநூறிளைப்பாரு *
மிந்தவியலையெழுதினரு மிதனைப்பிறருக்கிசைப்பாரும் *
வந்துபொருவில்வாய்மொழியை மதிப்பாரவருமனத்தாலே *

எ - து தம்முடையஅறிவு விளங்கும்வண்ணம் ஒப்பில்லாத சிவவாக்கியமான அறநூல்களைமலர்முதலியவற்றாற் பூசைசெய்யாது படிப்போரும் எழுதுவோரும் பிறருக்குப்பாடஞ்சொல்லுவோரும் மனத்தாற்சிந்தனைபண்ணுவோருஞ்சிவஞான நிந்தகருக்கொப்பர் எ - று

அருச்சனைசெய்யாதென்பதனைமுற்றுங்கூட்டுக [௰௮]

காயசுத்திபண்ணுது கற்பிப்பாருங் கற்பாருந் *
தேயசுத்திசெய்யாது சிவஞானத்தை சசிந்தனைசெய் *
தாயுமவருமவர்தம்மையடைந்து துயக்கமறவெண்ணி *
வாய்மைப்பொருளை மதிப்பாருங்கற்பார்தாமும்வரமுறவே *

எ - து சிவஞானத்தைநீராடல்முதலியவற்றாற்சரீரசுத்திசெய்யாதுபடிப்பிப்பாரும் படிப்பாரும், அதனைத்திருமெழுக்குமுதலியவற்றாற்சுத்திசெய்யாததலத்திருந்துசிந்தித்தாராய்வோரும், அங்ஙனமாராய்வோரைச்சேர்ந்து தனக்கையந்திரிவறும்படிகருதியுண்மையாகியதிவ்வியாகமப்பொருளைக்கேட்போரும் நன்குகப்படிப்போருஞ், சிவஞானநிந்தகருக்கோப்பர் - எ - று

தேசத்தைத்தேயமென்றார் [மகூ]

ஆசையதனாற்சிவகோச மதனைப்பொருளுக்களிப்போரும் *
தேசிலவலதேசத்திற் சிறந்த முறையைச்செறிப்பாரும் *
பாசப்பகைவன்பகர்மொழியை ப்பயிலாதபனூல்பயில்வாரும் *
ஏசற்றரன்வாக்கியற்றாரு மேதையகத்துளிருக்கவுமே *

எ து திரவியத்தின்கணுள்ளவாஞ்சையினாலே திவ்வியாகம த்திருமுறையை விற்குமவரும் பரிசுத்தமில்லாத வசுத்தபூமியிலேயதனைவைக்குமவரு மான்மாக்கள்பாசத்துக்குச்சத்துருவானசிவன் அருளிச்செய்தவேதாசமங்களைக்கல்லாமலன்னியமானபசுநூல்களைககற்போருந்தம்முள்ளத்தின்கண்மிகுந்த புத்தியுண்டாயிருக்கவுங்குற்றமற்றசிவநூலை மேன்மேலும்விரியக்கல்லாதிருப்போருஞ் சிவஞானநிந்தகருக்கொப்பர் எ று

ஏசற்ற என்னுஞ்சொல் ஏசற்று என்விகாரமாயிற்று நிந்தைநிகரின் ஞானத்தை நிகழ்த்துமவரைநிகர்ப்பாரென்பதனை யெவ்விடத்தும்வருவிக்க [உ௰]

பொருவில்குரவனிந்தனையை ப்புரிந்தாரவரைப்புணர்வார்கள் *
பரிவாலவரையருச்சனையை ப்பண்ணுதறநூல்பயில்வாரு *
முருகிப்பணியையுஞற்றாரு முஞற்றுமவரையொழிப்பாருந் *
திருவாய்மொழியைத்தினைத்திறைஞ்சி ச்சிறந்ததுதிகள்செய்யாரும் *

எ து நேசத்தினாலேயாசாரியனை ப்பூசைசெய்யாமற் புண்ணியநூலைப்படிப்பாரு முள்ளமுருகியவர்பணிவிடையைச்செய்யாதோருமங்ஙனம்பணிவிடைசெய்வோரைக்கலைத்துவிலக்குவோரு மந்தவாசாரியர்திருவாக்கினாற் கூறுமாகமவசன

ங்களை நன்றாகக்கேட்டு மகிழ்ந்தவரை மேலானதோத்திரங் கள்செய்து வணங்கா
தோருங் குருநிந்தகருக்கொப்பர் எ று (உக)

எதிருத்தரமுமிசைப்பாரு மிளைத்தபருவமெனவெண்ணிப் ※
பிதிருமவருமெதிரியராற் பிழைவந்துறினும்பிணியுறினும் ※
புதல்வர்தமையுமனைதனையும் பொருந்துஞ்சுற்றத்தவர் தமையும் ※
பதரேயென்னவவமதியைப் பண்ணுமவரும்பரிவறவே ※

எ து ஆசாரியனேவியபணிவிடையைச்செய்யாமல வருடனெதிருத்தரஞ்
சொல்லுவோரும் அவர்க்குமிடியெய்தியகாலத்து அவரைப்பாதுகாவாமலிகழ்ந்து
போவோரும் அவர்ஞாதிமுதலியவெதிர்வாதிகளாலேயபசயப்படினும்வியாதிகளை
ப்பொருந்தினுஞ்செயித்துக்காவாமல்விட்டுநீங்குவோருங் குருபுத்திரரையுங் குரு
தேவியையுங்குருவினோடுசம்பந்தமான சுற்றத்தோரையு மிரக்கமற்றுநொய்தாகக்
கருதியிகழ்ச்சிசெய்வோருங் குருநிந்தகர்க்கொப்பர் எ று

பொருவில்குரவனிந்தனையைப்புரிந்தாரவரைப்புரைவார்களென்பதனை
யீண்டும்வருவிக்க (உஉ)

இங்ஙனமதிபாதகதுல்லியரையுணர்த்திமேல் மகாபாதகரையுணர்த்துகின்றார்

அதிபாதகருக்கணியார்களிவரொன்றமிமா பாதகரைப் ※
பொதிமாமுனிவவிரிவினாய்ப்புந்திசெய்கபுகன்றிடுவா ※
மதியால்வசனவாய்தன்னான் மவினமுடையவடிவதனா ※
லுய்கயமானபாவங்கள் கேட்பார்தமக்குமொழிந்திடவே ※

எ து பொதியமாமலையிலிருக்கு மகத்தியமுனிவனே யிங்ஙனங் கூறியதிறத்
தோரெல்லாமதிபாதகருக்கடுத்தோரொன்றறியக்கடவை யித்திறத்தினைக்கேட்போ
ர்க்குமனத்தினாலுமுகத்தின்கண்ணுள்ள வாக்கினாலுமழுக்கினையுடைய காயத்தினா
லுமுண்டான பாவங்களெல்லாமொழியும்வண்ண மிப்போதுனக்குமகாபாதகரை
ச்சொல்லாநின்றேமதனைச்சமதியிற்புத்திபண்ணிக்கேட்பாயாக எ று

கேட்போர்க்குமென்றவும்மைபடிப்போர்முதலியோர்க்குமெனஎச்சத்தி
ன்கண்வந்தது (உஙூ)

பஞ்சபாதகரிவரென்பதுணர்த்துகின்றார்

கொன்றான்மறையோன்றனைமதுவைக்குடித்தமறையோன்சோரத்தாற் ※

சென்றேபிறர்செம்பொனைக்கொண்டான் றிளைத்தான்குரவன்றேவிதனை ※
நின்றுணிவரோடெனவைவர் மாபாதகரேநிரையத்துட் ※
சென்றூர்விரையச்செல்லலுற மீளுநாளுஞ்சிலவலவே ※

எ - து பிராமணனைவதைத்தோனும், மதுபானம்பண்ணியபிராமணனும் பிறருடையதிரவியத்தைக்களவினாற்சென்றெடுத்துக்கொண்டோனும், ஆசாரியன்மனைவியைப்புணர்ந்தோனும், இங்ஙனங்கூறினநால்வரோடிணங்கித்திரிவோனுமாகவிவர்கள், ஐவருமகாபாதகர்களாம், அவர்களேவருத்தமுறும்படி சடுதியிலேநரகத்தின்கட்சென்றடைந்தோராவர்களதினின்றுகரையேறுநாளுஞ்சிறிதுநாளுமல்லநெடுங்காலஞ்செல்லும் எ - று [உச]

மேன்மகாபாதகதுல்லியமையுணர்த்துகின்றார்

அறைந்தாமகபாதகமதனுக்கணியதணியபாதகமுஞ் ※
சிறந்தபொதியிற்சிவமுனிவதெரிப்பாம்விரையத்தெளிந்திடுக ※
மறந்துபுரிந்தவல்வினையுமறவாதியன்றவல்வினையு ※
மிறந்துபிறக்கவினியவினையிதனையுணரவிசைந்தார்க்கே ※

எ - து மேலானபொதியமாமலையிலிருக்கு நன்மைபொருந்தியமுனிவனே மகாபாதகரைச்சொன்னோம்,மேலிதற்கடுத் ததுல்லியபாவவிதங்களையுஞ்சொல்லாநின்றோம், மிதனையறியவிரும்பினோர்க்கறிந்துசெய்ததீவினையுமறியாதுசெய்ததீவினையுங்கெட்டுநல்வினையுண்டாம்படிக்குநீயிதனைச்சடுதியிலேகேட்டுத்தெளியக்கடவை எ - று [உரு]

மகாபாதகத்துல்லியருட்பிரமகத்திபண்ணினோர்க்
கொத்தாரைமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

வெறுப்பான்மிகுத்தகோபத்தால்வேட்கைமிகையால்வெருட்சியினல் ※
ஒறுப்பாமுரையந்தணர்க்குரைப்பானொப்பான்பிரமக்கொலையர்க்கே ※
யறப்பேரறிவேயுளமெனவேதன்னைமதிக்குமதியிலியுஞ் ※
சிறப்பாங்குரவனொடுவிருத்தஞ்செய்யுமறியாச்சிறுவனுமே

எ - து வேண்டாமையாலாதல், அதிகோபத்தாலாதல், திரவியமுதலியவாசைமிகுதியாலாதல், அச்சத்தாலாதல்- பிராமணரைப்பொறுத்தற்கரியகொடுஞ்சொற்களைச்சொல்லுவோனும் மிகவும்பேரறிவுடையோம்யாமென்றுதன்னை

யுயர்வாகவெண்ணுமறிவில்லாதவனும்- மேலானவாசாரியரோடுவிரோதம்பண்ணிக்கொள்ளுமறிவில்லாத- அற்பனும்-பிரமகத்திபண்ணினோனுக்குநிகராவர் எ - று [௨௬]

உண்ணவறன்மேற்செலுமாக்களினையுந்தடுத்தேயொறுப்பானு ✽
நண்ணியிரப்பத்தருவலெனநயந்துகூறியவர்வரவி ✽
லெண்ணமிழ்ந்துதரும்பொருளுமிலமேயெனவுமிசைப்பானுந் ✽
தண்மையுரையைத்தகுதியரைச்சாற்றுமவனுஞ்சபைநடுவே ✽

எ - து தண்ணீருள்ளவிடத்திற்குடிக்கச்செல்லும்பசுக்களையுமறித்துத்தண்ணீர்குடியாவண்ணம்வாதைபண்ணுவோனுந்- தம்பால்வந்தொருபொருளையிரந்தபோதுதருகின்றேனென்றுநேர்ந்துமுற்கூறிப்பின்பவர்தம்மில்லின்கண்வந்தபோதக்கருத்தைவிட்டுமக்குத்தரும்பொருளும்யாமுடையோமல்லவென்றுசொல்வோனும்- அறிவான்மிக்கோனைச்சபைநடுவேயிழிபானவசனங்களைச்சொல்வோனும்பிரமகத்திபண்ணினோனுக்குநிகராவர் — எ - று

ஆக்களினையுமென்னுமும்மைமற்றுள்ளவிலங்குபுட்களையுமென- எச்சத்தின்கண்வந்தது- மேல்வருஞ்செய்யுளிற்பிரமக்கொலையர்க்கிணையென்பதையிச்செய்யுளோடுங்கூட்டியுரைக்க [௨௭]

அரசன்செவியிற்பிறர்குறையையறிவிப்பவனுமந்தணர்க்கும் ✽
பரசுபாணிமுதலோர்க்கும்பாங்காநிலனைப்பறிப்பானு ✽
மொருவும்வகையையுரைப்பானுமதனுள்விளைவையுண்பானும் ✽
பிரமகொலையர்க்கிணைமதுவைப்பீதற்கிணையும்பேசுவமே ✽

எ - து பிறர்குற்றங்களையிராசாவின்செவியிற்சொல்லியறிவிப்போனும்- பிராமணர்க்கும்- மழுவைக்கையிலேந்துஞ்சிவன்முதலாயுள்ளகடவுளர்க்கு- முரிமையானபூமியைக்கட்டிக்கொள்வோனு- மந்தநிலமவர்களுக்காகாமற்போம்வண்ணஞ்சூட்சிசொல்லுவோனு- மந்தநிலத்திற்போகங்களையெடுத்துக்கொண்டுண்போனும்- பிரமகத்திபண்ணினோர்க்கொப்பாவர்கள்- மதுபானம்பண்ணினோர்க்கொப்பாரையுமேற்சொல்லாநின்றோம் - எ - று [௨௮]

மகாபாதகத்துள்வியருண்மதுபானம்பண்ணினோர்
க்கொப்பாரையும்பொன்றிருடினோர்க்கொப்பா
ரையுநான்குசெய்யுளாலுணர்த்துகின்றார்

ஆகியமலனருளாளனனகனருள்செயாகமத்தை *
யோதியதனையொழிப்பானுமொளிசேரழலையோம்பானு *
மாதாவுடனும்பிதாவுடனுமாறுயவர்சொன்மறுப்பானு *
மோதாவுரையையுரைத்தானென்றுற்றேநடுவாயுரைப்பானும் *

எ - து எவற்றிற்குமுதல்வனுமாய்நின்மலனுமாயான்மாக்களிடத்திலேயிர க்கத்தையுடையனுமாயப்பாவமில்லாதவனுமாயிருக்கிறசிவனருளிச்செய்ததிவ்வி யாகமத்தையோதியதனையிடையிலேவிட்டவனு- மொளிபொருந்தியவக்கினிகா ரியகாடோறுஞ்செய்துவந்துபின்பதனையிழந்தோனும்- மாதாபிதாவுடனும்விரோ தித்தவர்கூறிய- சொற்களைமறுப்போனு- மொருவன்சொல்லாதவார்த்தையை ச்சொன்னானென்றுசபைக்கண்வந்துநடுச்சொல்வோனுமேன்றவாறு . [௨க]

தோழன்றனக்குத்துயரத்தைத்துய்ப்பிப்பவனுந்துரிசறுக்கு *
மேழைபாகனடியாரையிடரைச்செயவுமிசைந்தானும் *
பாழென்றறநூல்பழித்தபொருள் பண்டமெனக்கொண்டுண்டானும் *
வாழும்வனத்தாமாக்களையும் வருத்துமவனுமயலுறவே *

எ து வெளி

ஆமாக்கள் பசு மான் மரைமுதலியவிலங்கினங்கள் ஆமாக்களையுமென் ஹுமும்மைபறவைகளையுமெனவிளக்கிற்று (௩௰)

ஆக்களணையுமார்க்கத்தி லடவியதனுளரும்பதியுட் *
பார்க்குண்மதித்தபட்டினத்தும் பழுதேயழலைப்படுப்பானு *
நீக்குமதுவையுண்டானை நிகரோவறியார்நிதிமுதலுங் *
காக்குமனையோகரிபரிதேர் கவினூர்மணியுங்கவர்ந்தானும் *

எ து பசுக்கணிற்குங் கொட்டகை வாசலினும் வனங்களினுமரிய சிவத்தான ங்களினும்பூமியுண்மதித்துச்சொல்லப்பட்ட பட்டினங்களினு மொருகாரணமின்றி த்தீவைப்போனு மிவர்களெல்லாம் அறநூலிலாகாதென்று நீக்கு மதுபானம் பண் ணினோர்க்குநிகராவர்கள் மிடியராயுள்ளோருடைமைமுதலாயினதுங் காவல்பெ ற்றிருக்குமில்லமட்டோயானை குதிரைதேரிவைகளையுமழகு நிறைந்தரத்னத்தையு ங்கரந்துகொண்டானும் எ று

வறியோர்நிதிமுதலுமென்னுமும்மையாற்பெரியோர்நிதிமுதலுமென வருவிக (௩௧)

கதலியெழூவாய்கரும்பிறுவாய் கந்தமலிசந்தனமுயர்ந்த ※
பொதியிலகில்குங்குமமாதி புனையவினியதுகிலாதி ※
பதமேபாணிபுயில்வனவும் பற்றினுனும்பழூதுறவே ※
பிதமாங்கனகந்தனைச்சோர்விற் பெற்றூற்கிணையேபேசுங்கால் ※

எ - து வாழைமுதல்கரும்பீருயுள்ள வுண்டிப்பொருள்களு மணமிக்க சந்தன மும்பொதியத்தின்கணுேங்கிவளர்ந்த அகில்குங்குமமுதலிய சுகந்தப்பொருள்களு முடுத்தற்கினியவாடைமுதலிய னவுங்காலினுங்கையினுமணியப்பட்டவாபரணமா யுதங்களுமான விவைவற்றை,யுடையோர் வருந்தும்வண்ணம் அபகரித்தோனுஞ் சொல்லுமிடத்துச்சிவந்தநிறத்தையுடையபொன் னைக்களவினுலெயெடுத்தோனுக் குநிகராவன் எ - று

பீதம் பிதமெனக்குறுகிற்று (௩௨)

மகாபாதகதுல்லியருட் குருதேவியைப் புணர்ந்தோர்க்கொப்பாரை யிரண்டு செய்யுளாலுணர்த்துகின்றூர்

பெறுதற்கரியபாத்திரத்தை ப்பெற்றும்பெற்ற கன்னிகையைச் ※
செறிவித்திடுதல்செய்யானுஞ் சிறந்தபுதல்வன்மனைவியொடு ※
மறிவிற்பரிந்தானகத்திெனுடும் பகினியுடனுமணைந்தானும் ※
பொறையிற்புயந்தபுதல்வியொடும் புலைச்சியுடனும்புணர்ந்தானும் ※

எ - து வெளி

அறிவிற்பரிந்தான், தோழன் பகினி, உடன்பிறந்தாள் (௩௩)

அறிந்துமனையாளவலத்தை யவளைத்துறவாதணைவானுஞ் ※
சிறந்தகுரவன்மனைவியொடுஞ் செறிந்தார்க்கிணையேசெப்பியவித் ※
திறந்தான்மகபாதகமதனிற் சிறுமைத்ததனுற்பாதகமென் ※
றறைந்தாமிதனுக்கணித்தான வுபபாதகமுமினியறைவாம் ※

எ - து தன்மனைவியானவள்பிறர்முகம்பார்க்குங்குற்றத்தை க்கண்டு மவளைத்த ள்ளிவையாதுகூடுவோனு மிவர்களெல்லாருமேலானகுருவினதுபாரியோடுகூடின வர்களுக்குநிகராவர்கள், இங்ஙனஞ்சொல்லிய கூறுபாடுகளெல்லாமகாபாதகத்து க்குத்துல்லியமாயிருக்கும்,ஆனையினுலேயிவற்றிற்கு ப்பாதகமென்று பேர்கொடுத்

எ - து உள்ளத்தின்கணமைவுபடாதவஞ்சனையையுடையோனு மொருவனொருகுற்றஞ்செய்யி லதனையக்கணமேமறவாம லெந்நாளு நினைத்திருக்குமாச்சரியத்தையுடையவுள்ளத்தையுடையோனு மொருத்தியைக் கலியாணஞ்செய்தவளுடையவாபரணமணிந்தமுலைகளைக்கூடிய கணவனிருக்கவுமந்தவிசைபொருந்தியமொழியினையுடையாளான பசுங்கிளிக்கொப்பாளதுவேய்போன்றதோளினையின்கணறிவின்றிப்புணர்ந்து பெருமைநாணென்னுமிரண்டினையுந்தனக்குக்கண்ணோகவிசாரித்தறியாதவேழையும் எ - று [௫௭]

கொழுநன்றனையேதெய்வமெனக் குறித்துத்தருமநெறிகோணு ❊
தொழுகும்விரதவுத்தமியை நொய்யளெனவேயுளத்துன்னு ❊
மிழுதைதானுமிவளெளியளென்றே யவடனிணைத்தோளைத் ❊
தழுவக்கருதுந்தண்ணியனுங் கண்ணூற்புணர்ச்சிதரிப்பானும் ❊

எ - து வெளி [௫௮]

கரிசுசிறிதுங்கருதாத கவிஞர்மரபிற்கன்னிகையைத் ❊
அரிசுமுடையளிவளென்று சொல்லுமவலத்துர்ச்சனனு ❊
மொருவன்சிவனுண்டென்றுணர்ந்த பனவன்றனைத்தேர்ந்துதவாதே ❊
பரிவுமறிவுமுடையனை மற்றொருவற்குதவும்பழியினனும் ❊

எ - து வெளி பனவன் பிரமசாரி (௫௯)

தருமமணமேபிரமாதிநான்குந் தலைமையிடைமணந்தா ❊
னொருவனொருத்தியெனுமிவர்த மொப்பிற்பரிவுற்றுறும்புணர்ச்சி ❊
கருதிற்கடைமூன்றுசுரமுன் கடையென்றவற்றைக்கழியாதே ❊
விழைபவிழைந்துபுணர்ந்தறத்தை விதித்தமொழியைவிடுத்தாரும் ❊

எ - து பிரமம், பிராசாபத்தியம், ஆரிடந், தைவமாகிய, இல்லறத்திற்குரியமணநான்குமுத்தமம், காந்தனுங்கன்னிகையுமானவிருவருந்தம்மனப்பொருத்தத்தாலன்புற்றுப்புணருங்காந்தருவப்புணர்ச்சியிடையாயமணமாம், ஆசுரம் இராக்கதம் பைசாசம், ஆகியமூன்றுமாராயிற்கடையாயமணமாம், இவற்றுட்கடையென்றுகூறிய, ஆசுரமணமுதலியவற் றைநீக்காமலாசைமிகுதியா லேவிரும்பிச்சடுதியிலேவேட்டுப்புணர்ந்தில்லறநெறியைவிதித்துக்கூறியவேதாகமவசனத்தைவிட்டோரும் எ - று

துச்சொன்னேரும், மேலிதற்கடுத்தவுபபாதகத்தையுஞ்சொல்லாநின்றேம் எ - று.

முற்கூறியவுபபாதகத்தைவிரித்துணர்த்துகின்றார்

இச்செய்யுண்முதலனவே யிசைத்தவென்னுஞ் செய்யுளீறாக விருபத்தொரு செய்யுளுமொருதொடர்க்குளகம்

மறையோர்க்கெனவேவைத்தபொருண் மதியாததனைவௌவினனு *
நிறைபாற்பெரியோர்கிடியதனை நிரந்துகவர்ந்தகிலேசியும் *
பிறராலதனுக்கிடையூறு பேணுமவனும்பெருங்குலமு *
மறிவுமருளுமுடையமெனு மகந்தையுடையவவனுமே *

எ - து பிராமணர்க்கென்றுநியமித்துவைத்த பொருளை யபகரித்துக்கொண்டவனும் வேதாகமங்களின் வழிபேற்றச் சுத்தர்களின்றி தின்றவிமையான்மிக்கோரான நல்லோர்களிரவியத்தைக்கவர்ந்தபகரித்த கிலேசிக்கவர்தனும், பிறராலேயவருடைய திரவியத்துக்கிடையூறுவிளைப்போனும் பெண்ணாதிகாரம்பறப்பெரியசாதியுமறிவுமிரக்கமும்யாமே யுடையோமென்று மமதைகொண்டுடையயபொல்லாதவனும் எ - று.

விடைக்கூத்தவரைவெருள்வானும் விடம்பபுரைத்துவஞ்சிரவினனு *
மிடுக்கண்கெடுத்தவிளரியாரை வெண்குறைவுரைத்திகழ்வானுந் *
தடுக்கத்தரியாவாசையுடன் போகவிருத்தைக்கருதுவானுங் *
கொடுக்கச்சிறிதுங்குறியாது கொள்ளுங்கருத்தேயுள்ளானும் *

எ - து தபோதனரைக்கண்டிக்கோபிக்குமவனுமுன்னம்பிறிதொன்றுபிறர்க்கறார்மதிக்கவிரதமுதலியவற்றைச் செய்யவிரும்பினேனைத்தனக்கு வைத்துவிளைவுதளரீக்கினைநல்லோரை யவமதித்தபொல்லாத கன்மனத்தானும் மிகுதியாலேபோகவிதங்களையனுபவிப்போனு மற்பமுமொருவர்க்குங்கொடாமல்ருதாதுபிறர்கையிலுள்ளவற்றைவாங்குங்கருத்தேயுடையோனும் எ - று.

விடம்பம் உள்ளொன்று புறம்பொன்று

மானுவுளத்தவஞ்சகனும் வயிரமுடையமனத்தினனும் *
பூணார்முலையைமணஞ்செய்து புணர்ந்தாளிருக்கப்புலம்புந்த *
பாணார்மொழியைப்பைங்கிளியைப் பாலைக்கோதிலைப்பரிந்தத்து *
லேறுனொன்றுபிரண்டிலையுங் கண்ணுறுவொன்றுகொடியனுமே *

எ-து உள்ளத்தின்கண்மைவுபடாதவஞ்சனையையுடையோனு மொருவனொருகுற்றஞ்செய்யி லதனையக்கணமேமறவாம லெந்நாளு நினைத்திருக்குமாச்சரியத்தையுடையவுள்ளத்தையுடையோனு மொருத்தியைக் கலியாணஞ்செய்தவனுடையவாபரணமணிந்தமுலைகளைக்கூடிய கணவனிருக்கவுமந்தவிசைபொருந்திய மொழியினையுடையாளான பசுங்கிளிக்கொப்பாளதுவேய்போன்றதோளினையின்கணறிவின்றிப்புணர்ந்து பெருமைநாணென்னுமிரண்டினையுந்தனக்குக்கண்ணாகவிசாரித்தறியாதவேழையும் எ-று [௩௭]

கொழுநன்றனையேதெய்வமெனக் குறித்துத்தருமநெறிகோணு ※
தொழுகும்விரதவுத்தமியை நொய்யளெனவேயுளத்துன்னு ※
மிழுதைதானுமிவளெளியளென்றே யவடனினைத்தேர்ளைத் ※
தழுவக்கருதுந்தன்னியனுங் கண்ணுற்புணர்ச்சிதரிப்பானும் ※

எ-து வெளி [௩௮]

கரிசுசிறிதுங்கருதாத கவினார்மரபிற்கன்னிகையைத் ※
தரிசுமுடையளிவளென்று சொல்லுமவலத்துர்ச்சனனு ※
மொருவன்சிவனுண்டென்றுணர்ந்த பனவன்றனைத்தேர்ந்துதவாதே ※
பரிவுமறிவுமுடையனை மற்றொருவற்குதவும்பழியினனும் ※

எ-து வெளி பனவன் பிரமசாரி (௩௯)

தருமமணமேபிரமாதிநான்குந் தலைமைபிடைமணந்தா ※
மொருவனொருத்தியெனுமிவர்த மொப்பிற்பரிவுற்றுறும்புணர்ச்சி ※
கருதிற்கடைமூன்றசுரமுன் கடையென்றவற்றைக்கழியாதே ※
விரையவிழைந்துபுணர்ந்தறத்தை விதித்தமொழியைவிடுத்தாரும் ※

எ-து பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தைவமாகிய, இல்லறத்திற்குரியமணநான்குமுத்தமம், காந்தனுங்கன்னிகையுமானவிருவருந்தம்மனப்பொருத்தத்தாலன்புற்றுப்புணருங்காந்தருவப்புணர்ச்சியிடையாயமணமாம், ஆசுரம் இராக்கதம் பைசாசம்,ஆகியமூன்றுமாராயிற்கடையாயமணமாம்,இவற்றுட்கடையென்றுகூறிய, ஆசுரமணமுதலியவற் றைநீக்காமலாசைமிகுதியாலேவிரும்பிச்சடுதியிலேவேட்டுப்புணர்ந்தில்லறநெறியைவிதித்துக்கூறியவேதாகமவசனத்தைவிட்டோரும் எ-று

காந்தருவமுதலிய மூன்றுமத்திமமெனவும் பைசாசமதமமெனவுங் கூறுவாரு முளர், கு-பிரமம்பிராசாபத்தியமாரிடந், தைவங்காந்தருவமசுரமிராக்கதம்பைசாசமெனவேதத்தெண்வகைமணமே, பிரமங்கன்னிகையைப்பெருங்கலனணிந்தே, பிரமசாரியாயிருப்பானொருவனுக், குரியவன்னிமுன்னுதவுதன்மருவும், மருவுபிராசாபத்தியமகட்கோடற், குரியகோத்திரத்தார்மகளுதவென, விருமுதுகுரவருமியைந்தேயீதல், ஈயுமாரிடமாவுமானேறும், வாங்கித்தீமுன்னர்மகள்வழங்குதலே, வழங்குதெய்வம்வேள்வியாசாரியற்கு, முழங்குதீமுன்மகட்கொடைமுறையே, முறைமையாழினிறைகந்திருவ, மொப்புப்பற்றுந்தப்பிலவாகிந், தாமேகூடுந்தகுதியதாகும், ஆகுமாசுரஞ்செருவில்லேற்றியுந், திரிபன்றியினைந்தெரியுறவெய்து, மின்னனபிறவும்பன்னியசெய்துங், கன்னிகைமன்னுதல், துன்னுமெனப, துன்னுமிராக்கதஞ்சுரிகுழற்பேதையைத், தன்னிற்பெறுதுந்தமரிற்பெறுதும், வலிதிற்கோடன்மரபுகாட்டும், காட்டுபைசாசங்களித்தார்துயின்றார், மாட்டுப்புணரும்புணர்ச்சியின்மாண்பே, ஆகவெண்வகைமணங்களையுமிவ்வகையாற்கண்டுகொள்க

[௬௰]

உலகவியல்பையொழிந்தாரையுதவிர்பொருளொன்றுரைப்பானு ✻
நிலைமைதளரிற்றாங்காதேநீங்கும்பாங்கிலடியானுந் ✻
சலமில்சகியைத்தணப்பானுஞ்சாற்றிப்பழுதுஞ்சலஞ்செய்து ✻
கொலையைப்புரியுங்கொடியானுங்குணத்தார்தமையுங்கொடிப்பாலே ✻

எ - து உலகவியாபாரத்தைவிட்டுநிட்டைபுரிந்திருக்குந்தபோதனரையெனக்குக்காசுகதுாசுந்தரக்கடவீரொன்றுகேட்போனுந், தங்கருத்தனுக்குநிலைகுலையவந்தவிடத்துநின்றுபாதுகாவாமல்விட்டுப்போம், நன்மையில்லாதவடியானும், நிலைமையிழைபடவந்தவிடத்துவன்மமில்லாததோழனைநீக்கிவிடுவோனும், நற்குணமுடையோரையுங்கோபத்தினாலேகுற்றமுஞ்சொல்லிவன்மித்துக்கொலைந்தொழிலைச்செய்யுந்தீயோனும், எ - று

நிலைமைதளரினென்பதனைச்சலமில்சகியையென்பதற்குங்கூட்டுக, குணத்தார்தமையுமென்னுமும்மைசிறப்பு

(௬௧)

சுற்றத்தவரைத்துடைப்பானுஞ்சுகிர்தத்தவரைத்நுணிப்பானும் ✻
பற்றிப்பசுவைப்படுப்பானும்பதியைக்கொலைசெய்பழியினனு ✻
மற்றைவசியர்வடிவினையுமாயோடணையும்வதைப்பானுந் ✻
செற்றத்துழவர்தங்களையுஞ்செருக்கிச்சினத்துச்செகுப்பானும் ✻

எ - து உறவின்முறையாரையும் - புண்ணியவான்களையும் - பசுக்களையும் நரர்க்கெல்லாமிறைவனான - அரசனையும் அவர்க்கடுத்தசெட்டிகளையும் - வேளாளர்களையு - மடவாரையு - மதத்துக்கோபித்துவதைப்போனும் எ - று (௬௨)

தருக்கடனையுந்தனக்குன்னித்திறிக்குமவனுந்தருக்காலே ※
பெருத்தனுயிர்கட்குயிராயவெற்பில்பரமனுறையுமெலே ※
விருக்கவிடப்பமவைதனையும்விடைத்தேயொடிக்கும்வினையினனு ※
மருக்கொண்மலரைத்தனக்கெனவேபறிக்குமவலவரியனுமே ※

எ - து மரங்களைத்தனக்கென்றுகுறித்துமதத் திலேவெட்டுவோனும் - ஏகனுயிர்க்குயிரானங்கரில்லாதசிவனென்னுந்தருளியிருக்குந்திருக்கோயிலினிற்கு மரங்களிற்கொம்புகளையுஞ்சினைத்தொடிக்குந்தீவினையோனும் - திருநந்தவனத்தின் கணுண்டாயமணம்பொருந்தியபூக்களைத்தனக்கெனக்குறித்துப்பறிக்கும்பொல்லாதவிடும்பனும் எ - று (௬௩)

பரமர்திருவாலயம்தனிற்பணிசெய்பவரைப்பசுவதனை ※
யரியசெந்நெலவைமுதலுமபகாரகனுமவமதியாற் ※
றருகவென்றுபொருளல்லார்தங்கைப்பொருளைத்தரிப்பானு ※
மரணையருச்சித்ததன்பலத்தைப்பிறர்க்குப்பொருளுக்களிப்பானும் ※

எ - து சிவாலயங்களிற்பணிவிடைசெய்வோரையும்பசுக்களையும்பெறற்கரியசெஞ்சாலிநெல்வினையுமுழுந்துபயறுமுதலான்தானியங்களையுந்திருடிக்கொள்வோனும் - பயனற்றோரான - அநாதாக்களதுகையிற்பொருளைப்புத்திக்கேட்டினாலேயெனக்குத்தாக்கடவீரென்றுகேட்டேற்போனுஞ் - சிவனைப்பூசித்ததனாலுள்ள பலத்தைத்திரவியத்துக்காகப்பிறர்க்குதகம்பண்ணிக்கொடுப்போனும் எ-று (௬௪)

துக்கம்பிரியச்சுகமடையத்துணிவருலகரவருள்ளுந் ※
துக்கம்பிரியச்சுகமதனைத்துய்ப்பார்சிலரேசிலர்தாமே ※
துக்கம்பிரியார்சுகம்பிரிவர்துணிந்தவிரண்டுநிறத்தார்க்கும் ※
புக்கவினைபுண்ணியபாவமெனவேதுணியாப்பூசுரரும் ※

எ - து உலகத்திலுள்ளோரெல்லாருந்தமக்குத்துக்கங்களைநீங்கவுஞ்சுகங்களுண்டாகவுங்கருதாநிற்பர்கள், அவருட்சிறிதுபேர்கள் துக்கங்களைநீங்கச்சுகங்களையனுபவிப்பர்கள், சிறிதுபேர்கள்சுகத்தைநீங்கித்துக்கத்தையனுபவிப்பர்கள், ஆதலாலிந்தவிருவிதத்தோர்க்குஞ் சுகதுக்கமனுபவிக்குங் காரணமுற்செய்தபுண்ணியபா

வங்கிளையென்றுறுதியிடாத பிராமணரும் எ - று [௬௫]

தன்றாற்சமைத்ததடாகத்தைத் தருக்களைத் தாரத்தைப் *
பொன்னையனையபுத்திரரைப் பொருட்குக்கொடுக்கும்புல்லியனு *
நன்றேன்புடையார்தனந்தனையு நயந்துகொள்ளுநலமிலியும் *
உன்னைப்பரிப்பலெனப்பாரி யுடைமைதனைக்கொண்டொழிப்பானும் *

எ - து தன்னாலுண்டாக்கின குளங்கள், வாவிகள், மரங்களையுந்தன்மனைவியையும்பொன்போன்ற தன்மைந்தர்களையும் பொருளுக் குவிற்குமீனனும் நல்லவிரதநிலைராயுள்ளோர்கள்திரவியத்தை விரும்பிபகரிக்குந்தீயோனும் நின்னுடைமையைப்பல்கும்வண்ணம்பெருக்கி யுன்னைக்காப்பே னென்று தன்மனைவியதுசீதனமுதலிய கைப்பொருள்களை வாங்கிக்கொண்டுகாவாதுவிடுவோனும் எ - று [௬௬]

தேமலருந்தேமொழியைத் திளைக்குமறிவில்சிறியானும் *
வேறுசிலர்கைப்பொருடன்னை விரும்பித்தருவலெனவாங்கிப் *
பேறுமவர்க்குப்பிழைப்பானும் பேணுஞ்செநெலும்பிறர்தம்பாற் *
கூறிக்கொடுத்துவிருத்தியினைக் கொண்டேயருந்துங்கொடியனுமே *

எ - து மதுபானம்பண்ணுந் தேன்போலு மொழியினையுடையாளைப் புணருமறிவில்லாதவற்பனும் பிறிதுசிலர்கைப்பொருளை யிச்சித்துத்தருவனென்றுவாங்கியப்பொருளையுங்கொடாமற் பிழைசெய்வோனும் யாவராலும் விரும்பப்பட்டசெஞ்சாலிமுதலியநெல்லினைப் பிறரிடத்துவட்டிக்குக்கொடுத்து அந்தவூதியங்கொண்டு போசிக்குந்தீயோனும் எ - று [௬௭]

குற்றமுடையான்வினைதணிக்கக் கொடுக்கும்பொருளைக்கொள்வானும்
விற்கத்தகுதியல்லாத வன்னாதிகளைவிற்பானுங் *
கற்பால்வசியமுதற்செய்து கனகங்கொள்ளுங்கரிசினனு *
நிற்பார்நியமத்திவனெனவே நிகழ்த்தத்துடங்குநியதியனும் *

எ - து யாதாமொருகுற்றங்களையுடையன்தான்செய்தபாவந்தணியும்படிக்குக்கொடுக்குந்தானத்தைப்பெற்றோனும் விற்பதற்குரிமையல்லாதவன்னமுதலாயினவற்றைவிற்போனு மந்திரநூல் விதியினாலே * வசியமாகரிஷிணமுதலிய வறுவ

---

* வசியம் ஆகரிஷிணம் மோகனம் தம்பனம் உச்சாடனம் மாரணம்

கையினைச்செய்துபிறர்பொருள்களை வாங்கும்பொல்லாதவனும் நீதிவழிநடப்போ
ரிவனொன்றுபிறர்புகழும்வண்ணம்பாவித்துத்தொடுத்துநடத்து நியமானுட்டானங்
களையுடையோனும் என்று [௪அ]

கொடுத்துத்தனத்தைவேதமுதல்கொள்ளுமவனும்பொருள்கொண்டு ※
படிப்பிப்பவனும்படிமத்தைப்பரித்தேயொழிக்கும்பாங்கிலியுந் ※
திடத்தையிழந்துதெரிசனங்களனைத்துமதித்துத்திரிவானும் ※
அடுத்தசமையத்தயற்பசுநூல் வழியென்றதுகற்றறிவானும் ※

என்று திரவியங்கொடுத்து வேதம்வேதாங்கமுதலியநூல்களைப் படிப்போனும்பொருள்வாங்கிப்படிப்பிப்போனும் யாதாமொருவிரதத்தை யனுட்டித்த தனையிடையிலேவிடுந் திடமில்லாதோனுஞ் சைவசித்தாந்தநிலையே மேலானநிலையென்னுமுறுதியைவிட்டுமற்றுள்ள சமையதெரிசனங்க ளெல்லாவற்றையுமேலாகமதித்துநடப்போனுந் தானின்றசமையத்துக்கன்னியமானபசுநூலினைமுத்திநெறியென்றுகருதிப்படித்தாராய்வோனும் என்று [௪௯]

அழிவையபரிக்குமநுவன்றி யவலத்தருக்கமறைவானு ※
மறுவில்வடிவவானவரை வன்னிபதனைமந்திரத்தைப் ※
பெறுவித்தருளும்பெரியோனைப்பேணுதொழிந்துபிழைப்பானு ※
மறையோர்தமையும்பசுவினையு மாமாத்தெனவெண்மனிதனையும் ※

என்று ஞானத்தையுண்டாக்குந் தருக்கத்தைப்பேசுவதன்றிக் குதர்க்கத்தைப்பேசுவோனுங் குற்றமற்ற வடிவினையுடைய தேவர்கள க்கினிமந்திரங்களினையிற்றையாராதனைசெய்யக்கற்பித்தருளுமாசாரியனையும் பிராமணரையும்பசுக்களையுமிகவுமகத்துக்களென்னப்பட்ட பெரியோர்களையும்பத்திபண்ணுதலைவிட்டு அவர்களுக்குத்தீமைசெய்வோனும் என்று

மகாமகத்தென்னும்வடமொழி மாமாத்தெனத்திரிந்தது [௫௰]

அரசன்றனையுமபவாத மறையுமவனுமவன்முன்னு ※
முரியவினையைப்பிதிர்தேவர்க் குதவாதவனுமொழுங்கிலியும் ※
பரமசிவனுமறநெறியும் பாவவிதமும்பரபதமு ※
நரகவிதமுமிலையென்றே நவிற்றுமவனுநாடோறும் ※

என்று இராசாவையுமவன்முன்னே பழிச்சொல்சொல்வோனும் பிதிர்க்களுக்

குந்தேவர்களுக்குந் தான்செய்தற்குரிய கன்மமானசிராத்தந் தர்ப்பண முதலியவ ற்றைச்செய்யாதோனு மொழுக்கமில்லாதோனு மேலானசிவனுநன்னெறியாகியபு ண்ணியமும்பாவபேதமு மேலான சுவர்க்க நரக விதமுமில்லையென்று நித்தலுஞ் சொல்லுநாத்திகனும் எ று

அரசன்றனையு மென்னுமும்மை, மற்றுமுள்ளோரையுமெனவறிக, அவன்முன் னுமென்றவும்மைஅவனைக்காணுவிடத்துமெனவறிக [ருக]

பூணார்முலையைப்பகற்பொழுதிற் புணருமவனும்பூரணை யி ✲
ணுதறலின்மைதுனத்தை ப்பசுவின்பகத்தினையப்பானு ✲
மாணுனவர்தமாசியத்து மயர்த்தும்பெரியோர்கருத்தாலும் ✲
பேணுவிருதுமதிபகத்து ப்பேட்பாற்புணரும்பேதையுமே ✲

எ து ஆபரணம்பூண்டமுலையினையுடையாளை ப்பகற்காலத்தினும் பூரணைமுத லியவற்றினு ந்தண்ணீரினுள்ளுங் கூசாமற் புணர்வோனும் பசுக்களினதுயோனியி லும் ஆணுகப்பிறந்தோரதுவாயினும்மைதுனத்தைவிரும் புவோனு மறந்தும் பெரி யோர்கண்மனத்தினுலும் விரும்பாததூரமானவளையாசையாற்புணரு மறிவில்லா தோனும எ று [ருஉ]

உடைப்பானவனுமுவகையுடன் பிறியாதுறையுமுறவினையுங் ✲
கெடுப்பானவனுங்கிளர்சமையங் கிளப்பானவனுங்கொடுங்கிளவி ✲
புடைப்பானவனும்புனற்கரையை க்கூபதடமும்புலனிழந்து ✲
துடைப்பானவனுந்துணையான தேவர்விமானந்துயக்குறவே ✲

எ து மகிழ்ச்சியோடும் பிரிவின்றி யிருக்குநட்புடையோனை விரோத த்தால் வேறுக்குவோனுமோங்கியசமணன்முதலியபுறச்சமையத்தாரைநிலைகேடுசெய்யும வனும் பொல்லாதவார்த்தைகளைச்சொல்வோனுங் குளங்கரையையுங் கிணற்றங்க ரையையும்வெட்டியிடித்து ப்போடுவோனும் அறிவுகெட்டுஅஞ்ஞானமேலிடும்படி தமக்குத்துணையானதேவர்களிருக்குங்கோயில்களை ப்பிடுங்குவோனும் எ று ருா

இறவாதிருக்கச்செயுமருந்தே யெனினுமதனையில்லகத்து ✲
துறவாதிருந்தாரனைவரொடுந் துய்த்தல்கடனேதுயக்குற்றுப் ✲
பிறர்சொல்பழியும்பேணுதே பெரியோர்தமக்குநாணுதே ✲
சிறிதுமிரக்கஞ்செய்யாதே தானேயருந்துஞ்சிதடனுமே ✲

எ து சாவாமூவாமருந்தேயாயினுமதனைத்தம்மில்லின்கண்விடப்படாதிருந்தா

ர்க்குந்தன்னுடைய ஆண்டவனுக்கும் வேடங்கட்டி நடிப்பதன்றி யுண்மை யானத போதனர்க்குந்தனது தோழனுக்கு மழகினையுடைய நீலோற்பலமலர் போன்றகண் ணையுடையகன்னிகைகளுக் குமுற்றகாரியங்க ளிடையூறுகளையுஞ் செய்வோ னுநல்வினையாலுண்டாகியசெல்வத் தையநுபவிப்போரையும்பிறருடையருபலாவ ண்ணியத்தையுங்கண்டுபொருமலறிவுவருந்துமன்பில்லாதோனும் எ று [௫௭]

ஈட்டினார்தனந் தன்னைபிறைக்குறக் ※
காட்டினானுங் கருதியகையனும் ※
பாட்டினானுநற் பாவையர்தூடணை ※
நாட்டினானு நரர்க்குநவையுமே ※

எ து நன்முயற்சியாலார்ச்சித்தோரது அடக்கப்பொருளையரசனுக்குக்காட் டினவனு மப்பொருளை யிவ்வளவோவென்று நினைத்து மனம்புழுங்கியகையனு நற் குணநற்செய்கைகளையுடையமாதர்களிடத்துத் தூஷிக்கத்தக்கபாட்டுக்களை ப்பாடு கிறவனுங்குணவான்களிடத்துக்குற்றத்தை க்கற்பிப்போனும் எ று

இதனுள் ஈட்டினார் ஆர்ச்சித்தோர்கையன் ஈனன் (௫௮)

இச்செய்யுள் முதலாகநீக்குவானு மலசலவித்தலுமென்னுஞ் செய்யுளீறாகநா லுசெய்யுளுமொருதொடர்

ஆக்கள்சேரிடத் தாருகிச்சாலையுட் ※
டேக்குநீர்த்தடந் தேர்நிகழ்வீதியுள் ※
வேர்க்கனுந்தரு ச்சாயையில்வெற்பினிற் ※
பூக்கிளர்ந்தபொழிலின் புடையுமே (௫௯)

சிலையினீரிற் சிகதையிற்றேவர்த ※
மெலையின்மார்க்கத்தி லில்லத்திலிமத்திற் ※
றொலைவிலாததூர் வாதியிற்றும்பையி ※
னிலைமைமாதவர்நீடு நிலத்துமே ※

சிகதை மணற்குன்று (௬௰)

உன்னத்தக்கதலத்தி லுவர்தனிற் ※
செந்நெலாதிய செய்யிற்சிறப்புறு ※
வன்மிகாதியிற் றுண்டுவனத்திலுட் ※

எ - று தன்சத்துருவானவனையொளித்துநின்று கொல்லுஞ்சேவகப் பாடில்லாதோனுங் கன்னக்கோலெடுத்துப்பயிற்றிநிமிர்ம்பனுமிருவர்தம்முண்மாறுகொண்டுவழக்கின்வந்தேறியவிடத்து மனுநூன்முறையே யாராய்ந்தறுதியிட்டசொல்லைவழக்கின்கட்சொல்லாது வாரம்பற்றி யோரமாகச் சொல்லும் புலையனும் எ - று [சுரு]

கொடுமராதியைப்பண்ணிடுங்கோணனுங் ※
கொடுமராதியைக்கொள்ளுங்கொடியனு ※
மடியர்பாலிரங்காதவவலனு ※
மடியர்தம்மையொறுத்திடுமற்பனும் ※

எ - து வில்லுமுதலியவாயுதங்களைப்பண்ணு நீதிகேடனும் வில்லுமுதலியவாயுதங்களைவிலைகொடுத்துக்கொள்ளுந் தீயோனுந்தன்னடியாரிடத் திரக்கமில்லாத பொல்லாதவனுமவ்வடியாரைக்கடிந்து கோபிக்குஞ்சிறியோனும் எ - று [சுசு

ஆவினைத்தமிப்பானுமலனு ற ※
நாவினாற்பொய்கவிற்றுநரகனுங் ※
கூவவந்ததுகேட்குங்கொடியனுங் ※
காவலர்க்கபராதக்கருத்தனும் ※

எ - து பசுக்களைவருத்தமுறும்படி யடிப்போனும் நாவினாலேயசத்தியஞ்சொல்லுநரகத்துக்குரியோனு மதனைச்சொல்லுமிடத்துச்சென்றுகேட்கும் பொல்லாதவனுந் தமதுகருத்தனுக்குக்குற்றஞ்செய்யுமனத்தை யுடையோனும் எ - று (சுஎ)

உறவினுக்கபராதியுமூனுடற் ※
பிறவிவேரினைப்பீழும்பெருவலி ※
யறிவனுக்கு நல்லாரிய னுக்கலற் ※
புறனுரைக்குமவலப்புலையனும் ※

எ - து சுற்றத்தார்க்குத்தீங்குசெய்வோனுந் தசைபொருந்தியவுடம்பினையெடுப்பதற்கு மூலமாகியவாணவத்தைக்களைந்துபிறங்குமிதுந்திடமான வறிவினையுடையதற்குநல்லவாசாரி யனுக்குப் பொல்லாப் புறச்சொல்லுந் தீமையை யுடையகன்மசண்டாளனும் எ - று (சுஅ)

சொக்கிடுந்தொழில்வல்லதுரிசனு ※

பூக்குநோயறவோட்டுமருந்தெனப் ❋
பொக்கம்பேசிக்கொடுக்கும்புலையனுந் ❋
தக்கதாய்தந்தைவாட்டந்தணித்திடான் (௬௯)

தனித்திருந்துணுந்தண்ணியகண்ணனு ❋
முனித்தபோதனர்தன்னைமுன்னூட்டிடான் ❋
[illegible]னித்தவாதுலர்துக்கந்துடத்திடான் ❋
[illegible]னித்ததாதாபசியும்பறித்திடான் ❋

இவையிரண்டுமொருதொடர், பொருண்முதலியவற்றைக்கவரும்விருப்பினாலேபிறர்பாற்சொக்குப்போடுந் தொழிலைவல்லதுர்ச்சனனும்பிணியானதுகெடும்படி நீக்குமருந்திதுவென்றுபொய்சொல்லிமருந்தல்லாதமருந்தைக்கொடுக்கும்பொல்லாதவனுந்தகுதியினையுடையமாதாபிதாக்கள்பசியினைப்போக்காதுஇந்திரியங்களைமுனியுந்தன்மையையுடையதபோதனர்களை முந்தப் பொசிப்பியாதுஇல்லாமையால்வருந்துந்தரித் திரர்களதுபசித்துயரத்தைப்போக்காதுபசியானொந்ததன்னடியார்கள்பசியுநீக் காதுதானேதனித் திருந்துபொசிக்குமற்பவறிவினையுடையோனும் எ - று (௭௰)

நீத்துமுன்னையவேதநெறியினைப் ❋
பேர்த்துநின்றபிராவிரச்சியனுந் ❋
தீர்த்தனாவரனுஞ்சிதைந்திடப் ❋
பார்த்தபண்பிலவலப்படிறனும் ❋

எ—று ஆதிகாலத்துளவாயவேதாகமங்களிற்கூறியசன்னியாசிமார்க்கத்தின்வழியைவிட்டியாமற்றுனேயொருமார்க்கங்களைக்கற்பித்துநடக்குஞ்சன்னியாசியுஞ் சுத்தனாகியசிவனுடையதிருமதிண்முதலானவற்றை யிடியவிட்டிரக்கமின்றிப்பார்த்திருக்குநன்மையில்லாததீமையையுடையவஞ்சகனும் - எ - று (௭௧)

ஆக்கடன்னையரும்பிணிவந்துறி ❋
நோக்கியேயதனோவுதன்னோவெனக் ❋
காக்கிலானுங்கனத்தையிளைத்தமெய்ச் ❋
சேக்கண்மீதுசெறிக்குஞ்சிறியனும் ❋

எ - று பசுக்களைப்பொறுத்தற்கரியவியாதிகள்பொருந்தினவையிற்றைப் பார்த்துதன்பிணியைத்தனக்குவந்தபிணிபோலநினைத்துப்பரிகாரஞ்செய்யாதவனு,

முடவிளைத்துகிற்குமெருதுகள்மேலேபொதிமுதலியமிகுந்தபாரங்களையெடுத்து (௭௨)
மற்பனும் எ - று

விடையின்பிசத்தைவெய்யவினைஞரா ※
லுடையச்செய்விக்குமூனனும்வந்தையி ※
னிடைபிற்பாரமெடுத்துமிழுதைபு ※
மிடபந்தன்னிலெடுத்துமிழுக்கனும் ※

எ - து சேக்களினுடையபீசத்தைக்கொடியதொழிலினையுடையசேமாறிகளாலுடையும்படிசெய்விக்கும்பொல்லாதவனும்மலட்டுப்பசுவின்முதுகிற்பொதிகளையெடுத்தும்- அறிவில்லாதவனுமிடபங்களிலேபொதிகளையெடுத்து மீனனும் (௭௩)
எ - று

வருந்துமேபதம்வைப்பின்மரிக்குமே ※
பொருந்துமண்ணிற்புழுக்களுமென்றுளம் ※
வருந்தியேபதமெல்லெனவைத்திடா ※
தருந்தவத்தைப்பிரிந்தவரக்கனும் ※

எ - து யாவர்க்குமிடமாகப்பொருந்தும்பூமியிலடிவைக்குங்கால்புழுக்களு- மெறும்புமுதலியனவும் - வருந்திரோமென்றுஞ்சாமென்றுநினைந்துமனநொந்தடியைமெத்தெனவையாதவரியகொல்லாதவிரதத்தைவிட்டவிராக்கதனுக்கொப்பானும் எ -று (௭௪)

உண்ணவூனைவிரும்பியுயிர்க்கொலை ※
யெண்ணுவான்கொலைகண்டிரங்கான்கொலை ※
பண்ணுவானைத்தடுத்துப்பகர்கிலா ※
னண்ணுவானிவரோடெனுநால்வரும் ※

எ - து வெளி (௭௫)

மிக்கசாதியுட்டோன்றியும்வேசியர் ※
துக்கந்துய்த்திடச்செய்யுந்துரிசனுந் ※
தக்கதென்றுமதுமணஞ்சார்தருந் ※
திக்கிஞசிசெலுத்துஞ்சிறியனும் ※

எ - து உத்தமமானநற்குலத்திற்பிறந்துமக்குலத்துக்கேற்பப்பாதுகாவாமற்

பிராமணரைத்துன்பமனுபவிக்கும்படிசெய்யும்பொல்லாதனும்- கள்முதலிய நாற்றம்வர்துவீசாநிற்குந்திசையிலதனைநல்லதென்றுநாசியினாலுகந்துகொள்ளு மீனனும்- எ - று (எ௲)

பாவஞ்செய்யப்பயமில்படிறனும் ✲
ஏவஞ்செய்பவிளைப்பிலிமூடனும் ✲
தேவர்தம்மைக்குறித்துத்திகழ்விதி ✲
மேவயாகஞ்செய்யாத்தனவேந்தனும் ✲

எ - து பாவஞ்செய்தற்குப்பயப்படாதவஞ்சகனும்- பிறர்க்குஅனவரதமும் பொல்லாப்புச்செய்தற்கிளையாதமூடனும்- தேவர்களைநோக்கிய அசுவமேதமுதலிய யாகங்களைவிளங்காநின்றவிதிமுறைபொருந்தச்செய்யாதமிகுந்ததிரவியத்தையு டைய- இராசாவும் எ - று

எவ்வம்- ஏவமெனத்திரிந்தது (எஎ)

ஆலயத்தைஅமலனுக்காதிக்குக் ✲
கோலினேமிலைக்கூவிளந்தண்ணறு ✲
மாலைசூட்டவும்வல்லருமல்லருக் ✲
காலமும்மெனநோவுறுங்கல்லனும் ✲

எ - து யாம்நின்மலனாகியசிவனுக்குத்திருக்கோயிலைத் தான்கட்டினாலுமில் லை,அல்லதுகுளிர்மையுடைத்தாயமணம்பொருந்தியவில்வமாலைமுதலியவற்றைமு க்காலமுஞ்சிவனுடையதிருமுடியிலேசாத்தவுஞ்சமத்துடையருமல்லமென்றுமன த்தின்கண்நோவில்லாதகன்னெஞ்சனும் எ - று [எஅ]

கூர்த்தநீபணங்கூடக்குறுகினர்க் ✲
கார்த்தெதிர்ந்துரையாதவலனு ✲
மூத்துளார்பிணிமுற்றினர்பற்றிலர் ✲
பார்த்தபோதுபரிவில்படிறனும் ✲

எ - து மிகுந்தபசிபொருந்திவந்தனுக்கெதிர்கொண்டுநல்வார்த்தை சொல்லியழைத்து அன்னமிடாதபொல்லாதவனும், வயோதிகர்-வியாதியாளர்-மி டியரிவர்கள்தன்னைவந்துகண்டபோதாயினும்அவர்கண்மேலிரக்கமில்லாதபொ ல்லாதவனும் எ - று [எகூ]

தன்னிற்றண்ணியனேவலைத்தக்கதென் ※
றுன்னிச்செய்யுமறிவிலவூனனு ※
மென்னெனுதசங்காக்குமெளியனுந் ※
துன்னுமாயிடங்காக்குந்தொழிலனும் ※

எ-து தனக்குக்கீழானோனேவலைநல்லதென்றுகருதிசெய் யுமறிவில்லாதகுற்றமுடையோனும் ஆடு-எருமை-யிவைகளைக்காத்ததினால்வரும்பயனியாதென்றெண்ணாமல்மேய்க்குநோய்யவனும் எ-று [௮௰]

அச்சமின்றியருவினைக்காடகத் ※
திச்சையால்வருந்துன்பமுமெண்ணிடான் ※
முச்சியேமரக்கோவைமுயற்சியாற் ※
கச்சிடாதுகடற்செலுங்கல்லனும் ※

எ-து தனவாசையினாலேபொறுத் தற்கரியபாவத்துக் கஞ்சாதுஆழ்கடலினடுவேகாற்றுமுதலியபொருந்திற்கப்பல்கவிழ்ந்துமரிப்போமென்னுந்துக்கமுமெண்ணாதுமுயற்சிமிகுதியாலேகப்பலைப்பண்ணியதன்கணேறுதலைவெறுத் திடாமற்கடலோடுங்கன்னெஞ்சனும் எ-று

மரத்தாற்கோத்தலினாலே மரக்கோவையெனக்கப்பற்கோர்காரணப்பெயராயிற்று [௮௧]

அகத்திற்பண்பறுத்தாடகத்தாசையான் ※
முகத்திற்பண்பைமுகிழ்த்தவிதத்துடன் ※
சகத்திற்காளையர்தம்மைமயக்குவார்க் ※
குகப்புச்செய்தவடோள்புணருனனும் ※

எ-து உள்ளத்தின்கணன்பினையொழித்துப்பொருளாசையினான்முகத்திற்கண்மலர்ச்சியைத்தோற்றுவித்துஇராகவிதத்தினாலேபூமியின்கணிளைஞராயுள்ளோரைமோகிப்பிக்கும்வேசைகளுக்குச்சந்தோஷத்தைச்செய்தவர்கள்தோளிணையைக்கூடுந்தீமையுடையோனும் எ-று [௮௨]

தபதிகாருகன்கொல்லன்றனமனர்க் ※
குபகரிப்பனென்றெட்டினனூன்வலி ※
யபகரிக்கும்பிணியறுப்பானெனு ※

மிவருங்கூலியருங்கபடெய்திடின் ※

எ-து சிற்பாசாரியு, மீரங்கொல்லியுங், கொல்லனு, மிராசாக்களுக்குத்திரவியங்களையாதாயமாக்கிக்கொடுப்பனென்றிராசகாரியம்விசாரிக்கப்பொருந்தினோனுஞ், சரீரபலத்தைக்கெடுக்கும்வியாதியைத்தீர்க்குமருத்துவனுங், கூலியாளருமாகவிவர்களறுவருந், தந்தஞ்செய்தொழில்களிலேவஞ்சகஞ்செய்தாராயினவர்களும் எ-று (௯௩)

வேலைதோறும்வினைசெயவேண்டியே ※
கூலியென்றிரைமெய்க்குக்கொடுத்திடான் ※
சாலவுண்ணுஞ் சழக்கனுந்தாமத ※
வேலைமூவைந்திற்பின்னுணும்வீணனும் ※

எ-து காலந்தோறும் அதற்கேற்றசற்கன்மஞ் செய்யும்பொருட்டுத்தன் சரீரத்துக்குக்கூலியென்றுண்டியைக்கொடாமலுண்டிச்சுவைவிருப்பினாலே புருஷாகாரத்துக்குமேல், மிகவுமுண்ணும்பொல்லாமனத்தையுடையோனு, மிராத்திரிகாலம்பதினைந்நாளிகைக்குமேற்போசிக்குமில்வாழ்வானாகிய வவத்தனும் எ-று மூவைந்தென்று, அர்த்தயாமத்தைக்கருதுகையால், அர்த்தயாமம் பதினொன்றேகாலுக்குமேலெனச்சொல்லவும்படும், எனவே, ஒருசாமத்துக்குள்ளேபோசித்தல்சிறப்பெனவறிக (௯௪)

ஆறிலொன்றுகடமைகொள்ளாததி ※
னேறவேகொளுமீடிலிறைவனு ※
மூறுசெய்திடுவானுமுலகினை ※
வேறுவேறுதன்னேவல்விதத்தினும் ※

எ-து ஆறிலொன்றுகடமைகொள்ளாமலதனிலதிகமாகக்கொள்ளுநன்மையில்லாதவரசனும், தன்னேவல்விதங்களினாலேசேனைகளாயுள்ளோரையும், அதிகாரிகளையுங்கள்வரையுங்கொண்டுதேசத்துக்குநாலுவிதமாசத்திங்குசெய்விக்குங்கொடுங்கோன்மன்னனும் எ-று (௯௫)

இத்தகைத் தவிறைவ ரிருந்திடு ※

கைத்திடாதுகவரக்கருதிய *
சித்தமேவிடச்சென்றிரந்தேகொளும் *
பொய்த்தவம்புரிபூசுரன்றானுமே *

எ - து முற்கூறியவிந்தக்கொடுமைகளோடுகூடியகொடுங்கோன்மன்னன துதிரவியத்தையாகாதென்றுவெருமலதனைவாங்கக்கருதுமாசைமிகுதியாலவன் பாற்சென்றிரப்புரைகூறிவாங்கும்பொய்த்தவத்தைச்செய்யாநின்றபிராமணனும் எ - று (௮௬)

சோரன்றன்னைத்துயக்கமனத்தினாற் *
சோரனன்றெனநீக்குந்துரிசனுஞ் *
சோரனல்லனைச்சுட்டிப்பிழைப்பினாற் *
சோரனென்றுதுணித்திடுந்துட்டனும் *

எ - து யூகமற்றமனத்தினாலேகள்ளனைக்கள்ளனல்லனென்றுவிடும்பொல்லாதவேந்தனு, மாராய்ந்துவிசாரியாத அறிவின் மையாற்கள்ளனல்லாதவனைக்கள்ள னென்றுக்கினைபண்ணுங்கொடுங்கோன்மன்னனும் எ - று (௮௭)

சோரனுக்குத்துணைச்செலுந்துட்டனுஞ் *
சோரவித்தைகள்சொல்லுந்துரிசனுஞ் *
சோரனைச்சோரனென்றறிந்துந்தானுஞ் *
சோரனுமவனைச்சுளியானுமே *

எ - து கள்ளன்றிருடுமிடத்தவனுக்குத்துணைப்போனதீயோனு, மவனுக்குக்களவுநூல்களையுபதேசிக்கும்பொல்லாதவனுங், கள்ளனைக்கள்ளனென்றறிந்து மவனோடுநட்புச்செய்யுங்கள்ளனும், அவனைக்கண்டாலித்தொழில் நீசெய்யாதே யென்றுகோபியாதவனும் எ - று
சோரவித்தைகளாவன, மந்திரந்தெய்வமருந்தேநிமித்தந் தந்திரமிடங்காலங் கருவியெனவெண் விதமாயிருக்கும்இதனைச் சிலப்பதிகாரமுதலிய நூல்களிற்கா ண்க (௮௮)

ஏந்திளந்தடங்கொங்கையையிங்குறுங் *
காந்தனீங்கவக்காரிகைதோளினை *

தோய்ந்தசோரனைத்தொட்டுத் துயர்செயா *
வேந்தனும்மனைச்சோரனில்வேறலன் *

எ - து ஆபரணங்கள் தாங்குமிளமைந்தன்மையுடையபெரியமுலையினையுடையாளைக்கூடிமனமகிழ்ச்சிபொருந்துங்கணவன்பிரிந்தகாலத்துந்தமனையாளுடையதோளிணையைப்புணர்ந்தகள்ளனைப்பிடித்துத்தண்டஞ்செய்யாதஅரசனும்பிறர்மனைச்செல்லுங்கள்ளனில்வேறுகானாதலாலந்தவிராசாவும் எ - று (௯)

பாலைநெய்யைப்பலத்தைத்திலத்தினைச் *
சாலியாதியன்றுதியைத்தண்டுளன் *
மூலமாதிமுதிரைபிறதியைச் *
சேலையோடுபட்டாடைதிருடனும் *

எ - து வெளி - மூலம் - கிழங்கு - முதிரை - துவரை (௧௰)

பரியகம்பளந்தன்னையும்பாசமும் *
வரியவூனுமதுவுந்தயிலமுந் *
திரணமீறுசெறிந்தசில்பண்டமுங் *
கரமுறப்பற்றிக்கொண்டிடுங்கள்வனும் *

எ - து வெளி - பாசம்-கயிறு-வரியவூன்-ஆராதெனவரைந்தவூன் (௧௧)

சத்திரந்தனைப்பாதுகைதன்னையும் *
விசித்திரித்திடும்பாயின்விதத்தையுங் *
கொத்துலாமலர்க்கூடையும்பேழையு *
மத்தமூட்டியெடுக்குமவலனும் *

எ - து வெளி - கொத்துலாமலர்க்கூடை - திருப்பூக்கூடை - அத்தம் - கை (௧௨)

சங்கமாதிசலத்திற்சனித்தவும் *
வங்கமாதிமரத்தின்வகுத்தவு *
மங்கலத்தமழலைமுழவமு *
மங்கையாற்பற்றிக்கொள்ளுமவலனும் *

எ - து சங்குமுதலாகநீரின்கட்பிறந்துள்ளனவுங், கப்பன்முதலாகமரத்திறநுப்பண்ணிபுள்ளனவு, மங்கலவாத்தியமானமழலைச்சொல்லையுடையமத்தளமுமானவிவைகளையுந், திருடுமவத்தனும் எ - று (௧௩)

ஈயந்தன்னையிரும்பினைச்செம்பினைத் *
தேயனுந்திரபுத்தனைச்செங்கலை *
மாயவாழ்க்கையர்தங்கண்மனையினு *
மேயுமேதுமெடுக்குமிழுதையும்

எ - து — வெள் — தேயன் எ - து திருடன் - (௧௪)
திரபு - எ - து - பித்தளை - இவைகள்வடமொழி *
பிறர்பொருட்கடுகிற்பினவாயினு *
மறையநின்றதனைக்கொளும்வஞ்சனு *
நிறையறக்கொளவெண்ணிடுநெஞ்சனு *
மறையுமாதனுமன்னியர்க்காகவே

எ - து பிறர்க்குரியபொருள்களைக்கடுகிற்பாதியாயினுமவர்காணவண்ணஞ்சென்றுதிருடுங்கள்ளனு, முத்தமமானநிறையென்னுங்குணநீங்கப்பிறர்பொருளைக்கைக்கொள்ளும்படிவிசாரிக்குமனத்தையுடையோனு, மொருவன்பொருளைப்பிறர்க்காம்வண்ணஞ்சொல்லுமறிவில்லாதோனும் எ - று (௧௫)

என்னுமித்தொகையாவருமீங்கியற் *
பன்னுபாவக்கடலிடைப்பட்டுளா *
ரின்னபேதத்துரிசுமியற்றிடிற் *
பின்னுவார்குழற்பேதையர்தாமுமே

எ - து இங்ஙனஞ்சொல்லப்பட்டவிந்தப்பாவவிதத்தொகையிலுள்ளோரொல்லோருமிவ்விடத்திந்தவியலின்கண்விதித்தவுபபாதகத்திற்றண்ணியபாவமாகியகடலின்கணமிழ்ந்தும்பாவிகளாவோர், பின்னற்றொழில்பொருந்தியநீண்டவளைகத்தினையுடையமடவார்களுமேற்கூறியவிந்தப்பாவபேதங்களான தீமைகளைச்செய்வாராயினத்தன்மையுடையபாவிகளாவோர் எ - று (௧௬)
பாவக்கடலிடைப்பட்டுளார் எ து நடுநிலைத்தீபகம்

மேலதிபாதகமுதலிய கன்மங்களைச்செய்தோர்பெறும்
பயனுணர்த்துகின்றார்.

ஈட்டுமிந்தவினைத்தொகையாவையு *
மீட்டிடும்படிவெய்யநமன்றமர் *
காட்டிடுந்துயராக்கைகலந்துபோய் *
வாட்டுமாநிரையத்துள்வதிவரோ *

எ - து அதிபாதகர்முதலாயினோரிவ்வண்ணஞ்செய்யுமிந்தவதிபாதகமுதலிய கன்மபலங்களெல்லாவற்றையுமொழிக்கும்படிகொடியயமதூதர்களுண்டாக்குந் துன்பவுடலாகியயாதனாசரீரத்தையடைந்துசென்றுதுக்கத்தைக்கொடுக்குநரகத் தின்கணிருப்பர் எ - று (௧௭)

மானிடரேயன்றித்தீமைசெய்தவிலங்குபறவைகளு
நரகமடையுமென்பதுணர்த்துகின்றார்

மைந்தர்மாதருமற்றையலியுமோ *
பந்தபாசவிலங்கும்பறவையு *
முந்தவாக்கையிதுவெனமுன்னுறு *
மந்தவாக்கையடைந்தகன்றாழுமே *

எ - று ஆணைச்சாயுள்ளோர்பெண்ணைச்சாயுள்ளோரலியைச்சாயுள்ளோர்மாத்திரமோநரகத்தின்கணழுந்துவது, அவர்களையல்லாதபாசபந்தத்தையுடையமிருகங்களும்பறவைகளுமுந்தவுண்டானவுடம்புபோலெதிர்வருமந்தயாதனாசரீரங்களைப்பொருந்திப்பூமியின்கணெடுத்தவச்சினின்றுநீங்கிநரகத்தின்கணழுந்தும் எ - று (௧௮)

முற்கூறியஅதிபாதகமுதலியபாவபலங்களைக்கொ
டுப்பவன்யமனென்றுஞ்சிவபத்தர்கள்செய்தபாவ
பலங்களையாசாரியன்பிராயச்சித்தத்தாற்போக்கு
வனென்றுமுணர்த்துகின்றார்

விண்ணுளார்நரர்மற்றைவிலங்குமே *
பண்ணுபாவபலத்தைக்கொடுப்பவன் *
றிண்ணமேயமன்றேசிகன்றீர்த்திடும் *
பண்ணிற்பாவமிகுஞ்சிவபத்தரும் *

எ - து தேவர்களும், மானிடரும், மிவர்களல்லாதமிருகங்களுந், செய்யுந்தீ

வினைப்பயனையவர்களுக்குக்கொடுப்பவன் யமராசன், சிவபத்தர்களாயுள்ளோர்பா வபேதங்களைச்செய்வாராயின் அந்தப்பாவபலங்களையாசாரியன் பிராயச்சித்தசாஸ் த்களாலேபோக்குவனிதுநிச்சயம் எ-று (௧௧)
திண்ணமென்பதனையிருபாலுங்கூட்டுக

வெளியாகப்பாவஞ்செய்தஆன்மாக்களைப்பிரசாத்
தண்டிப்பனவற்றண்டிக்கப்படாதோரையமனே
தண்டிக்கப்படுவனென்றுணர்த்துகின்றார்

பிணக்கந்தன்னையும்பெற்றவர்தம்மிடைக் ✽
கணக்கிலாரையுங்கள்வர்கடம்மையும் ✽
வணக்குவான்மன்னன்மற்றையர்தங்களை ✽
யிணக்குவானரகத்துளியமனே ✽

எ-து ஒருவர்க்கொருவர்வழக்கின்கண்மாறுபாட்டைப்பெற்றுவந்தவிடத் தழிவழக்குடையோரையுஞ்சோரர்முதலாயினோரையுந்தண்டித்துநிறுத்துமவன ரசனே, யவனாற்றண்டப்படாதோரையுமாசாரியராற்பிராயச்சித்தப்படாதோ ரையுநரகத்தின்கட்செலுத்தித்தண்டிப்போனியமதருமராசன் எ-று (௱)

இந்தபாவங்கள்தீர்த்துக்கோடற்குப்பரிகாரஞ்செ
ய்துகொள்ளுமாறுணர்த்துகின்றார்

ஆதலாற்செய்ததீங்கையறுத்திட ✽
வேதமாதிவிதியும்விளங்கிய ✽
போதகன்பதம்போற்றவவன்செயும் ✽
வாதியாதபிரத்தியவாயமே ✽

எ-து தீவினைசெய்தோர்க்குநரகமும் அந்நரகத்தின்கட்செலுத்துமொரு இயமதருமராசனுமுண்டாகையினலே, யான்மாக்கள்தாந்தாஞ்செய்தபாவங்க ளையொழிப்பதுபொருட்டாகவேதமுதலியநூல்களிற்சொன்னவிதிகளையுமறிந்த வாசாரியனதுதிருவடியைவணங்குவாராயினாசாரியனுமந்தவான்மாக்களைத்தீவி னைகள்வருத்தாமைக்குக்காரணமானபரிகாரத்தைச்செய்துதீர்ப்பன் எ-று (௱௧

மேன்முடிந்ததுமுடித்துணர்த்துகின்றார்

வேறு

அதிபாதகமுமதிற்பிரிவுமவலமகபாதகமைந்துங் ※
கதிதமகபாதகந்தன்னிற்கனிட்டமானபாதகமு ※
மதனிற்றணியவதற்கணியவுபபாதகமுமதற்கணிய ※
வதனிற்றணியபலபாவவிதமுந்தொகைசெய்தனைந்தாமே ※

எ-து அதிபாதகமுமந்த அதிபாதகபேதமுந்துன்பத்தைவிளைக்கும்பஞ்சமாபாதகமுஞ்சொல்லப்பட்டவந்தப்பஞ்சமகாபாதகத்திற்றண்ணிமையானபாதகமுமந்தப்பாதகத்திற்றண்ணிமையுடையவாயதற்கடுத்த வுபபாதகமுமந்தவுபபாதகத்துக்கடுத்திருப்பனவாயதனிலுந்தண்ணிதானநானாவிதமானபாவபேதங்களையுமிவ்வியலின்கட்டொகுத்துச்சொன்னோமிதனைமுனிவனேயறிவாயாக எ-று
கதிதம், வடமொழி (௱௨)

வேறு

என்றுசிவநிங்கையெழுவாய்வினையிசைத்தான் ※
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் ※
வென்றுபுலனைந்தினையும்வெப்பவினையைய ※
நின்றமுனியன்றுணரநிற்குணனினைந்தே ※

எ-து வெளி (௱௩)

சிவத்துதியுணர்த்துகின்றார். வேறு

கன்றியகாலனைக்காய்ந்தவனைகருசினைப்போக்கிருக்காய்ந்தவனை ※
வென்றிவில்வேடனைவீட்டினனைவிரும்படியார்க்கருள்வீட்டினனை ※
யன்றிருவர்க்கரிதாயவனையண்டமுமாக்கியதாயவனை ※
யொன்றியவெங்கணுமுற்றவனையுணர்ந்தனனுன்னையுமுற்றவனே ※

எ-து மார்க்கண்டனைக்கோபித்துவந்தஇயமனைச்சங்கரித்தோனே; ஆன்மாக்களுடையஅஞ்ஞானத்தைநீக்கும்வேதத்தைமுனிவராறியும்வண்ணஞ்சொன்னோனே; வெற்றிபொருந்தியகருப்புவில்லினையுடையவேளானகாமனைக்கொன்றோனே தன்னைவிரும்புமடியார்களுக்குக்கொடுக்குமுத்தியையுடையோனே. யடியுமுடியும் தேடியகாலத்தரிபிரமரிருவர்க்குங் காணுதற்கரிதாய் நின்றோனே; யண்டங்களையுண்டாக்கியவுலகமாதாவானோனே. யெப்பொருளுந்தானொருவனென்றுசொல்லும்வண்ணமெவ்விடத்தும் வியாத்தியினாலே வேறறப்பொருந்தி நின்றோனே, யெவரொவரிருவினைசெய்யக்கருதின நினைவையுமுயிர்க்குயிராய் நின்றறியவா நினைக்குமுன்

னேயறிந்தோனுனதவத்தோனே எ - று

அண்டமுமென்னுமும்மை பிண்டமுமெனவெச்சத்தின்கண்வந்தது [௱௪]

இதுவுமது

இடுபலிகொண்டுணியென்பவனேயிருவினைதீர்த்திடுமென்பவனே ※
நடநவிலுந்தொழிலனல்லவனேநாசமுமாமயனல்லவனே ※
மடலவிழ்கொன்றையமாலையனேவந்தனையாஞ்செயுமாலயனே ※
படிதனிற்காசிப்பதியவனேபல்லுயிர்க்கெல்லாம்பதியவனே ※

எ - து இருடிகள்மாதரில்லந்தோறுமிடாநின்றபலியினைப்பெற்றுண்பானென்றியாவருஞ்சொல்லப்படுவோனே, நல்வினைதீவினையிரண்டினையுநீக்குமென்னுடையவிறைவனே, பஞ்சகிருத்தியமாகியநிருத்தம்பயிலுநற்றொழிலையுடையோனே, பிறப்பிறப்பினையடையும்பிரமாவல்லாதோனே; யிதழ்விரியநின்றகொன்றைமாலையையுடையோனே, யாம்ஆராதனைசெய்யுர்திருக்கோயிலின்கணுள்ளோனே, பூமியின்கட்பொருந்தியகாசிப்பதியையுடையோனே, பலவாகியவான்மாக்களுக்கெல்லாங்கருத்தாவாயுள்ளோனே எ - று (௱௫

குமாரத்துதியுணர்த்துகின்றார்

வேறு

பூதிபூடணன்வேதபாடணன்பூளைசூடினன்காளியூடின ※
லாதிநாயகன்பேதைநாயகனுமைபூணினன்வாய்மைபேணினன் ※
போதன்மாதவனாடினேடவும்பூணவேணயங்காணுணவரன் ※
காதன்மாமகனாறுமாமுகன்காசில்வாசகம்பேசுவாமரோ ※

எ - து திருநீற்றையேயாபரணமாகத்தரிபபோனுமாய்வேதத்தையருளிச்செய்வோனுமாய்ப்,பூளைமலரைத்திருச்சடையிலேசூடுவோனுமாய்க்;காளியுடனேவாதுசெய்வோனுமா, யாதிகருத்தாவுமா, யுமைக்குக்கணவனுமா; யாமையோட்டையாபரணமாகவணிந்தோனுமாய், வேதாகமங்களைப்பாதுகாப்போனுமாய்த், தாமரைமலரின்கணுறையும்பிரமாவுந், திருமாலுந், தம்முண்மாறுகொண்டுதேடவுமவர்கள், கண்ணிற்பொருந்தும்வண்ணநிலைமைபொருந்தியதன்மையைக்காணவொண்ணாதவனுமாயிருக்கிறசிவனுடையகுமாரனைஆறுமுகக்கடவுளினதுகுற்றமற்றதிருவாக்கைப்புகழாநின்றேம், எ - று (௱௬)

மேலகத்தியதுதியுணர்த்துகின்றார்

ஆறுசூடினனீறுமாடின னுலநீழலன்மூலஞாழல ※
னேறதேறினன்கீறுகூறைய னீறிலாதவன்றேறிலாதவன் ※
மாறிலாவரன்வேறிலாவரன் வாய்மைபேசினன்றீமைகூசினன் ※
கூறுமாகமங்தேறுமாதவன் கோயிலாவதென்கோவுமாவுமே ※

எ து கெங்கையைத்தரித்தோனுமாய் த்திருநீற்றைத்திருமேனியெங்கும்பூசு வோனுமாய் வடவாலின்கீழிருப்போனுமாய் மாரிங்கூரில்ஞாழல்முதலினடியிலே யிருப்போனுமாயிடபத்தின்கணேறுவோனுமாய் க்கிழிக்கப்பட்டகோவணவாடை யையுடையோனுமாய் நாசமில்லாதவனுமாயா ராயிலெவற்றையும் விளக்கும் ஞா னுதித்தியனுமாய் வணங்கினோர்க்குமாறுதவரத்தைக்கொடுப்போனுமா யெவற்றி ற்குமன்னியமாகாமறகலந்து நிற்குஞ்சங்காரகருத்தாவுமா யுண்மைப் பொருளையு பதேசிக்குமாசாரியனுமாய்த்தன்னையடைந்த வான்மாக்களுக்கு த்தீமைசெய்யநா ணுவோனுமாயிருக்கிறசிவனருளிச்செய்த திவ்வியாகமத்தையுள்ளபடியறிந்தபெரி யதபோதனனாகியஅகத்தியமுனிவனுக்கு என்கண்ணுநாவுமே யெழுந்தருளியிருக் குந்திருக்கோயில் எ - று கோ எ து கண் (௱எ)

ஆறுவதுபாவவியலுமைமுற்றும்



## ஏழாவதுசுவர்க்கநரகவியல்

மேலிவ்வோத்தென்னுதலிற்றோவெனின் ஒத்துநுதலியதூஉமோத்தினது பெ யருணாப்பவேவிளங்கும்,ஆயினிவ்வோத்தென்ன பெயர்த்தோவெனின் முன்னையி யல்களிற்கூறியபுண்ணியபாவங்கள் செய்தோரடையுஞ் சுவர்க்கநரகங்களினது திறத்தையுணர்த்திற்றாகலாற்சுவர்க்கநரகவியலென்னும்பெயர்த்து; இதனுளித்த லைச்செய்யுளிரண்டுமென்னுதலிற்றோவெனினிவ்வியலிற் கூறுந்திறத்தைத்தொகுத்து ணர்த்துதனுதலிற்று

அறைந்தவதிபாதகமாதி யடைந்தாரியமனுலகதனைச் ✼
செறிந்துசிவந்தவிழிகண்டு சித்தங்கலங்கிச்செயலழிந்து ✼
பிறிந்துபுணர்ந்துபிலவழியை ப்பிடித்துத்தூதரடித்தெறிய ✼
மறிந்துநிரயக்குழிவீழ்ந்து வருந்தும்விதத்தைவகுப்பதன்முன் (க)

அறிகமுனிவவறம்புரிந்தா ரவருமியமனுலகதனை ✼
நெறியிற்றருமபலநிகழ நீடுமகிழ்ச்சிகூடியிடச் ✼
செறியுமுறையுமவர்க்கவனுஞ் செய்யுஞ்சிறப்புந்துறக்கத்தி ✼
னுறையுமுறையுந்தொகைசெய்தே யுரைப்பாமுலகமுவப்புறவே ✼

இவையிரண்டுமொருதொடர், முன்னையியலிற்கூறிய அதிபாதகமுதலியபாவ பேதங்களைச்செய்தோர் யமலோகத்திற் சென்றியமதன்மராசனது கோபத்தி னுலேசிவந்தகண்ணினைக்கண்டுமனங்கலங்கிச்செயலற்றுச்சுவர்க்கத்துக்குப்போம்வழியைவிட்டு நரகத்துக்குப்போம்பிலத்துவாரத்தையடைந்து தம்மைப்பிடித்துக் கொண்டுசெல்லும் யமதூதர்களடித்தெடுத்தெறிய த்தலைகீழாய் நரகக்குழியின் கண்விழுந்துவருந்தும்விதங்களை வகுத்துச்சொல்வதுக்கு முன்னேபுண்ணியங்களைச்செய்தோர்களு மியமலோகத்தின் கண் முறையானே புண்ணியபலன்கள்வந்து பொருந்துகையினுலேநிலைபெற்றமனமகிழ்ச்சியுண்டாகச்சென்றடையுமுறையையு மவர்களுக்கந்த யமதன்மராசன் செய்யுஞ்சறகாரத்தையு மவர்கள் சுவர்க்கத்தின் கணிருக்குமுறைமையையுந்தொகுத்துலகத்துக்கு மேன்மையுண்டாகச்சொல்லாநின்றேம் அதனைமலையமுனிவனேயறியக்கடவை எ - று (உ)

ஆக்கைநிலையில்லாமையுணர்த்துகின்றூர்

முளைத்தகருவுமழவுருவு முதிராவுருவுமுதிர்ந்தமையா ✼
விளைத்தவடிவுமெனுமிவற்றி னிருந்தவுயிர்கள்வினையிறலும் ✼
வளைத்ததூதர்வதைசெய்ய மற்றேருடலம்பற்றிமுனம் ✼
விளைத்தசெய்திப்பலம்விளைய வியமபுரியைவிரவிடுமே ✼

எ - து கெற்பகோளகையின் கட்பதிந்த கெற்பமும்பாலகவடிவமு முதிராததருணவடிவமுமூப்படைந்த தன்மையினுலேமெலிந்த விருத்தவடிவமுமானவிந்தச் சரீரங்களிற்பொருந்திய வான்மாக்களுழ்வினை தொலைந்தவளவில் வந்துசூழ்ந்திய மதூதர்கள்வதைக்கவிந்தப்பூதனுசரீரத்தைவிட்டு யாதனுசரீரத்தையடைந்து அவ்விடத்தின்முன்னுட்செய்த கன்மபலம்பொருந்தா நிற்பவதுவனுபவித்தற்பொருட்டுயமலோகத்தையடைவர்கள் எ - று (௩)

மேனிறுத்தமுறையானேயறம்புரிந்தோர் யமலோகத்தையடையுமுறைமையு ணர்த்துவான்றொடங்கியதனுட்பாதுகை யுதவினோரடையுமுறைமையுணர் த்துகின்றார் வேறு

பாதுகையுதவினர் பனவருமுறவே ❊
வாதமுமனபரி வரவழியுகையா ❊
வேதரியதுவென வெளிதுறவெவையும் ❊
போதகரிவரென யமபுரிபுகுவார் ❊

எ து அந்தணர்பெறும்படிசெருப்பு மரவடியிவைகளை க்கொடுத்தோர்,வேக த்தினால்வாயுவையொத்தகுதிரை, வழியின்கண்வந்து பொருந்த வதன்கணேறிநட த்தியிவர்க்கரியபொருள்யாதென்றுசொல்லும் வண்ணமெப்பொருளுங்கைவந்து பொருந்தி யறிவுடையோரிவரென்று சொல்லும்வண்ணம் யமலோகத்தை யடை வர் எ று (ச)

குடைதானம்பண்ணினோரடையும்பலமுணர்த்துகின்றார்

சத்திரமுதவினர் தகைமையர்பெறவே ❊
மொய்த்தெழுமுகினிழல் வழிப்புறமுறையா ❊
லெத்தொகையினியன வவையெளிதுறவே ❊
சித்தமுமகிழ்வுற யமபுரிசெறிவார் ❊

எ து வெளி இதனுள் சத்திரம் குடை (ரு)

வத்திரதானஞ்செய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

பட்டினையுதவினர் பனவருமுறவே ❊
தொட்டிடவினியன துகில்புனைவடிவுட ❊
னிட்டமதுறுபயன் வழியெளிதுறவே ❊
சிட்டருமிவரென யமபுரிசெறிவார் ❊

எ து வெளி இதனுள் சிட்டர் பெரியோர் [சா]

மெத்தைதானஞ்செய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

தவிசினையுதவினர் தகைமையர்பெறவே ❊
புவிதனிலரியது பொருவினையொரியது ❊

சிவிகைபுமுறவதன் மிசைவழிதிகழ்வா ✻
ரிவர்மிகுதவரொன யமபுரியிசைவார் ✻

எ து    வெளி    இதனுள் தவிசு மெத்தை சிவிகை பல்லக்கு [எ]

அசுவதானம்பண்ணினோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

தத்துறுபரியினை யுதவியதகைமைய ✻
ரத்தருபரிமிசை யழகுறவழியே ✻
யெத்தொகைபினியன வவைவெளிதுறவே ✻
சித்தருமிவரொன யமபுரிசெறிவார் ✻

எ து    வெளி    இதனுள் சித்தர், சித்தியையுடையோர் (அ)

கட்டில்தானம்பண்ணினோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

கட்டுவைபதனையு முதவினர்கவினு ✻
ரிட்டமதுறுமஃதென வழியிடையே ✻
கிட்டியவதனொடு கெழுமியவழகாற் ✻
சிட்டருமிவரொன யமபுரிசெறிவார் ✻

எ து    வெளி    இதனுள் கட்டுவை, கட்டில் (கூ)

சாலைதோப்புவைத்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

பொழிலினைநிறுவிய பொருவருபுகழினர் ✻
நிழலுறுபொழில்வழி நிறைமலருறவே ✻
விழைவினிலினியன வெவையவைமிகவே ✻
யழகியரிவரொன யமபுரியடைவார் ✻

எ து வெளி இதனுள் பொருவரு ஒப்பில்லாதது விழைவு விருப்பு [ய]

திருநந்தவனம் வைத்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

பூமலிபொழிலினை நிறுவியபுகழினர் ✻
தேமலரிரதமு முறவணிசெறிவா ✻
ரோமருமிசைவர்கள் வழியிடையெளிதே ✻
காமலிபுகழொடு நடுவனையடைவார் ✻

எ து வெளி இதனுள் அணி அலங்காரம் ஏமம் இன்பம்நடுவன் எ து ஆன்மாக்கள் செய்யும்புண்ணியபாவங்களை யேற்றக்குறைச்ச லின்றியறிந் துதிவி னைக்கீடாக நரகவேதனைசெய்தலால் நடுவனென யமனுககோர்காரணப்பெயரா யிற்று [௰௧]

தேவர்கண்முதலியோர்க்குப்பணிவிடை செய்வோரடையு முறைமையுணர்த் துகின்றார்

தேவர்கண்முதலியர் பணிமுறைசெயுமவர் ※
ஓவியமனமட வரலியருழையே ※
மேவிடவழியிடை மிகுகளியுறவே ※
நாவணிபுகழொடு நடுவனையடைவார் ※

எ து வெளி இதனுள் ஓவியம் சித்திரப்பாவை உழை பக்கம் (௰௨)

முற்கூறியதேவர்கண்முதலியோர் சன்னிதியிற்றிருவிளக்கிட்டோ ரடை யுமுறைமையுணாத்துகின்றார்

ஒளியினையவருற வுதவியவவருந் ※
தெளிதருதிருவுரு வடைவர்கடிசைசேர் ※
மளினமுமறவழி மருவுவர்மதியோ ※
ரளியுளரிவரென நடுவனையடைவார் ※

எ து முற்கூறிய வந்த த்தேவர்முதலியோர் சன்னிதியிற்பொருந்த த்திபத்தி னையிட்டோர்களு மனத்துக்கெப்பொருளையுந் தெளிவித்தற்கு க்காரணமாயிருக்கி றவழகியவடிவைப்பெற்றந்தவடிவிலொளியினாலேதிக்குக்களிலேயுண் டான விரு ளுமோட நல்லவழிக்கட் சென்றிவர் சிவனருளை யுள்ளாரொன்று தம்மையறிவு டையோர்புகழமதன்மராசனை யடைவோர் எ று
மலினம் மளினமென லகார ளகாரமயக்கமாயிற்று (௰௩)

அதிதிகளுக்கில்லங்கொடுத்தோரடையுமுறைமை யுணர்த்துகின்றார்

இல்லமுமுதவின ரிரவலர்வரவே ※
நல்லகமருவிய வழியிடைநடவா ※
வெல்லையில்வளமுற மகிழ்வுறவெளிதே ※
வில்லியுமிவரென யமனுழைவிழைவார் ※

எ - து வெளி இதனுள் வில்லி, காமராசன் உழை, இடம் (௰௪)

கோதானம்பண்ணினோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

கோவினையுதவினர் குலமறையவர்கைப் ✻
பூவணியிரதமுமுறவது புகுவார் ✻
ஓவியமனமட வரலியருடனே ✻
தேவருமிவரென யமபுரிசெறிவார் ✻

எ - து வெளி இதனுள் அணி அழகு (௰௫)

அன்னதானஞ்செய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

அன்னமுமுதவின ரருமறையவர்பாற் ✻
றன்னிகரில்லன முறவழிதனினும் ✻
பன்னியவவைதனை யுணுமுறைபயிலா ✻
நன்னயரிவரென நடுவனையடைவார் ✻

எ - து வெளி அன்னத்தை யனமென இடைக்குறை யாக்கினார் பன்னி யது சொல்லியது நன்னயர் நல்லறிவினையுடையோர் (௰௬)

வியாதியாளர்க்கவுடததானஞ்செய்தோ ரடையுமுறைமை யுணர்த்துகின்றார்

உதவினரவுடத முறுபிணியினர்கைத் ✻
திதமுறுமுருவமு முறவழிசெறிவார் ✻
இதவிதமெவையவை யெளிமையினுறவே ✻
மதனனுமிவரென யமனுழைமகிழ்வார் ✻

எ - து வெளி இதம் நிலை (௰௭)

குருபணிவிடைசெய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

குரவனபணிபுரி குணமுடையவர்முன் ✻
மருமலரிரதமும் வரவழியெதிரோ ✻
திரமுறவதனமர் தெரிவையருடனே ✻
பொருவிலரிவரென யமபுரிபுகுவார் ✻

எ - து வெளி திரமுற நிலைபெற [௰௮]

அந்தணர்க்குப்பாதம்விளக்கினோ ரடையுமுறைமையுணர்த்துகின்றார்

அருமறையவர் திருவடியிணையதனிற் ※
பரிவொடுகுளிர்புனல் பயில்வினையவருந் ※
தருவமர்குளிர்நிழல் வழிபெறுதகையே ※
பொருவிலரிவரென யமபுரிபுகுவார் ※

எ-று வெளி (௧௯)

அந்தணரிடத்துச்சொன்னாதிகளைத்தானஞ்செய்தோரடையுமுறைமையுணர்த்துகின்றார்

ஒளிமணியுதவினர் கனகமுமொருமைத் ※
தெளிநிகழ்மறையவர் திகழ்கரமதனிற் ※
றுளியிலகனகநல் வளைவழிதுதையா ※
வளியுளரிவரென நடுவினையடைவார் ※

எ-று வெளி துலை ஒப்பு துளியென லகார ளகாரமயக்கமாயிற்று துதைதல் நெருங்குதல் (௨௦)

பெரியோர்களுக்குப்பாதம்வருடினோ ரடையுமுறைமை யுணர்த்துகின்றார்

உத்தமவொருமைய வுணர்வினரடியொடு ※
கைத்தலமுறமுறைவருடிய கருணையர் ※
தத்துறுபரிமிசை யமர்தருதகவோ ※
சித்தசனிவரென யமபுரிசெறிவார் ※

எ-று வெளி சித்தசன் காமன் [௨௧]

அந்தணர்க்குத்தேனினைத்தானம்பண்ணினோ ரடையுமுறைமையுணர்த்துகின்றார்

அருமறையவருற விரதமுமருளினர் ※
மருமலிரதமுண் வரவழியிடையே ※
திரமுறவுதவமர் தெரிவையருடனே ※
பொருவிலரிவரென யமபுரிபுகுவார் ※

எ-று வெளி (௨௨)

பூமிதானம்பண்ணினோ ரடையுமுறைமையுணர்த்துகின்றார்

பூமியையுதவிய பொருவருபுகழினர் ✽
தாமுனுமினியன வழிபெறுதகையே ✽
காமினியவரொடு களியுறவளவா ✽
நாமலிபுகழொடு நடுவனையடைவார் ✽

எ - து வெளி காமினி தந்தமனத்துக்கொத்ததேவமகளிர் (௨௮)

முற்கூறியவந்தணர்க்கேயன்றியாவர்க்கு மன்னபானியமுதலிதோன்ற ரடை யுமுறைமையுணர்த்துகின்றார்

பானமுமுதவினர் பரிவொடுபலவிக ✽
போனமுமுதவினர் புரிதருமுறையே ✽
தானினிதுறவவை தனையனுபவியா ✽
மேனயரிவரொன யமனுரைவிரைவார் ✽

எ - து வெளி மேனயர் மேலானவறிவினையுடையோர் [௨௯]

ஈண்டுக்கூறியதேயன்றி மற்றுமுள்ளதானங்கள் பண்ணினோ ரடையுமு றைமைக்குமோர்பொதுவிதியுணர்த்துகின்றார்

மற்றுளவினைநல மருவினரவரும் ✽
பற்றுவர்வழிதனின் முறைபெறுபலமுந் ✽
துற்றுவர்துயரிலர் துரிசறுநெறிசேர் ✽
நற்றவரிவரொன நடுவனையடைவார் ✽

எ - து வெளி துரிசு, குற்றம் துற்றுதல் அனுபவித்தல் (௩௰)

முற்கூறியதானங்களெல்லாவற்றினுள்ளு மன்னதானமேயதிகதானமெ னவதற்கோர்சிறப்புவிதியுணர்த்துகின்றார்

வேறு

அன்னதானமறைந்தவற்று ளதிகபலமேயருந்தினெழுவர் ✽
கின்னல்கெடுக்குமப்பொழுதே யின்பந்தனையுமிசைவிக்கு ✽
மன்னுமுடலுள்வலியதனுன் மாறில்பொருளோயதுகதலு ✽
லென்னிலுவமையிதற்கில்லை மண்ணின்கண்ணேவெவ்விடத்தும் ✽

எ - து முற்கூறியதானபேத மெல்லாவற்றினுள்ளு மன்னதானமேயதிகமான

பலன்களைக்கொடுக்கும், அந்தவன்னத்தைப்பொசித்தோனுக்கக்கணத்திலேதானே பசித்துயரத்தைப்போக்குமஃதன்றிச்சுகத்தையுஞ்விளைக்குஞ்சரீரத்துண்டாய்பெலமுநிலைபெறுமாதலாலந்தவன்னமேயொப்பிலாதபொருளுமாமாகையினாலேயிதற்குவமையைவிசாரிக்கிற்பூமியின்கண்மாத்திரமோவெவ்வுலகத்தினுமில்லை-று (௨௬

அன்னமேசரீரமெடுத்தற்குக்காரணமாமென்பதூஉ மன்னமேபடைத்தளித்தழிக்குமென்பதூஉமுணர்த்துகின்றார்

அன்னமதனிலாமுதிர மதனாற்றசையாமத னாலே ※
மன்னுமவினசுக்கிலமு மவினமதனாற்கருவாகு ※
மன்னமின்றேலுயிர்வாழு மாக்கைவிளையவழிந்தகலு ※
மன்னமதுவேயுடறன்னை யாக்குநிறுத்துமழித்திடுமே ※

எ து அன்னத்திலேநின்றுமிரத்தமுண்டா, மந்தவிரத்தத்தினாலேதசையுண்டா மந்தத்தசையினாலேயமுக்காகிய சுக்கிலநிலைபெறு, மந்தச்சுக்கிலத்தினாலேகெற்பந்தரித்துச்சரீரமுண்டா, முன்னர்க்கூறியவற்றிற்கெல்லாம்பரம்பரையினாலேகாரணமாயிருக்கு, மன்னமில்லையாயினுயிரிருந்துவாழுமுடம்புசடுதியிலேயழிந்துபோ, மாகையினாலேயந்தவன்னமே யுடலினையுண்டாக்கு, மஃதன்றித்தானேயுணவாய்நின்றதாயுடலினைக்காக்குந் தானில்லையாயினந்தவுடலினையழிக்கும். எ று (௨௭

பசிநோயுற்றோர்க்கந்நோயன்னத்தினாலன்றி ப்பிறிதொன்றினாலுந்தீராதென்பதூஉம் யாவர்க்குமன்னமே யாதாரமென்பதூஉமுணர்த்துகின்றார்

உற்றான் பசியைக்கனகத்தா லொளிசேர்மணியாலொண்டொடியான் ※
மற்றுமுளநல்வளனாலு மாற்றவலனோவலன்வயினாட் ※
கெற்பந்தனக்கும்பாலனுக்குங் கிளர்ந்ததருணன்றனக்குமுட ※
லொற்கமுடையவிருத்தனுக்கு முண்டோநிலையோதனமொழித்தே ※

எ - து - வெளி - ஒற்கம் - மெலிவு - (௨௮)

முற்கூறியமானிடரோயன்றித் தேவர் முதலியோர்விரும்புவது மன்னமேயென்பதூஉமதுவேபசிநோய்க்குமருந்தென்பதூஉமுணர்த்துகின்றார்

தேவர்முனிவர்தானவருந் திளைப்பருணவைத்திதிவிரும்பி *
யாவருணவைவிரும்பாதா ரிடர்சேருடலுண்மூந்நூற்றெட் *
டோவாநோயுண்டவற்றுள்ளும்பசிநோய் கொடியதுநினதனுங் *
காவாவென்றேபருளாளனருத்து மருந்தோதனமன்றே *

எ து தேவர்களு மிருடிகளு மசுரர்களுந் தங்கள் தங்கள் சரீரமழியாமல்நிற் றலைவேண்டியன்னமாதியவுணவினையருந்துவர்கள், ஆகையினாலேயுலகத்தின்கண் ணெவர்தாமன்னத்தைவிரும்பாமல்விட்டோ, ரஃதுமன்றித்துக்கத்துக்குக்கார ணமாய்ப்பொருந்தியவுடம்பின்கட்டொடர்ச்சிவிடாத மூந்நூற்றெட்டு வியாதியு ளதாம்அதனுள்ளும்பசிநோயேமிகவும்பொல்லாதது, அப்பசிநோயையாதொருவர் பொருந்தின்அருளினையுடையோரந்தோவந்தோவென்றிரங்கி யதற்குக்கொடுக்கு மருந்தாவதுமந்தவன்னமே. எ - று அன்றென்கிளவியாமென்றுசும் (௨௧)

மேலன்னதானஞ் செய்வோரேபிராணதானஞ்செய்வோராமென்றுணர்த்துகின்றார்

உற்றபசிநோய்க்கனமருந்தை யுதவுவாருமிலராகி *
லற்றதுயிருமவ்வுடலு க்கன்னமளிப்பாரவருண்டேற் *
பெற்றதுயிருமவ்வுடலம் பெறுமவ்வுயிருந்தருமாதி *
சொற்றையீவானுயிரீவான் றருமமுதலுந்துயக்கறவே *

எ து யாதாமொருவர்கொண்டபசிநோய்க்கன்னமாகிய மருந்தினைக்கொடுக் குந்தாதாக்களுமில்லையாயில் அந்தவுடலுக்குயிருமில்லையாய்விடும், அன்னதானஞ் செய்வோருளராயிற் பசிநோய்நீங்கியந்தவுடம்புஉயிரைப்பெற்று வாழு, மந்தவுயி ருமறமுதலியநான்கையுஞ் செய்யப்பெறுமாகையினாலே யன்னதானஞ்செய்வோ ன்பிராணதானஞ் செய்வோனும், அதுவேயன்றிவிபரீதமறவறம்பொருளின்பம்வீ டென்னுநான்கினையுந்தானஞ்செய்தோனுமாம். எ - து

சோறு - சொற்றையெனக்குறுகிற்று, ஈவானென்பதனைத்தருமமுதலுமென் பதனோடுங்கூட்டுக. (௩0)

அன்னதானஞ்செய்வோரிம்மைமறுமைப்பயன்களை யடைவரென்பதூஉ ந்தபோதனர்க்கன்னதானஞ்செய்வோர் தவப்பயன்பேர்பாதியாகிற்ப தென்பதூஉமுணர்த்துகின்றார்

பொன்னைமணியைப்புனையிழையை மற்றும்விரும்பும்பொருளினையு *
மன்னமளிப்பாரிங்கடைவ ரங்குந்தாம்வேண்டியவடைவ *
ரன்னமதனையருந்தவரை யருத்தினோர்களவர்பலத்திற் *
றன்னுவார்களொருபாதி யவர்தாமொருபாற்றுன்னுவரோ *

ஏ - து அன்னதானஞ்செய்வோரிவ்வுலகத்தின் கண்ணேதானே பொன்னையு ம் ரத்னங்களையுமணியாநிற்குமாபரணங்களையுடைய மாதரையுமற்றுந்தாம் வேண்டியபதார்த்தங்களையும்பெறுவர், அந்தத்தேவலோகத்தின்கண்ணுந் தாம்வேண்டிய போகங்களைப்பெறுவர் அரியதபோதனர்களை யன்னத்தைப்பொசிப்பித்தோர்கள் அவர்செய்ததபோபலத்திலொருபாதிபெறுவர்கள், அந்தத்தபோதனர்கள் மற்ற வொருபாதியேபெறுவர்கள். எ - று

(௬௧

சரீரத்துக்குமதனாற்செய்யுமறமுதலியவற்றிற்கு மன்னமேமேலானகார ணமென்றுணர்த்துகின்றார்

அன்னமாக்கைதனையாக்கு மதனாலறமுன்னுளவாகு *
மன்னமதனாலனைத்தினுக்கு மதிககாரணமதனாலே *
யன்னமதனுக்கொப்பான கரணமில்லையாயுங்கா *
லன்னையானகாரணமும் புதல்வர்க்குளதோவகலிடத்தே *

எ - து அன்னஞ்சரீரத்தையுண்டாக்கு மந்தச்சரீரத்தினாலே யறமுதலியநான் குமுண்டாமதனாலெவற்றிற்கு மந்தவன்னந்தானே மேலானகாரண மாகையினா லேவிசாரிக்குமிடத்தன்னத்துக்கு நிகரானகாரணமொன்றுமில்லை, யஃதெங்ஙன மென்னிற்பூமியின்கட்பிள்ளைகளுக்கு மாதாவுக்குநிகரானகாரணமுமுளதோவாத லாற்சரீரமுண்டாவதற்கன்னமுமாதாவுமே முதற்காரணம். எ - று

காரணங் - கரணமெனக்குறுகிற்று

(௬௨)

அன்னமேசிருட்டிமுதலியகாரியகருத்தாக்கண் மூவருமாமெனவுணர்த் துகின்றார்

அன்னமதனையுலகனைத்து மாக்குமயனென்றறைபுமறை *
மன்னுமுலகந்தனைக்காக்கு மாயனெனவுமதித்துரைக்குஞ் *
சொன்னவுலகமனைத்தினையுந் துடைக்குமரனுமெனச்சொல்லு *
மின்னமுறையாலெவற்றினுக்கு மிஃதேமுதலென்றெண்ணுகவே *

எ - து - வெளி - இதனுள் - முதல் - காரணம் (௩௩

உதகத்துக்கெய்தியதோர்சிறப்புவிதியு மன்றேதகமிரண்டையுந்தானஞ்
செய்தலேயதிகபலன்களைத்தருமென்பதுமுணர்த்துகின்றார்

உதகமதனையுபிரெல்லா முண்ணவிரும்புமதனாலே ※
யுதகந்தனக்குமொப்பானபொருள் வேறில்லையுலகத்து ※
முதகமன்னமெனுமிரண் டுமுயிரையோம்புமதனாலே ※
யுதகமன்னமெனுமிரண் டுமுதவிற்பரமபலமுளதே ※

எ - து — வெளி ஓம்புதல் - காத்தல் (௩௪)

இங்ஙனஞ்சிறப்பித் தவன்னதானமுத லாகியவிசிட்ட
தானங்களெட்டுமற்றுமுள்ளதானமுஞ்செய் தோர்,
யமலோகத்தினையடைந்துபின்னர்ச்சுவர்க்க த்தைய
டைவரென்பதுணர்த்துகின்றார்

அன்னமுதகமாவசுவமாடைகுடைகட்டிலையசின ※
மென்னுமிவைகளிருநான்குமீயிற்பிரேதபதிபிரங்குஞ் ※
சொன்னபடியேமற் றுமுளதானம்புரிவார்துயரகலத் ※
துன்னுவார்களியமபுரியதன்பின் னடைவர்துறக்கமுமே ※

எ - து அன்னமுந்-தண்ணீரும்-யானையுங்-குதிரையுந்துகிலுங், குடையும்-ப டுக்கைக்கட்டிலும்- புலித்தோன்முதலியவாதனமு- மென்னுமிந்தவெட்டுவிசிட்ட தானங்களேபுஞ்செய்வார் யமதன்மராசன், அனுக்கிரகத்தைப்பண்ணும்படிசெல்வர்கள், சண்டுரைத்தபடிமற்றுமுள்ளதானங்களைபுஞ்செய்வோர்தமது துக்கமெல்லாம் விட்டுநீங்கயமலோகத்தையடைவர்கள், அதற்குப்பின்பங்ஙனங்கூறியவிருவிததானஞ்செய்தோருமவனேவலினாற்சுவர்க்கலோகத்தையுமடைவர்கள் எ-று (௩௫)

மேனிறுத்தமுறையானேயறம்புரிந்தோர்க்கியமதன்ம
ராசன்செய்யுஞ்சிறப்பைமூன்றுசெய்யுளாற்குளகமா
கவுணர்த்துகின்றார்

வேறு

தருமநீதியர்கடருமராசபுரியடையவேதருமராசனும் ※
விரையவேயவரையெதிர்கொளாவரவுவினவியேகருணைவிழைவினு ※
லரியவாதனமுமருளியேயுதகவிதியுமாதிருடுவந்தமு ※
மொருமையோடவர்தமுளமுமோகையுறவுதவியேமதுரவுரையுமே ※

எ - து வெளி

அரியவாதனம் - சிங்காதனம் - உதகவிதி, பாத்தியாசமனார்க்கியம் - ஆதிநடு
வந்தம் - பாதமுகஞ்சிரசு

(௩௰௬)

வேதமாகிதனிலோதுநீதிபலமேவினீரொருமைமேதையா ✻
லாதலானுமையலாதுதேடினருமாருயிர்க் குறுதியாவரோ ✻
நாதகீதநவின்மாதர்சூழநடமாடவேறுசிலர்நாண் மலர்ப் ✻
போதுசேரிரதமேறியேகடிதுபோமினீரமரர்போகமே ✻

எ - து வெளி — மேதை-யறிவு - போகந்தருமிடத்தைப்போகமெனக்
கூறியதுபொருளாகுபெயராயிற்று

(௩௰௭)

எண்ணியாதொருபலத்தைநீரறமியற்றினீர்தவறுமின்றியே ✻
நண்ணியேயதனைவிண்ணின்மீதனுபவித்துநாளுமதுமாளமுன் ✻
பண்ணியேயுடையபாவலேசமதுபாறவேயெமதுபாலணைந் ✻
துண்மினீர்நரகயாதனைப்பலமுமென்றவர்க்கருளுரைப்பனே ✻

எ - து — வெளி — லேசம் - சிறிது

(௩௰௮)

மேலவர்கள்சுவர்க்கத்தையடையுமுறைமையுணர்த்துகின்றார்

ஏவல்பெற்றுநமனைத்தணந்திரதமேறியேயறிவுதேறியே ✻
தேவர்பெற்றநிவிசேசமுற்றதுலபோகமுற்றுமுறைசேரவே ✻
மேவிவிட்டமுறவேயிருப்பரிடர்மேவுதற்கரியர்மெய்ம்மையே ✻
பாவமுற்றினர்கள்பாதளக்குழியிலேதமேயினிமைபற்றுமே ✻

எ - து இங்ஙனம்யமதன்மராசனேவலைப் பெற்றுப்பின்னரவனை நீங்கிப்புட்பகவிமானத்தேறியறிவுதெளிந்துதேவர்கள்பெற்றுவாழுஞ்சுவர்க்கலோகத்தின்கணடைந்துநிகரில்லாதபோகங்களைமுழுதும்புண்ணியங்களையார்ச்சித்தமுறையேவந்துபொருந்தவவையிற்றினைப்பெற்றுத்தாந்தாமிச்சித்தபொருள்களும்வந்துகைகூடவிருந்துவாழ்வர்கள், அஃதேயன்றித்துன்பங்களொன்றும்பொருந்தார்கள். இதுசத்தியமேதேவலோகத்தின்கட்டுன்பமெய்தாதோவெனிற்பாவஞ்செய்தோர்களெய்துநரகக்குழியிற்றுன்பம்புண்ணியஞ்செய்தோர்களெய்துஞ்சுவர்க்கவின்பத்தின்கட்பொருந்துமோபொருந்தாது எ-று சுவர்க்கபூமியின்கட்டுன்பமெ

ய்திருலதுவுராகபூமியாய்விடுமென்பதுபற்றியேதமேயினிமைபற்றுமேயெனவி ருப்படுத்தினர் (ருக)

இங்ஙனம்புண்ணியஞ்செய்தோர்களடையும்பயனைக்கூறிமேற்பா வஞ்செய்தோர்களடையும்பயனுணர்த்துகின்றார்

வேறு

புண்ணியபலங்கடன்னைப்புகன்றனம்புவியிற்பாவம் *
பண்ணினர்பலமுஞ்சொல்வாம்பருப்பதமுனிவகேணீ *
திண்ணியர்பாவபேதந்தீர்ந்தவர்சிவனுமுண்டென் *
றெண்ணரியரச்சமெய்தக்கேட்டிடும்போதோவென்றும் *

எ - து வாராய்பொதியமாமலையின் கணிருக்கு முனிவனே யிங்ஙனம்புண்ணியஞ்செய்தோர்களெய்தும் பலன்களைச்சொன்றோம்மேலிந்தப்பூமியின்கட்பாவஞ்செய்தோர்களெய்தும்பயனையும் திடசித்தராய்ப்பாவபேதங்களையுநீங்கிச்சிவனையுமுண்டென்று கருதினோர்கேட்குங் காலமேயன்றி யெக்காலமுமச்சமெய்தும்வண்ணஞ்சொல்லாநின்றோமதனைநீகேட்பாயாக எ - று

ஓகாரம் பிரிநிலைக்கண்வந்தது (உ0)

பாவான்மாக்களெல்லாம் யமலோகத்தையடையுமுறைமைக்கோர்பொதுவிதியுணர்த்துகின்றார்

கருவினுளுயிருமற்றைக்காயபேதங்கடன்னின் *
மருவியவுயிருந்தொல்லை வல்வினைமாயவச்சம் *
பெருகிடமோகந்துன்பம் பிரிந்துடற்பிரியும்போதிற் *
றருமுடற்றாங்கித்தூதர் செலுத்திடயமனிசாரும் *

எ - து கெற்பத்தின்கண்ணிருக்குமுயிரும் அதல்லாமன்மிருகபேதங்கண்முதலியயோனிபேதங்களிலிருக்குமான்மாக்களு முன்னுள்ளபிராரத்தகன்மத்தொலைந்தவாறேபயமுமோகமுந்துயரமு மேலிடாநிற்ப வெடுத்தவுடலினின்றுநீங்கியவாநீங்குங்காலத்திலேயுண்டாம் யாதனுசரீரத்தையெடுத்துயமனூதர்கள்செலுத்த யமலோகத்தையடையும் எ - று - அச்சம் - யமதூதராலெய்துமடுக்கம் மோகம் - புத்திரமித்திராதிகளைவிட்டுப்போகின்றோமேயென்றெண்ணுமாசை - துன்பம் - மரணவேதனை (உக)

மகமேருவின்றென் பாலானவை வச்சுதமென்னும் யமலோகம் பூமிக்கு மேலித்தனையோசனைதூரத்திலிருக்குமென்னு மெல்லையு நல்வினை தீவினையோர்க்கஃது அணிமைதூரமுமாமாறு முணர்த்துகின்றார்

மண்டலின்மேருவென்னு மலைதனிற்றென்பால் வார்ந்து ※
வெண்டிகழெண்பத்தாறு யிரமெனும்யோசனைந்தந் ※
தண்டமுந்தரித்தகையன் றங்கியயமனிசாருந் ※
துண்டர்கட்டமக் குத்தூர மணித்தறந்துன்னினோர்க்கே ※

எ - து எண்விளங்காநின்றவெண்பத்தாறாயிரம் யோசனைகளாவபூமிக்குமேல் நீண்டமகமேருவென்னுமலைக்குத்தென்புறத்திசையின்கட்டண்டாயுதத்தைத்தரிக்குமியமதன்மராசனிருந்துவாழும் யமனியென்னும் படைவீடுபொருந்தும், அதுபாவிகளுக்குத்தூரமாயும் புண்ணியவான்களுக்குச் சமீபமாயுந்தோன்றும் - எ - று
இல்லுருபு - குவ்வுருபாய்மயங்கிற்று (சு௨)

இறந்தமுறையானே தீவினையோர் யமலோகத்தை யடையுமுறைமையு ணர்த்துவான்றொடங்குகின்றார்

சித்திரகுத்தன்சீவன் செய்திடின்றிறங்களெல்லாம் ※
பத்தியினொருமைசெய்து புகன்றிடச்சமனும்போக்க ※
வொத்துயிர்களைந்தூதர் வழியினுமொறுக்கவொல்லைச் ※
சித்தரங்கழுழ்ந்துதீயார் செல்வகையுஞ்செப்புவாமே ※

எ - து சித்திரகுத்தனென்னுங் கணக்கன் - ஆன்மாக்கள்செய்தகன்மபேதங்களெல்லாவற்றினையுந்தன்னுடைய வழிவழிக்கேட்டுச்சித்திரிபவர்செய்தகன்மமிதுவென்றுசொல்லுதலைக்கேட்டியமனுமேவுகையினாலே சென்றுபொருந்தியுயிரைவாங்காநின்ற யமதூதர்கள்பூமியின்கணின்று கொண்டுவரும்வழியினுமறுத்துயர்செய்யவுள்ளமுமெலிந்தழுந்துதீவினையோர்செல்லுமுறைமையை முதற்கட்சொல்லாநின்றோம் எ - று

கழுழ்ந்து - என்பதற்கு - கலங்கியெனவுமமையும் (சு௩)

மேற்றீவினையோரை யமலோகமடைவிப்பிக்கும் யமதூதர்களதியல்பினைசொலுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

மைத்திகழ்தருவளையினிகர் வடிவுடையவர்வலியார் ※
மெய்த்திகழ்தருமரணமுமுளர் விடவரவனவினையார் ※
குத்திரவினைபலவுடையவர் குணமிலவலவொடியார் ※
இத்தகைமையரியமன துரைவழிவிலகுதலிலரோ ※

எ - து யமதூதர்களானோர், கருமைவிளங்காநின்றவஞ்சனபருவதத்தையொத்தசரீரத்தையுமிகுந்தபெலங்களையுஞ் சரீரத்தில்விளங்காநின்ற வச்சிராங்கிசளையும்விடத்தையுமிழாநின்றபாம்பினையொத்ததீமைத்தொழிலினையும்வஞ்சனைத்தொழில்பலவற்றையும்பாவிகளிடத்து நன்மையில்லாதுதீமைகளையேவல்லகொடுமையினையுமுடையர்களாயிருப்பர்க,ளித்தன்மையையுடையதூதர்கள்யமனுடையசொல்லின்வழியைத்தப்பார்கள். எ - று

குத்திரவினை தாமாகமுன்னில்லாதவேறொன்றையேயுதவாக்கிக்கோறல் ௬௪

வீரமுமுளர்வெகுளியுமுளர் விரைதலுமுளருடலத் ※
தீரமுமுளர்சினமுதலிய செறுநெறியினர்திருமுன் ※
னீரமுமுளரெரியுமிழ்விழியிருமையுமுளரிகலிற் ※
கூரமுமுளர்கொடுபடையினுமுயிருணவலகொடியார் ※

எ - து வீரத்தினையுந்தீவினையோர்மேல்வைத்தகோபத்தினையும்யமதன்மராசனேவியகருமங்களில்மனம்மடியாதுசெல்லும்விரைவினையு, மழியாதவச்சிரயாக்கையினையுஞ்சினமுதலியவற்றைக்கெடுக்குநன்னெறியையுடைய தபோதனர்கள்சன்னிதியிலிரக்கத்தினையுநெருப்பினைச்சொரியாநிற்கு மிரண்டுவிழியின்றன்மையினையும்பகைத்தோரிடத்துக்கொடுமையேசெய்யுந்தொழிலினையுந்தாமெடுக்குமாயுதங்களைப்பற்றவு முயிரினை யுண்ணவல்ல தீமையினையு முடையர்களாயிருப்பர்கள். எ - று (௬௫)

காலமுமிதுவெனவறியுநர் கருமமுமிவையெனவுந் ※
சூலமுமொருகரமருவினர் சுழல்வலையமுமொருகைப் ※
பாலகனரனெனுமறிவறு பதர்மனிதர்கள்பயமுற் ※
றேலமுமிடவுடலினைவிட வுயிர்கவர்வினையுடையார் ※

எ - து முற்கூறியவந்தத்தூதர்கள் அவரவர்க்கமைத்தகாலமிதுவென்றும்

அவரவர்செய்தகன்மங்களிவையென்று மறியவல்லோருமாய்ஒருகையிலேசூலமு
மொருகையிலேசுழலாநின்றபாசக்கயிறும்பொருந்தினோருமாய்ச்சங்காரகருத்தா
வாகியஅரனேயுலகபரிபாலகனென்றுணருமறிவில்லாத பதரினையொத்தமானிட
ர்கள்பயப்பட்டலறவுயிரானது டலினைவிட்டுநீங்க வவ்வுயிரினைவாங்குங்கொலைத்
தொழிலையுடையோர்களுமாயிருப்பர்கள் - எ - று

பாலகன் - காப்போன் -

(௬௬)

நிட்டுரதரர்நினைவழியவு நிலையிலசிலருடலைக்
கட்டுவர்முதுகுறவழிமுழி கயிறுறவிருகரமும்
பிட்டுதிரமுமொழுகிடவிடர் பெருகிடவலறிடவும்
வெட்டுவருயர்வினில லமரவிசிறுவரறவெடியார்

எ - து - நிட்டூரத்தையுமிகவும்வெடித்தசொல்லினையுமுடையோரான யமதூத
ர்கள்தம்மைக்கண்டவுடன் அறிவழிந்துபோகாநிற்பவும் விடாமலொரு நிலையுமில்
லாதசிலபாவிகளுடலைத் திருப்பி மடக்கிவளைத்து முதுகின்கட்பொருந்த விரண்டு
கையையுமுரமிகுந்த கயிற்றாற்சேர்த்துக்கட்டியுடம்பெல்லாம்பிண்டிரத்தத்தாரை
யொழுகவுந் துக்கம்பெருகவும் வாய்கிடந்தலறவும்வெட்டி,யுயர்ந்த ஆகாசத்தின்
கட்சுழலவெடுத்துவீசாநிற்பர் - எ - று

(௬௭)

இங்ஙனங்கூறியயமதூதர்களாலே பாவஞ்செய்தோர்கள்யமலோகத்து
க்குப்போம்பொல்லாவழியையடைவரொன்றுணர்த்துகின்றார்

இத்தகைமையவியமன படரிடைவிடலிலவழியாற்
குத்திரர்குணமறுசிறுமையர் கொடியனவினையுடையார்
நைத்துளமுடனடலையுமுற நயவியதுணையறவே
சித்திரமிகுதுயருறுவழி செறிவர்கள்பிறிவறவே

எ - து - இந்தக்குணங்களோடுபொருந்தியவியமதூதர்கள துநீங்காதவலிமை
யினாலேவஞ்சகருமாய்நற்குணமில்லாத வற்பப்புத்தியையுடையோருமாய்க்கொ
டுமையையுடையனவானதீவினைகளையுடையபாவிகள்,உளமெலிந்துதுன்பமுமே
லிடநலம்பொருந்தியதுணையுமற்றுநானாவிதமாக மிகுந்ததுயரம்பொருந்தியவழிக்
கணீங்காதடைவர்கள் - எ - று

(௬௮)

அவ்வழியின்கணுளதாந் துயரத்தினைப்பதினாலுசெய்யுளா லுணர்த்துகின்றார்

வேறு

கண்டகமுறுநெறி செறிசிலகரிசர்கள்கதறு ✻
விண்டிடவினைவினர் விடுமுறையறிகிலர்விழுவார் ✻
திண்டிகழ்சிலைநுதி செறிநெறிகுறுகியசிறியார் ✻
பிண்டிடவிணையடி பிழையுறவிழுவர்கள்பிழையார் ✻

எ - து - தாந்தாஞ்செய்த பாவத்தினாலே பெருமுள்ளுக்களடர்ந்த வழியின்கண் யமபுரிக்குச்செல்லாநிற்குஞ்சிலபாவிகள்அந்தமுள்ளுக்கள்காலின்கட்டைப்பவ ஏறிச்செல்லுவர்,செல்லும்போதந்த முட்களைப்பிடுங்கிப்போட்டுச்செல்லுமுறைமையையறியாமல்வீழ்ந்துகிடப்பர்கள்,பிழைபொருந்திய சிலசிறியார்திண்ணிமையானகூரியகல்லுக்கள்பரந்தவழியின் கணணுகியந்தக்கல்லுக்களிரண்டுகாலினுஞ்சிதையத்தைக்கையினாலே நிலத்தில்வீழ்வர்கள் - எ - று (௬௧)

அளறுறுநெறியிடையடியுறவிடுமுறைபறியா ✻
ருளமறுகிடவுடனடலையுமுறவலியொழிவார் ✻
பளமுறுநெறிசிலர்படர்வர்களிடர்பலபடவே ✻
பிளவுறவுடன்முழுதரிகுசைநுதிவழிபிரியார் ✻

எ - து சிலபாவிகள், சேறுபரந்தவழியின்கண் அடிவைப்பவந்தச்சேறுகாலினின்றும்விடுமுறையைக்காணுதமனஞ்சுழலச்சரீரந்துக்கத்தையடையத்தங்கள்பெலமுங்கெடாநிற்பர்கள்,சிலர் ஆழ்ந்தபள்ளங்கள்பொருந்தியவழியின்கண் துக்கங்கள்பலவுமுண்டாகச்செல்லாநிற்பர்கள், சிலருடம்பெல்லாம்பிளக்கவரியாநிற்குங்கூரியவாயினையுடையநாணற்புல்லுகள்பொருந்தியவழியைநீங்காது செல்லுவர் எ - று நடலை - துன்பம் (௬௨)

விடமமுமுறுதடம்விரவியகலர்சிலர்மெலிவார் ✻
தடவரையிடைநடைதளர்வுறவுறவறுதமியார் ✻
பொடிபறுதழல்வழிபுகுதுவர்நிலையிலர்புலியார் ✻
படுகுழிவிடமமுமடைவர்கள்சிலரிடர்படவே ✻

எ - து சிலபாவிகள், செவ்வைவழியின்றிவஞ்சனைமிகுந்தவழியின்கட்சென்றதனுற்றுக்கத்தையுறுவர்கள், சிலர்-பெரியமலைவழியின்கட்சென்றேறற்றமிறக்கங்களிலேநடைகூடாமற்கால்தளரவங்ஙனந்தமக்கோருறவுமில்லாததனியராய் நிற்பர்கள், சிலர்தமக்கொருநிலையுமில்லாராய்ப்பொடிமூடாதெரியுநெருப்பினோடு

பொருந்தியவழியின்கட்புகுதாநிற்பர்கள், சிலர்படுகுழிமுதலியவஞ்சனைகள்பொருந்தியவழியின்கட்சென்றுதுக்கத்தையுருநிற்பர்கள். எ - று. விஷமம்விடமமாயிற்று - தமி - தனி - புல்லியாரைப்புலியார் - என்றுர். (ருக)

சரநிகர்சகலமுழுறுநெறிசெறிசிலதமியார் ❊
வெருவுவரழனிகர்வியன்மணலிடைவழிவிழுவார் ❊
நிரைமுளைநிறுவியநெறியிடையடிதளர்நிலையார் ❊
பருவரலுறுவர்கண்முளைமுளுமுறுநெறிபடர்வார் ❊

எ - து சிலரம்புபோலறுக்குமோடுஞ்சல்லியும்பரந்தவழியின்கட்சென்றுதமக்கோர்துணையுமற்றுஅந்தவழிதொலையாமையான்நடுங்காநிற்பர்கள், சிலர்நெருப்பினையொத்தசுடுமணல்பரந்தவழியின்கட்சென்றச்சூடுபொருமல்வீழாநிற்பர்கள், சிலரொழுங்குபடவசிகளைநிறுத்தியவழியின்கட்சென்றந்தவசிகள்காலின்கட்டைப்பவதனுற்செல்லமாட்டாதடிதளருநிலையினையுடையோர்சிலர்மூங்கின்முட்கள்பரந்தவழியின்கட்சென்றவற்றினுற்றுன்பமுழுநிற்பர்கள் எ - று
நெறி — வழி-வசி-வாள் (ருஉ)

கூரிருணெறிசெறிகொடுமையர்சிலர்நிலைகுலைவார் ❊
காரயவசிதொடர்கனலனல்வழியிடைகலுழ்வா ❊
ராரழல்வனநெறியடையுநர்சிலர்நினைவழிவார் ❊
நிரவுமறிகிலரழனிகர்சிலைசெறிசிறியார் ❊

எ - து சிலர்மிகுந்தவிருள்பரந்தவழியின்கட்சென்று வெளிகாணுமனிலையழிவார், சிலர்தீயொழுகக்காய்ச்சியகரியவிருப்புச்சங்கிலிபின்னிக்கிடக்கும்வழியின்கட்சென்று அடியிடமாட்டாமலழாநிற்பர்கள்-சிலர்-தீக்காட்டினையுடையவழியின்கட்சென்றந்தக்காட்டுத்தீயிற்பட்டறிவழிடாநிற்பர்கள் - சிலர், நெருப்புப்போலச்சுடாநிற்குங்கல்லுகள்பொருந்தியவழியின்கட்சென்றதனைநீங்கும்வகையுந்தெரியாமன்மயங்காநிற்பர்கள் எ - று (ருந)

உடைவர்கள்பனிநனி யுறுநெறியதுதனையுறுவார் ❊
மிடறளவுறுமணல் விரவியகலர்சிலர்மெலிவார் ❊
சுடரனறுளிமழை சொரிவழிதனினிலைதொலைவார் ❊
வடிவுறமயலுறவறவிரினழல் வசமறுவார் ❊

எ - து - சிலர், பனிமிகவும்பொருந்திய வழியின்கணடைந்த ப்பனியினலேயுள்ளமுடைவர்கள், சிலர், கழுத்தளவமிழ்த்து மணல்பரந்தவழியின்கட் சென்றுவருந்தாநிற்பர்கள், சிலர்நெருப்புப்போன்ற தூளியினையுடைய மழைபெய்யும்வழியிற்சென்றதனால் நிலையழிவர்கள், சிலர், வறள்நெருப்புப் பொருந்திய வழியின்கட் சென்றுதம்மேனிகெடக்கலக்கமுண்டாக த்தம துயாக்கையின் வலிகெடுவர் - எ - று (௫௪)

சிங்கமுறுநெறி செறிவினரறிவிலர்செயலுந் ※
தங்கியபுலிவனமடையுநர் நிலையிலர்தளர்வார் ※
வெங்கொலைமிருகமு முடலடவொருவழிவிழுவார் ※
விங்கிடமசகமு முடலினைநினைவினைவிடுவார் ※

எ - து - சிலர், சிங்கங்கள்பொருந்தியவழியின்கட்சென்றவைகள் பாய்தலினலேசெயலுமறிவுமில்லாமன்மயங்குவர்கள், சிலர், புலிகள்பொருந்தியகாட்டின்வழிகளிற்சென்றதனலேதஞ்செயல்கெட்டு வருந்தாநிற்பர்கள், சிலர், மற்றுமுள்ள வெவ்வியகொலையினைச்செய்யு மிருகங்களுந் தம்முடம்பினை யழியாநிற்ப ப்பிறிதுமொருவழியின்கட்சென்று கலங்கிவிழுவர்கள், சிலர், பிறிதொருவழி யின்கட்சென்றுபெருங்கொசுக்களுடம்பினைத்துளைக்க வருந்தி த்தம்மறிவினை யொழிவர்கள் - எ - று. (௫௫)

உளைவர்களுடல்குடை கிருமிகளுறுநெறியுறுவார் ※
செளுகையுமுடலட வொருவழியறிவிலர்செறிவார் ※
துளையுறவுடலடு சிறுபறவைகளொடுசுழல்வார் ※
விளைவறவிடவர வடர்வழியயருறவிழுவார் ※

எ - து - சிலர், உடம்பினைக்குடையாநின்றபுழுக்கள்பொருந்திய வழியின்கட் சென்றுவருந்துவர், சிலர், பிறிதொரு வழியிற்சென்றட்டைகள் வந்துடலின்கட்கடிக்கவதனலேயறிவும்போய்மயங்குவர்கள், சிலர், பிறிதொரு வழியிற் சென்றுடம்பினைத்துளைக்குஞ்சிறியபறவைகள்பலவற்றினலுங்கொத்துணடுங் கடியுண்டுஞ்சுழலாநிற்பர்கள்; சிலர் பிறிதொருவழியின்கட்சென்றுநல்வினைவிளைவில்லாமையாலேநஞ்சினையுமிழாநிற்கும்பெரும்பாம்புகள்வந்து தீண்டவதனலேசோர்வு பொருந்திவீழாநிற்பர்கள் - எ - று - (௫௬)

கடகரிதொடர்வழியழுதழுதயர்வொடுகலுழ்வார் ❊
உடலடவுளியழுமொருவழிநினைவினையொழிவார் ❊
இடபமுமடர்வழியிடர்பலபடுவர்களெளியார் ❊
திடமுடைமயிடமுமடர்வழியழிவர்கள்செயலோ ❊

எ - று சிலர் - மதம்பட்டயானைகள்பாயும்வழியின்கட்சென்றந்தயானைகள்பாய் தலினாலேயழுதழுது சோர்ச்சியிற்கலங்காநிற்பார்கள், சிலர் - பிறிதொருவழியின்கட்சென்றுகரடிகள்வந்துடம்பினைக்கவ்வாநிற்பவதனாலறிவினை நீங்குவர்கள், சிலரிடபங்களெருங்கியவழியின்கட்சென்றுஅவற்றினாற்றுன்பங்கள்பலவும்பட்டவற்றினைத்தடுக்கமாட்டாமலேளியராய்நிற்பர்கள், சிலர்-வலியினையுடையகாட்டெருமைகள்பாயும்வழியின்கட்சென்றுசெயலோவழிவதுமனமுமழிவர்கள் - எ - று ஓகாரம் - ஒழியிசைக்கண்வந்தது (ருஎ)

ஒட்டகமூறுநெறியுடல்வினைகெடநினைவொழிவார் ❊
நிட்டுரமகளிருமடர்வழியழிவதுநினைவோ ❊
வெட்டியநிசிசரர்மிடைவழியுடல்வினைவிடுவார் ❊
தொட்டிடவிறலுறுபிணிபலவயர்வொடுசுழல்வார் ❊

எ - று சிலர்-ஒட்டகங்கள்-மிகுந்தவழியின்கட்சென்றுடம்பின்செயல்கெடவறிவழிவர்கள், சிலர்கொடுமையைச்செய்யுமிடாகினிகளாகியகுரூரமகளிர்கணெருங்கியவழியின்கட்சென்றவர்கள்செய்யுந்துயராலறிவோவழிவதுசெயலுமழிவர்கள், சிலர்வெட் டிமைபுடையவிராக் கதர்நெருங் கியவழியின் கட்சென்றுடம்பின்செயலழிவர்கள், சிலர்-பிறிதொருவழியின்கண்வலிபொருந்தியவியாதிகள்பலவும்வந்துபிடிக்கச்சோர்ச்சியினாலேயுழலாநிற்பர்கள் எ - று வெட்டிமை - கொடுமை (ருஅ)

ஊறுறவுடலிடையுணர்விலர்சரமழையுறவே ❊
கூறுறவுடல்பலகுலிசமதுறுமழைகொளவே ❊
நீறுறவுடல்கெடவொருவழியழிவதுநினைவோ ❊
தேறியவரன்மழைபலபலமுறையொடுதெறவே ❊

எ - று சிலர்-பிறிதொருவழியின்கட்சென்றுடலின்கணூறுபொருந்தவம்புமாரிசொரியாநிற்கவறிவுகெடுவர்கள், சிலர்-பிறிதொருவழியின்கட்சென்றுடம்புபலவாகத்துணிக்கும்வச்சிராயுதங்களாகியபெருமழைசொரியவதனாலறிவழிவ

ர்கள், சிலர்பிறிதொருவழியின்கட்சேன்றுவிளங்கியநெருப்புமழைகள்பலபல வி தமாகப்பெய்துசுடுகையினுலேயுடம்புவெந்துநீருகவறிவுமாத்திரமோவழிவளூசெ யலுமழிவர்கள் எ - று (௫௯)

கடுகியவனிலனுமுறுநெறிதுகளொடுகெலுழ்வார் ※
பொடிமழைபொழிவழிநிலையறவலலொடுபுகுவார் ※
உடல்பிளவொருவழிமழைபொழிசிலையுறவுளவா ※
ரிடிவிழவிழமினுமிடருறநிலவுதலிலரோ ※

எ - து சிலர்-தூட்களோடேபொருந்திவிரைந்துவாராநிற்கும்பெருங்காற்ற டிக்கும்வழியின்கட்சென்றுகலங்குவர்கள், சிலர்தூளிமழைசொரியாநிற்கும்வழியி ன்கட்சென்றுநிலையற்றுத்துயரொடுசெல்லாநிற்பர்கள், சிலர்பிறிதொருவழியின் கட்சென்றுடல்பிண்டுபோம்படிகல்மழைபொழியவதனுல் வருந்தாநிற்பர்கள், சிலர்பிறிதொருவழியின்கட்சென்றிடியுமின்னும்விழவவற்றினுலேதுயருற்று அத்தா மறிவினேடுவிளங்குதல்போய்நிலையழிவர் எ - று (௬0)

ஆயுதவருடமுமொருவழியுடலினையரியக் ※
காய்கனலினிகர் கடுவறல்சுடவுடல்கலுழ்வார் ※
ஓய்வர்கள்குளிர்பனியனிலனுமுறுவழியுளவார் ※
ஏய்வர்களினையனவிடர்பலவழியுறுமெளியார் ※

எ . து . சிலர், பிறிதொருவழியின்கட்சென்று யுதமாரியாகவிழுந்துடம்பினைத் துண்டிக்கவுமெரியாநிற்கும் நெருப்புக்கொத்த நச்சுநீர்மழைவிழுந்துடம்பினைச்சு டவுமாற்றுமற்கலங்கிச்சோர்ந்துவிழுவர்கள், சிலர், குளிர்ந்தபனியும்பனிக்காற்று ம்பொருந்தியவழியின்கட் சென்றவையிற்றினுல், மிகவும்வருந்துவர்கள், இங்ஙன ங்கூறியவழியின்கட்செல்லுநல்வினைவலியில்லாதோ ரித்தன்மையையுடையனவா ன துயரங்கள்பலவற்றையுமனுபவிப்பர்கள் . எ . று . (௬௧)

கடுகியபசியுறவொருவழியறிவிலர்கலுழ்வார் ※
விடுமுறையறிகிலர் விரவியகொடுமையவினையார் ※
இடர்படுவதுமுனைவினையெனவுளமநிலெனுவார் ※
திடமுடையமபடர்வலிசெயவழியொடுசெறிவார் ※

எ . து . சிலர், பிறிதொருவழியின்கட்சென்றுமிகுந்தபசிமேலிடவதனுலறிவின்

றியந்தப்பசிதீருமுறைமையை யறியாராய்க்கலங்குவர்கள், இங்ஙனம் பொருந்தி யதிமையையுடையபாவிகள், யாமிந்தத்துயரப்படுவதுமுன்செய்த பாவமென்றுத ம்முள்ளத்தின்கண் விசாரியாநிற்பர்கள், அந்தப்பாவிகளெல்லா மிகுந்தபெலத்தி னையுடையயமதூதர்கள்வன்மைசெய்ய த்துயருற்று யமலோகத்துக்கு ப்போம்வ ழியின்கட்செல்லுவர்கள். எ-று

(௬உ)

அந்தத்தீவினையோரை யமதூதர்கள் கொண்டுபோம் முறைமையைப் பதினாறுசெய்யுளா லுணர்த்துகின்றார்

வேறு

சிலரைத்தொடரிற் செறிவித்தடியிற் ※
றலையைத்தரையிற் றகவைத்துயர்வா ※
னெலையிற்சரணத் தினைவைத்திகவா ※
வலலுற்றலறக் கொடுபோயடைவார் ※

எ-து. யமதூதர்கள், சிலதீவினையோரை க்காலின்கணிருப்புச் சங்கிலிபூட்டி த்தலையைநிலத்தின்கண்ணேகவைத்து ச்சங்கிலியிரேனுடு பொருந்தியகாலிரண்டினை யுமுயர்ந்த வாகாசத்தின் கண்ணேக்கி யுள்ளதுநிலிரக்கமு மொழித்தவர்கள்துயரத் தையுற்றுக் கிடந்தலறும்படி யிழுத்துக்கொண்டு சென்றியமலோகத்தின்கணடை வர். எ. று. யமதூதரொன்றுமெழுவாய்வருவிக்க

(௬௩)

உரையிற்கொடியா ருரமிக்குடையார் ※
நிரையத்துறுவார் தமைநிட்டுரரோ ※
தரையிற்கவிழத் தடமார்முகமு ※
மரையக்கொடுபோ யடைவித்திடுவார் ※

எ. து. கொடியசொல்லினையுமிகுந்த வலியினையுந்தறுகண்மையையுமுடையர் களாயிருக்கிறயமதூதர்கள் நரகத்தின்கட்செல்லுமவரான சிலதீவினையோரைநில த்தின்கட்பெரியமார்புமுகமுங்கவிழத்தள்ளியவ்வுறுப்புகள் நிலத்திரேனுடுதேய்ப்பு ண்ணேவிழுத்துக்கொண்டுசென்றியமலோகத்தின்கணடைவர். எ. று. (௬௪)

தேசற்றவரோ நிலையற்றவரைத் ※
தேசற்றவரைச்சிலரைச்செறியப் ※
பாசத்துடலம் பறியப்பதறிக் ※
கோசத்தமுறக் கொடுபோயடைவார் ※

எ. து. சற்றுமான்மாக்களிடத்திரக்கமில்லாத வியமதூதர்கள் அறநெறியினில் லாதோருமாய் மறுமைப்புகழில்லாதோருமான சிலதீவினையோரை ப்பாசக்கயிற் றினாலிறுக்கிக்கட்டியுடம்புவருந்துகையினாலேபதறித்துடித்துக்கோவென்றலறுஞ் சத்தந்திசைகளெங்குமெழக்கொண்டுசென்றியமலோகத்தின் கணடைவர். எ. று

செறிதல் - கட்டழுந்துதல். பரிதல் - வருந்துதல். (௯௫)

சித்தத்துருகாதவரை த்திறலார் ✻
மத்தக்களிறே யனையார்வலியா ✻
ரத்தத்தமரங்குச முள்ளதனாற் ✻
கொத்திக்குளமுங் கொடுபோயடைவார் ✻

எ. து. தன்மத்தின்கண் மனமுருகாத சிலதீவினையோரை, வெற்றிநிறைந்தமத யானைக்கொப்பாராயதிபெலத்தினையுமுடைய யமதூதர்களானோர் தமதுகையி லிருக்குங்கூரியினுனியினாலேநெற்றியையுங்கொத்தியிழுத்துக்கொண்டுசென்றிய மலோகத்தின்கணடைவர். எ - று.

குளம் - நெற்றி. குளமுமென்னுமும்மைமற்றுளவுறுப்புகளுமெனக் கொள்க (௯௬)

கிளைகண்ணிலரைக் களவுள்ளவரைத் ✻
தளரும்படிவெஞ் சமனார்தமரோ ✻
யுளைவுள்ளுறவு முடல்பிள்ளுறவு ✻
முளைமுள்வனமே கொடுபோய்முனிவார் ✻

எ. து. கொடியயமதூதரானோர்ஆன்மாக்களிடத்திரக்கமில்லாதோரையுங்கள் வரையும்வருத்தும்வண்ணம் அவர்களுள்ளத்திற்றுயரமுண்டாகவு முடம்புபிண்டு பிண்டுபோகவு மூங்கின்முட்காட்டினுள்ளே யீர்த்துக்கொண்டுசென்றுகோவிப்பர் கள். எ - று. (௯௭)

பழுதேபகர்வார் பயில்பாவியரைக் ✻
குழையாதவரைக் குளிர்வாய்மொழியே ✻
விழையாதவரைக்கடிதேவியன ✻
ரழல்சேர்வழியேகொடுபோயடைவார் ✻

எ - து இயமதூதரானோர், கோட்சொல்லுதன்முதலியபாவஞ்செய்தோரையு ந்தன்மத்தின்கண்மனநெகிழ்ச்சியில்லாதோரையும்பெரியோர்களதுகுளிர்ந்ததிரு

வாக்கைவிரும்பாதோரையுஞ்சடுதியிலேகிறைந்துமிகவுந்தியநந்தவழியின்கட்கொண்டுசென்றியமலோகத்திணையடைவர் எ - று (சுஅ)

அத்தத்திணையுமட ரக்கடிதே ※
பொத்திப்புறமேகவிறும்புகவே ※
துத்தத்தலறத் துவளத்துவளக் ※
குத்திச்சிலரைக்கொடுபோயடைவார் ※

எ - து இயமதூதரானோர், சிலபாவிகளையிரண்டுகையிணையுமுதுகுப்புறத்துவளைத்துத்தோளொடுதோள்சந்திக்கக்கூட்டிப்பாசக்கயிற்றினாலேயழுந்தக்கட்டியவர்களலறவயிற்றின்கண் குலுங்கக்குலுங்கக்குத்திக்கொண்டுசென்றியமலோகத்திணையடைவர் எ - று துத்தம்வயிறு (சுகூ)

சிலரைக்காமுஞ்செறிவித்ததளைத் ※
தளையத்தொடருந்தழலைப்புரையு ※
முளையைச்செறிவித்தகிராமுனியா ※
வளையக்கடிதேசமனூருறுவார் ※

எ - து யமதூதர்கள், சிலதீவினையோரையிரண்டுகையையுங்கூட்டியந்தக்கையினிற்சங்கிலியும்பூணவிட்டுள்ளங்கைகளினுருவநெருப்புப்போன்றமுளையையுங்கடாவியதட்டியவர்கள்வருந்தும்வண்ணங்கோபித்துச்சடுதியிலேயமலோகத்திற்கொண்டுசெல்லுவர் எ - று (எ௰)

கண்டத்துறவேகவிறுஞ்சிலரைக் ※
கொண்டெய்த்தலறப்புகுவார்கொடியார் ※
துண்டப்பிறைபோற்சுழல்வாள்பிடரிற் ※
புண்டைத்தலறச்சமனூர்புகுவார் ※

எ - து கொடியயமதூதர்கள், சிலபாவிகளைப்பாசக்கயிறுகழுத்திலிறுகும்வண்ணம்பூட்டியவர்கள்வருந்தியலறும்வண்ணமிழுத்துக்கொண்டுபோவர்கள், சிலரையிளம்பிறைபோல்வளைந்தகொடுவாளாற்பிடரியிலேபுண்படத்தைத்தலறும்வண்ணம்வெட்டியமபுரியிற், கொண்டுசெல்லுவர்கள் எ - று
கண்டிச்சுழல்-வளைவின்கண்வந்தது (எக)

நாவிற்றுளையாநடுவே-முளையு ※
மேவக்கயிறும்விரவப்பணியே ※
சோவித்தலறச்சிலநொய்பவரைப் ※
பாவப்பலமுற்றெலையேபடர்வார் ※

எ - து யமதூதராமேனோர்-சிலபாவிகளைநாவினைத்துளைத்தநடுவேமுளையுங்கடா வியதனோடுபொருந்தக் கயிறுங்கோத்து வருந்தச்செய்தவர்களை லறத்திவினைப்பய ன்பலிக்குமெல்லையான யமலோகத்திற் கொண்டுசெல்லுவர் . எ . று .
பண்ணி-யென்னுஞ்சொல் . பணியெனவிகாரமாயிற்று (௭௨)

நெய்யத்திடையேக யிறுங்கொளுவா ※
நைபத்துயரம்பலவு நவிலா ※
மைபற்படவே மனமுஞ்சிலரைத் ※
தெய்வச்சமனூர்புரியைச்செறிவார் ※

எ . து . இயமதூதர்கள் . சிலபாவிகளைக்கோசத்தின்கட் கயிறுகொளுவியுடல் வருந்தவுமனமயங்கவுந்துயரங்கள்பலவுஞ்செய்து தங்கள்தேவனான யமதன்மரா சனதுபுரியின்கணடைவர் . எ . று . (௭௩)

துண்டப்புடையிற் றுளைசெய்ததனிற் ※
கண்டிக்கயிறுங்கடிதேயடைவார் ※
புண்டைத்துறவேகவுளும்புகுவார் ※
கொண்டக்கணமேசிலரைக்கொடியார் ※

எ - து கொடுமையையுடையயமதூதர் - சிலபாவிகளை மூக்கின்புறத்திற்றுளை த்ததிலேபாசக்கயிற்றையுங் கோத்துக்கட்டிச் சடுதியிலேகொண்டுசெல்லுவர்கள், சிலபாவிகளைக்கதுப்புக்களிலேபுண்பொருந்தும்வண்ணந்துளைத்துக்கயிறுபூட்டியி ழுத்துக்கொண்டந்தக்கணத்திலே யமலோகத்திற்புகுவர் எ -று
கட்டி - கண்டியெனவிகாரமாயிற்று (௭௪)

முத்தத்துறவேதுளையுமுளையுங் ※
கொத்திச்சிலரைக்கொடுபோயடைவார் ※
சித்தத்தயர்வுஞ்செறியச்சிலரைத் ※
துத்தத்தொடரிற்சமனூர்தொடர்வார் ※

எ - து இயமதூதர் - சிலபாவிகளை யுதடுகளிற்றுளையுறும்வண்ணமுளையையும் அடித்திழுத்துக்கொண்டுசெல்லுவர்கள் - சிலபாவிகளைமனத்தின்கட் சோர்வுபொருந்தும்படிவயிற்றிற்கட்டினகயிற்றிலேபிடியிழுத்துக்கொண்டியமலோகத்திற்செல்லுவர்கள் எ - று

(எரு)

கன்னத்துளையிற்கயிறுஞ்செறியா
வென்னித்துயர்தானெனநொந்தழவே ※
துன்னப்படுநற்றுணையுமறவே ※
தென்னற்றிசையிற்புரியைச்செறிவார் ※
※

எ - து சிலபாவிகளை யிரண்டுசெவித்துவாரங்களிலு மூருவக்கயிற்றைக்கோத் திந்தத்துயர மெந்தப்பாவத்தால்வந்ததோவென்று வருந்தியழவு மதனை நீக்குதற் கோர்நற்றுணையுமற்றொழியவுங்கொண்டுசென்றுதென்றிசைக்கணுண்டாயநல்லியமலோகத்திலடைவர் எ - று

(எசு)

மூகவாயுறவேகயிறும்முனியத்
தகவோவெனநொந்தழுவார்தமையே ※
யகமும்புறமுமழியக்கொடுபோ ※
யிகமுமறிவானுழையேயிசைவார் ※
※

எ - து யமதூதர்கள் கீழ்வாய்ப்புறத்துக்கயிறுபொருந்தக்கோத்து வருத்தம் பொறுகிறதுமுறைமையோவென்றுவருந்தியழுஞ்சிலபாவிகளையுள்ளமு முடலு மழியக்கொண்டுசென்றிம்மைமறுமையிரண்டினுமான்மாக்கள்செய்தபுண்ணியபாவங்களையீதெனப்பிரித்தறியுந் தன்மையையுடையனான யமதன்மராசனருகே யடைவர் எ - று

(எஎ)

அங்கத்தெவைவுமழியச்சிலரைப்
பங்கித்தடைவார்பயிலத்துயரும் ※
பொங்கப்புலைநீர்புகர்வாண்முதல்கொண் ※
டொங்கித்தடிவார்சமனூருறுவார் ※
※

எ - து இயமதூதர்கள், சிலபாவிகளைச்சரீரத்திலுள்ளவுறுப்பெல்லாஞ்சி தையும்படியறுத்தறுத்துக்கொண்டுசெல்லுவர்கள், சிலபாவிகளைத்துன்பமானது மேன்மேலுமுண்டாகவிரத்தமானதுபெருகப்புகரிணையுடையவாள்

முதலியவாயுதங்களைக்கொண்டுலுங்கிவெட்டுவர்களா, இங்ஙனம்வழியின்கட்பெருந்துயரங்கள்செய்தியமபுரியிற்கொண்டடைவர்கள் எ - று

புலைநீர் - இரத்தம் - புகர் - நோயல்வாய்ப் பாலெழுந்ததோர்நிறம் - ஓங்கி - ஒங்கியெனக்குறுகிற்று. (௭௮)

இங்ஙனம்யமதூதர்கள்கொண்டுசெல்லப்பாவஞ்செய்
தோர்யமபுரத்தையடைவரென்றுணர்த்துகின்றார்.

தக்கார்வரவிற்றவறேபுரிவார் ✲
நெக்கார்வமிலார்நிலையேதுமிலா ✲
ருக்கேவழியிற்றுயர்வந்துறவே ✲
புக்கார்விரையத்தருமன்புரியே ✲

எ - து தம்பாற்பெரியோர்கள்வருங்காலத்தெதிர்கொளல், பணிதல், முதலாயினசெய்யாதிகழ்ச்சிசெய்வோர்களும்யாவரிடத்துமனநெகிழ்ந்தன்புசெய்யாதோர்களுமாயதனாற்றமக்கொருநிலையில்லாதோர்களுமானபாவிகள்செல்லும்வழிக்கண்யமதூதராலிங்ஙனந்துயரங்கண்மேன்மேலும்வந்துபொருந்துகையினாலேயுள்ளமழிந்துசடுதியிலேயமலோகத்திற்புகுவார்கள் எ - று (௭௯)

இங்ஙனந்தீவினையோரைக்கொண்டுசென்றயமதூதர்கள்
யமதன்மராசன்முன்சென்றறிவிக்குமுறைமையும் பின்
மேலிவர்களைச்செய்யுந்திறம்யாதென்றுவினவுமுறை
மையுமிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு.

அழியாதவாண்மையினரகலாதவாய்மையினரறிபாதகாறியரிவார் ✲
வழியாதநாகுசலாமலிமாசுமேவினைமறவாதமாணறிவிலார் ✲
ஒழியாதவூசலெனவுழல்வார்கள்பூதலமுமொழியாதவாவியுடையார் ✲
பழியாதபான்மையனைவழுவாததூதுவர்கள்பணிபாதமீதுபணியா ✲

எ - து ஒருகாலுங்கெடாதவாண்மையையும்யமதன்மராசன்சொல்லியவாக்கைத்தப்பாமற்செய்யுந்தகைமைப்பாட்டினையுமறிபாதகமுதலியபாவங்களைச்செய்வோரையுள்ளபடியறியுந்தன்மையையுமுடைத்தற்கதற்குச்சொன்னநெறியிலேயவர்கள்யாதனைபண்ணுந்தெள்ளிமையினையும்பாவங்கள்செய்தோரைமறவா

யேபொங்காநிற்யாளுயிருக்கிறயமதன்மராசனைக்கண்டவளவிலே நஞ்சினையுமிழா நிற்கும் பெரும்பாம்பினைக் கண்டவர்போலக்கலங்காநிற்பர் எ - று - கலுழ்தல் கலக்கம் (அஉ)

யமதன்மராசனது தன்மையையும் அவனைக்கண்டோர்மனம் வேறுபடுந் தன்மையையு மையனையமேனியனென்னுஞ் செய்யுள். முதல். ஏவலரு ளொங்கள்பெருமானென்னுஞ்செய்யுளீறாக வொருதொடராகவுணர்த்துகின்றார்

மையனையமேனியனைவாய்ந்தவறுமூன்று *
கையுடையனைக்கடியனைக்கடியருள்ள *
நையவுமிழ்வெய்யவழனாட்டமுடையானைத் *
துய்யபிறைபோலெயிறுறச்சுளிமுகத்தே *

எ - து அஞ்சனபருப்பதம்போன்றதிருமேனியையும் வலிபொருந்தியபதினெட்டுக்கைகளையு மதிகோரத்தையுந்தூய்மைபொருந்திய விளம்பிறையைப்போன்ற வெயிறுகள்தோன்றச்சீறுகின்றமுகத்தின்கட்டீவினையோருள்ளமழியச்சொரியாநின்றவெவ்வியவக்கினிநேத்திரங்களையுமுடையனாய். எ - று (அங)

எற்றுபுருவத்தினையிடுடையமேனி *
பற்றிமுகமீதுபெறுபங்கியுடையானை *
முற்றுமயிர்பெற்றமுகமுற்றதரவோட்ட *
நிற்றலறவுற்றபுரணத்தினைநேரோ *

எ - து நெற்றிமீதேறுகின்றபுருவங்களையும், வலியையுடையவுடம்பின்கட் டோன்றியமேனோக்கியமுகங்களாய்நிற்குமுரோமபங்கிகளையு, நிறைந்த மீசை பொருந்தியமுகத்தோடுகூடிக்கீழுதடுமேலுதடுநேரோநிற்குந்தன்மையின்றித்துடிக் குந்தன்மையையுமுற்றிருப்போனாய். எ - று (அச)

மேருநிகருன்னதனைவீறுடையதண்டந் *
தாரகனைமற்றையதழற்படையனைத்துங் *
காரனையமேதிமிசைகாணவருவானை *
யேருடையசெய்யவுடையாடையனையென்றும் *

எ - து மகமேருவோடொத்தவுயரத்தினையும்,வெற்றியையுடையதண்டாயு தமுமற்றுமுள்ளநெருப்புப்போன்றவாயுதங்கள்முழுவதுந்தரித்திருக்குந்தன்மையி

னையும், யாவருங்காணக்காளமேகம்போன்றகடாவின்மேலேவருஞ்சிறப்பினையும், மெந்நாளுமழகுபொருந்தியசிவந்தபரிவட்டத்தையேதரித்திருக்குமியல்பினையுமுடையனாய். எ - று

(௬௫)

செம்மைபெறுமாலையதுசேர்முடியினானை ※
வெம்மையிடியன்னகுரல்வீறுமுடையானை ※
விம்முகடலோடுலகனைத்தையும்விழுங்கச் ※
சம்மதனெனத்தகுவனைத்தடைதடுத்தே ※

எ - து சிவப்புநிறம்பொருந்தியமாலைகளைச்சூடியதிருமுடியையும், வெவ்வியவிடிபோன்றகுரலின்மேம்பாட்டினையுமுழங்காநின்றகடலினோடுலகங்களெல்லாவற்றையுங்காவல்கொடுத்துவிழுங்குதற்குவிருப்பமுடையவன்போன்றிருக்குந்தன்மையையுமுடையனாய். எ - று

(௬௬)

விரித்தமுகின்மேனியமிருத்தியுமிருக்கக் ※
கருக்கியநிறத்தினொடுகாலனுமிருக்க ※
நெரித்தபுருவத்தினுடனந்தகனுநீடப் ※
பரித்தகொடுமைத்தொழில்செய்மாரியுமோர்பாலே ※

எ - து பரந்தகாளமேகம்போன்றவடிவினையுடையமிருத்தியுமொருபக்கத்திலிருக்கக், கரியநிறத்தினோடுகூடியகாலனுமொருபக்கத்திலிருக்க- ஏறிட்டபுருவத்தினோடுகூடியவந்தகனுமொருபக்கத்தினிலைபெறக், கொடுமைபொருந்தியதொழிலைச்செய்யாநின்றமாரியுமொருபக்கத்திலிருக்க, அதனடுவேவீற்றிருக்குந்தேவனாய். எ - று விரிந்த - என்பதனை - விரித்த - என்வலித்தது - நீட - என்பதனைமாரிக்குங்கூட்டுக - ஓர்பாலென்பது-கடைநிலைத்தீபகம் - வீற்றிருப்பானுயென்னுமெச்சம்-வருவித்துரைக்க.

(௬௭)

கருக்கியநிறத்தினர்கள்கண்டவர்களஞ்ச ※
நெரித்தவுருநெற்றியர்கணிட்டுரரரட்டர் ※
தரித்திடுகரத்தினர்கள்சத்திதிரிசூலம் ※
விரித்துடையபாசமழலங்குசமும்வேறே ※

எ - து கண்டோர்நடுங்கும்வண்ணங்கரியநிறத்தினையுஞ்சுளித்தவுருவினையுடையநெற்றியினையுங்கொடுமையினையுமெவர்களையுஞ்சஞ்சலப்படுத்துந்தன்மையி

ஃயும்வெலுநூவிலைச்சூலமுநெடியபாசக்கயிறுமழல்போன்றதோட்டியுமற்றுமு ள்ளனவும் எ - று [௮௨]

தண்டுமிளிர்வாளொளிகொள்சக்கரமுமிக்க ✲
வெண்டிகளும்வாளிபிணைதூணியெழிலார்கோ ✲
தண்டமிவைமற்றையதழற்படையனைத்து ✲
மண்டுதொழில்வீரதரதூதரவர்வந்தே ✲

எ - து தண்டாயுதமும்விளங்காநின்றவாளுமொளிபொருந்தியசக்கரமும் பேரளவுவிளங்காநின்ற, அம்புகளும்அவைபிறநிணைச்சேர்க்கப்பட்டஅம்பறாத் தூணியும்அழகுநிறைந்தவில்லுமானவிவைகளும், மற்றுமுள்ளவக்கினிபோன்றவாயுத ங்களெல்லாவற்றையுந்தாங்குங்கையினையுடையர்களாயக்குவாயுதங்களைப்பயி ற்றுந்தொழிலின்மேம்பட்டவீரமிக்கோரானதூதுவர்கள்வந்து. எ - று [௮௩]

ஏவலருளெங்கள்பெருமானெனவிருக்குந் ✲
தேவனைவிதித்திறமதித்தொருமைசெப்பு ✲
நாவனைநமன்றனைநடுக்கமொடுகண்டார் ✲
மேவலர்களென்னமனம்வேறுபடுவாரோ ✲

எ - து முன்னர்க்கூறியதிறத்தினையுடையவியமதூதர்கள்வர்தெம்முடைய சுவாமி,யாங்கள்செய்யுங்குற்றேவலருள்வாயாகவென்றுவிண்ணப்பஞ்செய்யவீற் றிருக்குங்கடவுளாய்ச்சிவனருளிச்செய்தவிதித்திறத்தை, யேகாக்கிரபுத்தியண்ணி யந்தவிதிப்படியேதண்டங்கள்செய் யச்சொல்லு நாவினையுடைய குயிருக்கிறயமதன்மராசனையச்சத்தோடுங்கண்டபாவிகள், அந்தயமதன்மராசனுக்குச்சத்துரு க்கள்போல, அவன்மனத்துக்குவேறுபடுவர்கள். எ - று (௮௪)

இயமதன்மராசனந்தப்பாவிகளைக்கோபிக்குந்திற முணர்த்துகின்றார்.

வெறுத்தவனைநல்வினையைவெய்யவினைதன்னைச் ✲
செறித்தவனைநோக்கியழல்சிந்தவிழிசித்தங் ✲
கறுத்தியமனச்சரவெனக்கடுவெனத்தா ✲
னுறுக்குவனறத்தளர்வுறக்கடிதொறுத்தே ✲

எ - து இயமதன்மராசனல்லபுண்ணியங்களைச்செய்யாதுவிட்டுக்கொடிய

யானையையொத்தபெலத்தினாலேயெளியராயுள்ளோருடைய திரவியமுதலானவ ற்றையபகரித்துக்கொண்டவர்க்குத்துக்கத்தையுண்டாக்கினீர் எ று (௬௩)

அங்கமுறுமேன்மையழகாலுமயலார்த *
மங்கையர்கடோள்புணருமாதரவுவைத்தி *
ரிங்கிவைகளும்மையணையாதகல்வதெங்ஙன் *
சங்கையுறுமின்னிரையமுற்றுடீறளர்ந்தே *

எ து அங்ஙனம் பிறர்பொருள்கொண்டதன்றி, யுமதுசரீரத்திற் பொருந்திய அதிகசவுந்திரியத்தினாலேபிறருடையமனைவியர்கள்தோளிணையணையும் வாஞ்சையு ம்பொருந்தியகீர் இங்ஙனங்கூறியதீவினைகளுங்களுடன்கூடிநில்லாமலெங்ஙே க யோகாநிற்கு மாகையாலந்தப்பாவங்கள்நிரும்வண்ணம்நரகத்திலேசென்றதருனு டலிளைத்துத்துக்கத்தையனுபவிக்கக்கடவீர். எ - று

அழகாலுமென்றவும்மையாற்றனமிகுதியாலுமெனவுறிக- சங்கை.
வருத்தம் (௬௪)

உற்றவர்கள்வெய்யநிரையத்துயரையோரி *
லற்றவர்களுயவினையல்லதுமாறென் *
குற்றமதனைக்குணமெனப்பெரிதுகொண்டீர் *
துற்றவிஙனஞ்சிலெஙனீங்கும்வினைசொல்லீர் *

எ - து ஆராயிற்கொடியநரகத்தின்கட்டுன்பத்தையனுபவித்தவர்களே பொல் லாதபாவங்களை யொழிந்தோராவர், அங்ஙனம் நரகத்தையனுபவியாமற் பாவங்க ளொழியுமாறெப்படிதீமைகளையேநன்மையென்று மிகவுமுட்கொண்டவர்களே நீ ங்கள் நரகமனுபவித்ததற்கிவ்விடத்திலேபயப்படுவீராயிற் செய்தபாவமெப்படிநீங் குமெனக்கதனைச்சொல்லக்கடவீர். எ - று துற்றல்- அனுபவித்தல் (௬௫)

என்றினையவாசகமவர்க்குறவிசைப்பன் *
கன்றியமனுஞ்சிறியனாக்கடிதுநோக்கி *
யன்றுமனுநீதிமுறையாவையுமயர்த்தீ *
ரின்றுநிரையத்துறவிளைப்பதெனவிசைப்பீர் *

எ - து என்றித்தன்மையையுடையகீதிவசனங்களைச்சித்திரகுத்தன் அந்தத்தீவி னையோர்க்குப்பொருந்தச்சொல்லாநிற்பன் பின்பு. இயமதன்மராசனும்வெகுண்ட ந்தப்பாவிகளைக்கொடுமையாகப்பார்த்து முன்றுணீங்கள் மனுநெறிமுறைமையெ

மற்றவருமுன்னமுளவல்வினைகளெல்லா ✲
முற்றுணர்வினிற்பருணையற்றுளநடுங்கா ✲
வற்றெழுதியமற்றிவரகத்திறமனைத்து ✲
மெற்றிடுகசண்டமகசண்டகவுதென்றே ✲

எ - து இங்ஙனஞ்சித்திரகுத்தனும்யமதன்மராசனுமொப்பச்சொல்லவந்த க்கொடுங்கோன்மன்னருந்தாமுன்னாட்செய்தகொடுவினைகளெல்லாந்தம்மறிவின் கட்டோன்றிச்சொல்லுதற்கோருத்தரமுமற்றுமனநடுங்கிநிற்பர்கள், மீளவும்யமதன்மராசன்வாரீர்சண்டமகசண்டரோயிவர்கள்செய்தபாவபேதமெல்லாமறுபவித்துத்தொலையும்படிசடுதியிலடிக்கக்கடவீரொன்றுசொல்லுவன் எ - று

அகம் - பாவம் [௱]

யமதன்மராசன்கூறமகசண்டன்முதலாயினோரந்தக்கொடுங்கோன்மன்னரைத்தெண்டிக்குந்திறமுணர்த்துகின்றார்.

ஓகநமனுற்றமகசண்டனெழுவாயர் ✲
காதியவர்பாதமிருகைகொடுபிடித்தே ✲
பேதமுறவேசுழல்பெறுத்திடுவர்விண்ணின் ✲
மீதேறிவர்பற்றிடுவொற்றிடவிரைந்தே ✲

எ - து இங்ஙனம்யமதன்மராசனருளிச்செய்யவவ்விடத்திலிருந்தமகசண்டன்முதலாயுள்ளோரந்தக்கொடுங்கோன்மன்னருடையகால்களையிரண்டுகையினாலும்வாரிப்பிடித்தடித்தவர்கள்மனங்கலக்கமுறும்வண்ணஞ்சுழற்றியாகாயத்தின்கண்ணுமெறியாநிற்பர்கள், மீளவுமவர்களையெரிதழற்கல்லின்கணடித்தற்பொருட்டாகச்சடுதியிலேயேற்றுக்கொள்ளாநிற்பர்கள் எ - று [௱க]

மேலவர்படுந்திறமுணர்த்துகின்றார்.

வெந்தழலையன்னசிலைமீதுகடிதெற்றிச் ✲
சிந்தவுடல்செங்குருதிசேறுபெறவூற ✲
நொந்தறவுநோலறுவர்நொய்யவினைசெய்தார் ✲
மந்தமரமெந்தவிதமெற்றவனையுற்றே ✲

எ - து பொல்லாதவினையைச்செய்தவேந்தர்களைவெவ்வியவெரிதழற்கல்லின்கட்சடுதியிலடிக்குங்காலத்தவர்களுடம்புசிதறவுஞ்சேறுபடியும்படியிலைத்தவிர

எ - து துக்கசமுத்திரங்களாகியநரகங்களைச்சொல்லு மிடத்துத்தொகையினு லிருபத்தெட்டாம், அதனையாராயுமிடத்து வகையினால் நூற்றுநாற்பதாம் அதன்வி ரிவைவிசாரிக்குங்காலிருபத்தெட்டுக்கோடியாம்,இங்ஙனங்கூறியமூன்றினுட்டொ கைவகைநரகங்களின்பேர்களையேயிந்தநூலின்கட்சொல்லாநின்றோம் எ-று (௱ரு)

நரகங்கள்பெயருமுறையுந்தடுமாறிவருவதற்கோர்வழுவமைப்புணர் த்துகின்றார்

பேதமுமுறவேயெண்ணும்பெயர்களுமுறையும்பேசும் *
வேதனைக்குழிக்கணாதிவிமலனாலொன்றுக்கொன்று *
பேதமுமுறவேதோன்றும்பிரளயமுடிவுதன்னி *
லாதலால்விரோதந்தம்மினவற்றிலையாயுங்காலே *

எ - து பிரளயமுடிந்தபின்றோன்றுஞ்சிருட்டிகாலத்திலேவேதனைசெய்யும்நர கக்குழிக்குளெண்ணு,முறையும்,பெயருமொன்று,க்கொன்று பேதமாகத்தோன்றும் ஆகையினாலேயநாதிநின்மலனாகியசிவனருளிச்செய்தசிவாகமம் . எண்ணையும்பெய ரையுமுறையையுமொன்றுக்கொன்றுபேதமாகவுஞ் சொல்லாநிற்கு மதனையாராயு மிடத்தந்தவாகமங்களொன்றுக்கொன்றுதம்மில்விரோதமில்லை எ - று
பேதமுமென்றவும்மையாற்பேதமில்லாமலுந்தோன்றுமெனவறிக (௱சு)

தொகைநரகங்களின்பெயரைநாலுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

கோரமதுதான்முதனரகங்கூறுமதன்கீழ்க்கவின்கோரங் *
கோரமதன்முன்னதிகூட்டிக்கூறுமதுமூன்றுநரகங் *
கோரதரமேயதனதுகீழ்க்கோரரூபமற்றதன்கீழ்ச் *
சேருமதன்கீழ்த்தரளதரஞ்செறியுமதன்கீழ்ப்பயாநகமே *

எ - து - வெளி (௱எ)

அதன்கீழ்க்காளராத்திரியேயாகுமதன்கீழ்ப்பயோற்கடமே *
யதன்கீழ்ச்சண்டமதுதானேயடையுமதன்கீழ்மகாசண்ட *
மதன்கீழ்ச்சண்டகோலாலமாகுமதன்கீழ்ச்சண்டதர *
மதன்கீழாகுஞ்சரோருகமேயப்பாற்சலசவதியதுவே *

எ - து - வெளி (௱அ)

அதன்கீழ்வீமமதுதானேயப்பால்வீமவீடணமே ※
யதன்கீழ்க்கரளம்விகரளமேயதற்குமப்பாலெனவறிக ※
வதன்கீழ்க்குலிசமூக்கோணமைந்துகோணமதற்கப்பா ※
லதன்கீழ்த்தீர்க்கதரமாகுமப்பாற்பரிவர்த்துளமதுவே ※

எ - து - வெளி (௱௬)

அப்பாலேழுநிலமதனுக்கப்பாலெட்டுநிலமதனுக் ※
கப்பாற்றீர்க்கவொளியதனுக்கப்பான்மாயையெனவறிக ※
அப்பாற்சடையன்விதியிகழ்ந்தாரழுங்குங்குழிகளெழுநான்கு ※
மிப்பாவியலுளெண்ணுகவொவ்வொன்றிற்கோடியென்னுறவே ※

எ - து - வெளி (௱ய)

மூற்கூறியவிருபத்தெட்டினுக்குமொவ்வொன்றுக்கைவைந்துநாயகநரகமுண்டென்பதனையுமதன்பெயர்களையும் பதினாறுசெய்யுளால் வகுத்துணர்த்து கின்றார்

தொகையாலிருபத்தெட்டினையுஞ்சொன்னேமினிநாயகநரகம் ※
வகையாலறைவமதித்திடுகவைந்தைந்தாகமற்றவற்றிற் ※
பகையேபாவமெமக்கென்றுபயந்துகொடியபாவத்தைத் ※
தகைபார்தடுத்துநல்வினைபைச்சமைக்கநலத்தைத்தாமுறவே ※

எ - து தொகையினாலே யிருபத்தெட்டு நரகத்தினையுஞ்சொன்னோம்,வகையினாலேயவற்றிலொவ்வொன்றுக்குநாயகநரகமைவைந்தாகவிருக்குமென்றுசொல்வாம்,அதனையறிவாயாக. அஃதேதுகாரணத்தாலெனிற் பெருமையினை யுடையோர்பாவமேநமக்குப்பகையென்றுபயந்ததனைச்செய்யாதொழிந்துநல்வினையைச்செய்துநன்மையடைகையின்பொருட்டு எ - று (௱யக)

வேறு

வெந்துயர்செய்ரௌரவமாரௌரவமேமிக்கதமந் ※
சிந்தைகலுழதிசீதமதிவெப்பமெனத்தெரித்த ※
வைந்தினையுமுதனிரயத்ததிபதிகளெனவறிக ※
விந்தமுறைநாயகங்களனைத்தினுக்குமெண்ணுகவே ※

எ - து ரௌரவம்- மகாரௌரவம்- அதிதமம்- அதிசீதம்- அதிவெப்பமென்று

கூறியவைந்தும்முதலினையமாகிய கோரத்துக்குநாயகங்களாமிந்தமுறையேமற்ற விருபத்தேழுநரகத்துக்குமொவ்வொன்றுக்கைவைந்தாகவெண்ணிக்கொள்க. வந்தப்பெயர்களையாஞ்சொல்வாம் எ - று (ורםஉ)

அதிகோரமறவுமிருடீக்கணமற்றம்போசம் ※
விதமுடையசஞ்சீவஞ்சடமாயைவிலோமமெனக் ※
கதமுடையவிமமெனக்கடங்கடத்தோடிவைபத்தும் ※
விதமறுதீவிரவேகங்கராளமெனவிளம்புநவும் ※

[ורםங]

எ - து - வெளி

விகராளம்பிரகம்பம்வெண்கமலம்வீற்றுமுகம் ※
பகவீக்குங்கரும்பாசம்பபின்றபிரமருத்தனமே ※
புகராயசூசிமுகம்புதைநேமிகாதகமே ※
பகவுடற்பீடனங்கும்பீபாகமெனப்பகர்ந்தனவும் ※

[ורםச]

எ - து - வெளி

அதிபாகங்கிரகசமற்றசிதாருவங்காரங் ※
குதிகொள்ளுமிரத்தச்சீக்குழிபிருப்புத்துண்டப்புள் ※
கெதமாக்குஞ்சங்வருத்தங்கிரதுவழன்மயச்செங்கற் ※
றிதநீங்கவுழத்ததைதிரபுவெனச்செப்பியவும் ※

(ורםரு)

எ - து - வெளி

சோகிக்குமுச்வாசநிச்வாசஞ்சுடர்த்தீர்க்க ※
மோகிக்குஞ்சுழலழல்வாள்முள்ளிலவந்துணித்துருட்டஞ் ※
சோகிக்குநாதஞ்சுப்பிரவாகம்பிரவகனம் ※
வேகிக்குங்காடிபுருமேடமெனவிளம்புநவும் ※

(ורםசா)

எ - து - வெளி

விறலிடபமுட்பன்றிசிங்கம்வியாக்கிரம்யானை ※
திறனாய்சூகரமாடுதிடமேதியிடவமச ※
மறவெடியவிருகானமதிகிரகங்கும்பீரங் ※
கறுவுளநக்கிராக்கியங்கட்டரவமெனக்கழறுநவும் ※

ஏ - து வெளி (௱௰௭)

உரைத்தபெயர்பின்னுரைத்துமூனமிலேயோள்ளழலைப் ✲
பரித்தகடத்தினைமற்றுமொருபொருளைப்பரித்திடலால் ✲
விரித்துணர்வார்க்கரியெனுஞ்சொல்வேறுபலபொருள்விளக்குஞ் ✲
சுரித்தகிழித்தொகும்பொருள்கள்பலவுமுளதுணியுங்கால் ✲

எ-து முன்புரைத்தபெயர்களைப்பின்புரைக்கிலுங்குற்றமில்லை,அஃதென்போலென்னில்அழகியவக்கினியைத்தரித்தகுடத்தக்கினையாகவேறொருகுடமானது மற்றொருபதார்த்தங்களைத்தரித்தாலுங்குடமென்னும்பெயர்குன்றாதவாறுபோலப்பெயரொன்றாயிருந்தாலுங்குணம்வேறுபட்டிருக்கும்அஃதன்றியும்அரியென்னுஞ்சொல்லைவிரித்தறிவார்க்குப்பலபொருளைவிளக்குமதுபோலவுஞ், சுருக்குதலையுடையமடிச்சீலையென்னும்பெயரொன்றாயிருக்கவும்அவையிலிருக்கும்பொருளைவிசாரிக்குங்காற்பலவாயிருக்குமதுபோலவும். எ - று

இச்செய்யுளான்முற்கூறியதைப் பிற்கூறினாலுங்குற்றமில்லையென்றுவழுவமைதிபண்ணினொன்க. [௱௰௮]

கூர்மவுருக்கருங்காகங்கொடுங்கழுகுகடுங்கூகை ✲
கார்வாயவட்டைபுலிகவிகட்கங்கண்டகமே ✲
யீர்வாய்ச்சீயிரத்தவிழிபிகழ்பூதிமிருத்திகையே ✲
சேர்வாயகணதூமமெனமுறையிற்செப்பியவும்

எ - து வெளி (௱௰௯)

அழலுமிழ்வன்புழுக்குழியமேத்தியமப்பிரதிகரம் ✲
வழுவாபுண்ணீர்த்தானம்வாய்நீர்ச்சீவனமூனைக் ✲
கழியாத்தான்றனைத்தின்னல்கலந்தனத்தமனைத்துமுண ✲
லொழியாததாருணமேயெனமுறையிலுரைத்தனவும ✲

எ - து வெளி (௱௨௰)

வேதிக்குஞ்சங்கடமேவித்தரமேமிகுவிகடம் ✲
வாதிக்குங்கட்பூதங்கரிநெருப்புவறையோடு ✲

பேதிக்கும்வைதரணியிருப்பழற்பாற்பிணித்துறக்க ※
லேதத்தைத்தருமேகபாதமெனவிசைத்தனவும் ※

எ - து வெளி [ரஉக)

அறவருத்தும்பூரணமேயசிதாலவனங்கோர ※
மூறியவெலும்பினைமுருக்கன்முழுப்பிடைதிலச்செக்கே ※
யெறியவுறுமியந்திரமேகருப்பாலையிடர்ப்பாசம் ※
மறியவுடன்மருத்தனமேயெனமுறையில்வகுத்தனவும் ※

எ - து வெளி (ரஉஉ)

பரியசுவிநுண்சுல்லிபாறையழலிருப்புமயம் ※
பொருவரைகள்குரதாரம்யாமளமென்பொருப்பதுவே ※
யருவருமூத்திரகூபமலக்கூபமறவுமிரு ※
ளெரியுமறற்சாதனமேபுரலுலக்கையென்பனவும் ※

எ - து வெளி (ரஉ௩)

அரைத்தொறுக்குமியந்திரமேசிலைவண்டிலயக்கலப்பை ※
வருத்தியிடுந்தாலவனமாமசகமண்டுகமே ※
தருக்கழிக்குஞ்சம்மோகமத்திபங்கந்தழற்சூல ※
மிருப்பழலாமுருள்விழுங்கலெனமுறையிலிசைத்தனவும் ※

எ - து - வெளி (ரஉச)

பலதுயரமிகுதுயரம்பழுதாயகசுமலமே ※
நிலவரியசமலமலநிட்டுரவாலாகலமே ※
விலகரியமிதவிருபம்விகிர்தமியமானுகமே ※
யிலகியிடுமொருபாதந்திரிபாதமென்பனவும் ※

எ - து - வெளி (ரஉரு)

அறக்கொடியதீவிரமேயவீசியெனவறைந்தனவுஞ் ※
செறித்தறிகவொருநூற்றுநாற்பதெனத்திண்ணமுற ※

பொறுத்துயிர்க்குப்பாவவிதமொழிக்கவொழுக்கியநிரயத் ※
திறத்தினுக்குநாயகங்கடெருளவெணுஞ்சிந்தையரோ ※

எ - து தீவிரம்- அவீசியென்றிங்ஙனங் கூறியது கூடநூற்றுநாற்பதாகவேற்றியநரகங்களைநிச்சயமாகப்பிரித்தறியுஞ் சிந்தையினையுடையோர், ஆன்மாக்களுக்குப்பாவவிதமொழிக்கநிறுவியநரகபேதங்களுக்குஒன்றுக்கைவைந்துநாயகங்களென்றறிக எ - று (௱௨௬)

மேல்ராசநரகங்களையுணர்த்துகின்றார்

இருள்புழுதிவடிவாகியிடர்மிகுத்தரௌரவத்தை ※
யரையனெனவறிந்திடுகவருந்துயரந்தனைக்கொடுக்கு ※
மெரிமயக்கும்பீபாகமிதற்குமிறையெனவெணுக ※
கிருமிசெறியவீசியிறையெவற்றினுக்குங்கிளக்குங்கால் ※

எ - து இருண்டபுழுதிவடிவாகிமிகுந்ததுயரத்தைச்செய்யும்ரௌரவத்தையெல்லாநரகங்களுக்குமிராசநரகமென்றறிந்திடுக, அரியதுயரத்தைச்செய்யுமக்கினிச்சுவாலைபோன்றகும்பீபாகமென்னுநரகம்இந்தரௌரவத்துக்குமிராசாவாதலாலிராசராசநரகமெனப்பெயர்பெறுமெனவறிக, புழுப்பொருந்தியஅவீசியென்னுநரகத்தைச்சொல்லுங்காலெல்லாவற்றுக்குமிராசாவாமாதலாலி ராசாதிராசநரகமெனப்பெயர்பெறும் எ - று (௱௨௭)

மேற்பாவிகளைநரகத்திலனுபவிக்கச்செய்துகரையேற்றுமுறைமையையுவமையாலுணர்த்துகின்றார்

செய்தசெய்ததீவினையின்றிறத்திசையவிவற்றமுழுங்கி ※
மையலுறுமவர்துயரமுடிவின்கண்வல்வினைகள் ※
பையவிடவெடுத்திடவும்படுவரழற்படுகனகம் ※
வெய்யவழலினைவிடுமேகளிம்பறலும்விளங்கிடுமே ※

எ - து அழலிற்போட்டகனகமானதுஅக்களிம்பற்றமாத்திரத்திலே யந்தவெய்யவழலினின்றுஞ்சொன்னகாரராலேயெடுக்கப்பட்டு விளங்கும், அதுபோலத்தாந்தாஞ்செய்தபாவவிதத்துக்கிசைய- அவீசிமுதலியநரகத்திலழுந்தி மயக்கமுறுமான்மாக்களும் பாவபலமுடிவிலே பலவினைகண் மெல்லவிடவி யமதூதர்களாலேயவைகளினின்றுமெடுக்கப்படுவர்கள் எ - று

சொன்னகாரரொன்றும் யமதூதரொன்று மெச்சம்வருவித்துரைக்க (௱௨௮)

இயமதூதர்கள்அப்பாவிகளைத்தண்டிக்க அவர்கள் துன்பத்தைப்
பொருந்தும்வகையினையிருபதுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

மறுத்தருட்டமக்குவைத்தவத்தனித்தன்வாய்மையும் ※
வெறுத்தறத்தினைத்தவத்தைவிட்டகட்டதுட்டரைக் ※
கறுத்துளத்தறச்சிவத்தழற்கலித்தகண்ணரா ※
பொறுத்தொறுத்துறுக்குவார்கடுத்தராயுதத்துமே ※

எ-து தம்மிடத்திலேயருளைவைத்த செகத்பிதாவாகிய சிவனதுவாக்கியப்பிரமாணத்தையுமறுத்துத்தனக்கேற்றதன்மத்தினையுஞ்செய்யாது வெறுத்துத்தவத்தினையும்விரும்பாதுவிட்ட பொல்லாததுட்டரை, யமதுதரானோர் மனங்கறுத்துமிகவுஞ்சிவந்தழற்சொரியாநின்ற கண்ணினையுடையரா யாயுதங்களினாலேகுத்திக்குத்திக்கொவிப்பர் எ-று (௱உகூ)

இருப்பழற்றொடர்ப்பிணித்திடர்ப்படக்கரத்தினும் ※
பரித்திடப்பணித்தவண்பழிப்புடற்பதைக்கவே ※
துரக்கமெய்ச்சுழன்றுருண்ட துக்கரைத்தொகுத்துவிண் ※
டருக்கறச்சதத்திருப்புருட்பிணிப்பர்தாளிலே ※

எ-து அழல்போன்றவிருப்புச்சங்கிலியினாலேகையையுங்கட்டியச்சங்கிலியைத்துக்கமுறவேந்துவித்து, அங்ஙனம்பழிப்புண் டாகியசரீரம்பதைக்கத்துரத்தவோடமாட்டாமற்றமதுடல்சுழன்றுவிழுந்துபுரண்டதுக்கத்தையுடையபாவிகளைமீளவுங்கூட்டிப்பிடித்துமிகுந்தகெருவமறும்படிக்குநூறிருப்புண்டையையிரண்டுகாலினுங்கட்டிமீளவுந்துரத்துவர்கள் எ-று விண்டருக்கு - மேலான கெருவம் (௱௩௰)

உன்னுவார்கண்முன்னைவல்வினைத்திறமுளத்துளே ※
யென்னைசெய்யலாவதென்றுமெண்ணிநொந்திளைப்பருந் ※
துன்னுவாருமில்லையுற்றதுக்கநோய்துடைக்கவு ※
மன்னுமாமனத்தொடல்லதில்லையூடல்வாய்மையே ※

எ-து முற்கூறியபாவிகளானோர், தாம்முன்னேசெய்த கொடுவினையினது திறத்தைவிசாரிப்பர்கள், அதற்குப்பரிகாரம்யாதுசெய் வோமென்று தமதுமனதிலேயெண்ணியுள்ளழிந்திளைத்தலையுஞ்செய்வர்கள், தாம்பொருந்தியதுக் கநோய்து

டைப்பதற்கவ்விடத்தொருவர்,வருவாருமில்லையாதலாலுடலுந்தமது மனத்தோ டன்றிவேறொருவருடனுமில்லை,யிவைகளுண்மையே. எ று (௱௩௧)

சித்தமுந்திகைக்கவேயிரத்தமுந்தெறிக்கவே ✻
மொத்துவாரழற்கசைக்கொழுந்தழுந்திமூளவூன் ✻
குத்துவாரிருப்புலக்கையைக்கரத்தினிற்கொடே ✻
மத்தரானதூதர்பாவமேவினைாவாடவே ✻

எ - து மதத்தையுடையயமதூதர்கள், பாவஞ்செய்தோரைமனந்தடுமாற இரத்தமுந்தெறிக்கவக்கினியைச்சொரியாநிற்கிறகசையிற்கொழுந்தான தசை யைப்பீறியூனிலேசென்றுதைக்கவடிப்பர்கள், பின்பிருப்புலக்கையைக்கையிலே யெடுத்துக்கொண்டுஅவர்கள்தளர்வுறும்வண்ணமுதுகிலேகுத்துவர்கள் எ - று கசை - குதிரைச்சம்மட்டி. (௱௩௨)

ஒழுக்குவார்கள்காரநீருமொள்ளழற்குழம்புமோ ✻
தெழித்திரத்தவெள்ளமுந்திறக்கமெய்மறக்கவே ✻
யழுத்திவாளையங்கமெங்குமன்றிநின்றறிந்துடற் ✻
புழுக்குவாரொணைத்தடக்குடத்தினுட்புகுத்தியே ✻

எ - து இங்ஙனமடிபட்டுப்புண்ணாகியதேகத்திலேயுப்புமுதலியகாரநீரையுமக் கினிக்குழம்பையும்அதட்டிவிடுவர்கள்,அஃதன்றியுமிரத்தவெள்ளமுந்திறந்தோடநி னைவுமறக்கவாள்கொண்டறுத்துச்சரீரமெங்குஞ்சின்னஞ்சின்னமாகவரிந்துபெரி யவெண்ணைக்குடத்துக்குள்ளேயடைத்துவேகவைப்பர்கள் எ - று அழற்குழம்புமோவென்றவோகாரத்தினாற்புளிநீர்முதலியவுமெனவறிக. (௱௩௩)

விட்டைமிக்ககூபவாய்விழுங்கவேயழுங்குவார் ✻
கட்டமிக்கமேதைசிக்கலந்துளங்கலங்குவார் ✻
நிட்டுரப்புழுக்குழிக்குணின்றயர்ந்துநீங்கிலார் ✻
விட்டறத்தினைக்களித்தவம்புரிந்தவீணரோ ✻

எ - து தன்மத்தினைச்செய்யாதொழித்துஅதன்மத்தைச்செய்தவீணராகேு ரிற்சிலரை, யமதூதர்கள்மிகுந்தமலகூபமாகியநரகத்திலேபோடவதன்கண்மூழ் கிக்கிடந்துதுக்கிப்பர்கள், சிலர்துன்பத்தைமிகவுங்கொடாநின்றவூனுஞ்சீயுமு டையநரகத்தைப்பொருந்திக்கிடந்தநிலேயுள்ளங்கலங்குவர்கள், சிலர்கொடு

மையானபுழுக்குழிநரகத்துணின்றுசோர்ந்ததனைநீங்கமாட்டாதுகிடப்பார்கள் எ - று (௱௩௪)

கூரிதாயவாயவாயதாதிகோதிமோதியு ※
மீரவீரவாறுபோலிரத்தமூம்பரக்கவே ※
நிருமாறுதேடுவார்கடீயபாவமேவினார் ※
வீரமாயநாயுமாயவாயினால்விடக்கடும் ※

எ - து தீவினைகள்செய்தோர்,கூரியவாயினையுடைய காக்கைமுதலாயினபுட்கள்,காலாலடித்துமூக்கினாற்கோத்தியுமறுக்கவறுக்க வீரத்தினையுடைய நாயுங்கூரியவாயினாற்றமதுசரீரத்தைக்கடிக்க,விரத்தமானதாறுபோலோடத்துக்கித்திந்தத்துயரமொழியுமாறெங்ஙனமென்றுவிசாரிப்பார்கள் எ - று (௱௩௫)

செக்கிடைத்திலத்தினுக்குமொப்பெனத்திருக்குவார் ※
இக்கினுக்குமொப்பெனக்கலைப்பர்வைத்தியந்திரத் ※
தப்பினைக்கலந்தவுப்பெனத்தழற்கழுத்துவார் ※
தப்பறத்தமக்கறம்புரிந்திலார்கடம்மையே ※

எ - து யமதூதர்கள்- தமக்கென்றுகருதிக்குற்றமறத்தன்மஞ்செய்யாததுட்டரைச்,செக்கிற்போட்டுஎள்ளைப்போலவரைப்பர்கள்,அதுவுமின்றியாலையிட்டுக்கரும்புபோலவுநருக்குவர்கள் அதுவுமன்றி நீரிலேகலந்தவுப்பானதுபின்னமன்றியிருக்குமாறுபோலவிவர்கள்,சரீரத்தையக்கினியென்றுஞ் சரீரமென்றும் பின்னம்பண்ணுமலக்கினிச்சுவாலையாகியநரகத்தின்கண்ணும்போடுவர் எ - று

கலைத்தல் - நருக்குதல் - இயந்திரம் - கருப்பாலை [௱௩௬]

பொய்யினைப்புகன்றபுல்லர்வாயினைப்புடைத்துநாக் ※
கொய்வர்துக்கபேதமுங்கொடுப்பர்தூதர்கோணலை ※
வெய்யர்முன்புசொன்னபொய்வினைத்திறம்விளங்கவே ※
நைவதொன்னைசெய்வமென்றுதீருமாறுநாடியே ※

எ - து யமதூதர்கள்பொய்சொல்லியவர்பர்வாயிலேயடித்துஅவர்கள்நாக்கினையுமறுத்துப்பலதுக்கத்தையுமுறுவிப்பர்கள்அப்பொழுதந்தப்பொய்சொல்லியகொடியோர்- தாமுன்புசொன்னபொய்களெல்லாந்தம்மனதிலேயுதிக்கவுதித்தவாறேயதனாலுண்டாகிய பாவபலம்போமாறுவிசாரித்ததற்கென்செய்வோமென்றுள்ளமுமெலிவர் எ - று [௱௩௭]

வேதமாதிநூலினுள்விதித்தறத்தினைப்பழித் ※
தேதமானநூலியம்புமீனர்நாவெழுந்துபோய்க் ※
காதமோடளாத்துரங்கலிக்கவெங்கலப்பையால் ※
வாதைகூருமாறுகிறியூறுசெய்யமாய்வரோ ※

எ - து வேதாகமபுராணத்திலுண்டாகியவிதிமுறையைப்பழித்ததற்கு விபரீதமாகியநூலினைச்சொல்லு மற்பர்நாவானது ஒன்றரைக்காதவழிதூரமெழுந்துவளராநிற்குமங்ஙனம் வளர்ந்தநாவிலேயவர்கள்துயருறும்படி யமதூதர்கள் கொடியகலப்பையினாலேயுழுதுபுண்படுத்தவதனாலேசோர்வர் எ - று (௱௩அ)

வேறு

விதித்திறத்தைச்செவிப்புலத்துள்விளைத்தருள்செய்வேதியனைக் ※
கொதித்ததட்டுமவர்முகத்தைக்குடைந்திரத்தங்குடித்திடலும் ※
பதைத்திடுவரட்டைபலபருகியபின்னழற்காரம் ※
விதிர்த்தலறவிட்டிடுவர்தாமிரத்தின்வெவ்வழலும் ※

எ - து வேதாகமபுராணங்களிலேவிதித்தமுறையினைத்தன்செவியிலே புலப்படவருளிச்செய்தவாசாரியனைக்கோவித்துப்பார்த்ததட்டும்பாவிகள்முகத்தை, யட்டைகள்குடைந்துஇரத்தங்குடிக்கவதனாற்பதைத்துவிழுவர்கள், அவ்வட்டைகள்குடித்துவிட்டபின்னாகயமதூதர்கள்சுடுகிறகாரநீருமுருக்கினசெம்பும் அவர்மெய்நடுங்கியலறும்படிகாய்ச்சிவிடுவர்கள் எ - று

வேதியன் - அறிவிப்பவன் - புலம் - அறிவு (௱௩௯)

உருகியபித்தளைத்தழலுமொழுக்கிடுவரதன்பின்பு ※
விரையவழலுறுதயிலமதுதனையும்விட்டிடுவர் ※
பொருகிருமிமலவளறும்பூரிப்பர்புல்லியரை ※
வெருவுறுத்திநமன்றூதர்விதியிகந்தவினைவிடவே ※

எ - து யமதூதர்கள், வருணாச்சிரமத்துக்கேற்றவிதியினைவிட்டோருடையபாவம்போம்படிக்கந்தவற்பரைப், பயமுறுத்திப்பித்தளையுருக்கிவிடுவர்கள், அதன்பின்பு, எண்ணையினையுங்காய்ச்சிச்சடுதியிலேவிடுவர்கள், அதுவன்றிப்புழுக்கணெருங்கியமலச்சேறுகியநரகத்திலமிழ்குவிப்பர்கள். எ - று (௱௪௰)

உற்றிடுவருணாத்ததுயரனைத்தினையுமொருவாதே ※
பெற்றெடுத்ததாய்தன்னைத்தந்தைதனைப்பெரியோரைப் ※

பற்றறவேபாடித்நாக்கோதி த்ததட்டும்பாவியருங் ❊
குற்றமவர்செய்திடினும்பொறுத்திடுகைகுண்மன்றே ❊

எ – து பெற்றவளர்த் தமாதாபிதாவையும் மகாத்மாக்களையுமவர்களிடத்தி நேசமில்லாத வசனத்தைச்சொல்லிக் கோபித்துறுக்கும்பாவிகண், முன்சொன்ன நரகங்களெல்லாவற்றையும் நீக்கமின்றியனுபவிப் பார்கள் ஆகையினாலேயவர்கள் குற்றஞ்செய்யினுமதனைப்பாராட்டாமற்பொறுத்தலேநன்மையாவது எ-று (ளசக)

உத்தமரைமதியாதேயுபானபதத்தொடுநடக்கு ❊
மத்தரையுமழற்சுரிமுள்ளிலவமரமதுதன்னிற் ❊
பொத்திடுவர்முதுகறைவர்புணரிருப்புமூளைத்தண்டாற் ❊
கொத்திடுவரங்குசத்தாலீர்வாளாற்குறைப்பருமே ❊

எ – து பெரியோர்களைமதியாமலவர்கள்முன்னே மரவடி செருப்பு முதலிய வற்றைத்தொட்டு நடக்குமறிவில்லாதோரை யமதூதர்களக்கினி சொலிக்கிற முள்ளிலவமரமாகியநரகத்திலே முகங்கீழாகப்போட்டு இருப்பு மூளைகளைநெருங் கக்கட்டாவியதடியினாலே முதுகிலேயடிப்பர்கள் அஃதன்றிக் குடாரியினாலுங்கொ த்தியீர்வாளாலுமறுப்பர்கள் எ – று (ளசஉ)

உற்றிடுவருரைத்ததுயரனைத்தினைபுமுயிர்க்கிரக்க ❊
மற்றுவதைத்தவைதன்னையவலமெனாதவற்றானைத் ❊
துற்றினருமற்றுமுளகொலைபுரிந்ததுரிசினரும் ❊
பற்றுமிலர்படுந்துயர்க்குக்கடுந்தூதர்வலிப்பட்டே ❊

எ – து உயிர்க்கிரக்கமற்றுத் தமக்குப்பொசித்தற்கருகமாகிய மிருகமுதலியவு யிர்களைவதைத்தவையிற்றினான்களைக் குற்றமென்றுகருதாமற்பொசித்தவர்களும் பொசித்தற்கருகமல்லாதவுயிர்களை வதைத்தபாவிகளும், யமதூதர்வலியிலேயகப் பட்டுஅவர்கள்படுந்துயரத்துக்காதாரமுமற்று முன்சொன்னநரகங்களெல்லாவற் றையுமனுபவிப்பர்கள் எ – று (ளசங)

அரிந்தரிந்தேயுடலூனையருத்திடுவரிரத்தமெலாஞ் ❊
சொரிந்துகுடித்திடச்சொலுவர்தூதர்பசிதோன்றவனை ❊
மிரந்தவர்க்குப்பசிதணியாதிருந்தருந்துமீனரையும் ❊
அருந்திபிடக்குளிர்ந்தபுனலுதவாதவலரையும் ❊

எ - து இயமதூதர்களானோர், பசித்துவந்தவதிதிகளுக்காகாரமிடாமற்றனேதனித்திருந்துபொசிக்குமற்பரையும், தாகித்தபேர்களுக்குத்தண்ணீர்கொடாதபொல்லாதவர்களையும்அவர்களுடையமாங்கிசங்களையரிந்தரிந்துபொசிப்பித்துச்சரீரத்தையுங்குடைந்துஇரத்தத்தைவாங்கியவர்களைத்தானேகுடிக்கச்சொல்லுவர்கள். எ - று (௱சச)

பின்னுமவர்தமையபாலைக்கரும்பெனவேபேதிப்பர் ❊
துன்னுமசிதாலவனத்துடற்றுணியத்தொகுத்திழுப்பர் ❊
பின்னமுறவுடலமூன்றசூசிபலபெறுத்திடுவர் ❊
கொன்னவிலுந்தழற்சூலக்கொழுந்தினுமெய்கொளுத்துவரே ❊

எ - து வெளி அசிதாலவனம் - வாள்போலருநின்றமட்டையினையுடையபனங்காடு - சூசி - ஊசி - கொன் - அச்சம் (௱சரு)

அறுத்தெரறுப்பருறுப்பனைத்து மீர்வாளாலகத்தெலும்பு ❊
முறித்திடுவர்கண்கலங்கமுகத்தறைவர்மூரணழியப் ❊
பொறுப்பரியதுயரனைத்தும்பொருத்திடுவரெரித்திடுவர் ❊
கறுத்திடுவரிரங்கார்தகரிசுதனைக்கழித்திடவே ❊

எ - து வெளி — அகம் - சரீரம் - முரண் - வலி - கறுத்தல் - கோபித்தல். (௱சசு)

நிறுத்திடு✠வருச்வாச ௦நிருச்வாசநிரையத்தும் ❊
வறுத்தமணன்முகத்தறைவர்மாரொளரொளரவத்து ❊
முறுத்திமிகவொறுத்திடுவரொள்ளழற்கூரிருப்புமுளை ❊
செறித்தறைவர்கோசத்தின்முகமதனிற்சிரத்தினுமே ❊

எ - து வெளி (௱சஎ)

பதத்தறைவர்குதத்தறைவர்பதைத்தழுங்கவுரத்தறைவர் ❊
விதிர்த்தகரத்தினுமறைவர்வெய்யவழற்செங்கலினு ❊
மிதித்திழுப்பருதகானமுதவாதவெட்டியரைக் ❊
கதத்தெழுந்துநமனுணைகடவாதகடுந்தூதர் ❊

எ - து வெளி-உதகானம்-உதகம்-அன்னம்-கதம்-கோபம் (௱சஅ)

---

✠ உச்சுவாசம்-சுவாசம்விடுதல்-௦நிருச்சுவாசம்-சுவாசமடக்குதல்

மேற்பரதாரகெமனம்பண்ணும்புமானையுமந்நாரியை
யுமியமதூதர்கள் துய்ப்பிக்குமுறையையாறுசெய்யுளாலு
ணர்த்துகின்றார்.

பரிவுடையபரதாரியழலிருப்புப்பாவையினை ✻
யுருகியிடவுடன்முழுதுந்தழுவியழுதுளைந்திடுவ ✻
னரியவனையொழிந்தொருவற்குடல்கொடுத்தவொண்டொடியு ✻
மெரியுருவப்பாவையவனெனத்தழுவியிளைப்பாளே ✻

எ - து வெளி அழலிருப்புப்பாவைசொரசாரிரூபமாகிய-இருப்பழற்பாவை - உளைதல் - துக்கித்தல் - எரியுருவப்பாவையவன் - புமானுருவமாகிய - இருப்பழற்பாவை. (அசகூ)

பிரிந்திடவேவிரைந்திடும்பேதைதனைப்பிரியாதே ✻
பொருந்தியிடவழலுருவிற்புணர்த்திடுவர்கணவனை நீ ✻
பிரிந்தனையேபுணர்ந்தனையேபிறருருநின்பெரும்பாவம் ✻
பிரிந்திடுநாட்பிரிந்திடு நீயெனத்தூதர்பேசுவரோ ✻

எ - து வெளி (அருய)

மற்றவனுமழன்மயத்தவடிவுசுடவழிவுசெய ✻
லற்றழிந்துபிரிந்திடவேயாதரிப்பனவன்றனையு ✻
மற்றொருவன்மனைமகிழ்ந்தவல்வினைநின்றனைப்பிரிந்தே ✻
யற்றிடுநாளகன்றிடு நீயெனக்கடுகியமூத்துவரோ ✻

எ - து வெளி மற்று - வினைமாற்று - ஆதரித்தல் - விரும்பல (அருக)

இனையகடுவினையதனைபியற்றினரையிரும்பாலே ✻
வினைகுடத்துட்புகுத்தியதன்வாயடைத்துவன்றூதர் ✻
கனன்மிசையேவைத்தெரிப்பர்கன்றவுடலூரவிடிப்ப ✻
ரனலொழுகுசிலைதனிலுமுடற்சிதறவறைவாரோ ✻

எ - து வெளி வினைதல் - பண்ணுதல் (அருஉ)

வெருளவிருட்கூபத்தும்விட்டிடுவர்விள்ளவுடற் ✻
பிரமரங்கள்பெறுத்திடுவர்நிறுத்திடுவர்பெருங்கிருமி ✻

கருவவுடற்குடைந்திடலு முதிரவெளமொழுகியிட ※
வெரியனையகாரவெள்ளக்கூபத்துமிறக்குவரோ ※

எ - து வெளி - பிரமரம் - வண்டு - வெள்ளத்தை - வெள்ளமெனத்தொகுத்தார். (௫௩)

பின்னுமவரெரிவாயநிரையத்துப்பெயப்பட்டுக் ※
கின்னமுறவுடலுருகக்கிடந்திடுவர்தொடர்ந்தவினை ※
தன்னைநினைந்தழுங்கிடுவர்விதித்தவினைதனைத்தவறித் ※
துன்னினர்கடியரவிதந்தனைக்கொடுக்குந்துரிசினையே ※

எ - து வெளி - பெய்தல் - போடல் - கின்னம் - துக்கம் - துரிசு - பாவபலம். (௫௪)

குருவாதிமூவருக்கும் - ஏவல்செய்யக்கூசினோர்முதலா
னவர்படுந்துயரநாலுசெய்யுளாலுணர்த்துகின்றார்

தேசிகர்க்குந்தேவர்க்குஞ்சிறப்புடையவருந்தவர்க்குங் ※
கூசினரையேவலுக்குக்கொதித்தமனக்கோணினரைத் ※
தூசினையும்பிறர்மனையிற்றேட்டெடுத்தசோரரையும் ※
பாசமுறவுறப்பெவற்றும்பிண்டமெனப்பந்தித்தே ※

எ - து குருலிங்கசங்கமாகியமூவர்க்குமேவல்செய்யக்கூசினவர்களையும் அவர்களைக்கோபித்தபொல்லாதமனத்தையுடையோர்களையும்புடைவைதிருடின சோரரையும்யமதூதர்கள்தமதுபாசக்கயிற்றினாலேயவர்களவையவங்களெல்லாவற்றையுங்கூட்டிக்கொட்டைக்கட்டாகக்கட்டி எ - று (௫௫)

எறிந்தருந்தவிருப்புமயத்தும்பிகளையேவிடுவர் ※
செறிந்திடவுஞ்செந்தழலிற்செலுத்திமிகவொறுத்திடுவர் ※
பிறிந்திடவுஞ்செந்தழலிற்பெய்திடுவர்நையவுள ※
முறைந்துருகக்காரீடவழலிடையுமுறுத்துவரோ ※

எ - து வெளி - காரீடவழல் - வறளித்தழல் (௫௬)

கூட்டிடுவருமியழற்குங்கொடிதாயவதுதன்னின் ※
மீட்டளைப்பர்சரசரத்தவெட்டியகற்பாறையினு ※
மூட்டிடுவரனைத்துமுடலிடையேயுறபவித்துத் ※
தேட்டுடையவினைக்கிருமியனைத்தினுக்குஞ்சிறப்புறவே ※

எ - து வெளி - உற்பவம் - உண்டாக்குதல் (௱௫௭)

அழுத்திடுவர்கிருமிசெறியவக்குழிக்குமதன்மீட்டே *
யுழுத்ததசைக்குழியுள்ளுமுறுத்திமிகவொறுத்திடுவர் *
வழக்கறவேபொருகிரியி னிடைநெருக்கிவருத்திடுவ *
ரழற்குழியினதோமுகமாவழுத்திடுவரவர்தமையே *

எ - து வெளி - உழுத்ததசை - நாற்றமாங்கிசம் - பொருகிரியினிடைநெருக்கல் - இரண்டுமலையினடுவேநெருக்கல் - அதோமுகமாவழுத்தல் - தலைகீழாகப்போடுதல். (௱௫௮)

பரிவோடன்றியிடுவோரதுபரான்னத்தைப்பொசித்தோர்
படுந்துயரமுணர்த்துகின்றார்.

அழலொழுகுமிருப்புண்டையவை விழுங்கவடித்திடுவர் *
ஒழுகியிடவுதிரவெளங்கசையாலுமொலித்திடுவர் *
பழுதுறவேபராமதியாதிடுசோறுண்பரிசிலரை *
யழுதழுநுகதறியவர்வீழ்ந்திடத்நாதுவரநிர்த்தே *

எ - து வெளி (௱௫௯)

ஆலயமுதலியவற்றுள்மலவிசர்க்கமுதலியசெய்தோர்
படுந்துயரமிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

ஈசர்திருவாலயத்துமிடர்கடியும்புனற்றடத்தும் *
வாசமலர்த்திருநந்தவனத்திடையுமடத்தினுளும் *
மாசுகளைந்தருந்தியனமைதுனமற்றையதொழிலுங் *
கூசமறப்புரிகின்றகொடியாரைமிகக்கொதித்தே *

எ - து வெளி - மாசுகளைதல் - மலவிசர்க்கமுதலியனசெய்தல், மற்றைய தொழில் - சயனாதிகள் - கூச்சம் - கூசமெனக்குறுகியது. (௱௬௰)

இக்கெனவேசெக்கிடையிட்டியந்திரிப்பர்யமதூதர் *
துக்கமுறநரகவிதமெனைத்தனைத்துந்தொகுத்தொறுப்பர் *
உக்கிரவாரழனிரையத்தொடுக்கிடுவருருகிவிழத் *
தக்கநிர்மதியளவுமவரதனிற்றவிப்பாரே *

எ - து வெளி - உக்கிரவாரழனிரையம் - குரூரமாகியஎரிவாய்நரகம் (௱௬௧)

ஆசாரியனைநிந்தனைபண்ணக்கேட்டிருந்தவர்களுஞ்சிவயோகிகள்
தபோதனரிவர்கட்கபராதம்பண்ணினவர்களுமனுபவிக்குந் துயர
த்தையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்,

குரவனையுநிந்தனைகள்கூறியிடக்கேட்டார்த ※
மிருசெவியிற்றுளையுறவேயெரியிருப்புமுளையறைவர் ※
உருகியதாமிரமற்றுமொழுக்கிடுவரவற்றுளுறப் ※
பருவரலுற்றிடநிரையவிதத்துமுறப்பதிப்பாரே ※

எ - து வெளி - பருவரல் - துக்கம் (௱௬௨)

உற்றிடுவர்செவிப்புலத்தினுறு துயரமெனைத்தனைத்து ※
மற்றுமுளவிந்திரியத்தபராதமருவினர்க ※
ணெற்றிவிழிநிருமலனைநினைந்துலகவியற்கையினை ※
யற்றவருந்தபோதனர்க்கும்புரிந்தாருமபராதம் ※

எ. து அந்தவாசாரியர்க்குமற்றுமுள்ளகண்முதலியவிந்திரியங்களிலுலேயப
ராதம்பண்ணினோர்களுமுதற்கட்செவிப்புலத்தினுக்குக்கூறிய துயரமெத்தனையுண்
டத்தனையுமந்தந்தவிந்திரியங்களிலேயனுபவிப்பர்கள், உலகவியற்கையையொழித்
துச்சிவத்தியானம்பண்ணியிருக்கும்ஞானிகளுக்குஞ்சாதகர்முதலியதபோதனர்க்
குநிந்தைமுதலிய வபராதம்பண்ணினவர்களுங் குருநிந்தைசொல்லக் கேட்டிருந்
தோர்க்குச்சமமாகஅனுபவிப்பர்கள் எ. று (௱௬௩)

பிறர்மனையாளையிச்சித்துத்தீண்டினோர் துயரமுணர்த்துகின்றார்

மற்றொருவன்மனையாளைவாஞ்சையுறப்பரிசித்த ※
குற்றமறக்கூரழல்வாய்ச்சூசியினாற்குத்திடுவர் ※
முற்றுமுடற்றாமிரத்தின்முழுக்கனலுமொழுக்கிடுவர் ※
மற்றுமுளநிரையவிதத்தினுமழுத்திவருத்துவரே ※

எ து - வெளி (௱௬௪)

பிறர்மனையாளையிச்சித்துவிகாரத்தாற் பார்த்தோரையமதூதர்கள்துய்ப்
பிக்குமுறையுணர்த்துகின்றார்

மனமுருகவிழிகுளிரவாஞ்சையுறப்பார்த்திடினு ※
முனமுளாத்துயரவிதங்கண்டனிலுமுற்றுவிப்பர் ※

நினைவரியவர்தொலையநிலைமைபிணைநீங்கினர்க்குத்
துணியதனைமுறையுறவேதுய்ப்பிக்குந்தூதுவரோ

எ. து. வெளி. கண்டனிலுமென்றவும்மையாற்சரீரத்திலுமெனவறிக (௨௬௫)

ஆசாரியனைக்கோபத்திலேகண்சிவந்தேறிட்டுப்பார்த்தோனையுஞ்சிவ
பூசையக்கினிகாரியமதிதிசற்காரமிவைசெய்யாமற்போசித்தோனையும்
யமதூதர்கள்துய்ப்பிக்குமுறையைமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

எற்றியிடவிணைப்புருவமிரத்தவரிவிழியிரண்டும்
பற்றிடப்பரிவொழியக்குரவனுருப்பார்த்தானை
யெற்றியிருவிழிமுழுதுமெரிவிரவுஞ்சூசியினை
யுற்றுறுத்திக்காரவழலொழுக்கிடுவருணர்வறவே

எ. து. வெளி. இரத்தவரி. செவ்வரி (௨௬௬)

பஞ்சவிதலோகவழற்பதைத்தலறக்கவிழ்த்தொறுப்பர்
நஞ்சழியமனமவனைமற்றைநரகினு௷விப்பர்
துஞ்சிருளினடமாடியடிப்பூசைதுடங்காதே
யஞ்சியழலோம்பாதேயதிதியையருந்தாதே

எ. து. வெளி பஞ்சவிதலோகம்-யாதெனில். சூ. பொன்னும்வெள்ளியுஞ்செம்
புமிரும்பும். அன்னவீயமுமைவகைலோகம். துஞ்சிருள்சங்காரகாலம் (௨௬௭)

அருந்தினர்கணுவிலிடைபடலொழுகுமிருப்பாணி
பொருந்திடவொருநூறுபுதைத்திடுவர்பதைத்தலற
வருந்திடக்காரவழலுடன்முழுதும்வார்த்திடுவ
ரொரிந்தொழுகுதாமிரமுமிறைத்திடுவரிளைப்புறவே

எ. து. வெளி (௨௬௮)

சிவனதுநந்தவனத்துப்பூவையெடுத்துமுடித்துமுகந்தோனைத்துய்ப்பிக்
குமுறையையுணர்த்துகின்றார்

இணையிலிநந்தனவனத்துளிணரார்மணமலரை
யெணமிழந்துபறித்துமுகந்தெழிலுறவேமுடிக்கணியிற்

றிணமுடையவழுவிருப்புமுளையறைவரவர்சிரத்தின் ❊
மணமுகந்தநாசியினுங்காரமுதல்வார்ப்பாரோ ❊

எ - து . வெளி

(௱௬௯)

சிவன்முதலாயினோரையுஞ் சிவாகமத்தையுந் தூஷணம்பண்ணினோர்களை யமதூதர்கள்துய்ப்பிக்குமுறையை மூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

அமலனையுங்குரவனையுமமலனுக்கேயாட்பட்டுத் ❊
தமலமறத்தவஞ்செய்யுந்தகுதியர்களவர்தமையு ❊
நிமலனுரையதுதனையுநிந்தித்தாரவர்வாயுட் ❊
டுமிலமுறவிருப்பாணியழலறைவர்துயருறவே ❊

எ - து . வெளி . துமிலம் , ஆரவாரம்

(௱௭௰)

தந்தத்தினிடைதோறுமதரோட்டமவைதனினுஞ் ❊
சிந்தச்செங்குருதிவெள்ளஞ்சிரத்திடையுமுரத்திடையுஞ் ❊
சந்தித்தவிடைதோறுநாசியினுந்தழலொழுக ❊
வெந்துற்றவிருப்புமுளையறைந்தொறுத்துவெறுப்பாரோ ❊

எ . து . வெளி

(௱௭௧)

ஒழுக்கிடுவரழற்காரருடன்முழுதுந்தாமிரத்தி ❊
னழற்சொரிவர்மற்றுமுளவல்லலெலாமருத்திடுவர் ❊
பழித்திடுவர்நிரையவிதமனைத்துமுறப்பதைக்கவுடற் ❊
றொழிற்பலத்தைமுறையுறவேதுய்ப்பிக்குந்தூதுவரோ ❊

எ - து வெளி

(௱௭௨)

கையினாலேபிறர்பொருள்கவர்ந்தோரையும்பிராமணர்வடிவிலுஞ்சிவனுக்குக்கருதியபதார்த்தங்களினுஞ்சிவாகமத்தினுமறந்தாயினுந்தமதுகால்படச்செய்தோரையும்யமதூதர்கள்துய்ப்பிக்குமுறையையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

அன்னியர்தம்பொருள்தனையங்கையினாற்பற்றிடினு ❊
மன்னுபுகழ்விப்பிரர்தம்வடிவிடத்துமறந்தேனுந் ❊

தன்னுடையபசம்படினுஞ்சங்கரர்க்குக்குறித்தபொரு ※
ளின்னிசையவாகமமென்றியம்பிபிடுமிவைதவறினும் ※

எ . து . வெளி

(௱௭௩)

கரமதனிற்பதமதனிற்காரவமுற்கவிழ்த்திடுவெ ※
ருருகியதாமிரத்தினையுமொழுக்கிடுவர்வழுக்கறவே ※
நிரையவிதமெனத்தனைத்துமுணர்வறவேநிறுத்திடுவர் ※
கரவினையும்பதவினையுங்கட்டதரங்கட்டதரம் ※

எ – து – வெளி . வழுக்கு . நீக்குதல் – கட்டதாம் . மிகுந்தகொடுமை (௱௭௪)

சிவாலயமுதலியவற்றின்மலமூத்திராதிகளைவிட்டோரையமதூதர்கள்து
ய்ப்பிக்குமுறையைமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

ஈசர்திருவாலயத்துமெழிலுறுநந்தனவனத்து ※
மோசகனைமலமதனைமூத்திரமுமுரணழித்துக் ※
கோசமதிற்பீசமதிலயோமயத்தகுறுந்தண்டா ※
லோசையுறநமன்றூதர்நருக்கிமிகவொறுப்பாரே ※

எ – து – வெளி . அயோமயத்ததண்டு – இருப்புத்தடி

(௱௭௫)

அனலொழுகுஞ்சூசிபலவழுத்திடுவரவைதன்னிற் ※
கனலொழுகுமயோமயத்ததண்டமதிற்கண்டகமு ※
மினலுறவேகுதத்தியற்றிச்சிரத்தின்மிசையெற்றுவெற்றி ※
கினைவழியவலிதொலையத்துயரவிதநிறுத்துவரோ ※

எ . து . வெளி . கண்டகம் . முள் – இன்னல் துக்கம் அதனையினலென்றது
டைக்குறை

(௱௭௬)

கனலனையகாரவமுலவைதன்னிற்கவிழ்த்திடுவ ※
ரனலொழுகுதாமிரமுமலமிடவேசொரிவார்க ※
ளினையதுயர்மற்றுமுளவிந்திரியத்தியற்றிடுவர் ※
வினையவலமவற்றாலும்விதியிகந்துவிளைத்தவர்க்கே ※

எ . து . வெளி . மற்றுமுள்ளவிந்திரியம் எ – து . மற்றைய தென்பது . சுட்டிய
தற்கினம்– என்பதனால்வாக்குமுதலியதெனவறிக

(௱௭௭)

இயமதூதர்கண்மிகவுந்தனதானியங்களைப்படைத்திருந்தமறஞ்செய்யா
தோரைவேதனைப்படுத்துமுறையை யேழுசெய்யுளாலுணர்த்துகின்றார்

தனமிகுதிதரித்திருந்துந்தானவினைபுரியாரை ※
மனைதனிற்செஞ்சாலிமிகவுளராயும்வறியார்வந் ※
தனமுளதேயெனவிரந்தவதிதியரையருத்தாதே ※
தனியிருந்துண்ணவலரையுந்தண்டதூதரன்றமர்தாமே ※

எ - து இயமதூதர்கள்மிகுந்ததிரவியத்தையுடைத்தாயிருந்துந்தானதன்மங்களைச்செய்யாதோரையுந்,தம்முடையமனையின்கட்செஞ்சால்முதலியவெகுதானியமுண்டாயிருக்கவும்பசிமிகுதியால்வந்தாகாரம்வேணுமெனக்கேட்டவதிதிகளைப்பொசிப்பியாமற்றானேதனித்திருந்துபொசிக்கும்பொல்லாதவர்களையும் எ-றாஎ-து

அறைந்திடுவர்கூரியவாயிருப்புமுளையவர்மிடற்றுட் ※
புறம்புறமவ்வாணிவளைச்சிருங்கலையைப்பூட்டிடுவர் ※
சிறந்தவயவிருதம்பத்திடைக்கணையிற்செறித்திடுவர் ※
பறந்திடவேபதம்பாணிபக்கமுறப்பரிற்றுவரோ ※

எ - து கூரியவாயினையுடையவிருப்புமுளைகளையவர்கள்கழுத்தினுள்ளேயிறங்கவடித்துப்புறம்பேபொருந்தியவந்தவிருப்பாணிவளையத்திலேசங்கிலியைப்பூட்டியிரண்டிருப்புத்தூணைநாட்டியதன்மேலேயுத்திரத்தைப்போட்டதனடுவே நாறுவருஷங்கிடக்கும்படிக்குக்கட்டித்தூக்கிக்காலுங்கையுமிரண்டுபுறத்திலும்பறக்கத்தக்கதாகவிடுவர்கள் எ - று சிருங்கலை - சங்கிலி. (௱௯௬)

சிரத்தறைவர்குளத்தறைவர்திறந்துறவாய்தனிலறைவ ※
ருரத்தறைவர்பதத்தறைவரொள்ளமுற்கூரிருப்புமுளை ※
கரத்தறைவர்வருத்தமுறக்கசிந்தன்பாற்கடும்பசியி ※
லருத்தியிடாதருந்தவரையருந்தியதீவினையறவே ※

எ - து வெளி (௱௯௭)

வாக்கதனைக்கிருமிபலமண்டியுணவயத்துண்டக் ※
காக்கைபறித்தருந்திடமற்றுமுளகடுந்துயர ※

மாக்கிடுவர்நாக்கினடுத்துளைத்தழன்றவயத்தொடரால் *
வீக்கியதிபாரவிருப்புண்டைபலவிடுவாரே *

எ - து வெளி - கிருமி - புழு - அயத்துண்டக்காக்கை - இருப்புமூக்கையுடையகாக்கை - அயத்தொடர் - இருப்புச்சங்கிலி - வீக்குதல் - கட்டுதல் ௱௮௧

கட்டிடுவர்பீசத்துங்கோசத்துங்கடியதொடர் *
விட்டதனைநான்றிடவேவியனிருப்புக்கட்டியினைக் *
கட்டிடுவரதன்மூடிவிற்கரத்துமிவற்றிரட்டிரட்டி *
கிட்டிரணைகிதியுதவக்கருதாதநெஞ்சனையே *

எ - து இயமதூதர்கள்திரவியத்தைத்தன்மத்தின்கட் செலுத்தவிசாரியாத நெஞ்சினையுடையகொடியபாவிகளது பீசத்திலுங்கோசத் திலுமிருப்புச்சங்கிலியைக்கட்டிவிட்டதனுனியிலே முற்கூறியவிருப்புண்டைகளிலிருமடங்குகனமுள்ள விருப்புக்கட்டியைக்கட்டி நாலவிடுவார்கள் அதற்குபின்பு கைகளிலுமிருப்புச்சங்கிலியைப்பூட்டி நான்மடங்கு கன முள்ளவிருப்புக் கட்டி யைக்கட்டிவிடுவர்கள் எ - று

(௱௮௨)

அரிந்தரிந்தேயவராகந்திலமெனவேயருத்திடுவர் *
சொரிந்திரத்தங்குடித்திடவுஞ்சொல்லிடுவர்சூசியிலே *
லெரிந்தொழுகுங்காரவறலிறைத்திடுவர்தாமிரமுஞ் *
சொரிந்திடுவரழலொழுகுந்தயிலருமபின்சொரிவாரே *

எ - து இயமதூதரானோரந்தப் பாவிகள்சரீரத்தை எள்ளுப்போலவரிந்தனைத்தின்னச்சொல்லுவர்கள்,அஃதன்றி சூசியினாலுமவர்கள் சரீரத்தைக்குடைந்திரத்தத்தையேற் றுக்குடிக்கச் சொல்லி யந்தப்புண்வாயிலே யக்கினிச்சுவாலைபோன்றகாரநீரையுமிறைத்துச்செம்பினையுமுருக்கிவிடுவர்கள்அதற்குப்பின்யெண்ணையினையும்நெருப்புப்போலக்காய்ச்சிவிடுவர்கள் எ - று

(௱௮௩)

அதிதூரவழலிடையுமழுத்திடுவரதன்பின்பு *
கொதியாமற்றையநிரையத்துயரனைத்துங்கொடுத்திடுவ *
ருதராங்கிதனைமிகவுமூதிப்பித்தேயொறுத்திடுவ *
ருதகாசையுறத்தபனவழலினையுமூதிப்பிப்பார் *

எ - து இயமதூதர்களானோர் அந்தப்பாவிகளைமிகுந்த ஆழத்தினை யுடைய

வெரிவாய்நரகத்தினுமற்றுள்ளபொங்காநிற்கிற நரகங்களிலும்போட் டுத்துக்கங்க ளெல்லாவற்றையுமுறுவிப்பர்கள்,பின்புஅதிதிகள்பசித்திருக்கப்போசித்திரொன்றவ ர்களுதரத்திலேமிகவும் பசியையுண்டாக்கித்தண் ணீர்மேலாசையுண்டாக்கும் வ ண்ணந்தாகத்தையுமுண்டாக்கிவாதைப்படுத்துவர்கள் எ - று

தபனவழல் - தாகம் (௱௩௰௪)

நரகயாதனைகளையளவிடப்படாதென்று முடித்துணர்த்துகின்றார்

ஒருநிரையத்துயர்பலவேயுரைப்பனவோவுரைத்திடினு ※
நிரையவிதமனைத்தினுக்குநிரந்ததுயர்நிச்சயித்து ※
வருடமொருசதமுறினுமதித்துரைக்கவலரிலரோ ※
யருநிரையக்கடற்றுயரப்பெருவெளத்துக்களவுண்டோ ※

எ - து ஒவ்வொருநரகயாதனையைவிசாரிக்குமிடத் தனந்தமாயிருக் குமதனை ச்சொல்லப்படுமோ சொல்லுமிடத்து நரகங் களெல்லாவற் றிற்கும் பொருந்திய யாதனையையளவிட்டுநூறுவருடஞ்செல்லினும்அமைத்துச் சொல்வல்லவர்களில் லையே,ஆதலாலுரைத்தற்கரிதாகியநரகக்கடலிற்றுக்கமாகியபெரு வெள்ளத் துக்கு முடிவுண்டோமுடிவில்லை எ - று (௱௩௰௫)

நரகயாதனையினதிசயமுணர்த்துகின்றார்

வேதத்திணுகமத்தின்விதியிகந்துவிடுத்தார்கள் ※
வாதிக்கப்படுவரவற்றனைத்தினுந்தாமரியாரும் ※
மேதைக்குண்மாதுரியர்கேட்டவுடன்வீவொனப் ※
போதிக்குங்கடுந்தழலிற்கொடுவினையார்புகுவாரோ ※

எ - து வேதாகமங்களிலேகற்பித்தவழிநடவாததனையிகந்துவிட்டோரிங்ங னங்கூறிய நரகவிதங்களெல்லாவற்றினும் யமதூதர்களாலேவாதைபண்ணப்படுவ ர்கள் அங்ஙனம்வாதைப் படினுஞ் சாகவுஞ்செய்யார் புத்தியினுலேமிகவுங் கூரிய ராஞேரிந்தயாதனையைக்கேட்டமாத் திரத்திலேதானே சாவரொன்றவேதாகமங்க ள்சொல்லுமாதலாலறக்கொடியதுன்பங்களைச்செய்யாநின் றவனல்போன் றநரக த்திலேயார்தான்புகுவர் எ று வீதல் - சாகுதல் (௱௩௰௬)

இயமதூதர்கள்நரகத்திலேகிடந்துவேதனையுறுமான்மாக் களுக்கு அவர்கள்முன்செய்தபாவங்களையெடுத்துக்கூறியறிவுறுத்துந்திறத் தைப்பதினொருசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

வித்தகனற்றுணையென்றுமதித்துவிரும்பீரோ *
பொத்தையுடற்பொறைநிற்குமெனப்பொய்புகன்றீரோ *
யொத்துமருற்றதுயக்கமயக்கமொழித்தாரோ *
மித்திரரைப்பரிவுற்றதன்மத்தைவிளைத்தீரோ *

எ - து வெளி-வித்தகன்-சிவன்-உமர்-சுற்றத்தார்-மித்திரர்-இட்டர் [௱அஎ]

யாதனையுண்டுகொலென்றுதுயங்கியிருந்தீரோ *
நாதனுமுண்டுகொலென்றுகயந்துநவின்றீரோ *
யோதனமுண்டுகொலென்றவர்தம்மையொழித்தீரோ *
வேதனைகண்டுவியந்துபயந்துவிழுந்தீரோ *

எ - து வெளி-உண்டுகொலென்பது-உண்டோவென்னுமையம்-துயங்குதல் அறிவுவேறுபாடு-கயத்தல்-தூடணம்-வியப்பு-அதிசயம் (௱அஅ)

கண்டகரோடுகளித்தறநீதிகறுத்தீரோ *
யுண்டொருதெய்வமுமென்றவர்தம்மையுவர்த்தீரோ *
யண்டர்தமாலயமாமரமற்றுமறுத்தீரோ *
மண்டனில்வாழ்வைமதித்தெளியாரைவதைத்தீரோ *

எ - து வெளி - கண்டகர் - துட்டர் - கறுத்தல் - நீக்குதல் - உவர்த்தல் கோபித்தல (௱அகூ)

பஞ்சகபாதகமன்றெளிதென்றுபயின்றீரோ *
நஞ்சனவெஞ்சொலைநற்றவரோடுநவின்றீரோ *
வஞ்சகநெஞ்சகமாதர்களிப்புமதித்தீரோ *
யஞ்சனவேல்விழியார்துறுகற்புமழித்தீரோ *

எ - து வெளி (௱கூ௰)

ஓரவழக்கினைமன்றிலிருந்துமுரைத்தீரோ *
யாரொதிரொன்றுமையேமிகமேன்மையறைந்தீரோ *
பாரொனவேபொறையாரையுநொய்மைபகர்ந்தீரோ *
நீரொனவேபிணியாரையும்வெல்லநினைந்தீரோ *

எ - து வெளி - நீரெனவேயினியார் - தண்ணீர்போலவினிமைசெய்யாநின்றசாத்துவிதகுணத்தையுடையவர்கள்.
[௱௯௧]

உற்றவிடுக்கணொழித்தவர்தம்மையுமோரீரோ *
மற்றவர்காணியுமெம்மதுவென்னமதித்திரோ *
சிற்றினமேயினமென்றுதெளிந்துசெறிந்திரோ *
மற்றினமொன்றிடினன்புமறுத்துமருண்டீரோ *

எ - து வெளி - சிற்றினம் - அற்பர் - மற்றினம் - பெரியோர் [௱௯௨]

ஆதுலருற்றிடினேசமவர்க்குமறுத்திரோ *
வாதவினோதிகள்வந்துறினாசையைவைத்திரோ *
யேதிலர்குற்றமெடுத்திளையாமலிசைத்திரோ *
சூதுபொருந்தொழினன்றெனவன்றுதுணிந்திரோ *

எ - து வெளி - ஆதுலர் - மிடியர் - ஏதிலர்-குற்றமில்லாதவர்கள் [௱௯௩]

ஊறறிவொக்குமெனாதுயிர்மெய்யையொறுத்திரோ *
வேறலவெம்முடலோடுமெனாதுமிசைந்திரோ *
பேறுணவல்லதுமில்லையெனக்கைபிழைத்திரோ *
சீறுதலேபொருளென்றுயிரன்புசெகுத்திரோ *

எ - து நம்முடையதேசத்திலேபுண்படில்நோமாறுபோலவல்லவோவவர்க்குமென்றுவிசாரியாமற்பிறிதுயிருடல்களைக்கொன்றீரோ, நம்முடையசரீரமுமதினுடையசரீரமும்பேதமல்லவென்றெண்ணாததனைவிரும்பித்தின்றீரோ, யிங்ஙனம்பொசிப்பதேபரமமானபேறல்லாமல்வேறில்லையென்றுதன்மநெறியைவிட்டீரோ, கோபமேமேலானதென்றுண்மாக்களிடத்துக்கிருபையையாதுவிட்டீரோ எ - று
மிசைதல் - பொசித்தல்.
[௱௯௪]

ஈயுமவர்க்கிடையூறுகடேறவிசைத்திரோ *
காயுமவர்க்கனுபந்தருமாயுள்களித்திரோ *
நோயுமுறப்பிறர்தீமையுடற்குநுவன்றீரோ *
தாயரியற்றியிடாவவலம்பலசொன்னீரோ *

எ - து ஒருவர்க்கொருவரொன்றையுகந்துகொடுக்குமிடத்தவர்கள்மனது

பேதிக்கவிக்கினங்களைச்சொன்னீரோ, யொருவனையொருவன் கோபிக்கும்போது வனைத்தடாமலதற்குடன்பட்டுச்சந்தோஷத்தையடைந்ீரோ, பிறர்சரீரத்துக்குவ ருத்தமுறப்பொல்லாப்புகளையேசொன்னீரோ, சுத்தான்மாக்களானோர்செய்யாத பொல்லாப்பைச்செய்தாரென்றுபலவாகச்சொன்னீரே - எ - று -
(௱௬௫)

அனுபந்தர்வடமொழி.

ஒழுக்குடையார[?]திமேதையர்தம்மையுமோராதே *
புழுக்கமழுக்குமனத்துறவெம்மைபுகன்றீரோ *
சழக்கெழுவாய்வினைவாதனையுற்றமைதன்றாலே *
யழற்குழியாங்களழுத்தவழுங்கியழிந்தீரோ (௱௬௬)

என்றழல்வாயழிவாரொடுதூதரிசைப்பார்க *
ளன்றறியோமிவையென்றவர்தாமுமயர்ந்தாழ்வா *
பொன்றுவரோவினைபோமளவுந்துயர்பூரித்தே *
நின்றுறுவார்முனைவல்வினையாவுநினைந்தேதாம் *

என்பன ஒழுக்கமுடையோரையுமிகுந்தவறிவுடையோரையுமவர்கள் மகிமை யை விசாரியாமல் உம்முடைய பொல்லாமனத்தின் கட்கமறுதலைப் பொருந்திக் கொடுமைகளைச்சொன்னீரோ,நீங்கண்மனக்கோணன்முதலியவற் றாலியற்றியபாவ த்தினது வாதனைபெலத்தாலே யழற்குழியாகிய விந்நரகங்களிலே யாங்களமிழ் த்தவிப்பொழுது வீழ்ந்தழிந்தீரோ யென்றிங்ஙனங்கூறிய பலவற்றையுமழல்வாய்ந் தநரகத்திலழிவாரொடுயமதூதர்கள்சொல்லுவார்கள்அந்தப்பாவிகளுடமன்றிதனையா றிந்தோமில்லையென்று சோர்ந்துவிழுவர்களிங்ஙனம்வேதனைப் படுகையினுமுயிர் விடுவரோ வுயிர்விடுவதுஞ்செய்யார்பின்பு தாஞ்செய்தபாவந்தொலையுமளவுந்துக் கத்தையே நிறையப்பொருந்தி முன் தாஞ்செய்த கொடுவினைகளெல்லாந்தம்மன த்தின்கணினைத்துஅந்நரகங்களிற்கிடந்துதுயருறுவர்கள் எ - று (௱௬௭)

அதிபாதகமுதலியபாதகத்தைச்செய்தோரனுபவிக்குங்கால
மொன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

உற்றிடுவெழுநான்குகோடியினுமொருவாதே *
பற்றியதிபாதகத்தைப்பரித்தார்கள்பாரினையு *

மற்றையவிண்டலத்திணையும்வாரிகொளுநாள்வரையு ※
முற்றுமதிபாதகத்துக்கிணையதனைமுடித்தாரும் ※

எ-து அதிபாதகத்தைச்செய்தோரும்,மதிபாதகத்துலியத்தைச்செய்தோருமிருபத்தெட்டுக்கோடி நரகத்தையும் பொருந்திப்பிரமப்பிரளயகாலமாகிய ஆயிரஞ்சதுரயுகமதனைவிட்டு நீங்காதழுங்குவர்கள் எ-று (௱௯௮)

இரவிமதியுள்ளளவுமிவற்றழுங்கிபிடுவார்கள் ※
பிரமவதைமுதலாயபிழைபுரிந்தபேதையர்கள் ※
விரிவிடுவர்பாதகத்தைவிளைத்தார்கள்பதினொன்றுட் ※
பிரமனொருபகற்பாதிமற்றையர்க்கும்பேசிடுவாம் ※

எ-து பஞ்சமாபாதகத்தைச்செய்தவர்களிருபத்தெட்டுக்கோடி நரகத்திலேசந்திராதித்தருள்ளவரையுங்கிடந்தழுங்குவர்கள்.பாதகத்தைச் செய்தவர்கள் பதினொருகோடிநரகத்திலே பிரமாவினது நித்தியப்பிரளயத் திற்பாதியாகிய ஐந்நூறுசதுரயுகமளவுங் கிடந்தழுங்குவர்கள். மற்றப்பாதகர்க்கு மேற்சொல்வாம் எ-று (௱௯௯)

பாதமுறப்பகலதனிற்பதினொன்றிற்பாதிதனில் ※
வாதையுறுவார்களுபபாதகத்தைமருவினர்கள் ※
பாதத்திற்பாதியுறமூன்றரையிற்பாவியர்கள் ※
கேதமுறும்பொழுதவலவினையனைத்துங்கெட்டிடுமே ※

எ-து உபபாதகத்தைச்செய்தவர்களேழுகோடிநரகத்திலே யிருநூற்றைம்பதுசதுரயுகமளவுங்கிடந்தழுங்குவர்கள் அதற் சுத்தண்ணிதானபாவத்தைச்செய்தவர்கண்மூன்றரைக்கோடிநரகத்திலே நூற்றிருபத்தைஞ்சுசதுரயுகமளவுங் கிடந்தழுங்குவர்கள்,இங்ஙனம்விதித்தகாலங்களளவுமதிபாதகமுதலியபாவத்தைச்செய்தவர்கள்.நரகத்திலேகிடந்துதுக்கங்களையனுபவித்துத் தொலையும்பொழுது அவர்களைத் தொடர்ந்துநின்றகொடிதானபாவமெல்லாம்விட்டுநீங்கும் எ-று (௨௱)

பாவிகளாரேனுமிங்ஙனம்நரகவிதங்களையனுபவித்து அக்காலந்தொலைந்தவாறேநரகசேடமனுபவிக்கும்படிக்குமீளவும்பூமியின்கண்வந்துபிறப்பரென்பதனையருளிச் செய்யாநின்றுக்கோதக்காவிசிட்டமாகவுணர்த்துகின்றார்,

வேறு

பாவபேதம்பயிற்றியபாவிக ❋
ளேவமாயநரகிடரெய்தியுந் ❋
தீவினைப்பலசேடமுஞ்சேரவே ❋
சேர்வர்முன்பயின்மண்மிசைத்திண்ணமே ❋

எ – று வெளி (உ௱க)

அடைவர்தாபரபேதமனைத்தையும் ❋
படர்வரங்குளதுன்பபலத்தினும் ❋
விடுவர்தாபரயோனியைவிட்டபின் ❋
றொடுவர்கீடவுருவுந்துரிசரோ ❋

எ – து இங்ஙனம்பூமியின்கண் வந்தபாவிகள்தாந் தாஞ்செய்த கன்மத்துக்கிடாகமுதற்கட்டாபரயோனிபேதங் களெல்லாவற்றையு மெடுத்தாண்டுள்ளதுக்கங்களெல்லாமனுபவிப்பர்கள் – பின்பந்தத்தாபரயோனியைவிட்டுப் புழுவாய்ப்பிறந்துதுக்கங்களையனுபவிப்பர்கள் எ – று (உ௱உ)

கிட்டியேநின்றகீடவுருவமும் ❋
விட்டுமற்றைவிகங்கவுருவினைத் ❋
தொட்டுநின்றதுயர்பலதுய்த்தபி ❋
னெட்டுவார்விலங்கின்னுருயாவையும் ❋

எ – து இங்ஙனம்புழுவாயெடுத்த யாக்கையைவிட்ட தற்றுவேறாகியபறவையுருக்களாயெடுத்ததிற்றுண்டாகிய துக்கங்களெல்லாமனுபவித்து தொலைந்தவாறே மிருகசாதிகளாய்ப்பிறந்தாண்டுள்ள துக்கங்களையனுபவிப்பர்கள் எ று (உ௱௩)

விட்டுநின்றவிலங்கினுருவினைத் ❋
தொட்டுளார்பசுவின்னுருத்துன்பமும் ❋
பட்டுளார்துயரம்பலபட்டபின் ❋
விட்டுளார்பெற்றமாகியமேனியும் ❋

எ – து பின்புமிருகசாதிகளாயெடுத்தயாக்கையைவிட்டுப்பசுச்சாதியாகிய வடிவையெடுத்தாண்டுள்ளதுக்கங்களெல்லாமனுபவிப்பர்கள், அங்ஙனந்துயரங்கள் பல

ற்றையுமனுபவித்துத்தொலைந்தவாறேயந்தப்பசுச்சாதியாயெடுத்தயாக்கையைவிடப்படுவர்கள் எ - று கு - ஆவும்பெற்றமும்பசுவுமானுங்கோவுங்கூடஞ்சுட்டுஞ்சாதிப்பொதுப்பெயரென்வறிக. [உ௱௪]

இனையயோனிவிதம்பலவெய்தியே *
துனியனைத்தையுந்துய்த்துநந்துரிசறு *
வினையினீங்கிமுன்னல்வினைமேவவே *
மனிதராகிப்பிறப்பார்கள்வாய்ப்பினால் *

எ - று இப்படியேதாபரமுதலிய யோனிபேதங் களையெடுத்து அந்தந்தச் செனனங்களிலுண்டாகிய துக்கங்களெல்லாவற்றையுமனுபவித்துப்பின்பு பாவசேடம் பொருந்திய தீவினையினின்றும் விடப்பட்டுமுன்னாட்பரிபாகப் பட்டநல்வினைப்பகுதியானது வந்துபொருந்தஅந்தநல் வினையினதுபெலத் தினாலேமானிடராகப்பிறப்பார்கள் எ - று (உ௱௫)

இங்ஙனமானிடசரீரமெடுத்தவர்களினதுஉத்தரோத் தரவிசிட்டமுதலியனவுணர்த்துகின்றார்

அரியமானிடயாக்கையடைந்தபின் *
பரமலோகபலத்தினைப்பற்றவு *
மொருவியேயுலகத்தசிவத்தொன்றவு *
மிருளைநீக்கவுமெண்ணிலரென்கொலோ *

எ - று இங்ஙனங்கிடைத் தற்கரிதாகிய மானிடயாக்கையைப் பெற்றவர்கள் மேலானசிவலோகத்துள்ள போகத்தைப்பொருந்தவும் அப்போகத்தைவெறுத்தாணவாதிமலத்தை நீக்கிச்சிவனோடயிக்கம் பெறவுமெண்ணுகிறார்களில்லையென்னைகொல்லோ எ - று (உ௱௬)

இதுவுமது

அரிதுமானிடயோனியவற்றுளு *
மரிதுபூசுராகையுமாகியு *
மரிதுநான்மறையாய்கையுமாசற *
வரிதுவாமொருமுத்தியடைகையும் *

எ - து தாபரமுதலிய வறுவகையோனியினுள்ளு மானிட யாக்கையையெடுத்தலேயரியது, அந்தமானிடருள்ளும் பிராமணவருணமெடுக்கையரிது, பிராமணவருணமெடுத்தாலும் நாலுவேதங்களையுங்குற்றமறவாராய்தலரிது, அதனையாராய்ந்தாலு மேலானபோகமோக்ஷங்களையடைதலுமரிது எ று (உ௱௭)

இதுவுமது

பெற்றுமந்தணராயபிறப்பினைக் ※
கற்றுநான்மறைவேள்விக்கருமமு ※
முற்றிவானவராகமுயல்கிலார் ※
குற்றமேபெரிதாகியகுற்றமே ※

எ - து மிகவுங்கிடைத்தற்கரிய பிராமணவருணத்தை யெடுத்தும், நாலுவேதங்களையு, மோதியும், யாகாதிகன்மங்களைப்பண்ணித் தேவர்களாயிருக்கும்படிக்கு விசாரிக்கிறார்களில்லை, யந்தப்பிராமணரிங் ஙனஞ்செய்யாத குற்றமே மிகுங்குற்றம் எ று (உ௱௮)

இதுவுமது

இந்தப்பாரதமெய்தற்கெளியதே ※
வந்துபாரதந்தன்னினுமானிட ※
ரந்தவானமடையுங்கருமமுஞ் ※
சிந்தியார்சிவன்சேவடிசேரவும் ※

எ - து இந்தப்பூலோகத்தின்கணுண்டாய நவகண்டப் பிருதுவிகளுக்கும் விசேடமான பரதகண்டத்திற்றோன்றிய குமரித்தீவிற்றோன்றுதல்கிடைத்தற்கெளியதே, யெளியதல்ல, அச்சிறப்பினையுடைய பரதகண்டத்திற் றோன்றியமானிடரானவர்கள்சற்கன்மத்தையனுட்டித்து மேலானசிவலோகத்தையடையவுஞ் சிவனுடையதிருவடித்தாமரையிலே பொருந்தவுமேன்றான் விசாரிக்கிறார்களில்லை எ று

ஏனையகண்டமெட்டுமிலேச்சதேசமாகையாலிப்பரதகண்டமே விசேடமாகச் சிறப்பித்தார். ஏகாரம் - எதிர்மறை (உ௱௯)

இதுவுமது

வேதநீதிவிளங்குமிவ்வெல்லையு ※
ளோதியுண்மையுணர்ந்துபிறொன்றிய ※

வாதிபாதமடையுமருந்தவஞ் *
சாதியார்தமக்கேவஞ்சர்தாமரோ *

எ - து இங்ஙனம்வேதாகமபுராணநீதிவிளங்கியவிக்குமரிகண்டத்திற்றோன்றிய மானிடரானவர்களந்தவேதாகமங்களை யோதியதனாற்பதிமுதலியவுண்மைஞானத்தையுணர்ந்துயிர்க்குயிராகிய சிவனதுதிருவடியையடைதலாகிய அரியதவத்தினைச்செய்யாராகையாலவர்கள் தம்முடையவான்மாக்களுக்குத்தாமேவஞ்சகராவர் எ று அரோ - எ - து அசை (உ௱௰)

இதுவுமது

ஈரும்வாளுயிர்க்கென்றறியாதெழு *
வாரமாகிவருந்தினமானிடர் *
தாரமாதியுந்தாமுநிலையென்றே *
கோரமாயகுழிவிழுவார்களே *

எ - து மானிடரானோர், ஞாயிறுமுதலாயேழுவாரமாகிவருந்தினத்தை யுயிரையீரும்வாளென்றறிந்து சடுதியிலே தன்மத்தைச் செய்யாமற்றமது சரீரத்தையுந்தமது மடவார்முதலியபொருள்களையும் நிலையென்றுகருதிப் பாவத்தையேசெய்து குரூரத்தையுடைய நரகக்குழியிலேவிழுவர் எ று (உ௱௰க)

இதுவுமது

அழியுமாக்கைகொடேயழியாப்பதங் *
கெழுவுவார்பெற்றதேநல்லகேள்வியு *
மழியுமாக்கைதனையழியாதென *
விழுவரோநரகக்குழிவெய்யரோ *

எ - து நிலைபேறில்லாதவாக்கை யினைக்கொண்டுநிலைபெற்றுள்ளமோக்ஷத்தைப்பொருந்துவோர்பெற்றகேள்வியே,நல்லகேள்வி,யழிகிறவாக்கையையழியாதுநெடுநாளிருக்குமென்று விரும்பியபொல்லாதவர்களே,நரகக்குழியில் விழுவர்கள் எ று (உ௱௰உ)

இதுவுமது

ஆக்கைதானிலையாதென்றறிந்துதம் *
வாக்கினாலரன்மந்திரமோதியே *

நோக்கினுலவன்மேனியைநோக்கியே ❊
பார்க்குள்வாழ்பவர் நன்பயன்பற்றினுர் ❊

எ-து இந்தமானிடயாக்கையானதுதீர்க்கத்துக்குநில்லாதென்றறிந்துஅமது வாக்கினுலேசிவனதுதிருநாமமாகிய பஞ்சாக்ஷரத்தையுச்சரித்துக்கண்ணுலே யவனதுதிருவுருக்களையும்புலப்படச்சேவித்திப்படிநாடோறுஞ் செபத்தியானங்களைச்செய்துபூமியின் கண்வசித்திருக்கும் அவர்களேமோக்ஷத்தையடைந்தவர்கள். எ-று [உ௱௰௩]

இதுவுமது.

இந்தநாட்டுள்விணைநன்கியற்றின ❊
ரந்தநாட்டிடையேபயனுர்வர்க ❊
ளெந்தநாட்டிடையுமிருப்பாரவ ❊
ரிந்தநாட்டுட்கருமமியற்றியே ❊

எ-து இந்தப்பூமிகளிலேகன்மத்தைவழுவாமற்செய்தோர்சுவர்க்கலோகத்திற்சென்றுண்டுள்ளபோகங்களைப்பொசிப்பர்கள் ஆதலாலவர்களிந்தப்பூமியின்கண்ணேதிரும்பவந்துசற்கன்மமாகியசிவபூசைமுதலியவற்றைச்செய்துசுத்தாத்துவபுவனமீறுயுள்ளபுவனங்களெல்லாவற்றினுஞ்சென்றுதிவ்வியபோகங்களையனுபவித்துக்கொண்டிருப்பர்கள் எ-று பிரகிருதிசம்பந்தத்தையிந்தநாடு - என்றார் - சுத்தாத்துவாவையந்நாடு - என்றார் - கன்மமென்பதனையிருபாலுங்கூட்டுக. [உ௱௰௪]

இதுவுமது.

பதிகர்தாமன்னபானத்தொடேசெலிற் ❊
புதியவெல்லையைபின்பொடுபுல்குவர் ❊
விதியினின்றவர்விண்ணுலகெய்தியே ❊
புதியபோகவிதமும்புணர்வரோ ❊

எ-து வழிபோமவர்கள்தமதுகையிலேயன்னபானாதியைக்கொண்டுபோயிலதனைப்புசித்துத்தாம்புதிதாகச்செல்லுமெல்லையைச்சுகத்துடனேயடைவர்கள், அதுபோலவேதாகமங்களிற்கற்பித்தமார்க்கத்திலேநின்றுசற்கன்மத்தையனுட்டித்தவர்கள் சுவர்க்காதியையடைந்துதமக்குப்புதிதாகியபோகபேதங்களைப்பொசித்திருப்பர்கள். எ-று (உ௱௰௫)

இதுவுமது

வேதநீதியைவிட்டவர்தாமிக ✻
வேதமாயநரகினையெய்துவ ✻
ராதலாலென்றுஞ்செய்கவறத்தினைக் ✻
காதலோடுநல்வாளிற்களிக்கவே ✻

எ - து வெளி- ஏதம் - துக்கம் - காதல் - விருப்பம். (உ௱௰௬)

சிவபத்தராஞேர்பாவஞ்செய்யினுநரகத்தில்வீழாரொன்
பதனையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

ஆதிநாதனமலனரன்றிருப் ✻
பாதமுன்னினர்பாவம்பயிற்றினும் ✻
வேதனைநரகக்குழிவீழ்வரோ ✻
நாதரோயமனிக்கவர்நாடிலே ✻

எ - து ஒருகாலத்திலேதோன்றப்பட்டவைகளுக்கெல்லாம்நாதனுமாய்நின் மலனுமயிருக்கிறசிவனதுசீபாதத்தைத்தியானம்பண்ணினவர்கள்,பாவத்தைச்செய் தார்களேயாயினுந்துக்கம்பொருந்தியநரகக்குழியில்வீழ்வரோவீழார்கள், அவர்க ளுக்குத்தொழில்யாதென்றுவிசாரிக்குமிடத்தியமலோகத்துக்கதிகாரியாயிருப்பார் கள். எ - று (உ௱௰௭)

முற்றக்காலமுருக்குங்கொடுந்தொழி ✻
லற்றுச்சங்கரனையும்புரத்தினைப் ✻
பற்றிப்பண்ணியபுண்ணியப்பாங்குறத் ✻
துற்றுவார்சிவலோகசுகோதையம் ✻

எ - து இயமபுரிக்குஇராசாவாயிருக்குங்காலந்தொலைந்தவாறேயக்கொடுந் தொழில்செய்யுஞ்சரீரத்தைவிட்டுச்சிவலோகத்தையடைந்துமுன்செய்தபுண்ணிய வியல்பைப்பொருந்தியந்தச்சிவலோகத்துண்டாகியபோகத்தையனுபவித்திருப் பார். எ - று [உ௱௰௮]

சிவஞானிகள்பாவத்தைச்செய்யினும்பாவபலத்தை
யுறாரொன்பதற்குவமைமுகத்தாலுணர்த்துகின்றார்.

வேறு

என்றுமிறையைத்தமகருத்துறவிருத்தா ※
நின்றவர்களீசனடியோடொருமைநின்முர் ※
துன்றுதுரிசோடுமவர்தோய்விலர்கணீர்தா ※
ஞென்றியிடுமோநளினபத்திரமதுற்றே ※

எ - து எக்காலமுஞ்சிவனையயிக்கமுறத்தியானம்பண்ணியிருக்குமவர்களே,சிவனதுதிருவடித்தாமரையைநீக்கமின்றிப்பொருந்தினவர்கள்அந்தஞாதாக்கணெருங்கியபாவத்தைச்செய்தார்களேயாயினும்பாவபலத்தையடையார், அஃதென்னெனில்தாமரையிலையானதுதண்ணீரோடு கூடியிருக்கவுமதனைக்கலவாதவாறுபோல எ - று (உ௱மகூ)

முடிந்ததையுணர்த்துகின்முர் வேறு

என்றுதிவிவாழ்வுநியையத்துயரிசைத்தான் ※
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் ※
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினைநைய ※
நின்றமுனியன்றுணரநிற்குணனினைந்தே ※

எ - து. வெளி திவி - சுவர்க்கம் (உ௱உ௰)

சிவத்துதி

வேறு

வடவரைவில்லெயவல்லவனேமண்புனன்மற்றையவல்லவனே ※
படவரவங்கையிற்பற்றினனேபத்தரைத்தீர்த்திடும்பற்றினனே ※
யடியிணைகாண்டற்கரியவனேயகம்பரமென்னுக்கரியவனே ※
விடையதன்மேல்வருவீரியனேவிக்கிரகமொன்றறவீரியனே ※

எ - து மகமேருவை வில்லாகவளைத்தெய்யச் சாமர்த்தியத்தை யுடையவனே மண்ணுநீருமுதலாயிருக்கிறதத்துவங்களல்லாமலதற்குவேறு யிருக்கிறவனே, படத்தையுடையபாம்பைக்கையிலேபிடித்தோனே, பத்தரானவர்கள்பாவத்தைத்தீர்க்குமன்பினையுடையவனே, வராகரூபியாய் மாயன்தேடவுங் காணுதற்கரிதாகியபாதாரவிந்தங்களையுடையவனே;அகம்பிரமமென்போர் நாக்கையரிகிறவனே, யிடபவாகனத்தின்மேலே யெழுந்தருளும் வீரியப்பாட்டை யுடையவனே, பிரமா விஷ்

க்கிறஞானசொரூபமாகியசிவதத்துவத்திலுண்டாகியநாதகலாபுவனத்திலேபோய்த்திரும்பிவாராமலிருக்கிறவாழ்வையெனக்குத்தருவோனுமாம் எ - று (உ௱௨௩.

அகத்தியர்துதி

மாறுமலாஎனவற்றியற்றிடுமாயாவிகாரவவப்பவக்கட ❊
லேறுதுயானெனவுற்றகுற்றமுமீசேசஞானமுமுற்றியுற்றிடும் ❊
வீறுனவேதகனித்தனுத்தமன்வேதாகமாதியெனைத்தனைத்தினு ❊
மாறுறுமாறுமதித்தகத்தினுளாறுதஞானவகத்தியற்கெனு ❊

எ - து வீறுகவறிவிக்கப்பட்ட நித்தியனுமா யுத்தமனுமாகிய சிவனருளியவேதாகமமுதலியநூல்களெத்தனையுண்டத்தனையும், வேதாங்கமாதியையு, முப்பத்தாறுதத்துவத்தினையுமுளத்தினுள்நிச்சயித்துநீங்காதஞானத்தினையுடைய அகத்தியமுனிக்கு, இடையறுமலடிமையென்றுஎன்னலானதுசொன்னமாத்திரத்திலே யெனக்குமாயையினின்றுநாறுவிகாரமாய்த் தோற்றப்பட்டவவலமாகிய செனனசாகரமும்வற்றியற்றிடும், யானெனதென்னுஞ் செருக்காகிய வாணவதோஷமும்பொருந்தாது, கடவுளர்க்கெல்லாங்கடவுளாகியசிவனதுஞானமுமிகுதி யாய்ப்பொருந்தும் எ - று (உ௱௨௪)

ஏழாவதுசுவர்க்கநரகவியலுரை முற்றும்



## எட்டாவதுசெனனமரணவியல்

மேலிவ்வோத்தென்னுதலிற்றோவெனின்ஓத்துநுதலியதூஉமோத்தினதுபெயருரைப்பவேவிளங்கும்ஆயினிவ்வோத்தென்னபெயர்த்தோவெனிற் செனனமரணதுக்கங்களைச்சொல்லுகையாற்செனனமரணவியலென்னும்பெயர்த்து, முற்கூறியவியலின்கட்சுவர்க்கநரகங்களின்முறைமையைக்கூறிச்சுவர்க்கநரகசேடத்துக்குச்சரீரமாகியது-எடுக்கவேண்டுகையாலதன்பின்னரிதனைவைத்தார், இதுவுணித்தலைச்செய்யுளென்னுதலிற்றோவெனிற், புண்ணியத்தாலும்-பாவத்தாலும்புண்ணியபாவத்தாலுஞ்-சரீரமெடுப்பதனைத்தொகுத்துணர்த்துகின்றார்.

பாதளக்குழியினாழும்பாவிகள்படிவந்தானு *
மீதலத்தடையுமேன்மைவிண்ணவருடலந்தானும் *
பூதலம்பொருந்துமற்றையுயிர்ப்பொறைதானும்பொற்றை *
மாதவவுதிக்குமாறும்வகையுறவறைகுவாமே *

எ - து வாராய், மலையபருப்பதத்திலிருக்குமகாதபசையுடையஅகத்தியமாமுனியேயாம், சுவர்க்கமடையுமவர்கள், மேன்மையானதேவசரீரமெடுக்குமுறைமையினையும், நரகத்திலழுந்தும்பாவிகள்யாதனாசரீரமெடுக்குமுறைமையினையுமிருவினைக்கிடாகப்பூமியின்கண்மற்றைமானிடர்முதலியதேகமெடுக்குமுறைமையினையும், வகுத்துச்சொல்வாம், அதனைநீகேட்பாயாக எ - று (௧)

அவைவகுத்துணர்த்துகின்றார்.

அருந்துயர்க்குழியினார் வாராகமேபாவத்தாலும் *
பொருந்தியபூதத்தாலேயிமைத்திடும்போதுதன்னுட் *
புரிந்துவிண்புகுவாராகம்புண்ணியத்தாலேயாகும் *
பொருந்தியபூதசாரத்தொருகணப்பொழுதுதன்னில் *

எ - து நரகத்திலழுந்துவோருடையதேகம், பாவபலத்தினாலேபஞ்சபூதத்தினின்றுமிமைப்பொழுதிலுண்டாம், சுவர்க்கமடைவோருடையதேகம் புண்ணியபலத்தினாலே பூதசாரத்தினின்றுங், கணப்பொழுதிலுண்டாம். எ - று (௨)

இருவினைக்கிடாகவெடுக்குமானிடதேகத்தையுநா
ல்வகைத்தோற்றத்தையுமுணர்த்துகின்றார்.

புண்ணியபாவத்தாலேபூதத்தின்பரிணமத்தான் *
மண்ணிடைமனிதராகமற்றையவடிவமெல்லாம் *
நண்ணிடுஞ்சராயுசத்தினரர்களுவிலங்குமற்றைத் *
திண்ணியகமடம்பாம்புசிறைப்புளுமண்டத்தேரும் *

எ - து இருவினையினாலேபூமியின்கண்மானிட தேகமும், விலங்கினதுதேகமும், சராயுசமாகிய பையினின்றுமுண்டாம், ஆமை - பாம்பு - புள்ளு. இவைமுட்டையினின்றுமுண்டாம். எ - று சிறைப்புளுமென்றவும்மையால் வல்லை-முதலை மீன் - அரணை - யுடும்பு - ஓந்தி - யிப்பி முதலியவையும் பறவைகளுங்கொள்க. (௩)

இதுவுமது

கிருமிகள்கீடமற்றுங்கசிவினிற்கெழுமித்தோன்று *
மரமெழுவாயவெல்லாமண்டனில்வாரிசேர *
விரவிடவனிலம்வெய்யில்விதத்தினும்விளங்கித்தோன்று *
மரியனவவற்றுளெல்லாம்யவைமுதற்சென்னலந்தம் *

எ - து புழு வெறும்புமுதலியவவைகள், வேர்வையினின்றும், நெருங்கியும் பவிக்கு-மரங் கொடி கிழங்கு முதலிய வெல்லாமண்ணின்கட்டண்ணீர்காற்றுவெயிலிவைகள் பொருந்துகையினாலே விதைகண்முதலிய வற்றினின்றுமுண்டாம், அங்ஙனங்கூறியவற்றுளெல்லா மரியன யவை முதல் சென்னலீருகிய நெல்லின்பேதம் எ று வித்தினுமென்றவும்மையாற்கொடியினுங்கிழங்கினும்வேரினுங்கொப்பினுங்கொழுந்தினுமிவைமுதலியவற்றினுமெனவறிக. (௬)

இதுவுமது

எண்ணிரண்டேகமென்றசென்னலேயிறுதியெல்லாம் *
நண்ணிடுபலபாகத்தினசித்திடுநாடுங்காலை *
மண்ணிடைமனிதர்க்கெல்லாமவுடதமாகவாய்க்குந் *
தண்ணியவுணவேமற்றைத்தானியவிதங்களெல்லாம் *

எ - து யவைமுதல்சென்னலீருகப், பதினேழுவகைநெல்லினையும், அறுத்துமடக்கியரிசியாக்கி நானாவிதங்களான பாகத்தைப் பண்ணவவைகள் நாசத்தையடையும், அதனைவிசாரிக்குமிடத்துப்பூமியின்கணுள்ள, வான்மாக்களுக்கெல்லாம் பசியென்னும் , வியாதிக்குஅவுடதமாகப் பொருந்தும் , மற்றை வரகு கேழ்வரகு சாமை-கம்பு-தினை-சோளமுதலான தானியங்களெல்லாஞ், சிறப்பினையுடைத்தன்றியதற்குத்தாழ்ந்த, உணவாயிருக்கும். எ - று (௭)

இதுவுமது.

தானியவிதத்தானருந்தண்டிலம்பிண்டிபேத *
மூனமிலோதனதிபுருமவர்றழனீரொன்ற *
மானிடரருந்தும்போதுவயினசயத்தின்வைகிப் *
பானமும்பருகப்பட்டுப்பக்குவாசயமும்பற்றும் *

எ - து இங்ஙனங்கூறியநெல்முதலாகிய, தானியவிதங்களினுண்டாகிய

வரிசையும், அதினின்றுமுண்டானமாவின்பேதமும், நீருடன்கூட்டியக்கினியிற்பாகம்பண்ணும்,அன்னம் - அபூபமுதலியவுணவின்பேதங்களுமுண்டாம், அவைகளை மானிடரானோர்,பொசித்துச்செலத்தையும், பானம்பண்ணிலவைகளைப்பஞ்சாசயத்துட்டலைமையாகியவயினாசயத்தைப்பொருந்திப்பின்புபக்குவாசயத்திலிறங்கும் எ - று. அபூபம் - அப்பம். (௬)

இதுவுமது.

பக்குவாசயத்தினன்னபானத்தைப்பிராணவாயுத் *
தொக்கிருகூறுசெய்யச்சொன்றிமேல்தோயங்கீழா *
மக்கியுமறலின்கீழேயாகலும்வாயுவங்கிப் *
புக்கிருபாகமாக்கப்பொருந்திடுஞ்சாரங்கிட்டம் *

எ - து. அங்ஙனம் - நாபிக்குமேலாயிருக்கிறபக்குவாசயத்தினிருந்த, அன்னபானத்தைப்பிராணவாயுவானதுபொருந்தியிரண்டுகூறாக்கியன்னமேலும், தண்ணீர்கீழுமாகப்பண்ணு, மந்தத்தண்ணீருங்கீழேநாபியினின்றுமொருநெற்பிரமாணம்; அக்கினியானதுபொருந்த, அதனைவாயுவானதுகுழற்கொண்டூதுகிறதுபோலேயக்கினியைச்சொலிப்பித்தவளவிலெங்குமொக்கவெந்துபாகமாயந்தவன்னபானஞ்சாரமெனவுங், கிட்டமெனவுமிரண்டாம், எண்ணெயும் - பிண்ணாக்கும் போலப்பிறியும். எ - று. ஆனைமுதலெறும்பீறுயுள்ளபிராணிகளுக்கு அக்கினிசொலிக்குமாறெங்ஙனமென்னில் - ஆனை - குதிரை - யொட்டகமுதலானவைக்கோரங்குட்டமாத்திரமுங்,கீழ்நோக்கிநீண்டவாலினையுடையபசுக்களுக்குமேனோக்கிக்குறுகினவாலினையுடையமிருகங்களுக் குமொருநென்மாத்திரமுங், காக்கை-கோட்டான் - கொக்குமுதலியவற்றுக்கோரெள்ளுமாத்திரமுங், கிருமிகீடமுதலியசெந்துகளுக்குஒருநெல்வாலினுனிமாத்திரமுமக்கினியானதுஉதரத்தினின்றுஞ்சொலிக்குமெனவறிக, இதனைவாகடத்தில்விரித்தறிக. (௭)

மேற்சொற்குத்தமுறையானேகிட்டம்பன்னிருபேத
மாமாறுணர்த்துகின்றார்.

நோக்கினுட்செவியின்மூக்கினெய்யனவழுக்கேயாயும் *
வாகுறுநாக்கிற்பல்லின்மிடற்றினுள்வழுக்கேயாயு *
நீக்கிடுமலநீராயுநிகழுகிரழுக்கேயாயு *
மாக்கையின்வேர்வதாயுங்குதகுயத்தலமாயும் *

எ - து கிட்டமானது கண்ணினின்றும் பீளையாயுஞ் - செவியினின்றுங் குறும்பியாயு - மூக்கினின்றுமழுக்காயும்வகுனித்தற்குண்டாகியநாவினும்பல்லினுமழுக்காயுமிடற்றினின்று கோழையாயும்புறம்பேவிடப்படாநின்றமலசலங்களாயுநகங்களிற்பொருந்தாநின்றவழுக்காயுஞ்சரீரத்தில்வேர்வையாயுங்குதகுய்யங்களில் வீளையாநின்றபொல்லாதவழுக்காயும்புறப்படும். எ - று (௮)

அன்னசாரம்பன்னிருபேதமாகப்பிரியுமுறையைமூன்று
செய்யுளாலுணர்த்துகின்றார்

பன்னிருபேதமென்னப்பழுதுடலுறப்பிற்பாறு *
மன்னியவன்னசாரமிரதையமலரின்வாய்த்துத் *
துன்னியநாடிதோறுஞ்சொரிந்திடுஞ்சமானன்றெருக்கும் *
பின்னையுமுடலாற்சாரம்பெற்றிடும்பாகபேதம் *

எ - து கிட்டமானது, முற்கூறியமுறையேபன்னிருபேதப்பட்டுப்பொல்லாதவுடலின் கண்ணுள்ளஅவையவங்களினின்றும்புறப்பட்டுப்போகாநிற்குஞ், சரீரத்தைப்பொருந்தியவன்னசாரமானதிரதையகமலத்திற்சென்றுசமானவாயுவினோடுகூடியுடலின்கணிறைந்த - எழுபத்திராயிரநாடித்துவாரங்கடோறும்பரம்பும் பின்னையுமந்தச்சாரம்பிராணவாயுவினாலேயுடலின்கணுஷ்டணத்தைப்பொருந்திப் பாகபேதத்தைப்பெறும். எ - று (௯)

பெற்றிடும்பாகந்தன்னிற்பிறந்திடுந்துவக்குத்தன்னி *
லுற்றெழுமுதிரந்தன்னினிணத்துடனுனுநிக்கு *
மற்றையநரம்புவாய்க்குமயிர்தசைதன்னினாடி *
யுற்றெழுநரம்பினென்புநாடியினுதிக்குமன்றே *

எ - து முற்கூறியபாகபேதத்தினின்றுந்தோலுண்டாம், அந்தத்தோலினின்றுமிரத்தமுண்டாம், அந்தவிரத்தத்தினின்றுநிணமிறைச்சியுண்டாம் அந்தவிறைச்சியினின்றுநரம்புமயிருமுண்டாம் அந்தநரம்பினின்றுமதற்கினமானநாடிகளுண்டாம்நாடிகளினின்றுமெலும்புண்டாம் எ - று (௰)

தோற்றிடுமூளையென்பிற்சுழலுநிதசமுந்தோன்றுந் *
தோற்றிடுமூளைதன்னிற்சுக்கிலங்கருத்தான்றோன்றும் *
பாற்றுசுக்கிலத்திற்பத்தாப்பாரிதன்பகத்திற்பாங்கா *
லேற்றமாமிரதசாரமிம்முறையீராறாமே *

எ - று அந்தஎலும்பினின் றுந்தசையுங்கமுமுண்டாம் அதன்கட் சுக்கிலமுமுண்டாங், காந்தன்பாரியைக்கூடியவளுடையயோனியில்விடப்பட்டாநின்றஅந்தச்சுக சுக்கிலத்தினின்றுங்கெற்பமுண்டாம் இங்ஙனஞ் சரீரமுண்டாவதற்குக்காரணமாகியஅன்னசாரமிந்தப்படியேபன்னிருபேதமாம் எ று தான்-அசை [௰௧]

மேற்சுக்கில சுரோணிதத்தால் ஆண் பெண் அலியா
மாறுணர்த்துகின்றார்

சுக்கிலமதிகமாகிளுணு முருவந்தோன்றுஞ் *
சுக்கிலங்குறைபிற்பெண்ணுஞ்சோணிதந்துலையேயாகிற் *
சுக்கிலத்தவிதான்மூன்றுந்தோய்ந்தவவ்விருவர்பாலு *
மெக்குணமிலங்குமக்கள்பாலுமக்குணமேயேயும் *

எ - று பூமானிடத்துண்டாகியசுக்கிலமதிகமாயின் ஆணைப்பிறக்கும், அந்தச்சுக்கிலங்குறைந்துபாரியினிடத்துண்டாகியசுரோணிதமதிகமாகிற்பெண்ணைப்பிறக்குஞ், சுக்கிலசுரோணிதமிரண்டுஞ்சமமாகக்கூடில் அலியாய்ப்பிறக்குஞ், அந்தச்சுக்கிலசுரோணிதங்களையக்காலத்துப்பிராணவாயுவானதுவந்து மோதியிரண்டாய்ப்பிறிக்கிலிரட்டை யாய்ப்பிறக்கும் அங்ஙனமிருவருங்கூடிய காலத்துச்சாத்துவிதமுதலியமுக்குணத்துளெந்தக் குணத்தைப்பொருந்தியிருந்தார்களந்தக்குணமேபிள்ளைகளிடத்துண்டாம் எ - று (௰உ)

ஆன்மாப்புரியட்டகரூபியாய்வந்துபிறக்குமுறையுணர்த்துகின்றார்.

அட்டகவுடலத்தோடேபுரிபிதாவருந்தன்னுதி *
தொட்டவுறுதாரந்தொக்குச்சுக்கிலத்துடனேதோன்றிப் *
பட்டனைபகத்தின்மற்றைக்கருப்பையிற்பதிந்துமுற்றிச் *
சட்டகமென்னத்தோன்றித்தரணியிற்றங்கிச்சாயும் *

எ - று ஆன்மாவானதிங்ஙனங்கூறியபுரியட்டகதேகத்தையெடுத்துப்பிதாவானவன்பொசிக்குமன்னபானத்துடனேசென்றுஅவனுசாத்தைப்பொருந்தியிருந்துஅவன்விடப்பட்டசுக்கிலத்துடனேமாதாவின்யோனியையடைந்ததற்கு வேறாகியகெற்பாசயப்பையிற்றரித்து - அவையவங்களெல்லாமுண்டாயொருவடிவாகப் பூமியின்கட் பிறந்து வளர்ந்துஇறக்கும் எ - று புரியட்டமாவது - கு - பா- வாய்ந்தமனம்புத்தியாங்காரந்தன்மாத்திரையுமாய்ந்தபுரியட்டகமென்றார் என்பதனுலறிக.
(௰௩)

ஆன்மாபூதசரீரத்தில்வருந்தன்மையுமதில்வாதையுறுந்தன்மை
யும்பதினொருசெய்யுளாலுணர்த்துகின்றார் வேறு

காந்தனிருதுமதிதன்னிற்கலந்துகலித்தசுக்கிலந்தான் *
றோய்ந்தபொழுதிற்சோணிதத்திற்றயக்கமுறவேயவள்பகத்திற் *
பாய்ந்துபயின்றகரணத்தாற்பண்டைவினையாற்பரிப்பெய்திச் *
சேர்ந்துநிற்குஞ்சீவனொருதினத்திற்குன்றித்திரளெனவே. *

எ - து புருடனானவன், தனதுபாரியைநாலாநாண்முதலியநாள்களிலேதான்பயின்றகரணத்தினாலேசற்புத்திரநிமித்தமாகக்கூட, அங்ஙனமுண்டானசுக்கிலமானது, அவள்சுரோணிதத்திற்றோய்ந்தபோதுசீவனானதுபொருந்தியவளுடையயோனியிற்சென்றுகெற்பாசயப்பையிற்றரித்துமுற்செய்தகன்மத்துக்கீடாக அவளாற்றுங்குதலைப்பொருந்தியொருகணத்திலிரண்டுதிரிசரேணுக்கொண்டபருமையாய்ஒருநாளிகைசெல்லிலொருபேனளவுவடிவாயிப்படியேறியேறியொருநாட்செல்லிற்குன்றிபோலத்திரண்டிருக்கும். எ - று [௰௪]

தினமோரைந்தினவ்வுருவந்தெண்ணீர்க்குமிழியெனச்சிறக்குந் *
தினமோரேழினிளவூறும்பருவஞ்செறிந்துதிரண்டிலங்குந் *
தினமீரேழிற்றிரளுறுநைய்ச்செந்நீர்பரந்துசெறிந்திலங்கும் *
தினமூவேழுமொருநான்குஞ்செறியப்பீசஞ்சிறிதுதிக்கும் *

எ - து வெளி - பீசம் - அண்டம் (௰௫)

சிரமேகளமேசிறுபுறமேதிரண்டுதிணிந்தமுதுகெலும்பே *
வருமேதின்மோராறைந்தின்மற்றையிரண்டாமாதத்தின் *
கரமேபதமேகடிதடமேகவிபாருசமேகனதாளே *
வருமேமாதமொருமூன்றில்வடிவிற்சந்திவகுப்பெல்லாம் *

எ - து வெளி - சிறுபுறம் - பிடரி - கடிதடம் - அரை - கவிபாருசம் - விலாப்புறம் - கனதாள் - உள்ளங்கால் - சந்தி - ஒன்றோடொன்றொட்டுநிலங்களிருபத்தெட்டு. (௰௬)

உதிக்கும்விரல்கள்சதுர்மாதத்தொளிசேர்முகநாசிகைகண்ணம் *
உதிக்குங்குய்யமுகிர்தந்தவொழுங்கூன்மாதமோரைந்தின் *

உதிக்குமோசைப்புழை கன்னத்துற்றமாதமோராறுள் *
உதிக்குமாதமோரேழுளுபத்தமிலிங்கமொளிபெறவே *

எ - து வெளி - உகிர்,நகம் - தந்தவொழுங்குன் - எயிறு - ஓசைப்புழை - செவித்துவாரம். (௰எ)

குதமுந்தோன்றுங்கொப்பூழுங்கூருஞ்சந்திபேதமெலா *
முறையமானவிருநான்குளுதிக்குங்கேசமுயர்சிரத்திற் *
றிதமேயங்கப்பிரத்தியங்கஞ்செறிந்தமற்றையுறுப்பெல்லாம் *
விதமாம்பிராணவாயுமுதலைந்தும்விரவிவிளங்கிடுமே *

எ - து - வெளி - கேசம் - மயிர் - அங்கப்பிரத்தியங்கம் - தலைமுதலிய வவையவங்கள் - பிராணவாயுமுதலைந்து - பிராணன் - அபானன் - உதானன் - சமானன் வியானன்ஆகவைந்து [௰அ)

அன்னையருந்துமாகாரத்தாறுசுவையுமடைவுறவே *
துன்னுநாபிசூத்திரத்தாலுதரத்திடையேதொகுமதனால் *
மன்னுமனநியவற்றாலுமாந்துந்துக்கஞ்சுகஞ்சீவன் *
முன்னைச்செயலுங்கனவெனவேமுளைக்கும்பிரியுமோகருவே *

எ - து மாதாவானவள், பொசிக்குமாகாரத்தில் ஆறுஇரதமடைவாக வரியினின்றும்வாய்க்கால்புறப்படு மாறுபோலக்கெற்பத்தினுபிசூத்திரத் துவாரத்தாலே போயதன்வயிற்றிற்பொருந்தும் அதனாலே மனம்புத்தியாங்காரஞ்சித்தமாகியகரணங்களுண்டாயவற்றாலேசீவனுனை துசுகதுக்கங்களையனுபவிக்கும்,பின்பூருவசெனனங்களிற்செய்த புண்ணியபாவங்களும் புத்தியின்கட்சொற்பனம்போலத்தோன்றும், அப்போதுஅதினிடத்துண்டாயஅஞ்ஞானமுநீங்கும் எ - று ஆறுசுவையாவன - தித்தித்தல் - புளித்தல் - கைத்தல் - துவர்த்தல் - கூர்த்தல் - காழ்த்தல் இந்தஆறுசுவையிலுமுண்டாவதுயாதென்னில் - மதுரத்தாற்சுக்கிலமுண்டாம்- புளிப்பினுல்மச்சைவளரும், உப்பினுல்எலும்புவளரும், கைப்பினுல் மேதையுண்டாம், காழ்த்தலினுற்றசையுண்டாம், துவர்த்தலினு லிரத்தமுண்டாம், இம்முறையேயுண்டாய்ப்பிள்ளைவளரும் (௰௯)

இறந்தேமுனமேயிளிப்பிறப்பேமென்றபிந்தமுறையினியாம் *
பிறந்தபொழுதேபிறவாதபெருமையுடையாரிந்நகளை *

யறிந்தேயவலப்பிறப்பிறப்பையறுத்துவிடுவோமவனருளாற் *
செறிந்தேகுரவன்றிருவடியைத்திகழ்ந்தவேதாகமந்தெருண்டே *

எ - து அக்காலத்தந்தக்கெற்பமானது முன்னே✠பூட்டையு நீரும்போலே யனேகஞ்செனனமெடுத் திறந்தோமின்னமும்பிறந்துதிரிவோம் அதனுல்வேதனை யேமிகவுமுண்டாம், ஆகையாலிக்கெற்பத்தினின்றும் பூமியிற்பிறந்தவாறே சிவனது திருவருளினாலே ஞானாசாரியனது திருவடியையடைந்து பிரகாசம்பொருந்திய வேதாகமங்களை யையந்திரிபுவிகற்பமறவுணர்ந்து ஒருகாலத்தினுந் தோற்றமில்லாத பெருமையினை யுடையசிவனது சொரூப சுபாவத்தையறிந்தவலமாகியபிறப்பை யொழித்துவிடக்கடவோமென்று விசாரித்திருக்கும் எ று (உ௰)

என்றென்றெண்ணியிருக்குமுயிரிடர்ப்பட்டழியுமெழில்வரைக்கீ *
ழொன்றுமொருவன்றனைப்போலக்கருப்பாசயப்பையுறுத்துதலான் *
மன்றவுததிமறிந்தாழ்வான்வருத்தமென்னவருந்தியிடு *
நின்றகருப்பாசயவுதகவெள்ளங்கொள்ளநிறையழிந்தே *

எ - து இங்ஙனமெண்ணிக்கொண்டிருக்குமுயிரானது, அந்தக் கெற்பாசயப்பையுறுத்துதலினாலே யழகியமலையின்கீழ் நெருக்கப்பட்டொருவன் றுயருறுமாறுபோல மிகவுந்துக்கத்தையுற்றுமனமழிந்துசோரும், அஃதன்றியுங்கெற்பாசயந் தநீராகியவெள்ளங்கொண்டு நிற்கையினாலே சமுத்திரத்தின்கண் மரக்கலத்திருந் தமிழ்ந்தினவன் றுயருறுமாறுபோலவுந் துக்கித்துப் புத்திமயங்கியிருக்கும் எ று (உ௧)

அங்கியதனிற்றங்கியிடுமயோமயத்தகும்பத்திற் *
றங்குமொருவன்றபன்ம்போற்றபண்மெய்நூந்தாயுதரத் *
தங்கிசுடவேயழலனையவாசியதனாலர்க்கத்தைப் *
பங்கித்திடவேபடுமிடரிலிருநாற்குண்ணிதம்பட்டழுங்கும் *

எ - து அந்தக்கெற்பமானது மாதாவினுடைய வுதராக்கினி சுடுகையினாலே தீயினின்று நீங்காமலிருக்கிற விருப்புக் குடத்திலே வைக்கப்பட்டவன் துயருறுமாறுபோலத் துக்கத்தையுறுகிற்கும் இஃதன்றியு மிருப்பூசியைக்காய்ச்சிச்சரீரத்தைத்துளைத்திடப்படுமவன் துயரத்திலெண்மடங்குதுயரத்தையுமுற்றமுழுங்கும் எ று (உஉ)

---

✠ பூட்டை இறைகூடை

கருப்பாசயமேகட்டதரமதனினதிகங்கடுங்காலு ॥
மூரிக்கமிகவுமோகமுற்றுமுன்னையுணர்வுமங்கிலையே ॥
மரிக்கவாலைக்கரும்பெனவேயோனிவழியின்வலிதொலைய ॥
நெருக்கப்பட்டுநிலமிசையேதோன்றுமுயிருனிலையுடனே ॥

எ - து இங்ஙனந்துயருறுகையாற்கருப்பாசயப்பையிற்கிடந்தனுபவித்தலேமிருந்ததுக்கம், அதனினுமதிகமாக ✠ வைட்டுணுவமென்னுங்காற்றும்பிரவேசித்துடலைமடக்கித்தலைகீழாகத்தள்ளுமாதலாலந்தக்கெற்பத்திலிருக்குமுயிரானது, தன்பெலமுங்கெட்டுமிகவுமயக்கத்தைப்பொருந்திமுன்னெய்ன்னகசென்மமெடுத்தோம், நாமினிப்பிறந்தாற்சற்கன்மத்தைச்செய்துமோக்ஷத்தையடையவேணுமென்றெண்ணியிருந்தவறிவுமிங்ஙனமயக்கத்தையுற்றவவதாத்திலேகெட்டு ஆலையினெருக்கப்படுங்கரும்புபோலமாதாவின்யோனியியந்திரத்திலேநெருக்கப்பட்டுச்சரீரத்துடனேபூமியின்கண்வரும். எ - று (உ௩)

சூக்கவுருவைத்தொட்டெழுந்ததூலவுருவைத்துதைந்தந்த ॥
வாக்கைதன்னையானென்றேயபிமானித்தேயறம்பாவ ॥
மாக்கும்பயனைமுறையுறவேயருந்திப்பின்னுமறம்பாவ ॥
மாக்கியானென்செருக்காலேயடங்கிப்பிறக்குமாருயிரே ॥

எ - து உயிரானதுசூக்குமவுடல்காரணமாகவுண்டானதூலதேகத்தைப்பொருந்தியந்தத்தூலதேகத்தைத்தானென்றபிமானித்துப்புண்ணியபாவத்தைச்செய்யும், அந்தப்புண்ணியபாவபலங்களைமேலெடுக்குஞ்சென்னத்திலடைவிலேயனுபவித்துப்பின்னுமதனாலுண்டாகியதேகத்தினால்யானெனதென்னுஞ்செருக்கினாலே புண்ணியபாவத்தையார்ச்சித்துஇறந்துபிறந்துழன்றுதிரியும். எ - று (உ௪)

இங்ஙனமுண்டாகியசரீரத்தின்கணுரோமதந்தமுதலியவற்றை
வரையறுத்துணர்த்துகின்றார்.

மூற்றுமுடலின்முளைத்தமயிர்மூன்றுகோடியரைக்கோடி ॥
மற்றுமுளவேநாடிகளுமதிக்கிலேனத்தேவாயதனுட் ॥

✠ வைட்டுணுவம்—வியானனென்னும்வாயு

பற்றிமுளைத்தபல்லெழுநான்கொருநான்கெனவேபார்த்திடுக *
வுற்றவுகிருமொருபஃதேகரத்திற்பதத்துமொருபஃதே *

எ - து வெளி மதிக்கிலனைத்தேயென்பதனான்மயிருக்குச்சொன்னமூன்றரைக்கோடியவ்வளவுநாடிகளுளவாம் - உகிர் - நகம் - பஃது - பத்து. (உரு)

நாடிமுதலியவுறுப்புக்களினளவையையாகமங்கடோறும்பேதித்துக்கூறுமென்பதற்குப்பரிகரித்துணர்த்துகின்றார்.

நாடியளவும்பிரளவுநாடின்மற்றையுறுப்பளவும் *
நாடவரியபராபரன்றானவின்றமற்றையனவுரையிற் *
கூடும்பேதமூழிதொறுஞ்சிருட்டிபேதங்கூடுதலா *
ஓடும்பொருள்களொப்பிலிதனுரைக்குமுண்டோவுணருங்கால் *

எ - து நாடிமயிர்முதலியவுறுப்புக்களினளவையைவிசாரிக்குமிடத்துத்தியானித்தற்கரியபராபரனாகியசிவனருளிச்செய்தவிதற்குவேறாகியவேதமுதலியநூல்களிலிந்தப்படியேயன்றிப்பேதமாகக்கூறும், அஃதுசங்காரகாலந்தோறுஞ்சிருட்டி, பேதித்துப்பேதித்துண்டாகையாலக்காலத்திற்றோன்றியநூல்களும்பேதித்துச்சொன்னதொழிந்துஒப்பில்லாதசிவனருளிச்செய்ததிவ்வியாகமங்களுக்குட்டம்முள்விரோதமுண்டோ அஃதில்லை - எ - று - வாகடத்திலேசுக்கிலமுழக்கென்றுமிரத்தங்குறுணியென்றுஞ்சுத்தரத்தநாழியென்றுங்கூறுங், கெற்போபனிஷத்திலேயெலும்புநூற்றிருபதுபலமென்றுஞ் சுக்கிலமிரண்டுபலமென்றும்மேதசுபன்னிரண்டுபலமென்றுங்கூறும். இப்படியாகமசாத்திரங்களிலேபேதித்துக்கூறினமையறிக.

(உசா)

இன்னுஞ்சரீரத்தின்றன்மையைமூன்றுசெய்யுளால்
விரித்துணர்த்துகின்றார்.

வேறு

உற்றவுடற்பித்தமுழக்குரியுடனேநாழி *
மற்றைமிடற்றுறுகபமும்வசைநிணத்தின்பலமைஞ்ஞான் *
குற்றகலிலப்பலமுமொருபஃதென்பறுபஃது *
மற்றுமிருநூறுமொருநூறுமுளமதிக்குங்கால் *

எ - து வெளி - கபம் - சேற்றுமம் - கலிலம் - செந்நீர் (உஎ)

ஒருபஃதேபலம்பித்தவுருவானமேதைக்குப் ※
பெரியபலமைஞ்ஞூறுபெற்றிடுமொருநூறு ※
முருகுதிரமிறுகுதிரமொருமூன்றுபலமாகு ※
மிருமூன்றுமிருமுன்றுமூளையினுக்கெய்திடும் ※

எ - து வெளி-மேதை-மாங்கிசம்-இறுகுதிரம்-கட்டியிரத்தம் (உஅ)

வீரியமுமாழாக்குவிளம்பியிடுமிவையெல்லா ※
மோரளவுபடவுணரிலுகிர்மயிரொன்பொடுமொன்றப் ※
பாரவுடற்குறுபலமுமாயிரமேபழுதாய ※
நீரினுக்குமலத்தினுக்குநிறைபில்லைநிகழ்த்துங்கால் ※

எ - து வெளி - வீரியம் - சுக்கிலம் (உக)

இங்ஙனமுண்டாகியதேகத்தையறிவுடையோர்நிலையெனக்கருதார்களென்பதனையுணர்த்துகின்றார்

பொல்லாதபுலையுடலைப்புழுப்பொதிந்தபோர்வையினை ※
யில்லாதநீரொழுத்தைநிகரிலிதன்றிருவாக்கைக் ※
கல்லாதார்பொருளெனவேகாண்பதனைக்கலந்தறிந்து ※
நல்லார்கள்பொருளாகவொருகணமுநாடாரே ※

எ - து - வெளி (௩0)

இத்தேகத்தினாலுண்டாகியகுற்றத்தையெத்தனைவகையினுற்சொல்லித்தூஷணித்தாலுமறிவில்லாதோரதனைநிச்சயம்பண்ணுவொன்பதனையுணர்த்துகின்றார்

தன்னுடலத்தருவருப்பைத்தானறிந்துஞ்சரீரத்து ※
ளென்னிருப்பாமெனத்துளங்கியிளையாதவிழுதைக்குப் ※
பன்முறையாலுடற்பழுதைப்பாடித்தும்பயனில்லைச் ※
சொன்னிலையிற்றுணிவாரோகாட்சியினிற்றுணியாரோ ※

எ - து - வெளி - துளங்கல் - கலங்கல் - இழுதை - மூடன்-பன்முறை - பலமுறை - பாடித்தல் - சொல்லுதல். (௩க)

மலபாண்டமாகியதேகத்தையாதுகாரணத்தினாலருவராமலிருக்கி
றதென்பதனைத்தூஷ்டாந்தவுவமைமுகத்தாலுணர்த்துகின்றார்

பொற்கடத்துண்மலம்பொருந்திற்புல்லியரும்பொருணசையா ※
லக்கடத்தைப்பற்றிப்பிடாரங்கையிறலவனிதனின் ※
மக்கடமதுடலினைத்தாமலபாண்டமெனவறிந்து ※
மெக்கணக்காலிகழாதேயருவருப்பற்றிருக்கின்றார் ※

எ - து - வெளி - கடம்- குடம்- புல்லியர்- அற்பர்- மக்கள். மனுஷர் (௧௨)

தேகத்துக்கெத்தனைசுத்தி பண்ணினாலுஞ் சுத்தமாகாதென்பதனை
யுவமைமுகத்தாலுணர்த்துகின்றார்

அருந்திடுனமிர்ததனைமலமாக்குமலவாக்கை ※
பொருந்திடுமோநலம்புனிததீர்த்தத்திற்பொருந்திடினும் ※
விரிந்தகருங்கம்பளத்தின்வெள்ளைநிறம்விளைந்திடுமோ ※
சொரிந்திடினுமான்பாலையொருபொழுதுந் துறவாதே ※

எ - து - வெளி - புனிதம் . சுத்தம் (௧௩)

மேல்அகச்சுத்தியின்மகிமைபுணர்த்துகின்றார்

அருவருப்பையாகத்தைச்சுத்திபணவார்வல்லார் ※
கரிசறுத்துமனமதனிற்கருதரியன்கழலடியி ※
லொருமைபுறலுயிர்ச்சுத்தியுவமனிலாப்பதமுதவுங் ※
குரவனருளியபரமவாக்கியத்தைக்குறிக்கொண்டே ※

எ . து அருவருப்பினையுடையசரீரத்தைச்சுத்திபண்ண வல்லவர்யார்தான் அங்ஙனஞ்சுத்திபண்ணவல்லபேரில்லாதபடியாலே யந்தத்தேகசுத்திவாராமையாலான்மசுத்தியும்பிறவாது, ஆகையாலான்மசுத்தி யுண்டாவதெங்ஙனமென்னில் இணையில்லாதமோக்ஷத்தைத்தருவோனாகிய ஞானாசாரியனுபதேசித்தமேலானவாக்கியத்தைநிச்சயமாகக் கொண்டுஉறவுபகையாசையாகிய தனதுகுற்றத்தைப் போக்கியாவருமனத்தானினைத்தற்கரியசிவனதுதிருவடித்தாமரையிலே யான்மாவையயிக்கம்பண்ணியிருத்தலேயான்மசுத்தியாவது எ . று (௧௪)

ஞானவான்கள்புறம்பெல்லாரோடொத்திருந்தாலு முள்ளம்வேறுபாடாயிருப்பரென்பதனையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

மனத்துமயலுற்றனனேமனைவிதனைத்தழுவியவன் ※
றனக்குமகடனைத்தழுவித்தங்கினனோவங்குமயன் ※
முனைப்பயனையருந்திடினுந்தெருண்டார்கண்மோகமிலை ※
வினைப்பயனைவியந்தருந்திமற்றையரோவினைவிளைப்பார் ※

எ-து ஒருவன்றனதுபாரியைத்தழுவிமோகத்தையுற்றான், அவன்றானேதனதுமகளைத்தழுவியவ்விடத்துமயலுற்றானில்லை, அதுபோலப்பூர்வகன்மபலத்தைப்பொசிக்கினுமுற்செய்தகன்மமாயிருக்கும்,யாம்பொசிக்கிறோமென்றதில்விருப்பற்றிருக்குமறிவுடையோரிடத்தாகாமியமில்லை, முற்செய்தகன்மபலத்தைப்பொசிக்கும்போதுயானென்றகங்கரித்துவிருப்பத்துடன்பொசித்தவரேயாகாமியத்தையுண்டாக்குவர். எ-று [௬௰௫]

குழவிபயந்தவள்குயத்தைவருடுதலுங்குழைந்துமனை ※
மொழுகுமுலைப்பாலூட்டியொருவாதபரிவினளே ※
கொழுநனவள்குயம்வருடவவன்புயத்தைக்கூடுதற்கு ※
விழைவினளேயித்தகையர்வினைகெடுப்பார்வினைவிளைப்பார் ※

எ. து- வெளி- குயம். முலை. கொழுநன். கணவன். (௬௰௬)

அகச்சுத்தியின்மகிமையை வேறுமோர்வகையாலுணர்த்துகின்றார்

அகச்சுத்தியுடையார்களறுத்திடுவர்பிறப்பினையு ※
மகச்சுத்திதனையின்றியாகத்தைச்சுத்திசெய்வார்க் ※
குகத்தக்கதீயவினையொன்றுமிலையுணருங்காற் ※
புகத்தக்கபுண்ணியத்தின்பலங்காணும்புல்லியதே ※

எ. து உள்ளும்புறம்புமொத்தசித்தசுத்தியினையுடையஞாதாக்களநாதியாகத்தொன்றுதொட்டுவருகிற செனனத்தையு மொழிப்பார்கள், அங்ஙனஞ்சித்தசுத்தியின்றியுள்ளம்பிறிதொன்றாயிருந்துபுறம்பேமலையத்தனைமண்ணையுங்கெங்கையிலுள்ளசெலத்தையுங்கொண்டுசரீரத்தைச்சுத்திபண்ணினும் அவர்களுக்குப்போகத்தக்கதீவினையொன்றுமில்லை, யதனைவிசாரிக்குமிடத்துஅவர்களுக்குக்கிடைக்கும்புண்ணியபலமுமற்பம் எ. று [௬௰௭]

இப்படியகசுத்தியுடையவர்களேபரமமான சுகத்தையடையுமவர்,
அஃதில்லாதார்மாதரைக்கூடுமிடத்துண்டாகிய சுகத்துக்குவமான
மிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

குட்டவுடற்கொடுக்குமிதங்கூடினழற்கொடியிடையா ※
ரிட்டமுமிம்முறையெனுகவிளையவர்தம்பருவம்போற் ※
குட்டமழற்கூடுதலுங்கொழுநனுக்கொப்பெனக்கொள்க ※
தொட்டதுவக்கிந்திரியஞ்சொற்பொருளுந்துணிவாரோ ※

எ. து குட்டவியாதியையுடையவன்.அக்கினியைச்சேர்ந்த விடத்தநேரத்துக் கெப்படிசுகத்தைப்பொருந்துவனதுபோலக்காமவியாதியையுடையபேர்கள்.கொடிபோன்றவிடையினையுடையமடவாரைக் கூடியபோதுள்ளசுகமுமிவளவென்றறிக, அதனைப்பிறித்தறிவில்குட்டவியாதியானதுவாலியவயதினையுடையவரதுகாமப்பருவத்துக்கொக்கும், அக்கினியானமடவாரைச்சேர்தலுங்கணவனுக்கொப்பென்க,ஆதலாலக்கினியைச் சேர்ந்ததோலாயவிந் திரியத்தினுலுண்டா கியசொல்லினதுபொருளிவ்வளவென்றுணர்க எ- று (௬அ)

மூத்திரத்தைமலமதனைமோசிக்குமப்பொழுதும் ※
வாய்த்துளதேசிறிதின்பமவ்வளவேவனிதையர்கள் ※
மூத்திரத்தைமோசிக்குங்குழியினிமைமுடைப்பன்றி ※
நாத்தனக்குநலமலமேமலநலமோநாடுங்கால் ※

எ - து வெளி முடைப்பன்றி - நாற்றத்தையுடையபன்றி (௬௯)

சிற்றின்பத்தையுவர்த்துப்பேரின்பத்தையுறு
தலேசிறப்பென்றுணர்த்துகின்றார்.

நாயினுக்கும்பேயினுக்குநரியினுக்குங்கழுகினுக்கு ※
மீயினுக்குமினிதுபிணமெளிலதுதானினியதுவோ ※
வாயினுக்குமனத்தினுக்குமதிப்பரியமாதேவன் ※
நேயினுக்கேசிவமதனைத்திளைப்பாரோசிறந்தாரோ ※

எ - து பிணமானது, நாய் - பேய் - நரி - கழுகு - ஈ - யிவைகளுக்கின்பத்தைக்கொடுக்கும்,அதுபோலமாதரின்பமுங்காமவிகாரமுடையமூடான்மாக்களுக்கேயினிமையொழிந்துஅறிவுடையோர்கள்,விசாரிக்குமிடத்துஇது நிலைமையல்லவே, ஆதலாலதனைச்சீயென்றுவர்த்துவாக்குமனத்துக்கெட்டாதமகாதேவனருளினாலேதமதுசிற்சத்தியனுபவமானபேரின்பத்தையனுபவித்துக்கொண்டிருக்கும், அவர்களேசிறப்புடையவர்கள். எ - று (௭0)

இங்ஙனஞ்செய்யாதோரடையும்பலமுணர்த்துகின்றார்.

புரிந்தவர்கடவினையைப்பொருவரியனடிக்கன்பு ❊
பிரிந்தவர்கள்வனிதையைப்பெறற்கரியபேறென்றே ❊
யிருந்தவர்கள்நடந்தவர்களிழுக்காயகுழிவழிக்கே ❊
யெரிந்தவர்கள்கிடந்தெரிவாய்நிரையத்துமீளப்புறவே ❊

எ - து ஒப்பில்லாதசிவனதுதிருவடிக்குஅன்புசெய்யாமற்பாவத்தைச்செய்தவர்கள், அந்தபாவமேலீட்டினாலேமாதருடையபோகங்களைக்கிடைத்தற்கரியபேறென்றேமதித்தனுபவித்திருந்தவர்களே, யெரிவாய்நிரையத்துத்துக்கத்தையுறவிருந்தவர்களும்நடந்தவர்களும்பொல்லாதநரகக்குழிவழிவிழுந்தவர்களுமவர்களே. எ - று (சக)

மாதர்மயக்கத்தால்வருந்துயரத்தையைந்துசெய்யுளா லுணர்த்துகின்றார்.

வேறு

வைத்தவராழுக்கினில்வாஞ்சைசமையலாற் ❊
றுய்த்தவரளவிலாச்சோகவாரியே ❊
வித்தகப்பொருளினைவிரும்புவார்மல ❊
முத்தரின்புறுவர்களநாதிமுத்தனால் ❊

எ - து வெளி (சஉ)

உருத்திரன்மணவினையுகந்தநாடனிற் ❊
றரித்தஎன்சதுமுகன்சாபசோகமும் ❊
வரத்தினால்வலியுடைத்தக்கன்றன்மகள் ❊
கருத்தினிலடங்கிடாக்கதத்தினனரோ ❊

எ. து தெக்ஷப்பிரசாபதியுடையபுத்திரியாகியதாக்ஷாயணியைப்பரமேசுவரன் கலியாணம்பண்ணுகிறகாலத்திலேபிரமாஅவளைக்காமுற்றதனைத்தாக்ஷாயணியறிந்துமிகவுங்கோபித்துக்கொண்டு அவனைச்சபிக்கவந்தச்சாபத்தைப்பெற்று அதனாற்றுக்கமுற்றான் எ. று அரோ. அசை [சங]

இந்திரன்முனிமனையிணங்கியெய்திய ❊
வந்தரமினைத்தெனவளப்பதல்லவே ❊

சந்திரன் குருமனைதன் னிற்றங்கியே *
வந்திடுந் துயரினை மதிக்கவல்லரோ *

எ-து கௌதமவிருடிபாரியகலிகைக்குத்தெய்வேந்திரனாசைப் பட்டு இராத்திரியருணோதையத் துக்குமுன்னே யகாலத்தில் அவராச்சிரமத்துக்குக் காகமாய்வந் துகூப்பிட்டபொழுதுவிடிந்ததென்று அவரனுட்டானத்துக்குப்புறப்பட்டுப்போக அதற்குப்பின்பிந்திரனவளுடனே கூடினான், அகாலமென்றிருடி மீண்டுவந்துதெய்வேந்திரனிப்படிக்கபடமாய்வந்ததறிந்து அவனையந்தவிருடிகோபித்துக் கொண்டு அகலிகைகல்லாகவும்ஒருயோனிக்கல்லவோ ஆசைப்பட்டாயுன்னுடல்முழுதும்ஆயிரம்யோனியாகக்கடவதென்னஅவன்பட்ட துயரத்துக்களவில்லை,சந்திரனுந்தன துஆசாரியரானவியாழபகவானுடையபாரியைத்தீண்டியதனாலே யவற்குச்சயரோகவியாதியுண்டாய்த்துயரமுற்றதையாவர்விசாரித்துரைப்பர் எ. று [௪௪

நளனதுபாரியைநச்சிவேடுவ *
னௌரியளென்றவடனைத்தீண்டவெண்ணின *
னளவிலதுயருறச்சாம்பலாயின *
னுளமுளைந்தவள்பகர்சாபமொன்றியே *

எ. து கலிதோஷத்தினால்நளனுமவன்பாரிதமயந்தியும்வனத்திற்சஞ்சரிக்கிறவவதரத்தின்மூங்கிலின் மேலேபாம்பிருக்கையிற் காட்டுத்தீயடியிற்பற்றியெரிகிறவவதரத்திலந்தப்பாம்பைபயிரக்ஷிக்கவேணுமென்றுஅவள்ஒருகோலைக்கொடுத் திறக்க அவள்கழுத்தைவந்துசுற்றிக்கொள்ளவதுதன்னைவாதைபண்ணப்போகுதென்றவள்பயந்துகூப்பிடஅந்தவவதரத்தில்வேடன் வந்ததனைவிடுவித்துஒருத்தியாய்த்தனித்திருக்கிறாளிவளையயளென்றுஅவளைக்கூடவேணுமென்று வேடன்கருதினதையவளறிந்துஅவனையெரிந்துபோவென்றுசபிக்கையிலவனுந்துக்கத்தையுற்று அந்தசாபத்தினாலேசாம்பலாயினான் எ- று (௪௫)

அரக்கனுஞ்சானகிக்காசையுற்றனன் *
சிரக்கனமிழந்தனன்றினைத்துமல்லவே *
தரித்தவாசையைத்தையலார்கள்பால் *
வருத்தமேமருவினர்மண்ணும்விண்ணுமே *

எ - து இராமனுஞ்சீதையுமாகப்பஞ்சவடியாச்சிரமத்திலிருக்கிறஅவதரத்திலிராவணன்மாரீசனையனுப்பிப் பொன்மானாகவரவிடஅந்தமானைச்சீதைபிடித்துத்தாவென்றுசொல்ல,இராமன்முதற்போகப்பின்புஇலக்குமணமதன்பிறகேதேடிப்போ

னவவதரத்திலிராவணன்வேடமாறிவந்து அவளைக்கொண்டுபோயிலங்கையில்வைத்திருக்கையிலிராமன்பின்னுசாவிப்போய வனுடையபட்டணத்தையு மழித்தவளையிவன்கூடாமலிருக்கவும் அவனுடையதலையிழந்தான், ஆதலாற்பெண்மோகத்திலேயாசையுற்றவர்கள். பூமியின்கண்ணுஞ்சுவர்க்கத் தின்கண்ணுந்துக்கத்தையேயுற்றார்கள் எ-று (௪௬)

சுவர்க்கத்திலேசரீரமெடுத்த தேவர்கண் முதலானோருந்துக்கமுறு
முறையைப்பன்னிரண்டு செய்யுளாலுணர்த்துகின்றார்

இந்திரன்புயத்துறவாதமீடிலன் ✻
சந்திரன்கயாமயந்தரித்திளைத்தனன் ✻
மந்தனுமுடவனேமற்றையார்களு ✻
மிந்தவாறெவருடலெடுத்திடர்ப்படார் ✻

எ-து தேவர்களுக்கெல்லாமதிபதியாயிருக்கிறதேவேந்திரனும் நாளாயினிக்குஆசையுற்றுக் கைலாசத்துக்கேயழைத்துக்கொண்டு போயீஸ்வரியுடனே நிருத்தம்பொருந்துகிற ஈஸ்வரனையெண்ணாமல் வச்சிராயுதத்தாலோங்க அப்போது ஈஸ்வரன்றிரும்பிபார்க்கவதனாற் கைவழக்கமற்றுபோய் வலதுதோளிலே வாதவியாதியாய்த்துக்கத்தையுற்று வலியிழந்தனன், சந்திரனுங்கயரோகத்தினாலே துக்கத்தையுற்று இளைத்துப்போனான், சனிபகவானுந்தனதுமாற்றாந்தாயாகிய பிரதியுசாதேவியென்பாளைத் தனக்குபகரிக்கவில்லையென்றுதைக்க, அப்போதவள் வழுகிக்கால்விழுந்துபோகவென்று சபிக்க வதனாலேயவனுமுடவனாய்த்துக்கத்தையுற்றான், மற்றவர்களும் இவ்விதமாயுடலெடுத்திடர்ப்படாதார்-எவர்? ஒருவருமில்லை. எ-று (௪௭)

தக்கனுஞ்சுரத்தினையுடலிற்றாங்கினன் ✻
றெக்கிடத்தலைவலியரியுந்துக்கிதன் ✻
மிக்குறச்சலோதரம்வருணன்வீறில ✻
னுக்குடற்பழுதுளனுதையபானுவும் ✻

எ-து தக்ஷப்பிரசாபதியுஞ்சரீரத்திலேசுரத்தினாலேவானதையைப்பொருந்தினன்மாயனுந்தலைவலியாற்றுயரத்தையுற்றனன்வருணனுநீர்க்கோவையென்னும்வியாதியைப்பொருந்தித்தனதுபெலமெல்லாங்குறைந்தான். ஆதித்தனுந்தனதுதேவியுசாதேவியென்பாள்சூரியனுடையதேசசுபொறுக்கப்படாதென்றுபிதாவாகியவிசுவக

ன்மாவுடனேசொல்லியவனதுசாஊணயினுற்கடையவதனுற்றேசசுமழுங்கித்தொக்குத்தோஷமென்னும்வியாதியான்மனதுநைந்துதுயரத்தையுற்ருன் எ - று
உம்மை - எண் (சஅ)

காமனுந்திருவுருக்காயப்பட்டனன் *
பூமகனொருசிரம்போக்கப்பட்டன *
ணமகனுசியுமறுக்கப்பட்டனள் *
சேமமாஞ்சிவனவன்சினந்துசிறவே *

எ - து வெளி (சகூ)

கன்றியகாலனுங்களையப்பட்டன *
னென்றியபுரத்துளாரொழிக்கப்பட்டன *
ரன்றியவரிசிரமரியப்பட்டனன் *
பன்றியின்கொம்பினைப்பறிக்கப்பட்டதே *

எ - து மார்க்கண்டற்காகச்சிவனுலேகோபிக்கப்பட்டயமதன்மராசனும், வலதுபாதத்தாலுதைக்கப்பட்டனன், அனேகங்காலத்துக்கொருகால் அற்பகாலங்கூடப்பட்டதிரிபுரத்துக்கதிபதியாகியவித்துயுன்மாலிமுதலியமூவருந்தெகிக்கப்பட்டனர், அஃதன்றியுங்குருக்கேத்திரத்திற்றேவர்களெல் லாருங்கூடிச்சத்திரயாகஞ்செய்தவவதரத்திலப்போதுகிருட்டிணன் எச்கியமூர்த் தியாயவதரித் து வில்லெடுத்துக்கொண்டுதேவர் களைத்துரத்திப்பின்புதிருவாரூரில் வந்துவில்லைத்தாடியிலேயூன்றிமோகித்துநிற்க,அப்போதுவியாழபகவானுந்தேவர்களுங் காரியவிசாரம் பண்ணிவில்நாணிற்செல்லைஏவியவப்போதுவில்நிமிர்ந்தது , அதனுற்றலையறுக்கப்பட்டனன், மாயன்சிருட்டியில் வராகரூபமாயெடுத்துச்சத் தபாதாளமள்வாகத் தனதிருகோட்டாலு மெடுத்தோமென்றகங்காரம் வரஅவனது அகங்காரத்தைப் போக்குதற்பொருட்டுஅதன்கொம்பைப்பறித்துத்தரித்தார் எ - று (ருய)

தக்கனுமிழந்தனன்றலையைப்பல்லெலா *
மூக்கிழந்தருணனுமொடுங்கியோடின *
னக்கியுங்கரமிழந்தஞ்சிநஞ்சனன *
றக்கமேமிக்குறச்சுரருமோடினூர் *

எ - து சிவனையிகழ்ந்தகுற்றத்தால்தக்ஷப்பிரசாபதி வீரபத்திரர்கையாற்றலையறுப்புண்டான், அவனுடன்கூடியசூரியன்தனதுபல்லெலாமுடையும்படியடி

பட்டுவலிகுறைந்தோடினன், அக்கினிபுந்தனதுகைதறிப்புண்டுபயந்தோடினன், மற்றைத்தேவர்களுமிகவுமடிபட்டோடினர் எ - று (ருக)

தாருகன்காளியாற்றறிக்கப்பட்டனன் ※
சூரனெம்வேலினாற்றுணிக்கப்பட்டனன் ※
போருடையசுரரும்போக்கப்பட்டனர் ※
பாரதகுலத்தினுட்பார்த்தனெய்யவே ※

எ - து தாருகாசூரன்பத்திரகாளியாலேதறிக்கப்பட்டான், சூரபன்மாவும் நம்முடையவேலினாலேசங்கரிக்கப்பட்டான், பாரதகுலத்துட்டோன்றிய அருச்சுனன்மகாபெலபராக்கிரமாகியநிவாதகவசரென்கிறவசுரரைச் சங்கரித்தான் எ - று (ருஉ)

பாம்பெனநகுடனும்படியில்வீழ்ந்தனன் ※
னோம்பியவருமுனிசாபமொன்றியே ※
தேம்பினன்பரசுடன்சிறந்தராமனும் ※
வாம்பரித்தசரதன்மகன்வலிக்கரோ ※

எ - து நகுடனென்னுமிராசா, அசுவமேதயாகத்தைப்பண்ணிச்சுவர்க்கலோகத்துக்குச்சத்தவிருடிகளும்பல்லக்குத்தாங்க, அதன்மேலேறிப்போகையிலிந்திராணியையடைகைக்குச்சடுதியிற்போகவேணுமென்கிறவாதரவினாலேபெருவிரலானுன்றியகத்தியரைநோக்கிச்சற்சற்பவென்னும் மொழியாற்கடுகிப்போகவென்ன, அகத்தியர்கோபித்துக்கொண்டுநீசொன்னசத்தத்தின்படியேசற்ப மாகக்கடவையென்றுசபிக்க, அப்படியேயவனும்பாம்பாய்ப்பூமியின்கண்வீழ்ந்தான், தத்தும்பரியினையுடையதசரதர்மகனாகியஇராமன், மிதிலையிற்போய்ச்சனகராசாவின்கன்னிகைசீதையைவில்வளைத்துக்கலியாணம்பண்ணிவருகிறவழியில்பரசிராமன்தானொருவில்லைக்கொண்டுவந்துஇதனைவளையென்றுகொடுக்க, வந்தத்தசரதராமனந்தவில்லைவாங்கிவளைத்துநாணேயேற்றிச்சரந்தொடுத்துப்பரசிராமன்சுவர்க்கத்துக்குப்போம் வழியையடைக் கையாலவனுமிலச்சையடைந்துவாட்டமுற்றான் எ - று (ருங)

ஆயிரங்கரமுடையசுரவாணனு ※
மாயனாலிருகரமலாவிழந்தன ※
ஞயனுமொருசரமாலின்வீழவே ※
யாயுவுமிழந்தனனங்கமங்கவே ※

எ - து ஆயிரங்கைகளையுடையவாணாசுரன்சிவனது திருநடனத்துக்குக்குடமுழாமுழக்கிச்சேவிக்கச்சிவன்சந்தோஷப்பட்டவவதரத்திற்றேவரீரொன்னுடன்யுத்தம்பண்ணவேணுமென்றுகேட்க,நம்முடையசத்தியானநாராயணனைக்கொண்டே யுத்தம்பண்ணிவிக்கிறோமென்று சிவன்திருவுளம்பற்றுகையாலந்தநாராயணனது கிருட்டிணாவதாரத்திற்புத்திரனான அனுருத்தன்அவ்வாணாசுரன்மகள்உஷையைக்காமுற்றுக்கன்னிமாடத்திற்கூடவதனை வாணாசுரனறிந்தவனைக்காவற்பண்ணவதனை நாரதர்சொல்லக்கிருட்டிணனறிந்ததுவேகாரணமாகவாணாசுரன்சிவார்ச்சனை பண்ணினவிரண்டுகையையுமொழித்துநின்றகைகளையெல்லாம்வாளாலறுக்கப்பட்டான், இங்ஙனம்வாணாசுரன்கைகளைச்சேதித்தகிருட்டிணனும் ஆலின்மேலே பள்ளிகொள்ளுகிறவவதரத்திலொருவேடன்சென்று அவன்சீபாதஞ்சிவந்திருக்கிறதைக் கண்டுபுறவோவென்றுகருதியெய்த அம்பினாலாலினின்றும்வீழ்ந்துசரீரம்நாசமாகவுயிரினையிழந்தான் எ - று (௫௪)

ஆயனும்புறகிடவவன்றவாரையுந் ※
தாயமுந்தனதெனத்தரித்தசந்தனும் ※
வாயுசன்வீமனால்வதைக்கப்பட்டனன் ※
வாயுவோடியசேடன்வாடினன் ※

எ - து கிருட்டிணன்தோற்றுப்போம்படிபொருதுஅவனதுதுவாரகாபட்டணத்தையுமுரிமையானபண்டிபண்டாரத்தையுந்தன்வசமாகக் கட்டிக்கொண்டசராசந்தனுந்தனதுயாகத்தில்யுத்ததானங்கேட்டவாயுபுத்திரனாகியவீமனோடேபொருதவனாற் றன்னுடலைக்கிழிக்கப்பட்டான், வாயுவுடனேமாறுபட்டுமகமேருவைக்காத்தசேடனுங் காக்கமாட்டாதுதுயருற்றான் எ - று வாயுபுத்திரனென்பது - உபசாரப்பெயர் (௫௫)

அழிவிலாவரமுடையனுமனுகரும் ※
பழுதுறப்பகலவன்பதறிப்பாற்றின ※
னெழுகதிர்தடைபடவெதிர்ந்துவானிடைக் ※
குழுவியதுயினிலைவுளியிற்குன்றுமெ ※

எ - து அழிவிலாதவரத்தினையுடையஅனுமனானவன்ஆதித்தியன்சிவந்துதிக்கையாற்பழமோவென்றுதாவுகையினாலேயவனதுகிரணத்தாற்சரீரம்பழுதுபட்டோடும்படிக்குவிளைவிற்றாத்திரன்இச்சிறப்பினையும்விட்டுவிளங்காநின்றகிரணத்தையுமுடையஆதித்தியனுமாகாசத்திற்றோன்றியமேகத்தினாலேமறைக்கப்பட்

டான் அந்தமோசமானதுதன்னைப்பற்றப்பலமாயிருக்கிறகாற்றினுலேசமதகூட்டத்தைச்சிதறவடிக்கப்பட்டது. எ - று வாயுவானவன்றன்மைந்தனுகியவனுமாற்குத்தேவர்களாயுதங்களால்வதைக்கப்படாதிருக்கவேணுமென்றுபிரமாவைவரங்கேட்டுக்கொள்ளுகையாலழிவில்லாவரமுடையனெனச்சிறபபித்தார் (௫௬)

சிற்றுயிர்படுந்துயர்செப்புவாமெனை *
நெற்றியின்விழியுடைநிமலன்வீரியத் *
துற்றடல்குமரனென்றுரைக்கப்பட்டயான் *
சற்றலவசுரராலுற்றசங்கையே *

எ - து வெளி - குமாரன் - குமரனெனமருவிற்று - கு - எ - து குற்சிக்கப்பட்டது - மார் - எ - து - மரணம் - இங்ஙனங்குற்சிக்கப்பட்டதுகளைநாசமடைவிப்பிக்கையாற்குமாரனெனப்பெயராயிற்று, இதனைக்குமாரதந்திரத்தோதினர் குற்சிதம் - அசுத்தம் (௫௭)

அயனொருதினந்தனிலமரர்மற்றையர் *
வயவலிதொலையவேவருந்திவாடுவ *
ரயனுமற்றவருடனழிவனுண்டுகள் *
கயமுறப்பரார்த்தவெண்ணிரண்டுகாட்டியே *

எ - து மானிடவருடமுந்நூற்றறுபதுகொண்டதுதேவவருடம், அத்தேவவருடம் ஆயிரத்திருநூறுகொண்டது கலியுகம் தேவவருடமிரண்டாயிரத்துநானூறுகொண்டதுதுவாபரயுகம், தேவவருடமூவாயிரத்தறுநூறுகொண்டது திரேதாயுகம், தேவருடம்நாலாயிரத் தெண்ணூறுகொண்டதுகிரேதாயுகம் -ஆக- இங்ஙனந்தேவவருடம்பன்னீராயிரங் கொண்டதுஒருசதுரயுகம்அந்தச்சதுரயுகம் இரண்டாயிரங்கொண்டதுபிரமாவுக்குஒருநாள் அந்தஒருநாளிலே தேவர்கள் அட்டதிக்குப்பாலர்கள்சந்திரசூரியர்களெல்லாருந் தங்களிடத்துண்டாகியபெலமும்வயதுந்தொலைய வெதுக்கித்துச்சிவனுலேசங் சரிப்புண்பர்கள், பரார்த்தகாலமிரண்டிப்படிகழிந்தவுடனேபிரமாவுக்குநாசமுண்டாம், மற்றுள்ளதேவர்கள்தங்கள்தங்கள்காலாவதிசென்றவாறேநாசத்தையடைவர்கள்எ - று ப்ரார்த்தம்-பிரமகற்பத்தனை. (௫௮)

முற்கூறியமானிடயோனிகடுயரத்தைப்பத்துச்செய்யுளாலருளிச்செய்கிறார்.

கருப்பையுளுணர்வினைக்காலுமோதலாற் *
பிரித்துயிர்பிறத்தலாற்பேசப்பட்டதே *

விரித்துறுவேதமூம்விளங்கவாய்கிலார் *
மரிப்பரோபிறப்பரோமனிதர்தாமூமே *

எ - து கெற்பத்திலேஞானத்துடனேகூடியிருக்கிறவனைச்சண்டமாருதம்வந்தடித்துஅதனுல்முன்புள்ளவறிவுகலங்கியபானவாயுவினுலேகீழேதள்ளப்பட்டுப்பூமியின்கண்வந்தவளவிலனேகதுன்பத்தையுறுவனென்றுநூல்களிற்சொல்லப்பட்டதே யிப்படிவருத்தமுற்றுப்பூமியின்கட்பிறந்தமானிடர் வேதாகமமுதலியநூல்களோதிவிளங்கவதனையாராய்ந்து கெதியடையாமல்வீணிலேகாலத்தைக்கழித்துமரிக்கிறதும் பிறக்கிறதுமேதொழிலாய்த்திரிகிருர்கள். எ - று (௫௯)

அன்னைதன்வயினிடையனேகதுன்பமே *
பின்னையும்பிறப்புழிபெரிதுதுன்பமே *
தன்னயர்வறவுணாதரிக்கத்தாதையோ *
சொன்னவில்குரவனுஞ்சுளியத்துன்பமே *

எ - து வெளி - அயர்வு - மறதி - சுளிய-கோபிக்க (௬௰)

ஒருமையவுணர்வினருரைக்கும்வாசகத் *
தருமையபொருளவரருளினுற்பெறும் *
பெருமையைப்பெறற்கரும்பேறென்றெணணிலா *
ரிருமையுமிழப்பரோயினையரிச்சையால் *

எ- து மோக்ஷத்தையடைதற்கொருப்பட்டவறிவினையுடையஞானவான் களருளிச்செய்யுந்திருவாக்காலுண்டாகிய அருமைப்பொருளை யுட்கொண்டந்தஞானவான்களருளினுற்பெற்று நன்மையை யடையவேணு மென்னும் புத்தி யின்றிமடவார்மேலும்புத்திர மித்திரகளத்திராதிகண் மேலும் வாஞ்சையைவைத்தவர்கள் போகமோக்ஷங்களிரண்டினையுமிழப்பர் எ. று (௬௧)

துடியிடைத்தடமூலைத்துளங்குதோள்வளைப் *
பிடிநடைக்கடுவிழிப்பேதைமாதரார் *
கடிதடக்கலவியிற்காமமீதுரப் *
படுமிடர்க்களவிலைப்போகர்பாருளே *

எ . து . வெளி . தடம் . பெருமை . பிடி . பெண்ணுனை . கடு.விடம் . கடி தடம் அல்குல் (௬௨)

விடக்கினைவிரும்பியேவெறுப்புமேலிடக் ※
கடித்திருநாய்தமிற்கதறுமாறுபோல் ※
முடைப்புழுக்குரம்பையின்மோகமெய்தியே ※
விடைப்பரேமனிதருந்தம்மில்வெல்லவே ※

எ து. வெளி. விடைத்தல்- அடித்தல் (௬௩)

திலத்தினையினிமையைத்திளைக்கமானிடர் ※
மலக்கினைத்துயரினைவிளையமாந்துவர் ※
துலைக்கணக்கறிகிலாத்துரிசிறைரவர் ※
கலைக்கணக்கினைத்தலைகாணவல்லரோ ※

எ. து. வெளி. திலம். சிறுமைகூறியது. துலைக்கணக்கு . துலாவிறைக்குங்கணக்கு. துரிசு. பாவம்- கலைவேதாகமம் (௬௪)

பனியினும்பனிப்பரோபவனமெய்தினுந் ※
துனிவெயிற்கூதிரின்மிகவுந்துன்பமே ※
யினையனதுயர்பலவின்பமெய்துவர் ※
மனிதர்களெப்பொழுதுறுகண்மாற்றியே ※

எ - து ஆன்மாக்கள்முன்பனியாகியமார்கழிதையிலும், பின்பனியாகியமாசிபங்குனியிலு, முதுவேனிலையுங்காற்றினையுமுடைய ஆனிஆடி-யிலுங், குளிர்காலமாகிய ஐப்பசி கார்த்திகையிலு,மற்றைக்கார்காலமிளவேனிற்காலங்களினு,மிகவுந்துன்பத்தைபுறுவர்கள், இந்தக்காலங்களிலேதுக்கத்தையேயனுபவிப்பதன்றிச்சுகத்தையெப்போதுதான்அனுபவிக்கப்போகிறார்கள் எ று- கூ காரோகூதிர்முன்பனி பின்பனி,சீரிளவேனில்வேனிலென்றுங்,கிருமூவகையப்பருவமென்ப (௬௫)

காலையுமலத்திறைற்கடியதுன்பமே ※
சாலவும்பசிபிறைற்றளர்வருச்சியின் ※
மாலையிற்காமமும்மலியவாடுவர் ※
வேலைதொறுமிடர்விளையும்விஞ்சியே ※

எ - து வெளி - முற்கூறிய ஆறு இருதுவிலுந் துக்கமுறுவதன்றிச்சிறுபொழுதாகிய நாடோறுந்துக்கமுறுமதனைவேலைதோறும்பிறித்துக்கூறியது (௬௬)

ஆக்கையைநிலையெனவாடகந்தனை *
யாக்கலுமருந்துயரஞ்சிச்சோரரைக் *
காக்கலுங்கடுந்துயர்களித்தவின்புத *
லாக்கலுமருந்துயரழியும்போதுமே *

எ - து நிலையில்லாதசரீரத்தை நிலையெனக்கருதித்தனமார்ச் சிக்குமிடத்து மதனைக்கள்ளர்கொண்டு போகாமலிரட்சிக்குமிடத்தும் பலங்கண்டுகளிக்கும் வீடு உண்டாக்குமிடத்தும் உண்டானவீடு இடிந்து போமிடத்துந்துக்கத்தை யேயுறுவர் கள். எ. று. துக்கம். எ. து. முற்றுங்கூட்டுக (௬௭)

ஆடையுமொன்றலாலநிகமென்செய *
வீடுமொன்றல்லதுவேண்டுமோபல *
பாடுடைப்புவிமனர்பாவசாதனந் *
தேடியமற்றையவனைத்துந்தேரிலே *

எ து பண்டமுதலியவற்றை ப்பிரயாசப்பட்டுத்தேடினாலு மிவன்தரிக்கப்போகிறதுபுடவையொன்றல்லவோமாடகூடங்கட்டினாலு மிவன்படுக்கப்போகிறதுபாய்விரியல்லவோஇப்படியிருக்கப்பாவசிந்தனையாயி ருக்கிறஇராசாக்கள்கோட்டையுப்பரிகைமுதலாயினவற்றையுண்டாக்குமதைவிசாரிக்கில் அதெல்லாம்பாவத்தைத்தேடுகிறதேயொழிந்துபுண்ணியமொன்றுமில்லை எ. று (௬௮)

இராசாக்களுந் துயருறுமதனையுணர்த்துகின்றார்

அஞ்சுவர்புகல்வனையரையர்மற்றையர் *
தஞ்சவில்பிறரிடை ச்சாற்றுவாமெனை *
விஞ்சியவரசர்கள்வெகுண்டவேலையிற் *
றுஞ்சுவர்சமர்தனிற்றுயரந்துய்த்துமே *

எ. து சதுரங்கபெலத்துடனேகூடியிருக்கிறவிராசாக்களுந்தான்பெற்றபிள்ளை தன்னைச்சேதித்துஇராச்சியங்கட்டிக்கொண்டுஅனுபவிக்கப் போகிறானென்றுபயப்படுவர்கள் அஃதன்றித்தன்னிலுமிகுந்த பரமண்டலத்துள்ள அரையர்வெகுண்டுபடையெடுத்துவந்தகாலத்துயுத்தகளத்திற்பொருதுஅசனாற்சிறிதுபேர்மரித்துஞ்சிறிதுபேர் துன்பமுற்றுமிப்படியே துக்கத்தையுறுவர்கள் எ. று [௬௯]

இனிவிலங்குகளும்பறவைகளும்உளர்வனவுந்தருக்களுந்துயரமுறுமதனை ஐந்துசெய்யுளாலுணர்த்துகின்றார்

கரிபரிமுதலவுங்கனங்கடாங்கியே *
புரவலர்க்கேவலர்புடைக்கநொந்திடும் *
பொருகளமதனிடைக்குருதிபொங்கவே *
சரமுறத்தளர்வுறச்சாய்ந்துவீழுமே *

எ. து யானைகள்பாகனுலங்குசபரிக்கோல் முதலியவற்ருற்றுயரமுறுங், குதிரைகள்வாதுவரார்ற்றிருத்துவிக்குமிடத்துக்கசையினுல்வாதையுறும், ஒட்டகமெருதுமுதலாயினபாரங்களைச்சுமந்துஅதனுற்றுயரத்தையுறும், அஃதன்றியுத் ததலத்தின்மாற்ருர் கைப்பாணம்வாள்முதலியவற்ருற் குருதிபொங்கப்பாடுகாட்டி மரிக்கும் எ - று
(எ௰)

மானினங்கானவர்வலையின்வாடிடு *
மானினம்புலியுறினழுங்கியஞ்சுமே *
வானறவுணவறவருந்திவாடிடு *
மேனையமிருகமுமிடுக்கணெய்துமே *

எ-து வேடர்முதலியவரால்வலையின்கட்கரடி புலி மான் பன்றிமுதலாயினதுக்கமுறும்பசுக்களினது கூட்டமும்புலிவந்துபாய்ந்தவிடத்துத்தறையிற்படிந் தத ஞற்றுயரத்தையுறுமஃதன்றிமழையில்லாமையால்புன்முதலாயினவுணவற்றுப்போக அதனுல்வருத்தமுற்றும்வாடுமற்றைமிருகமுமிப்படியேதுன்புறும் எ - று (எக)

வியங்கமும்வருந்திடும்வெயிலின்மாரியின் *
வயங்கெடத்துயங்கிடும்வாடைவீசவும் *
நயங்கெடுமுணவறநாரமாறினு *
மியங்கினும்பகையினுக்கச்சமெய்துமே *

எ - து பறவைகளானவைமிகுந்தவெயிலினுலுமழைகளினுலும் வாதையுறுமஃதன்றிவாடைக்காற்றுக்கடுகில்தங்கள்பலங்கெட்டுத்துக்கத்தையுறுமஃதன்றியேரிமுதலானதிற்சலம்வற்றியதிலுண்டானமீன்முதலியவுணவில்லாமையினுலும் வாட்டத்தையுறுமஃதன்றியாகாசத்திலேசஞ்சரிக்குமிடத்துக்காக்கையானதுவலியான்கோட்டானுலுங்கொக்குக்குருவிமுதலாயின இராசாளிவல்லூற்றினுலுமிங்ஙனமொன்றுக்கொன்றுபகையாகிடப்கூதிகளினுலேதுயரத்தையுறும் எ-று (எஉ)

பசியுறப்பகையுறப்பாம்புந்தேம்பிடும்
நசமுறும்வலையுறநாரமீனுமோ
கசிவிளிற்கிருமியுங்கலித்தழுங்கியே
வசமறும்வெயிலினேர்தினத்துண்மாயுமே

எ-து பாம்புகளானவும் பாம்பாட்டிகள்பிடித்துப்பெட்டியிலடைக்கப்ப சிவந்துபொருந்தப்பக்குவத்திலிளைபெருமையாலுந்தனக்குப்பகையாகிய கெருடன்கிரிமுதலியவற்றைக்கண்டவிடத்து மயக்கத்தையுற்றுவருந்தாநிற்குஞ், செலத்துண்டாகியமீன்களும்வலைகாரராற்பிடிபட்டுநாசத்தையுறும், புழுக்களானவும்வேர்வையிலுமீரத்திலுநெருங்கியுற்பவித்துவெயிலினாலேதுக்கத்தையுற்றுஒருநாளிலேதானேசெனித்துமரிக்கும் எ-று நாசத்தை - நசமென்றார் - மீனுமோவென்ற ஓகாரத்தினால் மற்றுமுள்ளசெந்துக்களுமெனவறிக. (எ௩)

வருந்திடுதாபரவுருவமாதவ
ரரிந்திடவற்கலையதனையாக்கவும்
பொரிந்திடும்பனியினும்பொருகையானைகண்
முரிந்தறுமூலமும்பறிக்கமூசியே

எ-து தாபரவடிவாகியமரங்களானவைமகத்தாகியவிருடிகண்மரவுரிதரிப்பதுநிமித்தமாகப்பட்டையைவெட்டியுரிக்கையினாலும்வாதையுறுமஃதன்றிப்பனிப்பெய்கையினாலும்பொரிந்துபோகும் அஃதன்றிபொராநின்றகையினையுடையயானைகள்கூடிவேரைப்பறிக்கவதனாலுமுரிந்துநாசத்தையடையும் எ-று
மூசுதல் - கூடல் - (எ௪)

இங்ஙனங்கூறிமேற்பொதுவிதியுணர்த்துகின்றார்.

பெற்றிடுஞ்செல்வமும்பீடைசெய்திடு
மற்றுயர்வாழ்வினைமதித்தவேலையி
லுற்றிடுமுணர்வுமிம்முறையினொத்திடுஞ்
சிற்றுயிர்க்குடற்சிறைசெறிதலாலரோ

எ-து யாதொருவன்செல்வமுமற்றொருவனது அதிகசெல்வத்தைக்கண்டவிடத்துநமக்கவ்வளவுண்டாயிற்றில்லையேயென்னுந்துக்கத்தைக்கொடாநிற்குந், தான்கற்றகல்வியானதும்பிறரொருவனதிகவித்தையைக்கற்றவிடத்துமிந்தப்படி

யேதுக்கத்தைவிளைக்குஞ், சிற்றுயிராகியஆன்மாவுக்குச்சிறைச்சாலையாகியவுடலான துபந்தமாகக்கூடுகையாலிப்படி விசாரிக்கப்பண்ணும். எ - று (எரு)

இதுவுமது.

பரிமிசைக்கரிபுறப்பயின்றபாவகன் ※
றுறைதனிற்சிவிகையுட்டங்கினெனெதிர் ※
வரமுனைக்களிப்பினைமாற்றிமையலும் ※
பிரிவிலன்றேர்வரச்சிவிகைப்பேதையும் ※

எ - து யாதொருவன்பூமியின்கட்கால்நடையாய்வந்தவன்தனக்கெதிரே சந்தோஷத்துடனே குதிரையேறிவருமவனைக்கண்டுநாமுங்குதிரையேறப்பெற் றேமில்லையேயென்றுதுக்கத்தையுறுவன், அந்தக்குதிரையாளியுந்தண்டிகைபல்ல க்கேறியெதிரேவருவோனைக் கண்டுமுன்னுள்ளசந்தோஷத்தையொழித்துத்தமக் கு அஃதுண்டாயிற்றில்லையேயென்றுதுக்கத்தையுறுவன், அந்தபல்லக்கில்வருமறி வில்லாதவனுந்தேரேறிவருவோனைக்கண்டுதுக்கத்தையுறுவன்ஆதலாலொருவர்க் கொருவரிப்படியேயுத்தரோத்தரந்துயருறுவர்கள் எ - று (எசு)

இதுவுமது.

இம்முறையமராருமிடுக்கணெய்துவர் ※
தம்மினுமுயர்ந்தவர்பதத்தைத்தாமுனி ※
யெம்முறையானுமெய்யிடுக்கணேதுவே ※
செம்மையசெல்வமேசிவானுபூதியே ※

எ - து இந்தபடியே தேவர்கள் முதலாயினோருந்தமக்குமேலானபோர்பத ப்பிராப்திகளைக் கருதியுத்தரோத்தரந் துக்கத்தையுறுவர்கள், இங்ஙனமெந்தெந்த விதத்திலேசரீரத்தையெடுத்தாலுந்துக்கத்துக்குக்காரணமேயாதலாற்சிவனுடை ய ஸ்ரீபாதகமலத்தை யடைந்து சிவானந்தானுபூதியைத் திளைத்திருப்பதே யழியாத செல்வம் எ று (எஎ)

தங்கள்தங்கள் கன்மத்துக்கீடாகத்தேவர்களாலசு
ரரும் இராக்ஷதருந்துயருறுவரென்பதூஉமவ்விருவ
ராலுந்தேவர்கள் துயருறுவர்களென்பதூஉமுணர்
த்துகின்றார்

சமர்தனில்மரராலசுரர்தாழ்வரோ *
யமராருமவர்களாலபசயத்தரோ *
யிமையவர்தயித்தியரிந்தநீர்மையர் *
தமதமவினைபரிபாகஞ்சாரவே *

எ - து வெளி தயித்தியர் - இராக்கதர். (எஅ)

மேற்கன்மமுங்காலமும் பலத்தைக் கொடுக்கமாட்டாது சிவனேகொடுப்பனென்பதனை யுணர்த்துகின்றார்

கருமமும்பலத்தினைக்காட்டவல்லதே *
பருவமுந்தனக்கதுபண்ணவல்லதே *
யிருவினைப்பருவமும்பலமுமீசனே *
தருவனென்றுணர்கிலாருடலிற்சார்வரோ *

எ - து கன்மமுங்காலமுஞ்சடமாகையாலான்மாக்களுக்குத்தானகப்பலத்தைக்கொடுக்க மாட்டாது, ஆதலாலவரவர் புண்ணிய பாவபக்குவத்தையுமதனாலுண்டாயபலத்தையுமறிந்து தருகிறவன்சிவனேயென்றறியாதவர்கள், பூட்டையுநீரும்போல மீளவுஞ் சனனமரணத்தையெடுத்துழல்வர்கள் எ று. (எக)

வியாதியினால்வருந்துக்கமுணர்த்துகின்றார்

அருந்துயரடையுமேயவர்தமாதியின் *
மருந்தினையருந்தினுந்துயரம்வந்துறு *
மருந்திடுந்துயரினையறிவர்யாவரும் *
விரிந்திடவிவ்விடத்துணாக்கவேண்டுமே *

எ - து வெளி. வேண்டுமேயென்ற - ஏகாரம் - வேண்டாமே யெனவெதிர்மறையின்கண்வந்தது. (அய)

நரைதிரைமுதலிய துன்பத்தையுணர்த்துகின்றார்

நரைதிரைவருதலினடலையோபெரி *
திரைதருமவரொவரொன்னவேங்கியே *
வருதுயரளவிலேமரணவேலையில் *
விரவியதுதரான்மிக்கதுக்கமே *

எ - து வெளி. திரை - உடம்புதிரைதல் (அக

இதுவுமது

ஆயுவுஞ்சதமெனவறையப்பட்டதே *
யாயினுமவரவர்கருமத்தாலுடன் *
மாயுமென்றறிகமாதுயரமேவருங் *
தேயுமந்நாடனிற்காலன்சேரவே *

எ - து ஆன்மாக்களுக்குப்பூரணமானவயதுநூறென்றுவேதாகமங்களிற் சொல்லப்பட்டதேயானாலுமவரவர்செய்தகன்மத்துக்குத்தக்கதாகக்கெற்பத்தின மூவிப்போகிறதும்பிறந்தவுடனேயழிகிறதும்வளர்ந்துபாலதருணவிருத்தபாவத்தையடைந்தழிகிறதுமாயிருக்குமென்றறிக, விங்ஙனமான்மாக்களுசத்தையடையுங்காலத்துயமதூதர்வந்துபொருந்துகையினாற்பயந்துமகத்தாகியதுயரத்தையேயுறுவர்கள் எ - று (அஉ)

அந்தமரணகாலமிருவிதப்பட்டிருக்குமென்பதனை
யிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

மிருத்தியுமிருவிதமொன்றுமீண்டிடு *
மருத்தியமருந்தினுமழலையோம்பினு *
முறைத்தமந்திரத்தினுமோதனுதியைக் *
குருத்தவர்க்குதவினுமன்புகூரவே *

எ - து மரணமானதுகாலமிருத்தியுவென்றும் அவமிருத்தியுவென்றுமிருவிதப்பட்டிருக்குமிதில்அவமிருத்தியுவானதுவாகடநூலினிற்சொன்னஅவுடதம்பொசிக்கையாலுஞ்சிந்தித்தண்டுமுதலியதிரவியங்கொண்டோமம்பண்ணுகையாலுமிருத்தி ஞ்செயமந்திரசெபங்களினாலேயும்பெரியதபோதனர்களைக்கிருபையுட்னேயன்னமுதலியபாகபேதத்தைப்பொசிப்பிக்கையாலுந்திரும்பப்படும். எ - று [அரு]

மற்றையமிருத்தியும்வந்தவேலையி *
லுற்றெவருடலிடையிருப்பபோர்ந்திடிற் *
பற்றியவுடலினைவிட்டுப்பாறியே *
முற்றியவினைப்பயன்சிவன்முனுமே *

எ - து மற்றைக்காலமிருத்தியுவானது, வந்தகாலத்து அதனைவிசாரிக்கு

மிடத்து ஒருவருமுடலின்கணிருக்கவல்லாரில்லை, ஆதலாலான்மாவானது பிராரத் தகன்மம்பொசித்துத் தொலையவந்தகாலத்து மிருத்தியுவந்தவுடனே பொருந்தியிருந்த தேகத்தைவிட்டுப் போய்ப்பரிபக்குவமானகன்மத்துக் கீடாகவதற்கதற்கேற்றதனு கரணாதியைப்பொருந்தும் எ - று.

(அ௪)

அந்தமரணகாலத்துண்டானதுக்கத்தை யுணர்த்துகின்றார்

விட்டிடும்வேலையின் வியந்தவச்சமே *
பட்டிடப்படுந்துயர்பகரலாவதே *
கட்டுவைநீங்கியேகாதல்செய்யுமண் *
கட்டுவைதன்னையும்பின்னைக்காமுறும் *

எ - து வெளி. கட்டுவை-கட்டில்

(அ௫)

இதுவுமது

தனத்தினைமனைதனைத்தாளியந்தனை *
நினைத்திளியெவரனுபவிப்பர்நீங்குநா *
ளெனக்கிவையன்னியமாகுமேயெனு *
மனத்துயர்மலியவேமாயுமாவியே *

எ- து - வெளி

(அ௬)

இதுவுமது.

பாம்பழல்வாயினுற்பற்றமண்டுகந் *
தேம்பிடுந்துயருறுஞ்சீவன்றேயுநா *
ளோம்பிடவல்லரோயுற்றமற்றையார் *
போம்பொழுதருந்துணைபுரிந்தபுண்ணியம் *

எ - வெளி- மண்டுகம்- தவளை- ஓம்பல்- பாதுகாத்தல்

(அ௭)

ஆன்மாமற்றொருதேகத்தைப்பற்றியேயிதனைவிடுமென்பதற்குவமைமுகத்தாலுணர்த்துகின்றார்

திரணுறுஞ்செழுகைபோற்சீவன்றீண்டியே *
வருமுருவதனை முன்னுருவமாற்றிடுந் *
தருமமேபருவமேற்சாரும்வானினைப் *
பருவமேற்றீவினைநிரையம்பற்றுமே *

எ-து ஆன்மாவானது புல்லினிடத்துப்பொருந்தியசாளைப்பானபுழுவொருதலைபற்றியொருதலைவிடுமாறுபோலவந்தியகாலத்தெதிரோ வாராநின்றயாதனாசரீரமாகியசூக்குமதேகத்தைப்பற்றிப்பின்பந்தப்பூதசரீரமாகியதூலவுடலைவிட்டுநீங்கும் அங்ஙனம்யாதனாசரீரத்தை யெடுத்துக்கொண்டு செல்லும்போது நல்வினைப்பரிபாகமானாற் சுவர்க் கத்தை யடையுந் தீவினை ப்பரிபாக மானா னரகத்தை யடையும் எ-று (அஅ)

மரிப்பதைப்பற்ற இரத்தலுங்கரத்தலுமே மிகுந்ததுக்கமென்றுணர்த்துகின்றார்

மரிப்பதினருந்துயர்மதிக்கின்மற்றிலை ❋
யிரப்பதேயதனினும்பெரியவின்னலே ❋
கரப்பதூஉமிரப்பதிற்கடியவின்னலே ❋
யிரப்பதூஉங்கரப்பதூஉமின்மையின்பமே ❋

எ-து மிகுந்ததுக்கங்கள்பலவுளவாயினும்விசாரித்துப்பார்க்கும்போது மரிப்பதைப்பற்றவுமருந்துயர்வேறில்லை, யதனினுமிகுந்ததுக்கமொருவன்பாற்சென்றீதாகொடுவென்றிரத்தலே, யதனினுமிகுந்ததுக்கம்இரப்போர்க்கில்லையென்கையே, ஆசலால்தானொருவன் பாற்சென்றிரவாதிருத்தலுந்தன்பால்வந்திரந்தோர்க்கில்லையென்னாதிருத்தலுமிம்மைமறுமையிரண்டினுக்குமின்பமாவது. எ-று [அக]

துறவுடையோர்மகிமையையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

மண்ணினுந்தனத்தினுமனைக்குவாய்த்தநற் ❋
பெண்ணினுமகவினும்பெரியபேரினுந் ❋
துண்ணெனவிழைவினைத்துறந்ததூயரோ ❋
விண்ணினுமின்புடன்விளங்கிமேவுவார் ❋

எ-து மண்முதலாகியபூமிகளினுந், தனதானியமுதலியவற்றினுந், தன்மனைக்குரித்தாகியநற்குணத்தையுடையபெண்டிருடனும், பிள்ளைகளிடத்தினுந், தன்னைப்பெரியோனென்றுசொல்லுங்கீர்த்தியினு, முண்டாகாநின்றவாசையைச்சுடுதியில்விட்டசுத்தரோ, தேவலோகத்தினுமின்பத்தோடுகூடிக்கீர்த்தியைப்பொருந்தியிருப்பர் எ-று விண்ணினுமென்றவும்மையால், மண்ணினுமவர்களே நன்மையனுபவிப்பார்களெனவறிக. (கூ0)

ஆக்கையிற்றுயர்பெரிதற்பமின்பமென் *
றூக்கையையறவெறுத்தார்வங்கூர்வரே *
லாக்கையினனாதியேமுத்தனுக்கவ *
னாக்கையுந்துயரமுமறுப்பனாணையால் *

ஏ - து சரீரமெடுத்ததினாலேதுக்கம்பெரிது, இன்பஞ்சிறிதென்றுவிசாரித்துத்தேகாதிபிரபஞ்சத்தைநன்றாகவெறுத்துத்தேகத்தினின்றும்அனாதிமுத்தனாகிய சிவனுக்குஅன்புபொருந்தியிருப்பாராயின், அந்தச்சிவனும், ஆக்கினாசத்தியினாலே யாக்கைக்கேதுவானமலமாயாகன்மமாகியதுக்கத்தையொழிப்பன் எ - று

அனாதியேமுத்தனுக்கார்வங்கூர்வரேல் என்றுகூட்டிப்பொருளுரைக்க (௧௧)

ஆசையானதிருவிதப்படுமென்றுணர்த்துகின்றார்.

வேறு.

ஆசைதானிருபேதமேயவையேயனாதியிலாதவன் *
பேசுநூல்விதிபேணியேசெயும்பெற்றிதான்முதன்மற்றதுந் *
தேசுசேர்வினைதீரவேவருசேதனாவிபரீதமே *
யாசிலாவரனாணையாலவையாள்வரோயுடலாளரே *

எ - து ஆசையானதிரண்டுவிதமாயிருக்கும், அதிலொன்று - அனாதிகாலத்திலேதொடுத்து ஆசையில்லாதிருக்கிற சிவனருளிச்செய்தவேதாகமத்தின்வழிதப்பாமனடக்குமியல்பு, மற்றொன்று- நல்வினைநீங்கியவறிவுமயக்கத்தினாலிதுவே நிச்சயமெனக்கருதிச்செய்யுந்தீவினை, யாதலாற்சரீரத்தையெடுத்தவர்கள், அந்த நல்வினைதீவினையிரண்டினையுங்குற்றமில்லாத சிவனதுஆக்கினையினாலேயனுபவிப்பார்கள். எ - று

(௧௨)

ஆன்மாவுக்குமுற்கூறியஆசைமுதலாயினதுநீங்கி
வயிராக்கியம்பிறக்கவேமோக்ஷமுண்டாமென்று
ணர்த்துகின்றார்.

ஆசைமாசறவாகவேரறவாணவாதியுமாயவே *
பாசநாசகவீசனாசிலிபாததாமரைநாண்மலர் *
வாசநேசனுபூதியாவதுவாதையேதுமிலாததே *
தேசுதேசமோரேகமோசிவனேசர்பூரணதேசரே *

எ – து ஆன்மாக்களுக்காசையுண்டாக்குங் கன்மம்நீங்கச்சரீரத்துக்குக் காரணமாகியமாயையும்வலிகெடவாணவகாரியங்களுநீங்கினவாறேபாசத்தைநசிப்பிக்குமவனுமாய்த்-தனக்காணவாதிகுற்றமில்லாதோனுமான-சிவனுடையதிருவடித்தாமரையினதுபரிமளத்தையன்புடனனுபவித்திருத்தலே, வேறொருவாதையுமில்லாதது, அங்ஙனமந்தவனுபவத்தையுடைய முத்தான்மாக்களுடையஞானம், ஏகதேசமல்லச்சிவனைப்போலச்சருவஞ்ஞத்துவாதிகுணங்களோடுகூடிவியாபித்திருக்கும். எ – று ஆணவாதியென்பதனால் விந்துதிரோதானமுமெனவறிக (௬௩)

முற்செய்யுளிலான்மாவைவியாபியென்றதைஇச்
செய்யுளிற்சாதித்துணர்த்துகின்றார்

வேறு.

ஏகதேசவுடலுற்றவர்க்கறிவுமேகதேசமலதில்லையே ※
யேகதேசவுடலற்றபோதுமறிவேகதேசமெனலென்சிவ ※
னேகதேசவுடலற்றவன்னறிவுமேகதேசமலவாதலா ※
லேகதேசவுடலற்றமுத்தனறிவேகதேசமலவென்பரே ※

எ–து ஏகதேசவுடலைப்பொருந்தினவான்மாக்களுக்கறிவுமேகதேசமேயல்லாமல் வியாபகம்விளங்காது, ஏகதேசவுடலாகியபெந்தத்தைநீங்கினபோதறிவையேகதேசமென்றுசொல்லவேண்டுவதில்லை, அஃதேதுகாரணத்தாலெனில் சிவனேகதேசசரீரமில்லாதவனாகையாலேயவனுடைய வறிவுமேகதேசமல்ல – வியாபியே-யதுபோல – ஏகதேசவுடனீங்கினமுத்தான்மாக்களறிவுமேகதேசமல்லசருவவியாபியே. எ – று (௬௪)

முத்திக்குமலக்ஷயம்பிறத்தலேமேலானகாரணமென்
றுணர்த்துகின்றார்.

வேரறப்பணையுமற்றுமற்றொழியும்வேறவற்றுமுதன்மேவுமே ※
யாரணத்திணையுமாகடத்திணையுமாயுமற்புதனலாரியன் ※
பேரருட்பெறவனாதிமுத்தனெடுபேதமற்றதிலைபேறுதான் ※
கூரிருட்குழுவறுத்தறக்குமுடல்கூடமுத்தனனுகூலமே ※

எ – து யாதொருமரமானதுவேரற்றவாறேயதனுடையகொம்புபணைகாய் பூவெல்லாம்நாசமடைந்துமேலுமுற்பத்தியுமுண்டாகாதவாறுபோல, வாணவமா

கியநிறைந்தவிருவரீங்கியவாறேயுடலானதுமலமாயாகன்மத்தோடுங்கூட நாசத் தையடைந்து முத்தியையடையும் அஃதென்னெனில்வேதாகமங்களையையந்திரி பறவுணர்ந்தஞானாசாரியனாகியிருந்தகிருபைபெற்று அனாதிமுத்தனாகியசிவனோடு கூடியிரண்டறவயிக்கியமாயிருப்பதேமேலானபேறு. எ - றுதான் - அசை (கரு)

இங்ஙனம்பெற்றமுத்தான்மாவினுடையதன்மையு
மவர்கள்சிருட்டியாதிகிருத்தியங்களைப்பண்ணானொ
ன்பதூஉமுணர்த்துகின்றார்.

முத்திபெற்றவனழுக்கனைத்தினையுமுற்றவிட்டுமூளையற்றவ *
னித்தனுத்தமனிருத்தசுத்தசுகசிற்கனத்துநிலையுற்றவன் *
புத்தனத்தவிதமுற்றுமிக்கபிரபுத்தனைக்கெழுவுபூரணன் *
றத்துவத்தொகைமலத்தோடற்றுமுடலைப்பெறப்பிறர்சமைப்பனோ *

எ - து முத்தான்மாவானவன்ஆணவாதிமலங்களைமுழுதும்போக்கிமேமற் செனனமில்லாமலிருப்பவன், நித்தியனுமாயுத்தமனுமாயொருபொருளினும்பற்றி ல்லாதசுத்தனுமாய்ச் சுகஞானசொரூபத்திலே நிலைபேறுடையனுமாயெக்காலமு ம் புதுமைசெய்திருப்போனுமாய் அப்பொருள்விதங்களெல்லாவற்றினும்பொருந் திப்பிரபுவுமாயிருக்கிறசிவனுடனேயயிக்கமாயிருக்கிற அந்தவியாபியானவன் கருவிகரணங்களுடனே கூடியதத்துவகூட்டத்தையும்ஆணவாதிமலங்களுடனே கூடப்போகக்டித்திருந்துமற்றவான்மாக்களுடலினைப்பெறுதற்குத்தான் சிருட்டி யாதிகிருத்தியங்களைப்பண்ணுவனோபண்ணான் எ-று ஓகாரம் - எதிர்மறை (கசு)

மேன்முடிந்ததுமுடித்தலென்னுந்தந்திரவுத்தியா
லுணர்த்துகின்றார்.

வேறு.

என்றுபிறவித்துயரிறப்பவிசைத்தான் *
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் *
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினைநைய *
நின்றமுனியன்றுணரநிற்குணனினைந்தே *

எ - து வெளி (கஎ)

மேற்சிவத்துதியுணர்த்துகின்றார்

வேறு.

மூரிவல்லானை முருக்கினனே மூதிர்சடைசூடி முருக்கினனே ❋
பாரியோர்பாலுமப்பண்ணினனேபாடியநான்மறைப்பண்ணினனே ❋
கூரிருள்ரட்டுடுங்கொள்கையனேகோல்வளையார்பலிகொள்கையனே ❋
காரியகாரணனானவனேகரிசறக்காயமூன்றானவனே ❋

எ-து ஆங்காரத்தையும்வலியினையுமுடையயானையின்றோலையுரித்தவனே,முதிர்ந்ததிருச்சடாபாரத்திற்பலாசம்பூமாலையைத்தரித்தவனே,பார்வதியாரையொருபாகத்திலேபொருந்தவைத்தோனே, நாலுவேதங்களைப்பாடிய-இசையையுடையோனே, மகாசங்காரகாலத்திலே திருநடமேதொழிலாகச்செய்யுங்குணத்தையுடையோனே, அழகியவளையினைத்தரியாநின்ற இருடிகள்பத்தினிமாரிடும்பிச்சையையேற்குங்கையையுடையோனே, நாதமுதலியகாரியங்களுக்கு நிமித்தகாரணனாயுள்ளவனே, ஆணவாதிதோஷங்களையறும்படிதெகிக்கமுதன்மையையுடையோனே எ-று கோலம் - கோலென்றாயிற்று. (௯அ)

இதுவுமது.

என்வினைதன்னைப்பிறுத்தவனேயேநுப்பிறொன்னவிறுத்தவனே ❋
முன்மலைவாரைமுருக்கினனே முன்னினர்நெஞ்சுமுருக்கினனே ❋
யன்னையுமத்தனுமற்றவனேயகமெனுமற்பனுமற்றவனே ❋
முன்றொருவேள்விமுடித்தவனேமுதிர்சடைக்கங்கைமுடித்தவனே ❋

எ-து யான்செய்தகன்மங்களெல்லாவற்றையும்போக்கினவனே, யான் மாவினுடையசொரூபமேதென்றுவிசாரிக்கவறிவுண்டாக்கினவனே, பிரமனுமாலு நானேகருத்தாவென்றுமையலுற்றவிடத்துத்தழற்பிழம்பாய்த்தோன்றியவர்கள் அஞ்ஞானத்தைப்போக்கினவனே- தன்னைத்தியானஞ்செய்தவர்களுள்ளத்தையுமுருகப்பண்ணினவனே, மாதாபிதாவில்லாதோனே, நானென்னுமகங்காரத்தையுடையபுல்லியருமுன்னையல்லாதபிரமவிட்டுணுக்களே, தன்னையிகழ்ந்துசெய்ததெக்ஷப்பிரசாபதியாகத்தைநாசம்பண்ணினவனே, முதிர்ந்ததிருச்சடாபாரத்திலே கெங்காபவானியைத்தரித்தவனே எ-று அற்பன் - மற்றவன் - என்னுமொருமையைப்பன்மையாக்குக (௯௯)

கந்தன்றுதியுணர்த்துகின்றார் வேறு

கமலமற்றிடமே சார்தாய்மனைதனையர்மற்றையர்தாமாரோவென ※
விமலவித்தகவின்றோர்வேறறுவிதுலசிற்கனதாதாவானவன் ※
கமலைநற்பதிவேதாவாதியர்கழறெழுக்கசியாளூர்காய்வழி ※
யமலனற்புதனானேறேறிதந்தருள்குகற்கினியாளாவாமரோ ※

எ-து தனக்கன்பரானோர்க்குத்தங்களுடையவாணவாதிதோஷம்போகவும் அன்புபொருந்தியதாய்பெண்டீர்பிள்ளைகள்மற்றுமுண்டாகியபந்துசனங்களையிவர்கள்யார்யாமாரென்னும் வெறுப்புவரவும்மேன்மைபொருந்தியஞானமயத்தைக் கொடுக்குந்தாதாவுமாய்- இலக்குமிபதியாகியதிருமாலும்பிரமாவுமுதலாயினோர்கள்வந்துவிமலனேவித்தகனேயொப்பிலாதவனேயென்றுதோத்திரஞ்செய்து தனதுசீபாதத்திலேவணங்குகையாலிரக்கமில்லாதவராகியவித்யுன்மாலிமுதலியர்முப்புரத்தினையெரித்தவில்லினையுடையனுமாய்-மலமில்லாதவனுமா-யதிசயத்தையுடையனுமா-யிடபவாகனத்திலேயேறுவோனுமாயிருக்கிறசிவன்பெற்றசுப்பிரமணியற்கு, யாமுன்போற்செனனசாகரத்திலடிபடாமலினியடிமைப்படுவாம். எ-று (௱)

அகத்தியர்துதியுணர்த்துகின்றார்

மருவியுற்றனை நீயே நீயலைமருவுவித்ததுமாதாவாருயி ※
ரிருளறுத்தனை நீயோ நீயலையெனவெனக்கியலீவானேயவன் ※
மரவமுற்றியவர்சார்காரகின்மலியநற்றவர்மாடேநீடிய ※
வருவனைப்பபிலானுமாதவனருளகத்தியனாருருகமே ※

எ-து குங்குமமும்விளைந்துமணம்பொருந்தியகாரகிலும் நெருங்கிநல்லதபோதனர்களும்பக்கத்திற்பொருந்திய அரியபொதியின்கணீங்காதிருக்கிறமகாதவத்தினையுடையனுமாய்க்கிருபையையுடையனுமாய்முப்பத்தாறுதத்துவமேசரீரமாகவுடையனுமாயிருக்கிற-அகத்தியனானவனே, யிந்தத்தேகத்திற்பொருந்தினவனும்நீயோநீயல்லவிந்தத்தேகத்தையுண்டாக்கினதுமாதாவுமல்லஉடலினுண்டாகிய ஆணவத்தைநீக்கினதும்நீயோநீயல்லவென்னும்வாக்கியத்தையெனக்குத்தெரிவித்தவன். எ-று நீயோநீயல்லவென்றுஆன்மாவைக்கருதிவினவுகையாற்கூட்டிமுடிப்பான்கருத்தாவென்றுகருதிற்று - ஆனாமை-நீங்காமை (௱க)

எட்டாவது செனனமரணவியலுரை
முற்றும்.

# ஒன்பதாவதுசுவர்க்கநரகசேடவியல்

மேலிவ்வோத்தென்னுதலிற்றோவெனின் - ஓத்துநுதலியதூஉமோத்தினதுபெயருரைப்பவேவிளங்கும் - ஆயினிவ்வோத்தென்னபெயர்த்தெனில் - சுவர்க்கநரகசேடமனுபவித்தற்கெடுக்குஞ்சரீரத்தைக்கூறிற்றுதலாற்சுவர்க்கநரகசேடவியலென்னும்பெயர்த்து- முன்னையியலின்கட்செனனமரணதுக்கங்களைக்கூறிப்பூமியின்கணிருவினைக்கிடாகச்சுவர்க்கநரக சேடமாகியசரீரங்களையெடுக்குமிலக்கணத்தைக்கூறினமையாலதன்பின்னிதனைவைத்தார். இதனுள்இத்தலைச்செய்யுளென்னுதலிற்றோவெனின்நல்வினைதீவினைசெய்தோர்.உயர்ந்தசாதிதாழ்ந்தசாதியிற்றோற்றுமுறைமையைத்தொகுத்துணர்த்தனுதலிற்று.

புண்ணியர்விண்ணவர்தம்புரிபுக்கே
மண்மறையோர்குலமாய்வருமாறும்
பண்ணினர்தீவினைபாதளமுற்றே
தண்ணியராகையுமின்றுசமைப்பாம்

எ - து வாராபகத்தியனே. புண்ணியததைச்செய்தவர்கள்சுவர்க்கலோகத்திற்சென்று, அங்குள்ளபோகம்பொசித்துத்தொலைந்தவாறே பூமியின்கட்பார்ப்பார்முதலியநற்குலத்தில் வந்து பிறக்குமுறைமையினையும், பாவத்தைச்செய்த பேர்கணியைபத்தின்கண்ணழுந்தியாங்குள்ள துன்பங்களையனுபவித்துத்தொலைந்தவாறேதாழ்ந்தகுலத்தில் வந்துபிறக்குமுறைமை யினையு மிப்போதுனக்கு. யாம். சொல்லாநின்றோமதனைக்கேட்பாயாக. எ- று (க)

நிறுத்தமுறையானேபுண்ணியஞ்செய்தோர் பூமியின்கண்வந்துநற்குலத்திற்பிறந்துசற்கன்மத்தையடைந்து மோக்ஷமடையுமுறைமையைமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேதகதோதியவேதவிதிக்கே
சாதகர்வானவர்தம்புரிபுக்கே

மோதகராயதன்வாழ்வுமுடித்தே
வேதியராவர்கண்மேதினிமீதே ※
※

எ- து ஆன்மாக்களுக்கறிவைவிளங்கச்சிவனருளிச்செய்தவேதாகமத்தின்வழியனுட்டித்தவர்கள்- சுவர்க்கலோகத்திற்சென்று சந்தோஷத்தை யுடையராயாண்டுள்ளபோகங்களை யனுபவித்திருந்தந்தப் போகந்தொலைந்தவாறேபூமியிற்பிராமணராய்வந்துபிறப்பர்கள். எ- று

மோதகம். சந்தோஷம்

(௨)

முன்னையநல்வினைவாதனைமூளத்
துன்னுவர்நூல்விதியானதொடர்ந்தே ※
யென்னிலர்மண்மிசைநல்வளமீயத்
தன்னிகரில்சிதன்றனைதரித்தே ※
※

எ- து முற்செனனத்திற்செய்த புண்ணியத்தின் வாதனைபெலத்தினாலேயிச்செனனத்தும்வேதாகமங்களையோதியதன்வழியை யறிந்தனுட்டித்துத்தனக்குநிகரில்லாதசிவனுடையவிபூதிகண்டிமுதலியவடையாளங்களைத்தரித்துச்சிவார்ச்சனைசெய்துபூமியின்கண், எண்வகைஐசுவரியத்தையு முடையராயிருப்பர்களாதலால்தன்பால்வந்திரப்போர்க்கீயுமதற்கவர்களுக்கெதுதான் குறைச்சல். எ- று

எண்வகை ஐசுவரியமாவன- இராசாங்கம்- மக்கள்- சுற்றம்- பொன்- மணி- நெல்வாகனம்- அடிமை-

(௩)

முற்றுவர்நல்வினைமுற்றியபின்னர்ப்
பற்றுவர்வானுயரும்பதிபற்றித் ※
துற்றுவர்போகவிதம்பலதுற்றிப் ※
பற்றுவர்பற்றறவீசனற்பாதம் ※
※

எ. து இங்ஙனம்பூமியின்கட்சற்கன்மத்தையேசெய்து கொண்டிருப்பர்கள்,பின்னரந்தப்புண்ணியபரிபாகம் பிறந்தவாறேமேலான சிவலோகத்திற்சென்றுநானாவிதமாகியபோகங்களைப்பொசித்திருப்பர்கள், இங்ஙனமது அனுபவித்தந்தப்போகத்தில்வயிராக்கியம்பிறந்தவாறே வேறொன்றிலும்விருப்பமற்றுச்சிவனதுசீபாதகமலத்தையேசேர்வர்கள். எ- று

[௪]

மேனிறுத்தமுறையானே பாவத்தைசசெய்தோர்நரகத்தின்கட்கிடந்தழுந்திமீண்டுபூமியின்கட்பிறக்கும்போதுதாங்கள்செய்தகன்மத்

துக்கிடாகியசரீரங்களெடுப்பபொன்பதனையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

கூட்டினர்பாவபேதமிரக்கமிலியமதூதர் *
கூட்டியநரகபேதக்குழிவிழுந்தழுங்கியாழ்ந்து *
மீட்டுமணணிழிந்தயோனிவிதமெலாம்விரவிமுன்ன *
மீட்டியவறத்தினலுநரர்தனுவெடுக்கும்போதும் *

எ-து முற்கூறியஅதிபாதகமுதலிய பாவங்களைச்செய்தவர்கள் கசிவில்லாதஇயமதூதர்கள்செலுத்தியவிருபத்தெட்டுக்கோடி நரகக்குழியினும்விழுந்தழுந்திக்கிடந்துதுயருற்றுமீளவுமிந்தப்பூமியின் கண்வந்தீன யோனியாகிய தாபரமுதலியஐவகையோனியினையு மெடுத்துத்தொலைந்தவாறே முற்செனனத்திற்செய்தசங்கன்மவாதனுபெலத்தினன்மானிடயாக்கையெடுக்கும்போதும். எ-று
அறத்தினலுமென்றவும்மையால்மறத்தினலுமெனவறிக,தனுவெடுக்கும்போதுமென்றவும்மையாற்றனுவெடுத்தலரிதென்க (ரு)

வஞ்சகமனத்தராயும்வாக்கினையிழந்தாராயுஞ்
செஞ்சொலைக்கேட்குமற்றைச்செவியினையிழந்தாராயு *
நஞ்சிடவழுகுநோயினடலைமெய்புடையராயுந் *
தஞ்செயற்கிசையவாணைவழியினிற்சரிப்பர்தாமே *

எ-து வேதாகமங்களில்விதித்தனசெய்தலும் விலக்கியனவொழிதலுமென்னுமியல்பினைவிட்டவான்மாக்கள்கன்மானு குணமாகக்கர்பித்தகடவுளினது பிரேரகத்தினற்றத்தமனதுக்கேற்ற படியினலே நடந்தபாவிகளானேர், வஞ்சகமனத்தையுடையராயுமூமராயுஞ்செவிடராயுஞ்சரீரத்தின் கணழுக்கண்முதலிய வியாதியைப்பொருந்தியதனற்றுக்கத்தை யுடையராயுமிப்படியே பலபல வடிவையெடுத்துழலாநிற்பர் எ று. (சு)

மேலதிபாதகமுதலியபாவஞ்செய்தோர்நரகசேடத்துக்கிடாகப்பூமியின்கணதற்கதற்கேற்றவடையாளங்களைப்பொருந்தியந்தவுடற்கண்ணேயெய்துந்தீவினைப்பயன்களை முப்பத்தஞ்சுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

உறவுமாயுயிர்கட்கெல்லாமுயிருமாயொழிவிலாத ✲
வறவனையரனைநெஞ்சத்தனிட்டருமலவாக்கை ✲
பிறவிநோய்ப்பிணியைத்தீர்க்கும்பெருமையகுரவன்றன்னைக் ✲
கறுவியமனத்தினிலேகரிசுறுங்கடையர்தாமும் ✲

எ - து சருவான்மாக்களுக்குஞ்சுற்றமுமாயுயிர்க்குயிராயவர்களிடத்திரண்டறவியாபித்துநிற்போனுமாய்ப்புண்ணியசொரூபனுமாயிருக்கிறசிவனைத்தாடனஞ்செய்து அவனிடத்திலன்பில்லாதநெஞ்சையுடையபாவிகளும், பொல்லாதவுடலையுடையபிறவிப்பெரும்பிணியைத்தீக்கையினாற்சேதிக்கும்பெருமையினையுடையகுருவாசாரியனையும், வெறுப்பினையுடையமனத்தினால் - அவமன்னமென்னும் பாவிகளும். எ - று (௭)

மலத்தினுட்கிருமியாகிமாண்டுமாண்டுதித்துமாறு ✲
வலக்கணுற்றுழ்வர்நிந்தையறைந்தவர்யாவராலும் ✲
விலக்கரும்விதனமுற்றுமுயலகன்வியாதிமேவிக் ✲
கலக்கியவுளத்தராகிக்கதறியேகழிவர்தாமே ✲

எ-து மலத்திற்புழுவாய்ச்செனித்துச்செனித்திறந்திறந்தொழியாத்துக்கத்தையுற்றுக்கிடப்பர்கள் - சிவனையுங்குருவையுங்குருபுத்திரரையுநிந்தைசொன்னவர்கள் முயலகனென்னும் வியாதியைப்பொருந்தியொருவராலுந் தடுக்கப்படாத துக்கத்தையுற்றுக்கலங்கியமனத்தையுடையராகக்கதறிக்கொண்டிறிவர்கள் எ-று (௮)

கருத்துடனேவல்செய்யாக்கரிசர்கள்குரவன்காதை ✲
திருத்தினுந்திருந்தாவுள்ளத்திமிரரோயாவரேவல் ✲
கருத்துறச்செய்வார்தம்மைக்கலைத்தவன்கோபியாவன் ✲
சிரத்துநோயடைவன்றுஞ்சினப்பனேற்சினத்தபோதில் ✲

எ - து ஆசாரியனேவலைச்செய்யப்பெற்றேமென்றுமனத்துடன்செய்யாத பொல்லாதவர்கள் - ஆசாரியர்இதிகாசமுதலியபுராணத்தைச்சொல்லிக்காட்டிப்புத்திசொல்லினுங்கேளாதமனக்கோணலையுடையராய்ப்பிறப்பர் - அவரேவலைச்செய்யு மாணுக்கரைக்கலைத்தவன்; ஒந்தியாய்ப்பிறப்பன் - ஆசாரியரும்பிராமணருங்கோபித்தபோதுதானுமவரைக்கோபித்தானாகில் அவன்மண்டைவியாதியையுடையனா யிருப்பன் எ - று காதை - எ - து - இரண்டாம்வேற்றுமைத்தொகை [௯]

அந்தணான்றன்னைக்கொன்றானருங்கயரோகியாவன் ※
றந்தமும்பழுதேயாகுந்தணியலையருந்தினோர்க்குச் ※
சிந்தியகுநகியாவன்செம்பொனைத்திருடினானுங் ※
கொந்தியகுட்டநோயன்குருமனைகூடினோனே ※

எ-து பிராமணனைக்கொன்றவன்-சயரோகமென்னும் வியாதியைப்பொருந்துவன், மதுபானம் பண்ணினவன்- சொத்தைப்பல்லையுடையனாய்ப் பிறப்பன், பொன்னைத்திருடினவன்பலகாலும் அழுக்கப்பட்டசொத்தைநகத்தையுடையனாய்ப்பிறப்பன், குருதாரகெமனம்பண்ணினவன் குடாரியாற் கொத்தப்பட்டகுட்டவியாதியையுடையனாய்ப்பிறப்பன். எ-று (௰)

பாம்பெனுமுருவந்தன்னைப்பரித்திடும்பகைக்குமஞ்சித் ※
தேம்பியேதிரிவன்றெய்வத்திரவியங்கவர்ந்தநிம்பன் ※
பாம்பணைப்பள்ளியானைப்பழிமொழிபகர்ந்தபாவி ※
கோம்பியாயுதரவங்கிகூர்ந்திடக்குழையுமன்றே ※

எ-து சிவத்திரவியங்களை யபகரித்த பொல்லாதவன்- பாம்பாகப்பிறந்துதன்னையடித்துக்கொல்லும்பகையாகிய கெருடன் முதலியவற்றிற்கு மானிடர்க்கும்பயப்பட்டுக்காட்டிலேகிடந்து தேம்பித்தேம்பித்திரிவன் அநந்தநாகந்தனைப்பாயாகத்துயிலுமாயனை நிந்தைசொன்ன பாவியானவன். ஓந்தியாய்ப்பிறந்து. உதராக்கினி மேலிட்டு, அழிஞலைந்திங்காநிற்பன். எ-று (௰௧)

பறைந்தவாரிரோடும்பழுதுறுபதிதரோடும் ※
புறம்புறுபுலையரோடும்புறம்புறுபுலையனவன் ※
அறந்தனைமறந்தபாவியவரொடிருந்துவாரி ※
உறைந்திடுமவனோக்காமுற்றுவகையோடிணைந்தான்றானும் ※

எ-து காயுடனுங்குற்றத்தையுடையவிரதபங்கனுடனும் நீசனுடனும் அதற்குத்தக்கற்கன்மத்தைச்செய் யாதொழித்தபாவியுடனும், இருந்துவானவனுடனும்வாருஞ்சித்துமகிழ்ச்சியுடன்வார்த்தைசொல்லுமவனும், நீசனாய்ப்பிறப்பன். எ-று (௰௨)

கருவினுளழிவன்முற்றிக்கழிந்துடனழிவன்காளைப் ※
பருவமுற்றழிவனீகைபகர்ந்தபின்றுதவாப்பாவி ※

பெருவலைக்கண்ணியாலும்பிடித்துயிர்வதைத்தபேதை *
கருதியபொருளைத்தக்கோர்க்குதவிடான்றிளைத்தகையன் *

எ-து யாதாமொருவர்க்கொருபொருளைக்கொடுத்தற்கிசைந்து பின்னைக்கொடாதவன் மாதாவினதுகருப்பத்தின்கண்ணேநாசத்தையடைவன், பெரிதாயிருக்கிறவலையினாலுங்கண்ணிகளினாலுமிருக பட்சிமுதலியவைகளைப் பிடித்துக்கொன்றறிவில்லாதவன் கெற்பமுற்றிப் பூமியின்கட்பிறந்தவுடனே நாசத்தையடைவன், தபோதனர்க்கென்றுநியமித்த பதார்த்தங்களையவர்களுக்குக்கொடாமற்றானேயபகரித்தவஞ்சகன்பொகம்றுகரும்பருவத்திலேயிறப்பன். எ-று (௰௩)

அவையவமனைத்துங்குன்றியழிந்திடுமாக்கையாருன் *
சுவையினைவிரும்பியுண்டதுட்டர்கள்சோலைதன்னைத் *
திவலையதிரைநீர்தேங்குந்திண்ணியதீரந்தன்னை *
யவமதியாலேசாலவழித்திடுமற்பர்தாமும் *

எ-து முற்செனனங்களில்மாங்கிசங்களை விரும்பிப்பொசிக்கும் பொல்லாதவருந், தோப்பினையுநிறைந்தநீர்தேங்கித்திவலைதெறிக்கஅலையெறியா நின்றதிண்ணியதாகியஏரிகுளமுதலியவற்றிற்கரைகளையும், அபோதபுத்தியினாலேவெட்டியழிக்குமற்பருங், குட்டவியாதியைப் பொருந்தி யுறுப்புக்களெல்லாங்குறைந்து நாசத்தையடையுமாக்கையையுடையராய் ப்பிறப்பார்கள். எ-று (௰௪)

ஐவகையாகத்தொன்றுமாக்கிடாதருந்தினும் *
தெய்வமேகொழுநனென்றுதெளிந்தவச்சிந்தையற்ற *
தையலைக்காமுற்றானுந்தணந்துகற்புடையாடன்னைப் *
பொய்முயக்கியைப்புல்கும்புலையனும்பன்றியாவான் *

எ-து தெய்வயாகம் பிதிர்யாகம் பசுயாகம் மாநுடயாகம் பிரமயாகம் எனக்கூறியஒமம்வளர்த்தல்முதலிய வைவகையாகங்களிற்றனக்கியன்றதொன்றைச்செய்யாமற்பொசித்தோனுந்தன்கணவனேதெய்வமென்று கொண்டுவேறுவிகாரபுத்தியையொழித்தவுத்தமியை யாசைப்பட்டவனும் பதிவிரதையாகியபாரியைவிட்டுப் பொய்யைமெய்யாகவே சொல்லிப்பசப்பும் பொதுமடவாரைக் கூடும் பாவியான் பொல்லாதவனுமூட்பன்றியாய்ப்பிறப்பன். எ-று (௰௫)

ஒருகுடிப்பிறந்தாள்போகமுகந்தவனூர்நாயாவான் *
றருமமேயெமக்குமொக்குந்தனந்தருவானேடென்று *

கருணையாலன்னசாலைகாப்பதுகற்பலாது ❊
பொருளினைம்நித்துச்செய்தான்புலையனும்நாயுமாவன் ❊

எ-து அன்னியகோத்திரத்திலுண்டான கன்னிகையை விவாகஞ்செய்யாமற்றன்னுடையகோத்திரத்திலுண்டானகன்னிகையை விவாகஞ்செய்தவனூர்நாயாய்ப் பிறப்பன். தனங்கொடுத்துத் தருமஞ்செய்யுங் கருத்தாவுக்கும் அவர் கையிற்றனத்தைவாங்கித்தன்மத்தைக்குறைவறநடத்துகிறமக்கும்புண்ணியமொக்குமென்றுகருதியன்னசத்திரமுதலியவற்றைக்கிருபையுடன்விசாரிக்குமதே முறைமையல்லாமற்றனக்கொருபிரயோசனத்தைக்கருதி விசாரிக்கிறவன் சண்டாளனாகப்பிறந்துபின்புநாயாகவும்பிறப்பன். எ-று (௰௬)

வேறு

இம்மைப்பயனைக்குறியாதேயிறைவன்றிருவாலயமதனுட் ❊
செம்மைசிறக்கமாபூசைசெய்விப்பவரோசிறப்புடையார் ❊
இம்மைப்பயனைக்குறித்தியற்றுமதிகாரியர்நாயுடலெடுப்பர் ❊
புன்மைப்புலையனெனுமுடலும்பொருந்திவிடுவர்புகழினையே ❊

எ-து இம்மைப்பயனாகியதிரவியமுதலியவற்றைக்கருதாமற்சிவனதுஆலயத்தில்வைபோகமாகமகாபூசைகளைச்செய்விக்கிறவர்களேமறுமைப்பயனையடைகிறவர்கள். இம்மைப்பயனைக்குறித்துச்சிவனதுகாரியங்களைவிசாரிக்குமவர்தமதுகீர்த்தியையுமொழித்துநாயாய்ப்பிறந்துபின்புசண்டாளராகவும்பிறப்பர். எ-று (௰௭)

எங்கள்குரவன்பெரியனெனவெண்ணுமதுகற்பதுவல்லா ❊
லுங்கள்குரவன்சிறியனெனநுவலும்பரிவாதவர்தாமும் ❊
பங்குபதத்தர்விழியிழந்துபார்வைதனையுமிழந்தார்கள் ❊
அங்கணவற்றைக்கேட்டார்கள்கேள்விப்புலனற்றவர்தாமே ❊

எ-து யாதாமொருவர் தம்முடைய குருவைப்பெரியனெனக்கருதியிருப்பதேமுறைமை யஃதல்லாமற் பிறனநோக்கி யும்முடைய குரவனொன்றுமறியானெனச்சொல்லுமகாபாதகரானவரு முடவருமாயுருவமுதலியவற்றைப் பார்க்கக்கண்ணில்லாத குருடருமாயும்பிறப்பர்.அவ்விடத்திலேயந்தக் குருதூடணத்தைமனங்களிக்கக்கேட்டிருந்தவர்கள் செவிடராய்ப் பிறப்பர். எ று.

பரிவாதம்- குற்றஞ்சொல்லுதல் வடமொழி (௰௮)

கண்ணிலாக்கிருமியாவன்கருத்தினுனையனென்றே ※
யெண்ணினன்குரவன்றன்னையிடர்ப்படக்குப்பந்தன்னிற் ※
புண்ணையுமுறுவன்பின்புபுகன்றவனபவாதத்தைக் ※
கண்ணுளத்திலனேயாகிக்கரத்தினைக்காப்பனன்றே ※

எ - து ஞானாசாரியனையற்பனெனமனத்தின் கண்விசாரித்தவன் கண்ணில்லாதபுழுவாகப்பிறப்பன் மற்றைச்செனனத்திலே மானுடனாய்ப்பிறந்து குய்யத்திலே வியாதியைப்பொருந்துவன் அந்தவாசாரியர் செய்யாத கருமத்தைசெய்தாரென்று பொய்மொழிசொன்னவன் அறிவற்றமனத்தை யுடையனாய்ப் பிறந்து கழுதை மேய்த்துக்கொண்டுதிரிவன் எ று (௰௯)

பரமனுங்கருத்தாவேவற்பற்றியகருத்தாத்தேவர்க் ※
குரிமையிற்பூசைமற்றுமுனற்றிடாவூனத்தாலே ※
வரமறுமலியனாவன்வாய்த்தநற்சுற்றத்தார்க்கு ※
முருகிடாதொழிந்தான்கண்டுமிடியனுமுறுவன்கண்ணோய் ※

எ - து முதன்மையானவிராசாவினது ஏவற்கண்ணிற் குமவனவ்வாயன் கற்பித்தபடி சிவன்முதலிய தேவர்களுக்குப்பூசைதிருநாள் நடப்பி வியாதகுற்றத்தாலே சிறுமையுடைய அலியாய்ப்பிறப்பன் அச்சிவனடியார்க்கு மனமுருகாது கண்டொழிந்தவன் வறியனுமாய்க்கண்ணோவுமுறுவன் எ று (உ௰)

விருந்தினையாத்தாதுள்ளேவிற்றிருந்தடிசினனே ※
யருந்தினன்கபோலநோயனருந்தவர்க்கருத்தாமுன்று ※
னருந்தியேயவரைப்பின்னையருத்தியவவனேநெஞ்சின் ※
வருந்தவேமருவுநோயன்மாறுமோமருந்தினாலும் ※

எ - து தன்மனையிடத்துப்புதிதாய்வந்தவதிதிகளைப்பொசிப்பியாமற்றொருவனுமாயுள்ளேயிருந்து அன்னாதிகளைப்பொசித்தவன், சன்னத்திலேவியாதியைப்பொருந்தித்துயருறுவன் அரியதபோதனர்களைப்பொசிப்பிக்குமுன்னேதான்பொசித்து பின்பவர்களைப்பொசிப்பித்தவன் நெஞ்சிலே சுளரோகமென்னும் வியாதியைப்பொருந்தித்துக்கத்தையுறுவன் அந்தவியாதி மருந்துகளினாலும் போமோபோவதல்ல எ று [உ௧]

ஓதனமொளித்துக்கொண்டானுதரமந்தாங்கியாவன் ※
வாய்தனிற்புண்ணுமாவன்வழக்கிடைக்கூடமாக ※

வீதிவன்செய்தானென்றேவியம்பியவிழுதைதானும் *
வாய்தனிற்புண்ணையர்வன்வாக்கினுல்வழக்கலாலே *

எ - து பரிவுடனவ்வன்னத்தைத்திருடிப்பொசித்தவன்மூலாக்கினிசொலி யாதவனுய்ப்பசியின்றியிருப்பன். அஃதன்றி - வாயின் கட்புண்ணையும் பொருந்து வன்வழக்குச்சொல்லுமிடத்து ஒருபாலுள்ளாசைகொண்டு ஒருவர்செய்தகு ற்றத்தையின்ன திவர்செய்தாரொன்று விளங்கச்சொல்லாதுமறைவினுற்சொன்ன வறிவில்லாதவனும்வாயினுல்வழுப்படக்கூறலாலேயவ் வாயின்கட் புண்ணையடை வன் எ - று (உஉ)

கண்டனினேயுமாவன்காறனிற்புண்ணுமாவன் *
கொண்டநோய்கண்டுதன்னைக்குறுகியபெரியோர்தம்மை *
விண்டவன்பிதாவைத்தாயைவிரும்பியசுற்றத்தாரைப் *
பண்டையோர்தமையும்நெஞ்சிலிரக்கமும்பாங்குமற்றே *

எ - து யாதாமொருவனொருவியாதியைக்கொண்டிதனைப் போக்குவார் யாவரெனத்தேடித்தன்பால்வந்தபெரியோரையுந்தனதுமாதாபிதாக்களையுந்தன்னி டத்தன்பினையுடைய சுற்றத்தாரையுஞ்சினேகித் தபேர்களையுமிரட்சியாமல்மன தின்கட்கிருபையையுமுரிமையையுமொழித்துத்தள்ளிவிட்டவன்கண்ணைக் காட் டினையுங்காலிலே புண்ணையுமுடையனுய்த்துக்கத்தையுறுவன் எ - று (உ௩)

சொற்றவிப்பலன்கடன்னைத்துன்னுவன்சோரன்சோரற் *
குற்றுடன்பட்டான்றனுமுழைத்தலுனுபாயிதானும் *
பத்தினிபலருட்பக்கபாதத்தையொருத்திபாலே *
முற்றினனலியனென்னுமுடையுடலெடுக்குமூடன் *

எ - து பிறர்சொத்தைக்கவருங்கள்ளனுயுள்ளானும் அந்தக்கள்ளனுக்குத் துணைச்சென்றேனுமதற்குபாயஞ்சொல்லிக்கொடுத்தவனு முன்னர்ச்சொன்ன கண்ணைக்காட்டினையுங்காலிலேவியாதியையும்பொருந்தியதனுற்றுக்கத்தை யுறு வன். தனக்குப்பாரிகள் பலவுண்டாயிருக்கில் எல்லாரையுஞ்சமமாக நடத்தாது ஒருத்தியிடத்திற், றனேமிகுந்தபக்ஷபாதத்தையுடையனுயிருக்கிற அறிவில்லாத வனுற்றத்தையுடைய தேகத்தையெடுத்தலியனுய்ப்பிறப்பன் எ-று (உ௪)

வெள்ளிபட்டாடைதன்னைவிரும்பியேயெடுத்தகையன் *
கொள்ளுமேகுட்டநோய்நீர்க்கோவைவயென்னுதரநோயா *

னுள்ளமுமொல்கிவாடுமுதகநீர்ப்பந்தர்தன்னை *
நள்ளசத்திரத்தைநல்லார்நடுக்குறநாசஞ்செயதான் *

எ - து வெள்ளியையும்பட்டுப்புடைவைமுதலியதுகிலினையுமாசைப்பட்டுத் திருடினபொல்லாதவன், வெள்ளைக்குட்டமென்னும் வியாதியைப்பொருந்துவன், தண்ணீர்ப்பந்தரையும்நல்ல அன்னசத் திரங்களையும் பெரியோர்கள்துயருற அழித்தவன் - நீர்க்கோவையென்னுமுதரவியாதியைப்பொருந்தியதனாலுள்ள மெலிந்துதுக்கத்தையுறுவன் எ - று (உரு)

புலையனேயாவன்கோவிபூதிநாசிகனேகோளன் *
கலகமேவிளைத்தான்கண்ணைக்காட்டியுங்கையினாலும் *
வலமறுமழுகல்வாயன்வனத்துமாசுணமேயாவன் *
விலைசெய்வானீயந்தன்னைப்பித்தளைகவரிவேறும் *

எ - து மிகுந்தகோபத்தையுடையவன், சண்டாளனாகப்பிறப்பன், கோட் சொல்லுமவன், சீயினாற்றத்தையுடையநாசியையுடையனாவன், நயனபாஷை இறைபாஷைமுதலியவற்றால், ஒருவனுக்குச்சண்டையைமூட்டினவன், நன்மை யில்லாததுர்க்கந்தத்தையுடையவாயையுடையனாவன். ஈயம்பித்தளைசாமரைமற் றுமுள்ளபதார்த்தங்களையுந் தத்தமக்கேற்றதொழிலில்லாதோன்விற்கில், அவன் மலைப்பாம்பாய்ப்பிறந்துதுயருறுவன். எ று (உசு)

செலலுறுமென்றுமாலவட்டமுந்திருடுந்தீம்பன் *
வலமிலனேனுந்தன்னைமதித்துவாமனனேயாவன் *
கொலைவிடையூர்திபுண்ணுமனையுறக்குலைந்துநோவ *
னலலுறும்பிறவியந்தனவினைவதைத்தவற்பன *

எ - து ஆலவட்டமும்விசிறியுந்திருடினபொல்லாதவன், எந்நாளுந்துயரத் துக்கிருப்பிடமாய்த் துயரினையேயுறுவன், தானொன்றிலும்வளமில்லாதவனாயி ருந்தும்யானதுக்குவல்லேனிதுக்குவல்லேனென்றுதன்னைப்பெருமைபண்ணி க்கொள்ளுமவன்மிகவுங்குள்ளனாய்ப்பிறப்பன், இடபத்திலேறித்திரியுமவன், கடி த்ததைத்திற்புண்ணைப்பொருந்தியதனால்நடுங்கிவருத்தத்தையுறுவன்பசுவைவதைத் தவற்பனனவன், பிறவிக்குருடனாய்ப்பிறந்ததனாற்றுக்கத்தையுறுவன் எ-று (உஎ)

கோவினைத்துக்கஞ்செய்தான்கோணியநாசியாவன் *
கோவினுக்கிரக்கமில்லான்கூறிடிற்சிபுடனா *

காவியங்கண்ணிநீங்காக்கற்பினளவள்பாற்காத ☼
லோவினன்களத்தினீங்காக்கழலையையுடையனன்றே ☼

எ-து பசுவைத்துயருறுவித்தவன்- கோணன்மூக்கினையுடையனாய்ப்பிறப்பன், சகலதேவருக்குமிருப்பிடம் பசுவாதலாற் பசுவினிடத்திலேயிரக்கமில்லாதவன்,உள்ளேகொப்புளத்தையுடைய நாசியை யுடையனாய்ப்பிறப்பன் சமூநீர்மலர்போன்றகண்ணையுடைய பதிவிரதாபாவத்தை விடாதவளிடத்தன்பில்லாதகணவனானவன்கண்டத்திலேயொழியாதபுரைக்கழலையையுடையனாவன். எ-று [உஅ]

விற்றவன்சோமந்தன்னைவேட்டைவார்வேடனாவன் ☼
றுற்றினன்கடத்திற்கூலிவேலைசெய்தரிசனாவன் ☼
கற்புறுமானைதன்னைக்காப்பவன்றயிலந்தன்னை ☼
விற்பவன்றானுங்கூலிவிரும்பியிற்கொடுத்தவீணன் ☼

எ-து யாகாதிகன்மநிமித்தமாக ஆட்டாங்கோடியைவிற்றவன் வலைமுதலியவற்றால் வேட்டையாடும்வேடனாய்ப்பிறப்பன்; சட்டிபானைமுதலியவற்றிற்பொசித்தவன் கூலிவேலைசெய்யும் பாவியாய்ப்பிறப்பன் - வாணியனல்லாமலெண்ணைவிற்றவனுங்கூலிச்காசைப்பட்டிருக்கும் வீடுகொடுக்கும்வீணனும் யானைப்பாகனாய்ப்பிறப்பன். எ-று [உகூ]

களத்தினிற்கண்டமாலிகழித்தவூன்முதலுண்கல்ல ☼
னுளத்திலன்பொழித்துநூலையோதினன்மூகனாவன் ☼
றளத்தியல்கோசந்தன்னைத்தற்கரன்சாத்தியந்தன் ☼
பளக்குமூக்குடையான்பாங்கார்தருமநூல்பழித்தபாவி ☼

எ-து சாத்திரத்திலேமன்னர்முதலாயினோர்க்காகாதெனநீக்கியமாங்கிசத்தையும் உள்ளிமுதலானபதார்த்தத்தையும்பொசிக்கும் பொல்லாதவன்-சமூத்திலேகண்டமாலையென்னும் வியாதியைப்பொருந்துவன் ஆகமபுராணங்களையுள்ளத்தின்கட்சிரத்தையின்றியாசாரியர்கட் டாயத்தினாலேயோதினவன்ஊமையாய்ப்பிறப்பன், ஆகமசாத்திரங்களை யெழுதிய திருமுறையைத்திருடினவன் - பிறவிக்குருடனாய்ப்பிறப்பன் - சிவாகமமுதலியவுரிமையான நூல்களைப்பழித்தபாவியானவன் - கொப்புளத்தையுடைய மூக்கையுடையனாவன் எ-று (௩௰)

கற்புளார்செயலைநொய்துகழறினன்காக்கைக்கண்ண ☼
னற்றவர்தேவர்ஞானயோகர்நல்லறஞ்செய்வார்கண் ☼

மற்றுமுத்தமர்பாலன்புவைத்திலன்கோணல்வாயன் ❊
பற்புழுப்பிலுநோயன்பழுதுரைப்பவனிவர்பால் ❊

எ - து பெரியவர்களனுட்டித்தவாசாரத்தைநொய்மைபண்ணி நிந்தித்தவன் - மாறுகண்ணனுவன் - நல்லதபோதனர்கள் - தேவர்கள - ஞானயோகிகள் மிகுந்தபுண்ணியத்தைச்செய்வோர்கள் மற்றுமுள்ளபார்ப்பார்முதலியவுத்தமரிவர்களிடத்துக்கிருபையில்லாதவன் - கோணல்வாயையுடையனுவன் - யாதாமொருவர்க்கொன்றைக்கொடுப்போர்களிடத்துக்கொடாதபடிவிகாதம்பண்ணினவன் - பல்லிலேபுழுவுடைத்தாகியநோயையுடையனுவன் எ - று (௯க)

சலமெனும்வாதியாவன்றகைபெறுசமையந்தன்னை ❊
நிலைகுலைசெய்தான்கள்ளநீசரைநேசஞ்செய்து ❊
கொலைவிலக்கிடுவான்மூனுங்கோணியவழக்குக்கூறும் ❊
புலையனும்பொருந்திமன்றிற்புந்தியிற்புன்மையாலே ❊

எ - து தகைமைப்பாட்டையுடையசிவசமயத்தைப்பேதித்தவனுஞ்-சோரராகியவீனரை பிரசாவனவன்ஆக்கினைபண்ணுகையில்பட்சபாதத்தினுலேயவனை விடுவிக்கிறவனும் - அம்பலத்திலேயிருந்து செவ்வைவழக்கைச்சொல்லாநுதனது புத்தியினுட்பொல் லாங்கினுலே வழக்கல்லாவழக்கைச்சொல் லுமீனனுஞ்சலவாதியாவன் எ - று (௯உ)

எளியரைவதைத்தவந்தவினிகைகாலுமில்லான் ❊
களவிலாவடியார்தம்மைக்கறுத்தொறுத்தவன்கைகாலுந் ❊
தளர்வுறக்குட்டநோயுந்தாங்கியவுடலனுவன் ❊
விளிபவன்கொண்டநோன்புவிடிழந்துழல்வன்வேறே ❊

எ - து ஏழையாயுள்ளபெயரையவரிடத்தபராதமின்றிவதைத்தபொல்லாதவன் - கைகால்முதலியவுறுப்புகள் குறைந்தவனுவன் - களவில்லாதவடியாரைக்கள்வனெனக்கருதிக்கோபித்தடிக்குமவன் - கைகாலுந் - தளர்ந்துகுட்டவியாதியையுமுடையனுவன்-தான்சங்கற்பித்தனுட்டித்துவந்தவிரதங்களையிடையிறுகாலங்களில்விட்டவன் - தானிருந்தவீட்டையிழந்துவேறுமுள்ள விடங்களிலேபோய்த்திரிந்துழல்வன். எ - று (௯௩)

நீடியமனைவியல்லான்மற்றைநேரிழையாரோடு ❊
கூடியேசதுரங்காதியாடியகொள்கையாளன் ❊

கேடுறுபுடலினற்பகேசியேயாவன்கோரி ※
ரீடிளைத்திடக்கைவிட்டான்பரிபவப்படுவனெங்கும் ※

எ-து தன்னுடையபாரியல்லாமன்மற்றுள்ளோர்பாரிகளுடனேகூடியிருந்துசதுரங்கஞ்சொக்கட்டான்முதலியவற்றையாடிப்பொருந்தொழிலையுடையவன்-நாசத்தையடையநின்றசரீரத்தின்கண்,அற்பரோமத்தையுடையவனுவன் சுற்றத்தாரானோர்தமதுசெல்வம்போய்மிடியரானவிடத்துஅவர்களுக்கியன்றதுஅன்புடனுதவாமற்கைவிட்டவன்போனவிடத்தெங்கெங்கும்அபூச்சியனாய்நிந்திக்கப்படுவன் எ-று (௩௪)

பொருதவன்சதுரங்காதிபொதுமடவரலாரோடு ※
திருவறவுருவுமின்றித்தீம்பரும்புடையேசேரத் ※
தருபவரெவரோயென்றுதளர்ந்துடற்றாழ்ச்சிபேசித் ※
திரிவனேயிரந்துதின்றுதீர்த்திடாச்செல்லலோடே ※

எ-து வேசியர்முதலியபொதுமடவாருடனேசதுரங்கமுதலியவற்றைப்பொருதவன், செல்வமுமின்றிச்சவுந்தரியமும்போய்ப்பொல்லாதவர்களும், பக்கத்திலேசூழக்காசுபணமுதலியவற்றைத்தருவாரெவரோவென்றுகருதித்தாழ்ச்சிகளைச்சொல்லிச்சரீரம்வாட்டத்தையுற்றெருக்காலுந்திராததுக்கத்துடனேயிரந்தருந்தித்திரிவன். எ-று (௩௫)

அருக்கனத்தமனந்தன்னிலடைந்தவர்க்கிடங்கொடாதான் ※
பரித்திடும்பாரிதன்னையிழந்துளம்பதைப்பன்பாங்கால் ※
விரைத்தெழுந்தெதிர்கொளாதான்விரும்பியபொருளைவீழ்ப்பன் ※
றரித்தனல்வேதத்தாராத்தபோதனர்தமையுந்தாழ்ந்தே ※

எ-து ஆதித்தியனத்தமனகாலத்திலேதனது மனையிடத்தேவந்துசேர்ந்தவர்களுக்கில்லங்கொடாதவன் - அக்கினிசாட்சியாகக்கைப்பிடித்தபாரியையிழந்து - உள்ளத்தின்கண்ணேதுக்கத்தையுற்றுத்திரிவன் - நால்வேதத்தையுமோதியவேதியருந்தபோதனர்களுந் தன்னிடத்துவந்தகாலத்துச்சடுதியிலெழுந்திருந்துதேவரீரொழுந்தருளப்பெற்றதேயென்று - இனியவசனங்களைச்சொல்லிப்பணிந்துரிமையுடனேயெதிர்கொள்ளாதவன் - தான்ஆசைப்பட்டுஆர்ச்சித்திருக்கிறபொருள்களைப்போக்கடிப்பன். எ-று (௩௬)

வேதநிந்தகனே புன்மைவிடக்குணும் புலையனாவன் *
வேதநல்லங்கநிந்தன் வெவ்வினைவேடனாவன் *
வேதஞானிநிந்தைவிளம்பினன்பித்தனாவன் *
வேதியர்பொருளைக்கொண்டான்விளக்குறுவிட்டிலாமே *

எ - து வேதாகமங்களைத்தூஷித்தவன்பொல்லாதவிடக்கைப்புசிக்கும் புலையனாய்ப்பிறப்பன் வேதாங்கமுதலியசாத்திரங்களைத் தூஷித்தவன் - வெவ்வியகொலைத்தொழிலைச்செய்யும்வேடனாய்ப் பிறப்பன் - வேதாகமங்களையோதியுணர்ந்தஞானவான்களைத்தூஷணஞ் சொன்னவன்-பயித்தியங்கொண்டு போவன் வேதியர்பொருளையபகரித்துக்கொண்டவன் விளக்கின்கண்விழுகிறவிட்டிற்பூச்சியாய்ப்பிறப்பன் எ - று (௬௭)

விட்டிடாவியனோயாளனாப்பிட்டிகவிரதம்விட்டா *
னொட்டகமாதிப்பின்மைதுனிபிரமேகரோகி *
பிட்டமிக்கினங்கினுனாரியரினைத்தோஷிக்கப் *
பட்டவைம்பருவந்தன்னிற்பாங்கலாமற்றைப்பாலும் *

எ - து நயிட்டிகப் பிரமசரியத்தைமரணாந்தம்வரையு மனுட்டிக்கவென்று சங்கற்பித்துக்கொண்டதனைமுடிவுபோகவனுட்டியாமலிடையிதுகாலத்திலே விட்டவன்சரீரத்திலேஅனவரதகாலமுமொழியாதவியாதியைப்பொருந்துவன்மாதருடன்கூடுமதற்காகாதெனவிதித்தவிதிபாதமுதலியபஞ்சபருவங்களிலுமுரித்தல்லாதமற்றத்திதிநட்சேத்திரங்களிலுமாசைமிகுதியாலேதனது பாரியைக்கூடினவனும் - ஒட்டகமுதலியவற்றின்யோனிகளிலேமைதுனஞ்செய்தோனுஞ் சுக்கிலப்பிரமேகமென்னும்வியாதியையுடையவனாவன். எ - று
ஒட்டகமாதியென்றதனாற் - கழுதை-குதிரையெனவறிக - பிரமேகம்-மேகவியாதி. [௬௮]

தந்தைதாய்ப்பாலன்புதவிர்ந்தவன்றனமுமின்றி *
நைந்துளநடுக்கமுற்றுநாடியபலத்துளொன்றும் *
வந்துகைகூடாதுவாடுவன்மனத்தின்கண்ணு *
மந்தரமடைவனென்றும்பிறர்பழியறைந்தவற்பன் *

எ - து மாதாபிதாவினிடத்திலே - அன்புவையாது விட்டவன் - தரித்திரனுமாயுள்ளத்தின்கண்டுக்கத்தையுற்றுவருந்தித்தனக்குவருமென்றிருந்தபதார்த்தங்களிலேயொன்றும் வந்துகைகூடாமலதிருப்தியோடேமனத்தின் கட்டுக்கத்தையுறுவன்

பிறரையடாப்பழிசொன்ன அற்பனானவன் - அழகுகெட்டகண்ணையுமிளைத்த நெஞ்சினையுமுடையனாயெந்நாளுந்துக்கத்தையேயுறுவன். எ - று [௩௯]

கூட்டியேயவலர்தம்மைக்கூறினான்பெரியோர்குற்றம் ❋
காட்டமும்பிதுங்கநீங்காநடலையையுறுவன்மாலை ❋
சூட்டியகணவன்றன்னைத்துறந்தகத்தூய்மையற்ற ❋
வாட்டடங்கண்ணிதோளைமருவினான்வாதரோகி ❋

எ - து பொல்லாதவர்களைக்கூட்டியச் சபையிலேபெரியோர்கள்செய்திருக்கிறகுற்றத்தைச்சொன்னவன் - கண்ணிலேயூனும்புறப்பட்டு அதினாலேயொருகாலுமொழியாததுக்கத்தையுறுவன் - தன்னையக்கினிசாட்சியாகமாலையைச்சூட்டிக்கைப்பிடித்தகணவனிருக்கவும்-அவனைவிட்டுப்பதிவிரதாபாவகத்தையுங்குலைந்துசோரபத்தாவுடனேகூடக்கருதும்வாள்போன்றகண்ணினையுடைய மாதனைக்கூடினவன் - வாதவியாதியைப்பொருந்துவன் எ - று (௪௰)

மிருதியின்வழியின்விட்டுவேண்டியதெல்லாஞ்செய்தா ❋
னுருவினுமனத்துந்துன்பமொருவிலனென்றுமற்றைக் ❋
கரிசருங்கலப்பார்தத்தங்கடுவினைக்கிசைந்தகட்டம் ❋
விரியுநூல்துயரபேதந்தனித்தனிவிளம்பும்வேலை ❋

எ - து மனுமுதலியமிருதியின் வழிநடவாதுதன்மனதுக்கேற்றபடிவேண்டியதனையெல்லாஞ்செய்தவன் - சரீரத்தினு - மனத்தினும் - எக்காலமுமொழியாததுக்கத்தையனுபவிப்பன் ஈண்டுக் கூறியதன்றிமற்றைப்பாவபேதங்களைச்செய்து - அதனானரகசேடத்தைப்பொருந்தியபாவிகளுந் - தாந்தாஞ்செய்துள்ளபொல்லாவினைக்குத்தக்கதுயரங்களையுறுவர்கள் - அவைகளையும்விளங்கக்கூறினாலாகாதோவென்னிலந்தத்துயரபேதங்களைத்தனித்தனியே விரித்துச்சொல்லுமிடத்திந்தநூல்விரியுமாதலாற்கூறிற்றிலர் - அதனைக்கன்மபரிபாகநூலில்வந்துழிக்காண்க. எ - று (௪௧)

அதிபாதகமுதலியபாவஞ்செய்தோரடையும்பயனை
யும்அவர்பின்னர்ச்செய்யுஞ்செயலையுமேலுமோர்
வகையாற்றெருக்தாமூன்று திருவிருத்தத்தா
லுணர்த்துகின்றார்,

வேறு

பன்முறையாமதிபாதகரோபன்னெடுநாண்மலபாதகரோ *
பன்மயவாமகபாதகரோபற்பலபன்றிமெய்பற்றுவரோ *
பன்மயமற்றையபாதகரோபற்பலநாயுடல்பற்றுவரோ *
பன்மயவாருபபாதகரும்பற்பலபரமரசாதியரோ *

எ - து பலகாலுமதிபாதகத்தைச்செய்தவர்கள் - நெடுநாணரகத்திற்கிடந்தனுபவித்துப்பூமியின்கண்ணேவந்துமலத்தினுட்கிருமியாகியனுபவிப்பர்கள் - பலகாலுமகாபாதகத்தைசெய்தவர்கள் - ஊர்ப்பன்றிமுதலியபன்றியுடலையெடுப்பர்கள் - பலகாலுமகாபாதகவுபபாதகத்தைச்செய்தவர்கள் - பலபலநாயுடலையெடுப்பர்கள் - பலகாலுமுப்பாதகத்தைச்செய்தவர்கள் - பலபலவண்டுச்சாதியாய்ப்பிறப்பர்கள். எ - று (௬௨)

பண்ணினர்முன்னதிபாதகமேபண்ணுவரோயதிபாதகமே *
பண்ணினர்முன்மகபாதகமேபண்ணுவர்பின்மகபாதகமே *
பண்ணினர்மற்றையபாதகமுன்பண்ணுவர்மற்றையபாதகமே *
பண்ணினர்முன்னுபபாதகமேபண்ணுவர்பின்னுபபாதகமே *

எ - து முற்செனனத்திலதிபாதக - மகபாதக - முபபாதகம் - இவைகட்குத்துல்லியபாதகங்களிவைகளைச்செய்தவர்கள் - இச்செனனத்துமவ்வண்ணமேயந்தந்தப்பாவவிதங்களை-முன்னரியற்றியவாதனைப்படியேசெய்வர்கள் எ-று ௬௩

பண்ணினர்மற்றையபாவவிதம்பண்ணுவரோபல பாவவிதம் *
பண்ணினரோற்பரிகாரவிதம்பற்றிலர்முற்றியபாவவிதம் *
பண்ணிலரோற்பரிகாரவிதம்பற்றியவாழ்குழிபற்றுவரோ *
பண்ணியபாதகசேடமுறப்பாரிழியோனியும்பற்றுவரோ *

எ - து முற்செனனத்திற்பாவத்தைச்செய்தவர்கள் - இச்செனனத்திலுமந்தப்பாவத்தையேவிரும்பிச்செய்வர்கள் - ஒருசெனனத்திற்செய்தபாவமற்றொரு - செனனத்தும் - தொடருகையாற்குற்றம்போம்படிக்குப் பரிகாரஞ்செய்யாராயின்அப்பாவபலத்தையுறுவர் - வைதிகத்துஞ் - சைவத்துங்-கூறியபடியாசாரியராற் பரிகாரஞ்செய்துகொள்ளாதிருப்பாராயின் - அக்குற்றம்போகாது-ஆதலாலத்தப் பாவபலம் - போம்படிக்குநரகக்குழியிலே கிடந்தழுந்துவர்கள் - அங்ஙனமந்த நரகபுவனத்திற்போகமனுபவித்துத்தொலைந்தவாறே யந்தப்பாவசேடமனுபவிக்கைபின்பொருட்டுப்பூமியின்கண்ணுய்த்தீனசாதியாயும்பிறப்பர்கள். எ-று (௬௪)

ச்செய்யுளாகிய திருப்பாட்டையருளிச்செய்யுஞ் சுந்தரப்பெருமாணயனூர்க்குத் தூதுசென்றவனே, பரமானந்தமான அமிர்தத்தையடியார்முகந் துபருகுதற்குப் பாத்திரமாயுள்ளவனே, பாக்கவியினாலேபுலவர்கள் துதிக்கப்படாநின்ற பாண்டியனுக்கு மந்திரியாகிய தென்னவன் பிரமராயருடைய மலமாயாகன்மம் போம்படிக்குக்குருந்தின்கீழ் ஆசாரியமூர்த்தமாயெழுந்தருளியிருந்துபதேசித்த இரகசியப்பொருளையுடையவனே, ஊனக்கண்ணினாலேகாண்பதற்கரிதாகிய சூக்குமமாயிருப்போனே,தாருகாவனத்திலிருடிபத்தினிகளைழைத்திடாநின்ற பிச்சையையுமேயுடைத்தாகியபிரமகபாலத்திலேற்றுண்பவனே என்று. (சுஎ).

குமரன்றுதியுணர்த்துகின்றார்

வேறு

மாலயன்மயலுறவுமாலெரிவடிவுடைய ✻
காலனைவெருவுறவுங்காதியகழலடிய ✻
னாலதனிழல்மருவுமாரணனவனருளும் ✻
வேலனதிருபதமும்வேணினரோணினரோ ✻

எ - து மாலும்பிரமனுந்தாங்கள்செகத்துக்கு க்கருத்தாவென்று மயக்கத்தையுறஅ௲ திரும்படிக்குத்தோன்றிய பெரிய அக்கினிச்சுவாலையை யுடையனுமாய் - மார்க்கண்டர் நிமித்தமாகவந்த இயமனைக்கலங்கத்தக்கதாகவுதைத்த வீரக்கழலையணிந்த ஸ்ரீபாதத்தையுடையனுமாய்வடதருவினீழலிலேயிருந்து வேதாகமங்களையருளிச்செய்தோனுமாயிருக்கிறசிவன், ஈரப்படாநின்ற சுப்பிரமணியனுடைய இரண்டுஸ்ரீபாதத்தையும் விரும்பினவர்களே, பெருமையையுடையவர்கள் என்று (சுஅ)

அகத்தியர்துதியுணர்த்துகின்றார்

தீதுகளினைடவருஞ்சிவகதிதருவதுதா ✻
னேதெனவெனுமவருமெனதுரையினிதறிமி ✻
னோதுகவொருமையுடனுலகுயவுமையுதவும் ✻
போதகனருள்புணரும்பொதிமலைமுனிபுகழே ✻

எ - து குற்றந்தீரக்கருதுமவரும், சிவபதத்தையடையும்நெறியாதெனநினைக்குமவரும், வருவீராக யான்சொல்லுமொழியினை நன்றாகவுணருமின், வையகமெல்லாமுய்யும் பொருட்டு உமையாளருளிச்செய்த ஞானசாரியனாகிய குமர

னது திருவருளைப்பெற்ற பொதியின்மாமலையிற்றமிழ்முனிவனது கீர்த்தியை ஒரு மைப்பாட்டுடனேவந்தனைசெய்தோதுக என்று (௬௧)

ஒன்பதாவதுசுவர்க்கநரகசேடவியலுரை

முற்றும்.



# பத்தாவதுசிவஞானயோகவியல்

மேலிவ்வோத்தென்னுதலிற்றோவெனின்-ஒத்துநுதலியதூஉமோத்தினதுபெயருரைப்பவேவிளங்கும், ஆயினிவ்வோத்தென்னபெயர்த்தோவெனிற்சிவஞானயோகவியலென்னும்பெயர்த்து - மேலையோத்தினோடிதற்கியைபென்னையோவெனின் முன்னையியலுட்புண்ணியபாவங்களுக்கீடாகச்சரீரமெடுத்தவரது - அடையாளங்கூறியவதனுட்புண்ணியபலத்தாற்சரீரமெடுத்தவர்கள்ஞானுசாரியனையடைந்து சிவஞானயோகததையடையுமுறைமைகூறினாராதலினதனோடியைபுடைத்தென்க-இத்தலைச்செய்யுளென்னுதலிற்றோவெனிற்கிரியாபாதத்துமுறைமையைக்கூறிமேல்ஞானயோகத்தின்பகுதிகூறுதலால்விநாயகத் துதியுணர்த்துதனுதலிற்று.

ஒருவனிரண்டறவெங்கணுமொழிவறவொன்றியுணின்றவ ❊
னிருவரகம்பரமென்றவர்க்கிகலறவன்றெரியொன்றின ❊
னருளியவைங்கரனன்பர்களகவினைநைந்தறவன்புசெய் ❊
கரிமுகனம்பவளம்புரைகணபதியெங்களிகண்கனே ❊

எ - து ஒப்பில்லாதவனுகியெவ்வுலகின்கண்ணும் - நீக்கமின்றிப்பேதமறக்கலந்து நிற்பானுகிநாமேபிரமமென்றமாலயனுகிய இருவரதுமாறுபாடுநீங்க -

அக்காலத்தழலினதுவடிவாகியவிறைவன்றரப்படாநின்ற ஐந்துகரத்தினையுடைய ருகித்தனதடிக்கன்பர்கள்வினைதேய்ந்து போகக்கருணைசெய்யும்யானைமுகத்தினை யும். அழகிய பவளம்போன்ற நிறத்தினையுமுடையனுயட்டாதச கணங்களுக்கதிப தியென்னும் பெயரினையுடையவனை மக்குமகிழ்ச்சியை வழங்கும் புறப்பொருள் யாவையுங்காட்டுங் கண்கள் போல வகப்பொருள் யாவையு முணர்த்துங் கண்கள். எ- று (க)

இறைவனதுவணக்கங்கூறுகின்றார்

உருவருவென்றவுடம்புடனொருவவிரண்டனுபந்தமு ※
மிருண்மலபந்தமுமந்தமுமினையுமிவின்புறநம்புட ※
னிருமலனின்பநிரந்தவனிலன்முடிவெங்குநிறைந்தவ ※
னருளியசந்தமதன்பொருளவனவனென்றுவணங்குவம் ※

எ- து தூலசூக்குமமாகிய விரண்டு சரீரத்துடனே மாயையுங் கருமமுமிருள் போன்றவாணவமலத்தினதுமயக்கமும், எமக்குவிட்டுநீங்கவும் முடிவும்புறைவுமி ல்லாதபேரின்பம்எம்மைவந்தடையவும்யாம்இன்பவடிவனுமாய் காதமுதல்மண் ணீறுகவெவ்விடத்துநீக்கமற நிற்பானுகி. அனாதிமல முத்தனுமாகிய சிவனருளிச் செய்த திவ்வியாகமங்களிற்சொல்லையுமதனுட்பொருளையுஞ் சிவனுஞ்சத்தியுமாகக் கருதிஆதரவோடுங்கூடவணங்குகிறோம் எ- று (உ)

ஞானயோகத்தின்பகுதியுணர்த்துகின்றார்

வேறு

அலற்பிறப்பவலமாவிக்கறவுறவறிவானந்தந் ※
சொலத்துடங்குவங்கேண்ஞானயோகமுந்துகடீர்சத்தி ※
மலத்தினுமறுதிமுத்தன்மயமுணர்ந்துணர்த்தல்ஞான ※
முலப்பிலாவவனுள்வேறற்றுறைதலையுணர்தல்யோகம் ※

எ- து ஆன்மாக்களுக்குச்செனனமரணதுயரத்தை யுண்டாக்கும்பிறப்பானது விட்டுநீங்கவும், ஞானனந்தம் வந்துபொருந்தவும் யாம் ஞானயோகத்தையுஞ். சொல்லப்புகுகின்றோம் அதனைநீகேட்பாயாக, அஃதெவ்வண்ணமெனின்குற்றம ற்றசிற்சத்தியையுடையனுயநாதியேமலத் தைநீங்கியகடவுளினது சொரூபத்தை யாசாரியன்முன்னராராய்ந்தறிந்துமாணக்கருக்கறிவித்தல்.ஞானம். நாசோற்பத் தியில்லாதவக் கடவுளுடன் பேதமின்றிக்கலந்திருத்தலை யறிதலே யோகம் எ- று

உம்மை- இறந்தததுதழீஇயவெச்சம் (௯)

ஞானயோகியின்முறைமையுணர்த்துகின்றார்

தன்னதுசத்திகாட்டுந்தத்துவத்தொடர்ச்சிநீங்க *
வன்னியனலனைத்தன்னோடொன்றாகியவமலன்றன்னைக் *
கன்மமுமலனைத்தாமுன்கண்டுகொண்டிடாதுகாட்டப் *
பின்னதனாலவ்வுண்மைபெற்றவன்ஞானயோகி *

எ- து. ஆன்மாக்களுக்குக்கலையாதி தத்துவங்களின் பந்தமானதுவிட்டுநீங்கினவாறேதனக்கன்னியனல்லனாகியனாதியேமலமில்லாதவனுமாகிச் சுட்டுணர்வாலறியப்படாதசிவனை ஆன்மசிற்சத்தியானதுபிரகாசிப்பிக்கும், அக்கடவுளைஞானாசாரியரானவர், தாமுதற்கண்டனுபவித்ததனை மாணாக்கற்குக்காட்டியாற் காட்டாமலுபதேசத்தினாலேயறிவிக்க, பின்னர்அவ்வறிவினாலேயந்த மெய்ப்பொருளையடைந்தவன்யாவனொருவன், அவனேஞானயோகியாவன். எ- று (௬)

அந்தஞானயோகியானவன்கேவலசகலத்துருமற்சுத்தாவத்தையை
ப்பொருந்துவனென்பதுணர்த்துகின்றார்

உலகுளார்பெறுநுதுஞ்சுமொருபொருள்விழித்தயோகி *
யுலகுளார்விழித்தபண்டத்துறங்குவனுருவமாக *
வுலகெலாமொன்றிவேறற்றொளிருமொப்பிலிதன்னொண்டா *
ளலர்தலைக்கணிந்தயோகிக்கவனலான்ஞேயம்யாதே *

எ- று உலகின்கணுள்ளார் மலமறைப்பினாலே சிவதெரிசனப் படாமற்றுயில் கொள்ளுமிடத்துஅந்தப்பொருளின்கண்ணே தனதுஞானக்கண்ணைவிழித்துப்பார்த்திருக்குஞ்சிவயோகியானவன், அவ்வுலகின்கண்ணுள்ளார்ஊனக்கண்ணாற்கண்டிருக்கப்பட்டவிஷையபதார்த்தங்களிடத்துத்தான்றுயில்கொள்ளாநிற்குமாதலாற் றற்சொரூபமெனவவ்வுலகமுங்கலந்துதானேயாகிப்பேதமறநின்றுவிளங்குமொப்பில்லாதபரமசிவனுடைய ஒள்ளியபாததாமரையைத் தனதுதலைக்கலங்காரமாகப் புனைந்தவந்த ஞானயோகிக்கு அப்பரமசிவனல்லது வேறறியும் பொருள்யாதோ எ- று (௫)

இந்தஞானயோகமுதலியவற்றை யிறைவனதுமுதனூலாகியதிவ்வி
யாகமங்களுணர்த்தினமை கூறுகின்றார்

ஒப்பிலியநாதிமுத்தனோதியகாமிகாதி ✻
யிப்பரஞானயோகம்விரியவோியம்புமென்றுந் ✻
தப்பிலாக்கருமயோகந்தருமமுன்கருமஞ்சாரும் ✻
அப்பலபேதமென்றவனைத்தையுமறையுமன்றே ✻

எ- து தனக்கொப்பொருவருமில்லாதவனுமாய். அநாதியேமலமுத்தனுமாகிய சிவன், அருளிச்செய்யப்பட்டகாமிகமுதல்வாதுளமீறாகவிருபத்தெட்டுத்திவ்வியாகமங்களும், இந்தமேலான ஞானயோகத்தைத விளங்க விரித்துக்கூறும், அஃதன்றி யெக்காலுந்தவறின்மையிற்காணுங் கருமயோகமென்றும்புண்ணியபாவங்களென்றுமுன்னரீட்டப்பட்டவினையினதுபலன்களென்றுசொல்லப்பட்டயாவையும். விரித்துரைக்கும். எ- று (௬)

அன்றும். ஏயும்- அசைநிலை

அநாதிமலமுத்தன்றன்மையுணர்த்துகின்றார்

காட்சியிற்பொருளுமந்தக்காட்சியான்முன்னங்கண்டே ✻
யாட்சியாமனுமானத்தினருத்தமுமனுகொளாத ✻
சேட்சியிற்பொருளுமையப்திரிவறச்செப்பிச்சீவ ✻
ராட்சியவறிவுமாக்குமவன்மலத்தநாதிமுத்தன் ✻

எ- து காண்டலளவையினாலளக்கும்பொருளையுமக்காண்டலினாலேதான்முன்னர்க்கண்டனுபவித்தறிந்துபின்னமொருகாலத்தினிருமித்தறியும்பொருளையுமிவ்விரண்டினாலுமளத்தற்கரிதாகிச்சொல்லளவையினாலளக்குமாகமப்பொருளையும் ஐயம்விபரீதமறக்கூறியவ்வளவைகளாலுயிர்கண்மாட்டனுபவசித்தமாகியவறிவுகளையுமுண்டாக்குமவனேயநாதிமலத்தினின்றும்விடப்பட்டவன். எ- று (௭)

பரசமையத்தினின்றோர்களிந்தச்சைவ சமையத்துக்கதிகாரியாகி
வருமுறைமையுணர்த்துகின்றார்

இருவினையுணர்ந்தபுத்தராவர்முதலிகலும்வாதத் ✻
தெரிசனமனைத்துஞ்சேர்ந்தார்சிவசமையத்துச்சேர்வார் ✻
பொருவிலிபுகன்றவாக்கிற்கருமநன்னெறியும்புக்கே ✻
விரவுவர்ஞானயோகம்விடுவர்மெய்யடைவர்மெய்யே ✻

எ- து புண்ணியபாவங்களை யுண்டென்றறிந்த புத்தர்முதலொன்று க்கொன்று

றோருபடச்சொல்லுகின்றசமயிகளினதுநிலைமையாவையுமறிந்தடைந்தார், முன்
னரார்ச்சித்தநல்வினைப்பகுதியாலேசைவசமயத்தையடைவார், பின்னர். அங்ங
னமடைந்தவர். ஒப்பில்லாத விறைவனாற் கூறப்பட்டவாகமங்களிற்சொல்லுகின்ற
சரியை, கிரியைகளையனுட்டித்துப்பின்பு ஞானயோகத்தையடைவர், அடைந்தவா
றேசரீரபந்தத்தைவிட்டுஉண்மைநிலைமையயுமடைவர். எ-று.
கருமநன்னெறியுமென்றவும்மையால்யோகபாதமுமெனவறிக (௮)

சைவத்திற்சிறப்புமேனையவற்றிற்சிறப்பின்மையுமுணர்த்துகின்றார்

எடுத்ததோராக்கைதன்னாலிருண்மலசத்திதன்னைத் ※
தடுத்தருள்சைவநூலின்சாதனமதனைத்தள்ளி ※
விடுத்தூவீறற்றநூலின்சாதனம்விரும்புவார்முன் ※
னடுத்தவாரமிர்தம்விட்டுப்புற்கையாதரிப்பாரன்றே ※

எ-று இங்ஙனமெடுத்தவுடம்பின்கண்ணேதானே யந்தகாரமாகிய வாண
வத்தினதுசத்தியைநீக்கிப்பேரின்பத்தைவழங்குவதாய்சைவசாத்திரத்திற்சொல்ல
ப்பட்டமார்க்கங்களையாய்ந்துணராதொழித்துமலபந்தராற்சொல்லப்படுதலின்மே
ன்மையற்றபுன்சமயங்களிற்சொல்லு மார்க்கங்களைப்பொருளெனமதித்துவிரு
ம்புமவர், தமக்கெதிராகவுண்டாகியிருக்கிற நிறைந்தஅமிர்தத்தைவிட்டுப்புற்கை
யையுண்ணவிரும்புவாரோடொப்பர் எ-று புற்கை - கூழ் (௯

மேலயந்நூல்களின்பகுதியுமுணர்த்துகின்றார்.

ஒப்பிலியறைந்த நூலாகமங்களிலொவ்வொன்று ※
தப்பறுஞ்சிருட்டியாதித்தலைமையொவ்வொருவர்தம்மை ※
யப்பரமென்றுமற்றையவைவரும்பரமேயென்னுந் ※
தப்பறத்துணியும்பத்திதன்னையும்பரமேயென்னும் ※

எ-று தனக்கோரொப்பில்லாதவனாகியவனாதிமலமுத்தனாற் சொல்லப்பட்
டவ்வியாகமங்களுக்கயலாகியசமயநூல்களிலொவ்வொரு நூல்கள் குற்ற
மற்றபடைப்பாதித்தொழிலாற்றலைமை பூண்டபிரமவிட்டுணுக்களிலொருவரொரு
வரையந்தந்தநூற்களதுவேபரப்பிரமமென்று சொல்லுமற்றைவேதாந்தநூல்சிவ
கோடிகளெல்லாவற்றையும் பரமேயென்று சொல்லுமற்றைப்பவுத்தனால் தவ
த்தைநிறுவிக்கும்பத்திதத்துவத்தையும்பரமேயென்றுசொல்லும், எ-று

எல்லாமுணர்ந்தவராற் சொல்லப்பட்டதல்ல — ஆகையாற்சிற்றறிவர்செய்த நூலுமொருவழிப்படாதுதங்களின்மாறுபடக்கூறிமயங்குமென்க. (ம)

முன்னர்க்கூறியசமையவாதிகளைநோக்கிமறுத்துணர்த்துகின்றார்

அசேதனவாக்கையாளரவர்பரப்பிரமமல்ல *
வசேதனத்தனாதிமுத்தன்சிவன்பரப்பிரமமாகு *
மசேதனவாக்கையின்றேலறிவுமஞ்சனத்தார்க்கில்லை *
யசேதனத்தனாதிமுத்தனதிபனாயாக்குவானும் *

எ - து கலாதிதத்துவங்களாகியசரீரத்தாற்கட்டப்பட்டவர்களாதலானும் அச்சரீரப்புணர்ச்சியில்லாதவிடத்துமலமறைப்பாலறியுந்தொழிலுந்தடைபடுமாகையானு மான்மாக்கள்பலரும்பிரமமல்ல வாதலான்மும்மலங்களினின்றுமநாதியே விடப்பட்டசிவனே பரப்பிரமமாவன் படைப்பாதித்தொழில்பூண்டகாரணகருத்தாக்களையுண்டாக்குமவனும், அவ்வநாதிமலமுத்தனே. எ - று

உம்மைபாலவர்களை யுண்டாக்கிறவனும் அவர்கள்செய்யும்விசிட்டகிரியைகளுக்குத்தன்சத்திகொண்டு செய்விப்பானுந் தனுகரணபுவன போகங்களெல்லாவற்றையுமுண்டாக்குவானுமவனேயெனக்கூறியதெனவறிக. (மக)

அந்தச்சிவன்விகாரியல்லனென்பதனையுவமைமுகத்
தாலுணர்த்துகின்றார்.

உருக்குதனவநீதாதியுலர்த்துதலீரமண்ணும் *
விரிக்குதல்கமலமாதிவெறிகமழ்குவளைமற்றுஞ் *
சுருக்குதலென்றவிந்தத்தொழில்விதமில்லானேனு *
மருக்கனேயவற்றிற்கேதுசடச்செயற்கநாதிமுத்தன் *

எ - து வெண்ணெய்முதலியபொருள்களையுருக்குதல்ஈரமண்ணையுலர்த்திடுதல் தாமரைப்பூமுதலியவற்றையலர்த்திடுதல்மணம்வீசுகின்றநெய்தல்முதலாயுள்ளமலர்களைச்சுருக்குதலென்றுசொல்லும்வினையினதுவேறுபாட்டையில்லாதவனாயினுமத்தொழில்களதுமுடிவிற்குஆதித்தியனேகாரணமானாற்போல சசரீராதிகளையுண்டாக்கிக்காரியப்படுத்துமதற்குமநாதிமலமுத்தனேகாரணன். எ - று ஆதியென்றதனால்-மெழுகு-வெல்லமுதலியவெனவறிக. (மஉ)

பதிமுதலியமுப்பொருள்களுமநாதியென்பதூஉம்

அவற்றுட்பாசம்நீங்குமுறைமையிதென்பதூஉமு
ணர்த்துகின்றார்.

அநாதியேயமலன்சச்சிதானந்தன்பதியான்மாக்கள் ❊
அநாதியேபெத்தர்பந்தமகவிருளநாதிமூன்றும் ❊
அநாதியபசுபாசத்திற்பக்குவத்ததுலனான ❊
அநாதியேயமலனாலேயவர்தமையவைகணீங்கும் ❊

எ - து அநாதியேமலத்தினின்றும்விடப்பட்டநித்தியஞானானந்த சொரூபத்தையுடையவனே யிறைவன், அநாதியேமலாதிகளாற்றடுக்கப்பட்டஞானக்கிரிகைகளையுடையவரோ யான்மாக்கள், இருளாகியவாணவமாயைகன்மமாகிய மூன்றுமநாதியேகட்டுகளாயுள்ளன-ஆகையான்மலமாயாகன்மங்கள்பரிபக்குவமாய விடத்து ஒப்பில்லாத சிவனாகிய வநாதிமுத்தனாலே யநாதிபெத்தராகிய வான்மாக்களை யநாதியேபந்தங்களாகிய பாசங்கண்மூன்றும் விட்டுநீங்கும் எ - று (௰௩)

அந்தவாணவதோடத்தைப்போக்கு வித்தற்குத்திட்டா
ந்தமுணர்த்துகின்றார்

செம்பினிற்களிம்புதானேசெம்பினைத்தீராதென்றுஞ் ❊
செம்பினுக்கதனைத்தீர்க்குஞ்சித்தியுமில்லைத்தேரிற் ❊
செம்பினிற்களிம்புதீர்க்குஞ்சித்தனுமுண்டுதேடிற் ❊
செம்பினிற்களிம்புதீர்க்குமருந்துமற்றவனாற்சேரும் ❊

எ - து அதனையாராயுமிடத்துச்செம்புடன்சகசமாயிருக்கிறகாளிதமானது- தானேசெம்பினைவிட்டுநீங்காது, அந்தச்செம்பினுக்கு மக்காளிதத்தைத்தானேநீக்கிக் கொள்ளும்வலியுமில்லை. யக்காளிதத்தைநீக்கும்பொருட்டுநாட்டமுற்று விசாரிக்கிற்களிம்பினையகற்றவல்லசித்தியை யுடையனு முளன், அவனாலக்களிம்பினைப்போக்குதல் வலலமருந்தும்வந்தடையும். எ - று (௰௪)

மாயாகாரியமாகிய சரீரத்தையான்மாக்களுக்கிறைவனே கூட்டுவ
னென்பதற்குவமித்துணர்த்துகின்றார்

விளக்கினுக்கில்லைத்தன்னையாக்கிடும்வினைதானென்றும் ❊
விளக்கினையாக்கவல்லவினைவிழிதனக்குமில்லை ❊
விளக்கினையாக்கிப்போக்கிவிழிக்கிருளறுத்தபேதம் ❊
விளக்குவான்போலுமீசன்விழியுயிர்விளக்கொப்பாக்கை ❊

எ - று விளக்கினுக்குத்தன்னைத்தானேயுண்டாக்கிக்கொள்ளவல்லதொழில்தன்னிடத்தில்லை, யவ்விளக்குக்குக்காட்டாகியகண்ணினுக்குந்தானேயுண்டாக்கிக்கொள்ளுந்தொழில்தன்னிடத்தில்லை, யாதலால்விளக்கென்னுஞ்சுடரினையுண்டாக்கிக்கண்களின்றுசோதியைத்தடுத்தவிருளைநீக்கிப்பொருள்களின்றுவிகற்பங்களைப்பிரிக்குமவனேயொப்பானிறைவன், கண்களையொப்பனவுயிர்கள், விளக்கினையொக்குங்கலாதிதத்துவரூபமாகியசரீரம். எ - று (௰௫)

அந்தச்சரீரமிருவிதமென்றுமதற்குக்காரணமீதென்றுங்கூறுகின்றார்.

ஆக்கையுந்தூலசூக்கமெனவிரண்டவற்றுட்டூல *
வாக்கைதான்பஞ்சபூதபரிணமத்தாகுமற்றை *
யாக்கையாறைந்திற்காலமாதியிற்றாகுமந்த *
வாக்கையுமாயைதன்பாலமலனின்னருளாலாமே *

எ - று முன்சொல்லப்பட்டவுடலான்றுதூலவுடலெனவுஞ்சூக்குமவுடலெனவுமிருவிதமாம், அவற்றுட்டூலவுடலென்பது மண்முதல்வானீறாகியவைந்துபூதங்களினதுபரிணாமகாரியத்தாலுண்டாகும்மற்றைச்சூக்குமவுடலென்பது காலத்துவமுதல் நிலமுடிவாகியமுப்பத்தொருதத்துவத்தானுமுண்டாகும், அந்தச்சூக்குமவுடற்காரணமாகிய முப்பத்தொருதத்துவங்களுஞ்சிவனுடைய விளிதாகியதிருவருளினதுபிரேரகத்தினாலேமாயையின்கண்ணேநின்றுமுண்டாம் எ - று

தன்மாத்திரைமுதலியவெட்டினையும் புரியட்டகமென்றோதியிருக்க, இவ்வாசாரியர்முப்பத்தொன்றோதியதென்னெனில், அந்த - எட்டும் - எட்டுவர்க்கமாம், அவையாவன, பூதம் - ௫ - தன்மாத்திரை - ௫ - ஞானேந்திரியம் - ௫ - கன்மேந்திரியம் - ௫ - குணம் - ௩ - பிரகிருதி - ௧ - கலாதி - ௫ - மாயை - ௧ - ஆக - எட்டுவர்க்கத்துக்கு முப்பத்தொருதத்துவமும்வந்தவாறுகாண்க. (௰௬)

மேலிவ்வகையினையான்மாக்கள்புணர்ந்துபோகந்துய்க்குமுறைமையையுவமித்துக்கூறுகின்றார்.

யாங்குளான்கொடுத்தசோலைப்பற்றியேநருடனுறன்றி *
யீங்கெமக்கியாங்குமாக்கமீதெனவெண்ணிச்செல்வ *
னாங்கரன்விதித்தவித்தையாதியினற்பஞானந் *
தாங்கியபோகந்தேற்றத்தினைநடவியக்குஞ்சீவன் *

எ - து கண்ணில்லாதவன்றனக்கியல்புடையாரொருவனுதவிய தண்டினைப்பிடித்துக்கொண்டன்றி யிவ்வடத்தியாஞ்செல்லும்வழியிதுவெனக்கருதிச் செல்லா நிற்பன், அதுபோலமூலமலத்தாற்றடைபட்ட ஞானக்கிரியைகளையுடையவான்மாக்களுஞ்சங்காரகாரணனாகியவிறைவனருள்வழியிற்சுத்தமுதலாகியதத்துவங்களாலுண்டானவற்பவறிவானதுமாயாபோகங்களை நிச்சயத்துக்கொடுக்கவல்லவைகளோடு கூர்ந்துயாக்கையினதுபோக்குவரத்தைச்செய்யும். எ - று (௰௭)

மேலுலோகாயுதன்முதலியசமையிகளான்மாவினை
துண்மையுணராமற்றந்தங்கோட்பாடேயுணர்த்தவு

தனைமறுத்துணர்த்துகின்றார்

வேறு

ஆக்கையினைச்சிலரான்மாவெனவுரைவரறிவிலர்மெய் *
வாக்குமனமெனுமிவையேயெனமதிப்பர்மதித்தவற்றின் *
நீக்கமிலாக்குணமென்பர்நிரந்தவற்றின்மேனின்ற *
நோக்கினையுநோவினையுமுடைத்தான்மாநுவலுங்கால் *

எ - து உண்மையறிவில்லாமையாலுலோகாயுதன்றூலவுடலினையே, ஆன்மாவெனக்கூறுவன், புத்தன்மதத்தை விசாரிக்குமிடத்து அகங்காரமாகிய அந்தக்கரணங்களையே ஆன்மாவெனக்கூறுவன், அருகன்மதத்தை விசாரிக்குமிடத்துச் சருவான்மாக்களிடத்தும் வியாபித்துநிற்கிறமுக்குணங்களேயான்மாவெனக்கூறுவன், அவையன்று - அதனுண்மையைவிசாரித்துச்சொல்லுமிடத்து - இங்ஙனஞ்சொல்லப்பட்டவைகளுக்கெல்லாமேலாகநின்றுபெற்றஞானக்கிரியைகளையுடைத்தேயான்மா. எ - று (௰௮)

இதுவுமது.

ஆக்கைசடந்தனித்தியங்காதறிவினையுமின்றியகத் *
தாக்கைவிளக்கெனவுறியப்படுங்கரணமான்மாவுக் *
காக்கைவிதம்பேதமெனவத்தியக்கமறிவிக்கு *
மாக்கைவிதத்தநிபதியேயமலனுயிர்க்கதிபதியே *

எ - து இச்சரீரஞ்சடமாதலாலறிவுடையனாகியவான்மாவையுமன்றித்தான் போக்குவரத்துச்செய்யமாட்டாதாகையாலுஞ் சூக்குமசரீரமாகியகலாதிகளாந் தூலசரீரமாகியரதத்துக்கு விளக்குப்போலவறிவைப்பிரகாசிப்பிக்குங் கரண

ங்களாகையானுமிந்தச்சரீரங்களான்மாவுக்கு வேருயிருப்பதொன்றென்பதனை நீ பிரத்தியக்ஷவாதியாதலாலுனக்கந்தக்காண்டலென்னுமளவைதானேயறிவிப்பிக்கு மாதலாலுஞ்சொல்லப்பட்டசரீரபேதங்களுக்கெல்லாமான்மாவேயிறைவன் அந்த வான்மாவுமீசுரப்பிரேரகனாதலாலவனுக்குச்சிவனே யிறைவனாவன். எ - று

அறிவனையுமெனறவும்மையாலறிவிப்பானனைசிவனையுமன்றி யிலென்றதாம் - அத்தி யக்கம்பிரத்தியக்கத்தலைக்குறை. (௰௯)

இதுவுமது.

அறிவென்பர்சிலர்சடமேமனமொன்றினறிவென்ப
ரறியுநிருமலனறிவையளிக்கிலெனவறைந்திடுவ
ரறிவில்லாரவர்மூலமலத்தான்மாச்சாதித்த
வறிவுடைத்தேமாயையெனுந்துணையினையுமஃதுடைத்தே

எ- து மாயாவாதிகளுயிரைவிளங்கிய வறிவென்றுகூறுவர்கள், வைசேடிகர்மனமுதலியதத்துவங்கள்வந்துகூடினகாலத்துஅறிவுண்டாமென்பர்கள், பரிணாமவாதிகளான்மாவுக்குச்சுதந்திரமாகவறிவில்லையெல்லாமறியுமிறைவனுணர்த்தினுணருமென்பர், இவர்களெல்லாருமெய்யுணர்வற்றவர்கள், அநாதியேமூலமலத்தினுலேதடுக்கப்பட்டவுணர்வையுடையதாகியததனைநீக்குகிறமாயையெனுந் துணைக்காரணத்தையுமொத்தாசையுமுடையதான்மா. எ- று (௨௰)

இதுவுமது

ஆக்கைதனிலோரிடமென்றறைவரலவனுமென்பர்
நீக்கமறவுடன்முழுதுநிற்குமெனநிகழ்த்திடுவர்
போக்குவரவில்லாதபூரணமேயெனப்புகல்வர்
மேக்கிலர்நுண்டனுமூலவியாபகிக்கும்வியாபகமே

எ- து மேலாய அறிவில்லாதகன்மயோகிகள்- ஆன்மாவை யுடலிலோரிடத்திருக்குமென்பர்கள், அஃதன்றினையாயிகனும்பஞ்சராத்திரியு மான்மாப்பரமாணுருபமாயிருக்குமென்பர்கள், சமணருடன்முழுவதிலேயும் வியாபித்துநிற்குமென்பர்கள், மாயாவாதிகள்போக்கும்வரவுமில்லாமலெவ்விடத்தும் பூரணமாய்நிற்குமென்பர்கள், இவர்களெல்லாருமுண்மையானதெரிசனப்படாதவர்கள்ஆனாலுமதுசித்தாந்தம். யாதெனில்நுண்ணிதாயிருக்கப்பட்ட தத்துவங்களாகிறசூக்குமதேகங்களுக்குக்ககாரணமாகிவியாபகியாயிருக்கும்,அசுத்தமாயைதனக்குமதுக்குமேலான

சுத்தமாயைதனக்கும்அப்பாற்பட்டவியாபகமே. முத்தித்திசையில். எ- று

மேக்கிலர் என்பதனை முற்றுங்கூட்டுக (உ௧)

வியாபகமுறைமையைத்தெரிசிப்பிக்கின்றார்

அமலைக்குவியாபகனேயரனவற்குவியாப்பியமே ✻
விமலைவியாபகியுயிர்கட்குயிரவட்குவியாப்பியமே ✻
சமலைக்குவியாபகியேசமலையுயிர்வியாப்பியமே ✻
சமலைசகவியாபகியேசகஞ்சமலைவியாப்பியமே ✻

எ- று நிருமலையாயிருக்கிற சிவசத்திக்குச்சிவன்- வியாபகன், அவனுக்கந்தநி ன்மலையாகியசத்திவியாப்பியம், அந்தச்சிவசத்தியான்மாக்களுக்குவியாபகி. அந்த வான்மாக்கள்அவளுக்குவியாப்பியம்- அந்தவான்மாக்களதமதுமலத்தோடுகூடிய வான்மசத்திக்குவியாபகர், அவர்க்கவர்சத்திகள்வியாப்பியம்- அந்தச்செகத்துக்கு ஆன்மசத்திவியாபகம். அந்த.ஆன்மசத்திக்குச்செகம்வியாப்பியம். எ- று அதிகவிருத்தியை யுடையதுவியாபகம், நூனவிருத்தியை யுடையது. வியாப்பியம், இப்படி நூனவிருத்தி யதிகவிருத்தியின் முறைமையைத் தெரிசிப்பித்ததென வறிக (உ௨)

இங்ஙன நூனவிருத்தியதிகவிருத்தியையுணர்த்திமேற்றுல்லியவியா த்தியையுணர்த்துகின்றார்

உயிரொளியுமிருண்மலமுமொன்றுதுல்லியவியாத்தி ✻
யயர்வுறலாலறிவதனாலதற்குவியாபகமல்ல ✻
வயர்வுறுத்துமகவிருளுமதற்குவியாப்பியமல்ல ✻
நயனவொளியிருளிவற்றின்கலப்பொப்பேநாடுங்கால் ✻

எ- து. ஆன்மப்பிரகாசமும். அந்தப்பிரகாசத்தைமறைத்து யிருளேவடிவாயிரு க்கிறவாணவமலமுங் கூடிநிற்கிறது ஒன்றுக்கொன்றேற்றக் குறைவின்றி யிரண்டு மொத்தவியாபகமாயிருக்கும் அந்தவான்மாவினுடைய ஞானக்கிரிகைகள்மலைத்தா ற்றடைபடலால். அதிகவிருத்தியை யுடையதல்ல- வதனைத்தடுக்கும் வலியினையு டையவாணவமலமும் நூனவிருத்தியையுடையதல்லவாதலாலான்மசத்திக்குவியா ப்பியமாகாததனாலா ராயுமிடத்து ஆன்மசத்திக்கு மாணவத்துக்குஞ் சமவியாத்தி

யெப்படியென்னிற்கண்ணிடத்துண்டாகிய சோதியுமிருளினது பிரகாசமுந்தல்வி யவியாத்தியாயிருக்கும். எ- று

இதன்கருத்து,கண்ணொளியானது,இருள்மேலிட்டகாலத்துஒளிமாந்திநிற்குமொளி மேலிட்டகாலத்துமிருண்மாந்திநிற்கு மிதுபோலச்சிவன்மாயாகாரியமானதனுவா திகளையான்மாவுக்குக்கூட்டியகாலத்து ஆணவசத்தி மாந்தினவிடத்து ஆன்மசத்தி சற்றேபிரகாசமாயிருக்கும். மலமேலிட்டகாலத்துஆன்மசத்திமாந்தியிருக்குமென வறிக, ✠ ஒளிக்குமிருளுக்கு மொன்றேயிடமொன்றுமேலிடவொன்றொளிச்சும் என்னுந்திருவாக்கிலுணர்க. (உங)

மேலிறைவன்ஆன்மாக்களுடன்சருவவியாபியாயிருக்கினும்பாசந்த னதுபரிபாகத்தாலல்லதுநீங்காதென்பதுகூறுகின்றார்

பரமசிவன்பராசத்திபல்லுயிர்க்கும்பயின்றிருக்க ❊
விரவுவதென்னிருளெனிற்கேள்வெய்யவழற்பசுமரத்தின் ❊
விரவியதேபசுமரமும்வெந்தவலவெந்துவிழும் ❊
பருவமுறக்கரணமுறப்பதியுமுறப்பழுதறவே ❊

எ- து. மேலாயசிவனுமவனதுமேலாகியஞானசத்தியு மெல்லாவுயிர்கண்மாட் டுங்கலந்திருக்கவும், இருளாகியஆணவம்பொருந்துவதென்னெனிலிவ்வினாவிற்குவி டைகேட்பாயாக, வெம்மையையுடைய நெருப்பானது- பசுமையையுடையமரத்தி ன்கண்ணடிதொடுத்துமுடியளவாக வியாபித்திருக்கினுமப்பசுமரங்கள்வெந்தனவ ல்ல முதிர்ந்து தமது பருவம்வந்தவிடத்து தம்மிடத்துண்டா யதழலையுதிப்பிக்கும் ✠ ஞெலிகோலாகியகருவியுமது கொடுக்கடையுங்கருத்தாவு முதலாயினபழுதறவ ந்துபொருந்தஅவ்விடத்தழலுண்டாய்அம்மரங்கள்வெந்துவிழுதலைச்செய்யும், அது போலாணவமுந்தனக்குப்பருவம்வந்தவிடத்துச்சிவனுடைய திருவருளாலேதனது பெலங்கெட்டுநிற்கும். எ- று

இதன்கருத்துபரமசிவனுடையபராசத்தியானது மலபரிபாகம்வாராதவான்மாக் களிடத்துப்பசுமரத்திலக்கினிபோலவப்பிரகாசமாகவேயிருக்கும். மலபரிபாகம்வ

---

கொடிக்கவி. கட்டளைக்கலித்துறை

✠ ஒளிக்குமிருளுக்குமொன்றேயிடமொன்றுமேலிடிலோன், றொளிக்குமெ னினுமிருளடராதுள்ளுயிர்க்குயிராய்த், தெளிக்குமறிவுதிகழ்ந்துளதேனுந்திரிமலத் தே,குளிக்குமுயிரருள்கூடும்படிகொடிக்கட்டினனே. (க)

✠ ஞெலிகோல்.- தீக்கடைகோல்

ந்த வான்மாக்களிடத்துப்பிரகாசித்துமலங்களைக்கெடுத்துஆன்மப்பிரகாசத்தையு ண்டாக்கியிரட்சிக்குமென்க. (உ௪)

இதுவுமது.

உக்கொழியாதொளிக்குமிருளுதையகதிரொளிமுன்னே *
பக்குவத்திற்பசுபாசவலியடங்கும்பரமசிவ *
னக்கனுயிர்க்கருள்புரியநசித்ததலவசித்ததல *
நெய்க்கனநீங்குதலென்னமாயையநிலைதொலையும் *

எ - து உதையகாலத் தாதித்தியப்பிரகாசத்தின்முன்னே யிருளானதுநா ளுசத்தையடையாமல் மறைந்துநின்றதுபோலச்சிவனுடைய அனுக்கிரகத்தி ேலயான்மாக்கள்பசுத்துவமாகிய வாணவமலம் - அதனுக்குப்பருவம்வந்தவாறே நாளுசமடையாதுஉயிரினதுஞானக்கிரியையைத்தடுக்கும்வலிகெடும்,மாயாகாரிய ங்களுநாசமடைந்தனவுமல்லாமல் நிலைபெற்றுநின்றனவுமல்லாம லுறைந்திருந்த நெய்யானது உருக்கினபோதுகனங்குறைந்து நெய்கெட்டுப்போகாமலிருக்கின்ற தெப்படியதுபோல முத்திநிலையிலுமிந்தமலங்களுங்கெடாமலான்மாக்களைப்பெ ந்தியாமலும் நிற்கும் எ - று [உ௫]

மேலுமோருபாயத்தாலிறைவனைத்தொட்டு மூலம
லமீறுகச்சூக்குமதூலமாகிநிற்கும்பகுதியைத் தெ
ரிசிப்பிக்கின்றார்

நுண்ணியனேசிவன்றூலஞ்சத்தியவனுக்கியார்க்கு *
நுண்ணியளோநொய்யார்களதிதூலர்நுதன்மதிக்கு *
நுண்ணியரோநொய்யார்தஞ்சத்திகளுக்கவர்தாமும் *
நுண்ணியரோநோய்க்கவர்க்குமதிதூலகரநோயே *

எ - து சிவன் - சிவசத்திக்குச்சூக்குமமாயிருப்பன் அந்தச்சிவனுக்குச்சத் திதூலமாயிருக்கும் அந்தச்சிவசத்தியான்மாக்களுக்குச்சூக்குமமாயிருக்கும்அந்த ச்சத்திக்கு ஆன்மாக்களதிதூலமாயிருக்கும் அந்த ஆன்மாக்கள்தமதுசத்திக்குச் சூக்குமமாயிருக்கும் அந்த ஆன்மசத்தி ஆன்மாவுக்குத்தூலமாயிருக்கும் - அந்த ஆன்மசத்திமும்மலங்களுக்குஞ் சூக்குமமாயிருக்குமந்த மும்மலங்களுமான்மச த்திக்குத்தூலமாயிருக்கும். எ - று (உ௬)

அந்தஆணவமாகியபிணியையக்குவான்அறுதிமுத்

தனாகியமருத்துவனென்றிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

பெருநோயேமூலமலம்பிணிமருந்துமுடன்மூலந் *
தருமமலன்மருத்துவனேமருந்தறிந்துசாராது *
பெருநோயர்மருந்தறியாரெனல்பேசிப்பெறுவதல *
நிருமலனைமருத்துவனென்றறிகபிணிநீங்கிடுமே *

எ – து ஆணவமலமென்பது – ஆன்மாக்களுக்குப்பெரிதாகியபிணி, அப்பிணிக்குமருந்தாகிமாயாகாரியமாகியதனுகரணாதிகளு மதனோடொன்றேயுள்ளது, அம்மருந்தினையுதவிப் பிணிதீர்ப்பவனின்மலனாகியசிவனே – மருந்துதானேயறிந்து வந்தடையாதுஎனவும் – பெரிதாகியவாணவநோயையுடையராகிய வான்மாக்கள்தாமேதம் பெருநோயைப்போக்கிக்கொள்ளும் அதற்குமருந்தறிந்தவரல்லரெனவுஞ் – சொல்லுதலைச்சொல்லியிருந்ததனாலப்பிணிநீக்கம்வந்தடைவதல்ல – அனாதிமலமுத்தனாகிய சிவனேபிணியைநீக்கும் பண்டிதனானவனென்றறிந்தவன்மாட்டன்புசெய்யப்பிணிநீங்கும். எ – று ஈண்டன்பென்றது, சமாதிசெய்தலெனவறிக. [௨௭]

இதுவுமது.

மருத்துவனும் பிணியாளியெனிற்பிணியுமாறாது *
மருத்துவன்முன்பிணியாளியெனிற்பிணியைமாற்றியதோர் *
மருத்துவனுண்டிம்முறையின்மாற்றமனவத்தைவரு *
மருத்துவனையனாதிமலமுத்தனெனமதிக்கவரோ *

எ – து பண்டிதனும் நோயுடையனெனிற்பிணிநீங்குவதல்லப் பண்டிதன் முன்னர்நோயுடையனெனிலந்நோயை நீக்கினானொருபண்டிதனுளனாம், இம்முறையானேயொருவன்பிணியை மாற்றுவானொருவனுளனாகத் தொன்றுதொட்டு அனவத்தையென்னுங்குற்றம் வருமாதலாலனாதியேமலத்தினின்றும்விடப்பட்டவனேயுயிர்களொப்பிய வாணவமென்னும்பிணியைநீக்கும் பண்டிதனாவான். எ – று அரோ – அசை – இவ்விரண்டுசெய்யுளிடத்துப்பிணியெனவு மருந்தெனவுமருத்துவனெனவும்வருவன – ஆகுபெயர். (௨௮)

மேற்சரீரியல்லாதசிவனேயுலகம்யாவையுமாக்
கிநிறுத்தியழிக்குமுறைமையைக்கூறுகின்றார்.

ஆக்கைபினையியக்குதற்குமாக்கைபிலேயான்மாவுக் *
காக்கைபிலானவனமலனுக்குவிப்பனனைத்துலகு *
மாக்கியொருமூவரைமூன்முக்குணத்தினைவிப்பிப்பன் *
போக்குவிப்பனவர்பாற்றன்சத்திவிதத்தினைப்புணர்த்தே *

எ - து ஆன்மாவானவன் அசரீரியாயிருந்துஎப்படியுடலைப்போக்குவரத்தைச்செய்விக்கும் அதுபோலநின்மலனுமாய் அசரீரியுமாயிருக்கிறசிவன்தனதுசன்னிதிமாத்திரத்திலே சருவலோகங்களையுமுண்டாக்குவன் அஃதெவ்வாறென்னிற்றுமதமுதலியமுக்குணத்தையுமுடைய மூவரையுமுண்டாக்கியவர்கண்ணே தனதுசத்திபேதமாகியகிரியாசத்தியைப்பிரமாவின்டத்து ✱ அதிட்டித்துச்சிருட்டிசிருத்தியத்தையும் - ஞானசத்தியையமாயனிடத்ததிட்டித்துத்திதிகிருத்தியத்தையும்இச்சாசத்தியைச்சிகண்டபரமேசுரனிடத்ததிட்டித்துச்சங்காரகிருத்தியத்தையும் புரிவன். எ - று போக்குவிப்பனென்பதனாற்சிருட்டியுந்திதியுங்கூறியது (உக)

இதுவுமது.

வேறு

உள்ளுறச்சத்துவந்தானுருத்திரனுருவந்தோன்று *
மூள்ளுறவிராசதந்தானுதிக்குமாலுருமூன்மெய்யி *
னுள்ளுறத்தமோகுணந்தானயனுருத்தானுமூற்ற *
வொள்ளியவொருமூவர்க்குமொழிப்பிறுவாய்வேறென்றும் *

எ - து சிருட்டிபேதங்களனேகமாயிருக்கும் - அதிற்பவுராணிகப்பிரக்கிரியையிற்றோற்றமானபிரகிருதிமாயையிலேதானே மூன்றுகுணத்திலு மூன்றுகருத்தாக்களைப் பரமசிவன்தோற்றுவித்த - அந்தச்சிருட்டியின்மூவருள் - உருத்திரமூர்த்தியாகிற சிகண்டபரமேசுரன்திருமேனி சாத்துவிதகுணமதிகமாயேனையவிரண்டுங்குறைந்துதோன்றும் மாயன்திருமேனியிராசதகுணம் அதிகமாயேனையவிரண்டுங்குறைந்துதோன்றும் - பிரமாவினுடையதிருமேனிதாமதகுணமதிகமாயேனை யவிரண்டுங்குறைந்துதோன்று - மிப்படிமூவிதமான திருமேனியையுடையகருத்தாக்கள்பிரகிருதிக்குக்கீழுள்ளசிருட்டியாதிகிருத்தியங்களைப்பண்ணுவர்கள். எ - று [௩௰]

மேலிம்மூவருட்சங்காரகருத்தாவோடேயேனையவிருவரையுமொப்புக் கூறுவாரொய்துங்குற்றங்கூறுகின்றார்.

---

அதிட்டித்தல - நிலைப்படுத்தல்

காரகன்றனையுங்காயங்காசினிகாறுங்காக்கும் *
பாரகன்றனையும்பாரும்படைத்திடப்பட்டயாவும் *
ஆரகனதிகனென்றுதவர்தமக்கொப்பென்பார்கள் *
நாரகர்பரிகாரத்தைநவிற்றுநூலறியாநாமே *

எ - து சரீரத்தையுநிலனீருகியபுவனங்களையும்படைக்கும்விதியினையும் அவையிற்றைப்புரக்கும்பாரகனாகியவிண்டுவினையும் - அவனுற்புரக்கப்படும்வையகத்தினையுஞ்சராசரமாகியபொருள்களையுமழிக்குமவனாகியஉருத்திரனை - யிவரின் முதன்மைபூண்டானென்றுதுஇவரோடொப்பனென்பாரேல்நரகசம்பந்தராவர்கள்குற்றந்தீரும்பரிகாரத்தினைச்சொல்லுநூலும்யாமாராய்ந்தநூல்களிலில்லை எ - று காரகன் - பண்ணுகிறவன் பாரகன் - இரக்ஷிக்கிறவன் - ஆரகன் - சங்கரிக்கிறவன் - நாரகர் - நரகத்திலேவிழுகிறவர்கள். (௩௧)

அச்சிவனேயதிகமென்பதனைப்பவுராணிகர்மதத்தினு லுணர்த்துகின்றார்

எண்ணுகபிரதானத்தையிருபத்துநாலாம்வேறொன் *
றெண்ணுகபுருடன்றன்னையிருபத்தைந்தாவானென்றே *
யெண்ணுகவிருபத்தாறும்பொருளெனவீசன்றன்னை *
யெண்ணுகவிணையிலீசனிருபத்தேழாவானென்றே *

எ - து பிரகிருதிமாயையானதுஅதிற்றோற்றப்பட்டஇருபத்துநாலுதத்துவத்துக்கும்வேறாதலாலதற்குக்காரணமென்றறிக, ஆன்மாவையசுத்தமாயைக்குமேலாயிருபத்தஞ்சாகவெண்ணப்பட்டவனென்றறிக, அதுக்குமேலாக இருபத்தாறும்பொருளென்றெண்ணப்பட்டவர், ஈசுரனென்றறிக, அதற்குமேலாகியிருபத்தேழாம்பொருளாகவெண்ணப்பட்டிருக்கிறவரையொப்பற்றபரமேசுரனேயென்றறியுங்கள். எ - று பிரகிருதியைச்சொல்லவேயசுத்தமாயையுமதிலடங்கியதாயிற்று, ✠ ஐயைஞ்சினப்புறத்தானுமாரூரமர்ந்தவம்மானே யெனவிக்கருத்தைப்

---

திருவாரூர் - பண் காந்தாரம்

✠பையஞ்சுடாவிடுநாகப்பள்ளிகொள்வானுளத்தானுங் o
கையஞ்சுநான்குடையானைக்கால்விரலாலடர்த்தானும் o
பொய்யஞ்சிவாய்மைகள்பேசிப்புகழ்புரிந்தார்க்கருள்செய்யு o
மையஞ்சினப்புறத்தானுமாரூரமர்ந்தவம்மானே o

பற்றித்திருநாவுக்கரசுநாயனாருளிச்செய்தார். (௬௨)

அந்தப்பரமசிவனைத்தியானம்பண்ணினவர்பெறும்
பேறுகூறுகின்றார்.

பார்த்தவிருபத்தேழாம்பொருடனைப்பகவன்றன்னைப் ※
பேர்த்துடலெடுப்பரல்லர்பெறற்கரும்போகபேத ※
மூர்த்துவபுவனத்துண்டே யுலகெலாமொடுங்கும்போது ※
தீர்த்திடமூலநோயுஞ்சிவனவனவர்திண்ணம் ※

எ - து இங்ஙனஞ்சொல்லப்பட்ட விருபத்தேழாமெண்ணின்கணின் றபொருளாகியபரமசிவனைத்தம்முடைய வறிவின்கணன்னியமாகக் கண்டவர்மீண்டொருகாலுங் கருப்பையுட்புக்குச்சரீரமெடுப்பாரல்லர்தேவராலும் பெறுதற்கரிதாகியபோக பேதங்களையெல்லாமேலாகியசுத்தவித்தியாபுவனத்தின்கணுகர்ந்துபின்னர்ப் பிரபஞ்சகாரியமெல்லாந்தத்தற்காரணத்திலேயொடுங்குஞ்சருவசங்காரம்வந்தவிடத்துச்சிவனவர்க்கனுதிசம் பந்தமாகிய வாணவமலத்தினையுநீக்கிடுதலினாலேயந்தச் சிவனோடபேதமானமுத்தியினையடைவர், இதற்கையமில்லை எ-று

உம்மையால். மாயைகருமங்களையு மெனக்கொள்க. ஊர்த்துவபுவனமென்றார் அசுத்தமாயாபுவனங்கட்குமேலாயவாகலின் (௬௩)

சிவன்திதிகாலத்திலாசாரியனையதிட்டித்துக்கொண்டுஏனையகாலங்களினிராதாரமாகவனுக்கிரகிக்கிறமுறைமை யிரண்டுந் திருவிருத்தத்தாலுணர்த்துகின்றார்

திதியினாதாரஞ்சேர்ந்துசிவனுயிர்ப்பாசந்தீர்க்கப் ※
புதியனபோக முண்டுசிலர்சிவம்பொருந்துவார்மேற் ※
றிதிநிலைத்தொலைவினந்தக்கணத்திலிற்சிவமேயாவர் ※
பதியருள்விழியினாலேநள்ளிருட்பார்க்கப்பட்டார் ※

எ- து திதிகாலமானவர்த்தமானகாலத்திற்பரமசிவனானவர். அவ்வாசாரியனையதிட்டித்துக்கொண்டுமலபரிபாகத்துக்கீடாகவவர்களவர்கள் பாசத்தைப் போக்கவேஅபரமுத்தித்தானமாகியபஞ்சகுய்யாட்டகாதானமாகியஉருத்திரர்பதத்திலுமந்திரர்மந்திரேசர்பதத்திலுமீசானமுதலிய பதங்களினுமிருந்து ஆண்டுள்ளபோகங்களைப்பொசித்திருந்துசங்கார காலத்தினிராதாரமாகச்சிவனாலேயனுக்கிரகிக்கப்பட்டவர்களப்போதேதானேமோக்ஷத்தையடைவர்கள். எ- று

ஏகாரம், தேற்றம் (௬௪)

உற்பவவேலைதன்னிலுலகினையாக்கவல்ல *
கற்புளர்சிலருமாவர்கழலடைவாருமுண்டு *
தற்பரன்விழியிற்பட்டார்சங்காரவாரம்பத்திற் *
கற்புடன்படைப்புமூலக்கருத்தரும்வருகாலத்தின் *

எ - து சிவன்படைத்தற்றொழில் றுடங்குங்காலத்துச் சுத்தாத்துவாமுதலியமூன்றத்துவாவிலுந்தங்கள்தங்களுக்குமுதன்மையான அதிகாரங்களைப்பண்ணியிருந்துஅதிகாரத்திலவயிராக்கியம்பிறந்ததனால் மோக்ஷத்தையடைவர்கள்சங்கரிப்புண்கிறவவதரத்திலேமலபரிபாகமுள்ளவர்கள். பரமசிவனாலனுக் கிரகிக்கப்படுவர்கள் மலபரிபாகமாந்தியத்தையுடையவர்கள் சங்காரகாலத்தொலைவில்மேல்வருகிற சிருட்டிகாலத்துச்சிருட்டிமுதலியபஞ்சகிருத்தியங்களை ப்பண்ணுதற்கு. அதிகாரகர்த்தர்களாகச்சிவனாலேவரப்பட்டிருப்பர்கள். எ - று

(௩௫)

உம்மையெதிரதுதழுவியவெச்சம்

முற்கூறியஞானயோகமடைதற்பொருட்டுக்கருமயோகத்தினதியல்பு கூறுவான்றொடங்குகின்றார்

பரமமெய்ஞ்ஞானயோகப்பாங்கிலார்தமக்கும்பாங்காங் *
கருமயோகினைபுங்காணக்கழறுவங்கருதுவானே *
கருதிடும்பொருளையந்தக்கருத்ததன்பயனேயென்ன *
வருமொருநான்குமுன்னேமதிக்கவேயோகம்வாய்க்கும் *

எ - து மேலாயவுண்மையாகியஞானயோகமடையாதார்க்கு நன்மையைத்தருவதாயிருக்கிறகருமயோகத்தின தியல்பினையுங்கூறுகின்றேமறிதலைச்செய்க. ஒருபொருளைக்கருதுமவனுமவனாற்கருதப்படும்பொருளும்அப்பொருளைக்கருதுங்கருத்துமக்கருத்தாலவந்தடையும்பயனுமென்று சொல்லுதற்குவரும் நான்கினையுமுன்னேயாய்ந்தறியினவர்களுக்குப்பின்னர்அக்கருமயோகநெறிகூடும். எ - று

நான்குமென்னுமும்மை. முற்றும்மை-மதிக்க வென்றதனாலாய்ந்தறிதல்வேண்டுமென்பதாயிற்று (௩௬)

இதுவுமது

மலத்தினுமறுதிமுத்தன்வாக்கினுளேகதேசம் *
பலிப்பதுமுந்திப்பார்க்கவிம்மையிற்பயனுட்பார்த்தான் *

மலத்தினுநீங்கியீசன்மலரடிநீழல்வாழ்க்கை ❋
யிலக்கிலேயென்றேயெண்ணிவிரும்புவன்யோகம்வேறும் ❋

எ-து அநாதிமலமுத்தனாலுரைக்கப்பட்ட வேதாகமங்களுள் ஒருசாரிம்மைப்ப யனுட்பலிக்கப்பட்ட கருமயோகத்தை விதிவழுவாதியற்றி முன்னர்ப்பார்த்தறி தலைச்செய்க, அங்ஙனம்பார்த்தால்மூலரோயினின்றுநீங்கியிறைவனுடைய தாமரை மலர்போன்றதிருவடிநீழலையடைந்து வாழ்தற்குவிபரீதமில்லையெனக்கருதியிம்மை ப்பயனுட்பலிக்குங்கருமயோகத்துக்குவேறாய் வீடுபேற்றுக்குரித்தாகியஞானயோ கத்தையும்விரும்புதலைச்செய்வன். எ-று (௬எ)

இந்தக்கருமயோகத்துக்குப்புண்ணியதலமுதலானவையுபாங்கமெ னக்கூறுகின்றார்

எல்லையையெழுவாயெல்லாமெண்ணுகவுபாங்கமென்றே ❋
யல்லவிவ்வாக்கைகண்டவருவருப்பெனவறிந்து ❋
புல்லியபுலன்கள்வென்றுபொருவிலிபுரியும்புக்குச் ❋
செல்லலெல்லாமுந்தீரச்சிவனடியடையுஞ்சித்தர் ❋

எ-து இந்தநிலைநில்லாத சரீரந்துன்பத்தைவிளைக்கும தெனவுங்காட்சிப்பிரமா ணத்தாற்பழிக்கப்பட்டமலமூத்திரப்போர்வை யெனவுமதனையறிந்து. அற்பவறிவி னைத்தருவதாய விடையபோகங்களினது வழிபோகாமற் றம்வழிக்கொண்டு தனக் கோரொப்பில்லாதவிறைவனை அனுசந்தானமாகவடைந்து வீற்றிருந்துதுன்பத்துடர் ச்சியெல்லாம்விட்டுநீங்கிச்சிவனுடைய திருவடியையடைதலைவிரும்புவார். இடம் பொருளேவற்செய்வோரென்னு மூன்றினையு மிக்கருமயோகத்திற்குபாங்கமென்ற றிக. எ-று

யோகத்திற்குப்பிரதானமாகிய அங்கம்இயமமுதலியவெண்வகையந்தவங்கத்துக் குத்தானமுதலானவைகள்உபயோகமாதலாலுபாங்கமெனச்சிறப்பித்தார்.இது வட மொழி. இப்பயன்பலித்தலியல்பாதலிற்சித்தரெனச்சிறப்பித்தார் (௬அ)

இதுவுமது

அரவிறைன்மற்றுமச்சமறவருவருப்புமின்றி ❋
மரகிராமலருமல்கமனிதர்கள்பலரும்வந்து ❋

விரவிடாவெல்லைதன்னில் விரும்பியே குகையுஞ்செய்து ※
திருவிளக்குடனே தூபஞ் சிறக்கவே குகையுட்செய்க ※

எ - று வெளி - இதனால் யோகசாதனைக் குத்தலங்கள் கூறியதாயிற்று (சுகூ)

யோகசாதனைக்குரித்தல்லாதாரி லக்கணத்தை யிரண்டு செய்யுளா லுணர்த்துகின்றார்

ஆக்கைப் பிறப்பிணியையுற்றுளுதரவகத்திலற்றான் ※
காக்கவே பாக்கைதன்னைக்கருத்தினுளருத்திவைத்தா ※
னீக்கிடாக்கருமத்தோடே வலியுறநிரந்து நின்று ※
னூக்கமேயுடையானான மிலிப்பணிக்கொருமையுற்றே ※

(எ௰)

எ - று - வெளி - ஊக்கம் - உச்சாகம்

ஆரியனேவல்செய்வான திகதீபன முருள்ளான் ※
பாரியதபனந்தன்னைப்பற்றினன் மற்றுங்குற்றம் ※
சேரியனென்று செப்புமிவரொலாஞ் சிறந்தயோகத் ※
தூரியர் சொல்லப்பட்ட விவரலார் துடங்கலாமே ※

எ - று - வெளி - யோகத்தூரியர் - யோகஞ்சாதித்தற் குரிமையல்லாதார் - ஆரியன் ஆசாரியன் (எக)

இக்கருமயோகத்தினதுபயனைவழுவாதெய்துவாரித்தகைமையரொ னவவரிலக்கணங்களை நாலு செய்யுளாற் கூறுகின்றார்

பதவிதாய்ச்சிறிய சூடும்பற்றியபரிமிதான ※
முதரதிபனமுங்கூரவுச்சிப்பின்றொருபோதுண்பா ※
னுதகமுமெநாய்தினுண்பானுதரபந்தனமுமுள்ளான் ※
மிதமிதமென்றேயெண்ணிவேணவாத்துடைத்துவிட்டான் ※

எ - று மேன்மையை யுடையதாய்ச் சிறியகூட்டுடனுங்கூடிய அற்பமாகியவன் னத்தைவயிற்றின் கட்பசியுமிகவுமுண்டாக உச்சிக்குப்பின் ஒருநேரமாகவுண்டலை ச்செய்வான், தண்ணீரினையுஞ் சிறிதுபருகுதலைச்செய்வான் வயிற்றின்கண் ✠ ஓ ட்டியாணக் கட்டினையு முடையான் யாதாமொருபொருளை நுகர்தற் பொருட்டா

---

✠ ஒட்டியாணம் - யோகப்பட்டை.

சைவந்தவிடத்துச்சிறிதினைக்கருதி மிகவுநுகர்தலைச்செய்யாது நீக்குவான். எ-று

வேணவா. எ-து. வேட்கைப்பெருக்கம் [௬௨]

நீக்குவான்றிரண்டபாலென்பநிகழ்ந்ததினையுமெய்யி ※
னாக்கியவபூபமாதியனைத்தையுமவலமென்றே ※
தூக்கினுட்சொல்லு முண்டைச்சுவையுமிழுநங்கைதொண்டை ※
பீர்க்கினுட்பெரியதத்தியெனுமிவையாநிபேணான் ※

எ-து-வெளி- இதனுள். தூக்கு. நூல். தொண்டை. கொவ்வை (௬௩)

அஞ்சுவாறைசைதோன்றிலருவருப்பான்றன்றாகம் ※
பஞ்சின்மெல்லடியார்வந்துபரிந்துமெய்பற்றிறனு ※
நஞ்சுளநடுங்கியன்னையெனவவர்தம்மைநாடி ※
வஞ்சிநுண்ணிடையார்போகமறுத்தறவெறுக்கவல்லான் ※

எ-து-வெளி (௬௪)

தொழிலினைச்சுருக்கியுள்ளான்சுளிப்பவன்றுயிலுந்தோன்றில் ※
விழைவினைஞானயோகபலத்ததிவிளைவின்வைத்தான் ※
உழையுறைபுலன்களெல்லாமொடுக்கியேயுள்ளானென்று ※
கழறியவிவரோயோகபலத்தினைக்கைக்கொண்டாரே ம

எ-து கிரியாபாதத்திற்சொல்லுநித்தியநைமித்தியகாமியசடங்கிற்கிரியைவிரி யாமற்சுருக்கிச்செய்துள்ளான் நித்திரைவந்தவிடத்து த்தடுத்ததனை வெறுப்பான் யோகத்தின்பலமாகியமூர்த்தியினையடைவதில் மிகவும்விரும்புதலைச் செய்வான் த ன்னிடத்திற்பொருந்தியிருக்கிற விடையங்களிற்பற்றுதலெல்லாமொழித்துள்ளா னென்றிப்படிச்சொல்லி வரப்பட்டவித்தன்மையரோ யிவ்வியோகசாதனையெய்து ம்பயனைப்பெறுவர். எ-று

எதிர்காலத்தாற்கிளப்பதனைபிறந்தகாலத்தாற்கிளந்தார். விளைவுபற்றி (௬௫)

மேலாதனமுதலியவற்றைபிரண்டிசெப்புமாற்
றொகுத்துணர்த்துகின்றார்

ஆதனம்பதும்மாதியல்லதுமிசைந்ததொன்று ※
வேதமக்கியற்றித்தேவனிணையடியிறைவிபாதம் ※

போதகவுருவன்பொற்றாள்புந்தியுணிணைந்துபோற்றிச் *
சாதகர்புரிகயோகந்தவறறுமுபயோகத்தால் *

எ-து சாதகனானவன் பதுமமுதலிய அறுபத்திரண்டு ஆதனத்துளொன்றைப் பொருந்தியல்லதுதனக்கியன்றதொரு ஆதனத்திலேயிருந்துசிவன்உமையாள். தக்ஷிணாமூர்த்தி யிவருளொருவர் பாதமாதல் புத்தியினாலே தியானித்தொழிந்தவாறேதோத்திரஞ்செய்துயோகத்துக்குத்தவறுவாராமற்புரிக. எ-று (சசு)

காந்திரியக்கேயாகக்கவான்மிசைக்கலக்கத்தென்பாற் *
காந்தனிற்பிருட்டசாய்கைகலக்கமற்றங்கைக்கண்ணே *
பிரிந்தபன்னடுவேநாவினந்தமும்பெய்துநிற்க *
வுரந்தனமுன்னேபின்னும்நிமிர்ந்திடக்களமுமோங்க *

எ-து கையுங்காலுங் குறுக்கேவைக்க. அஃதெங்ஙனமெனில் வலதுகாலையிடதுதுடைக்குள்ளேவைத்து அதன்மேலே மடியிலேயிடதுகையைமுதல்வைத்ததன்பினதன்மேலேவலதுபுறங்கை பொருந்தவைத்துப் பல்லொன்றோடொன்றுகிட்டாமனடுவேநாக்குநிற்கப்பண்ணிமார்புமுன்னேதள்ளிப்பின்னே நிமிர்ந்துசரீரஞ்செவ்வையாகவிருக்க. எ-று (சஎ)

முற்கூறியவாதனத்தையும் பிராணாயாமத்தையும் பிரத்தியாகாரத்தையுந்தொகுத்துணர்த்துகின்றார்

நாசியினந்தஞ்சேர்த்திநாட்டநான்கைந்தொன்றென்றே *
தேசுறுதிசைகடன்னிற்செலுத்திடாநிருந்துவாயு *
ரேசகபூரகங்களெனுமிவையிரண்டுமின்றிப் *
பேசுதலுமில்லாச்சிலையெனவிருக்கைபெற்றே *

எ-து கண்கள்நாசிநுனியைப்பொருந்திப் பிரகாசத்தையுடைய பத்துத்திக்கிலு மனதைச்செல்லாதபடி நிறுத்தியிருந்து இரேசகபூரகமாகிய விரண்டையும் விட்டுக்கும்பகத்தோடே மவுனியாயிருந்து சிலையானதெப்படி சேட்டையற்றிருக்குமதுபோலவசைவறவிருக்க எ-று (சஅ)

மேற்றாரணைதியானஞ் சமாதிமூன்றினையுந்தொகுத்துணர்த்துகின்றார்

மனநிலையொடுங்கவீசன்வடிவினையகத்துள்வைத்துப் *
பினைவடிவறுதிபேசுந்தேசிகனருளாற்பெற்று *

மனநிலையொடுங்கவாய்த்தவாய்மையினறிவைவைக்கக் *
கனிவொடுகாண்பான்காட்சிகாட்சியிற்படலுங்கைத்தே *

எ - து மனத்தைவேறொன்றிலுஞ் செல்லவொட்டாமல் மூலாதாரமுதலிய ஆதாரங்களிலே நிறுத்துவது தாரணை, ஞானசாரியனுடையவருளினாலே நிட்களத்தையுபதேசிக்கப் பெற்றுச்சிவனைமூலாதார முதலியதானங்களிற்கடப்பம்பூவானதெப்படியடியிலேதொடுத்துமேலேசெல்லுமதுபோலப்பாவிப்பது தியானங், காண்பானுங் காட்சியுங்காணப்படும் பொருளுமின்றிச் சித்தமனோலயம்பிறப்பித்துச்சித்தாயிருக்கிற வியாபகத்திலே யறிவானதை நேயத்துடன் வைத்திருப்பது சமாதியெனப்படும். எ று [சக]

இப்படி யுண்மைநிலைகைவரா தோர்க்கு மேலோருபாயநிட்டையுணர்த்துகின்றார்

நீங்கினாிந்தவுண்மைநிலையினைநெஞ்சந்தன்னிற் *
றாங்குகசகளந்தன்னைச்சங்கரன்றன்னையுன்னி *
நீங்குகசகளந்தன்னைமுன்னையினிலையினீடித் *
தூங்குகநிரியிற்பின்னுஞ்சகளமாதரிக்கச்சூழ்ந்தே *

எ - து இங்ஙனங்கூறியவுண்மைநிலையாகிய சமாதியைவிட்டுநீங்கினவர்கள் சகளமூர்த்தியாகியசிவனையிதையத்தின்கட்டியானஞ்செய்க, அந்தத்தியானத்தைவிட்டு நீங்கினவிடத்துமுன்போலச்சமாதியைப்புரிக, அதனைவிட்டுநீங்கினவிடத்துப்பின்புஞ்சகளமூர்த்தியையேதியானஞ்செய்க. எ - று (நூய)

மேலுமோர்வகையாலகப்பூசையுமுணர்த்துகின்றார்.

அகத்தினுட்பூசைசெய்வார்க்கருவருப்பில்லைக்கொல்லும் *
பகைத்தொழிலில்லையல்லற்படுதலுமுடலுக்கில்லை *
புகப்புறுபலமுமேலாமுறும்பலமுனையினற்பஞ் *
சகத்தினுட்பூசைசெய்வார்தமக்கெலாம்வருத்தஞ்சார்ந்தும் *

எ - து யாதாமொருவர்அகப்பூசைசெய்யுமிடத்தவர்களுக்கு அசுசிமுதலியகுற்றமுமில்லைபுட்பமுதலியவற்றைப் பறிக்கிறவாதையாகியகுற்றமுமில்லை மிகவுமிதனாற்சரீரவருத்தமுமில்லை யிவன்பெறும்பலமுமதிகமாயிருக்கும் புறப்பூசைசெய்யிற் சரீரவருத்தஞ்சாரினுமதனாற்பெறும்பலமுமற்பம் எ - று (நூக)

மேலகப்பூசைசெய்தற்குத்திருமேனியீதென்றுணர்த்துகின்றார்.

மங்கலவங்குலத்தும்வளர்திருவுருவந்தன்னைத் ※
தங்கருத்தினுக்கேதக்கநிறத்துனிச்சலசந்தன்னு ※
ளெங்களுக்கிறைவாவிட்டசித்திதாவென்றேயேத்தச் ※
சங்கரனவர்க்கேயிட்டசித்தியைச்சமைப்பன்றானே ※

எ - து எட்டங்குலமுயரமாக வொருசிவலிங்கத்தை நினைந்துதமதுகருத்துக்குவேண்டினதொருநிறமாகவதனைக் கருதியிதையகமலத்தின்கணிருத்தி வேறுண்டுமுபசாரத்துடன் பூசைசெய்து எமது சுவாமியாமியாதொன்றடையவேணுமென்றுகருதின இட்டசித்திகளெல்லாவற்றையுந்தருவாயாகவென்று பிரார்த்திச்சுத்தோத்திரஞ்செய்யச்சிவனுந்திருவுளமகிழ்ந்துஅவர்களவர்கள்வேண்டினஇட்டசித்திகளையிம்மைக்கட்கொடுப்பன். எ - று (௫௨)

சராசரமாகிய ஆன்மாக்களிடத்துச்சிவன்வியாபி
த்துநிற்குமுறைமையையுணர்ந்தார்
பெறும்பலமுணர்த்துகின்றார்.

சராசரத்தமலனீங்காத்தன்மையனுதலாலே ※
சராசரமவன்றன்மேனியெனவுணர்தக்கோர்தாமுந்
சராசரவுயிர்க்குத்தாயாஞ்சங்கரனுலகஞ்சார்ந்து ※
சராசரமொடுங்கும்போதுதற்பரன்றானுஞ்சார்வார் ※

எ - து வெளி-சரம் - நரர்மிருகாதி - அசரம் - தாபராதி (௫௩)

முன்னர்த்தொகுத்துப்போந்தயோகத்தைமேல்வ
குத்துணர்த்துகின்றார்.

போகத்தைநீங்குமங்கும்புணரமுன்பொருந்திநின்ற ※
மோகத்தைமுனியயோகமுவிரண்டங்கத்தாலே ※
யூகித்தேயுரைப்பாஞ்சொல்லற்கொருபொருளல்லாவுத்தை ※
யாகத்தையயலென்றாய்ந்தவறிவுடையார்கடாமே ※

எ - து ஈதென்றறுதியிட்டுச்சொல்லுதற்கேதுவல்லாதவழுக்குமிக்கசரீரத்தைநமக்கன்னியமென்றாராய்ந்தவறிவுடையோர்கள், அபரபோகம்பரபோகத்தைப்பொருந்தவுமுன்னே செனனந்தோறுந்தொடராநின்ற வஞ்ஞானங்களை

ழியவும் ஆறங்கமாகியயோகத்தையாம்விசாரித்துஇந்நூலிற்சொல்லாநின்றோம்.
எ - று [ருசு]

ஆறங்கமாகியயோகத்துட்டலைமையாகியபிராணாயா
மத்தையுவமித்துணர்த்துகின்றார்.

அட்டாங்கயோகமென்றிருக்கவீண்டாறங்கமென்றதென்னெனில்.இயமநியம
மிரண்டுமிதனுளடங்குதலால்வேறுகக்கூறிற்றிலர்

முந்தியபிராணாயாமமுத்திசாதனசமாதி ※
யந்தமாறங்கயோகமவற்றுளும்பிராணாயாமந் ※
தந்தியைப்பாகனெற்றேதடுத்தடர்த்திடுகையற்றே ※
பந்தமாம்பிராணன்றன்னைப்பயிற்றுதலுரைக்கும்பாங்கால் ※

எ - து பிராணாயாமமுதற்சமாதியந்தமாகியவாறங்கயோகமுமோக்ஷமடை தற்குப்பாங்கென்றுசொல்லலாம், அவற்றுட்டலைமையாகிய பிராணாயாமத்தின் பகுதியைவிசாரிக்குமிடத்துப்பாகனானவன்யானையானதைத்தன்வழிசெல்லவொட்டாமற்றோட்டியாற்றலையிற்கொத்திமறித்துத்தன்வசமாக்கிக்கொள்ளுமாறுபோலவான்மாவைவிட்டுநீங்காதிருக்கிறபிராணவாயுவை சிவயோகியானவனிரேசகபூரகங்களினாலேமறித்துத்தன்வசமாக்கிக்கொள்ளுவன். எ - று [ருரு]

அந்தப்பிராணாயாமத்தின்பகுதியையுணர்த்துகின்றார்.

ஊன்றியேவலப்பாலநாசிப்புடைவிரலுதரவாயுக் ※
கான்றிடவிடையினாலேகலைகபிங்கலையினாலே ※
யூன்றியேயிடப்பாலநாசியுதரத்துள்ளுறவேபூரித் ※
தூன்றியேயிரண்டுங்கும்பித்திடுகபின்னுதரத்துள்ளே ※

(ருசு)

எ - து வெளி

மேற்பிராணாயாமமென்னுஞ்சொற்குப்பதப்பொருளு
ணர்த்துகின்றார்.

பெற்றமையாலேநீங்காப்பெற்றியைப்பிராணனேடே ※
பெற்றிடும்பிராணனென்னும்பெயரினையனிலந்தானு ※
மற்றதன்வருத்தந்தன்னைமதித்துவாயாமமென்றே ※
பற்றுகபிராணாயாமப்பதப்புணர்ச்சியினைப்பாங்கால் ※

எ - து ஆன்மாவினோடேபிராணவாயுவானதுவிட்டு நீங்காதிருக்குந்தன்மையைப்பெற்றமையாலேயதற்குப் பிராணனெனப்பெயராயிற்று - அதனைரேசக பூரகங்களினாலேபோக்குவரத்துச்செய்து துக்கிப்பிக்கையால் ஆயாமமெனப்பெயராயிற்று, இப்படிபிராணவாயுவை ப்போக்குவரத்துச்செய்விப்பிக்கையாற் பிராணாயாமமெனச்சொற்பொருளாயிற்று. எ - று (௫௭)

அந்தப்பிராணாயாமத்தால்வருநன்மைதீமையுணர்த்துகின்றார்

அந்தரம்பெரிதேயாகுமவகதியாயாம த்தான் ✻
வந்துறுமேன்மைநன் குவாய்க்கினாயாமம்பாச ✻
பந்தமும்பயிற்றியச்சப்படுத்தியங்குசத்தாற்பற்றுந் ✻
தந்திவாகனனுஞ்சாலத்தளர்வனேதவறேசாரில் ✻

எ - து மேலந்தப்பிராணாயாமத்தை யாதாமொருவன் விதிவழிசெய்யாது ஏற்றக்குறைவாகச்செய்யின் அவனுக்குமிகவுந்துக்கத்தையே கொடாநிற்குமதனையுள்ளபடியறிந்துசெய்துஅதுவாய்த்தவிடத்துஅதனாலுள்ளசித்திகள்நன்மைகளெல்லாம்வந்து பொருந்தும்,காலிலே சங்கிலியும் பூட்டப்பட்டுப்பாகன்றோட்டியினாலேவாதைப்படுத்த வதனாற்பயங்கரத்தை யுமுடையயானையின் மத்தகத்திலேயிருக்குந்தேவேந்திரனேயானாலும் அந்தப்பிராணாயாமம்வாயாதவிடத்து மிகவுந்துக்கத்தையுறுவன் எ- று- உம்மை- உயர்வு சிறப்பு (௫அ)

பிராணாயாமந்தவறினவிடத்துண்டாகியகுற்றம்போம்படிக்குபாயமைந்துசெய்யுளாலுணர்த்துகின்றார்

வாயுவாயாமந்தானுந்தவறுமின்வருத்தமாக்கு ✻
நோயுறுமுற்றநோய்கணுங்குதனுவலக்கேண்மோ ✻
தேயுவைத்தியானஞ்செய்யச்செறிந்தநோயங்கந்தன்னின் ✻
மாயுமேவாதரோகமனத்தகத்தொருமைவாய்த்தே ✻

எ- து யாதாமொருவர் பிராணாயாமஞ் செய்யுமிடத்து க்குற்றம்வரிற்சரீரத்திலேவாயுவினாலேவருத்தத்தையுண்டாக்கும் அஃதன்றிவியாதியையு முண்டாக்கும் அக்குற்றங்கள்போம்படிக்குஒருஉபாயஞ்சொல்வாமதனை க்கேட்பாயாகமனதிலேயொருமைப்பாட்டையுடையவனாயதற்கு விருத்தமானவக்கினியைத்தியானஞ்செய்யிலதனாற்சரீரத்தின்கட்பொருந்திய வாதமுதலியவியாதிகளுநீங்கும். எ- று (௫௯)

அங்கியான்வருத்தமுற்றவவையவமத னிலாழ்ந்த *
பொங்குதண்புனலைச்சிந்தைபுரிந்திடிற்பிரிந்துபோகும் *
பொங்குதண்புனலாற்றுன்பம்பொருந்தியவுறுப்புத்தன்னி *
னங்கியைத்தியானம்பண்ணவல்லவர்க்கழியுமந்நோய் *

எ-து அக்கினியைத்தியானஞ்செய்ததினாலேயிவனுடைய சரீரத்தின்கண் அதனால்வாதைவரில்? அதற்குவிருத்தமாகிய தாழ்ந்தமடுவின்கண்ணிறைந் திருக்கப்படாநின்றசீதசலத்தைத்தியானம்பண்ணிலந்தவாதைவிட்டுநீங்கும்அந்தச்சீதசலத்தினாலேசரீரத்தின்கண் வாதைவரில்அதற்குவிருத்தபூதமாகியதேயுவைத் தியானிக்கவல்லவர்க்குஅந்தவாதையானதுநீங்கிப்போகாநிற்கும். எ-று

வல்லவர்க்கென்னுஞ்சொல்முற்றுங்கூட்டுக (௬௰)

உற்றிடினுதரந்தன்னினுதாசனனுற்றபோதே *
பற்றுகவமிர்தவெள்ளப்பாவனையதனைப்பாறு *
மற்றையவுதகவேட்கைவரினுமிவ்வாறுசெய்க *
வற்றிடுமறவின்வேட்கையாகமுங்குளிருமன்றே *

எ-து முன்னர்க்கூறியவந்தவக்கினியானது உதராக்கினியுடன்பொருந்திமிகவும் வாதைபண்ணினவிடத்து விந்துத்தானத்தினிற் கிறவமிர்தமானது புறப்பட்டு எங்கும் நனைந்ததாகப்பாவிக்கிலந்தவக்கினிவாதை சமிக்கும். அஃதன்றி மிகவுந்தண்ணீர்த்தாகமுண்டான விடத்து முன்புபோலே யமுதபாவனைபண்ணினந்தத்தாகமுஞ்சமித்துச்சரீரமுங்குளிர்ந்திருக்கும். எ-று (௬௰௧)

உற்றநோயுடலினிடைபுணர்ந்தபின்விபரீதத்தைப் *
பற்றுகபாவகத்தாற்பற்றியவுறுப்பினோய்கள் *
அற்றிடுமைவர்விரமடக்கியேயவாவுமாய்த்த *
நற்றவர்புரிகவிந்தமுறையினைப்பலிக்குநாளும் *

எ-து பஞ்சேந்திரியங்களை யுமடக்கி யாசையினையுமொழித்த நல்ல சிவயோகியானவன் நாடிசோதனையைப்பண்ணினபின்பு சரீரத்தின்கட்பொருந்திய வியாதியானது போம்படிக்குப்பாவனைசாமர்த்தியத்தினாலே பின்பு விபரீதமாகநாடிசோதனையைப்பண்ணிலச்சரீரத்திற் பொருந்திய தலைவலி - கண்ணோய் முதலி

யவியாதிகளெல்லாம்போமாகையாலே நாடோறுமிந்தப்படியேசெய்யில்யோகசித்திவரும் எ று (௬௨)

கடுவெயிற்றரவமெய்யிற்கடித்திடிற்கனலுமந்த ❊
வுடலெல்லாமமிர்ததாரையொழுக்கியேநனைக்கவுள்ளத் ❊
திடமுளான்றனக்கப்போதேதீர்ந்திடும்விடமுமற்றை ❊
விடமுறும்போதுமிந்தநினைவுறின்விரைந்துமீளும் ❊

எ - து வெளி.

காளி - காளாத்திரி - நீலி - நீலாத்திரியென்னும் பல்லையுடைத் தாதலாற் கடுவெயிற்றரவமெனச்சிறப்பித்தார், மற்றுமென்பதனால் தேள் முதலாயின வெனவறிக (௬௩)

யோகஞ்சித்தியானதுக்கடையாளங்களுணர்த்துகின்றார்

வாயுவைச்செயித்தசெய்கைவாய்த்ததற்கடையாளங்கள் ❊
ஆயுராரோக்கியாதியவற்றைபவ்வுடலங்காட்டு ❊
மாயமுமனத்தினில்லைவசமுறும்புலன்களெல்லாங் ❊
காயத்தின்மலநீர்மற்றும்நொய்தெனக்கழியுமன்றே ❊

எ- து- வெளி. (௬௪)

அந்தப்பிராணுயாமமிருவிதமாமென்று இரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வாயுவிணுயாமந்தானிருவிதமாகவாய்க்கு ❊
மாயிஞென்றகற்பமற்றையதுமகாசகற்பமாகும் ❊
வாயின்மந்திரத்தைச்சொல்லிப்பயிற்றலுமனத்தினலே ❊
தேயனைச்சிந்தைசெய்தேபயிற்றலுஞ்சகற்பந்தேரில் ❊

எ- து. பிராணுயாமஞ்சகற்பப்பிராணுயாமமெனவும் அகற்பப்பிராணுயாமமெனவுமிருவிதமாம்அவற்றுட்சகற்பமாவது வாக்கினலே மந்திரத்தையுச்சரித்துமனத்தினலேசிவனைத்தியானஞ்செய்துபிராணுயாமஞ்செய்வது. எ- று (௬௫)

அகற்பமவ்விரண்டுமின்றியாக்கிடுமாயாமந்தான் ❊
மகத்பலவாஞ்ஞையாலேபயிற்றுமாதவர்க்குவாய்த்த ❊

சகற்பமேயகற்பந்தன்னிற்றரும்பலமதிகந்தாழ்ந்த *
வகற்பமுமலசினர்க்குப்பலத்தினைநொய்திறைக்கும் *

எ- து முற்கூறியசெபமுந் தியானமு மின்றிப்பிராணாயாமஞ்சொன்னமாத்திரைகளினாலேசெய்வதுஅகற்பப்பிராணாயாமமெனப் பெறுமிகுந்த பலத்தையடையக்கருதும்வாஞ்சையையுடைய மகாதபோதனர்க்கு அகற்பப்பிராணாயாமத்தைப் பற்றச்சகற்பப் பிராணாயாமமே யதிகபலத்தைக்கொடுக்கு மந்தச்செபத்தியானத்தோடுகூடியசகற்பப்பிராணாயாமஞ்செய்ய மாட்டாமற்சோம்பினபேர்க்குஅகற்பப்பிராணாயாமமானதுமுற்கூறியவற்றிற்றாழ்ந்ததைக்கொடுக்கும். எ- று. (௬௬)

பிராணாயாமத்தின்விசிட்டமும்அஃதில்லாதார் சமாதியடையமாட்டாரென்பதுமுணர்த்துகின்றார்

இந்தியவிருத்தியெல்லாம்பிராணனேயியக்கவேயு *
மிந்தியஞ்செயிக்கவெண்ணிற்பிராணனைச்செயிக்கப்பஞ்ச *
விந்தியஞ்செயித்தார்தாமேயெய்துவர்சமாதிதன்னை *
யிந்தியஞ்செயிக்கமாட்டாரெய்துவதேதுமின்றே *

எ- து. இந்திரியங்களெல்லாம்பிராணவாயுவியக்கவே யியங்குமாதலாலிந்திரியஞ்செயிக்கக்கருது மவர்பிராணவாயுவைத் தமதுவசவிருத்திபண்ணுக, இந்திரியஞ்செயித்தாற்பிரயோசனம் யாதென்னிலிந்திரியஞ் செயிக்கமாட்டாதோர்சமாதியுமடையப்பெறார்கள், தியானாதிகளுங்கைவரமாட்டாது, ஆதலாற் பஞ்சேந்திரியங்களைச்செயித்தவர்களேசமாதியையடையுமவர்கள். எ- று. (௬௭)

அந்தச்சமாதியடையுமிடத்துபஞ்சேந்திரியங்கடாமாகச்செய்யவற்றேறுவென்னில்லான்மாவேரடத்துமென்பதற்குருவகம்பண்ணியுணர்த்துகின்றார்

விசையுறுபரிகளாகவிரவுமிந்திரியபேதங் *
கசையதுவாகவாயுக்கற்புற்றயாமத்தாலே *
தசையுடலிரதந்தன்னைச்சாரதியாகித்தானே *
யசைவதுமின்றியூருங்கொளவிருபயனுமான்மா *

எ- து. சோத்திராதிபஞ்சேந்திரியங்களானதுவிரைவுடைத்தான குதிரைகளைப் பொற்சென்றுவிடையங்களைப்பொருந்துமிப்படிச்செல்லு மிந்திரியங்களானதுவா

யுச்செலுத்தச்செல்லுமதன்றித் தானாகச்செல்லமாட்டாஅந்தவாயுவானதும் பிராணாயாமத்தை விதிப்படி நாடோறும்பண்ணினவிடத்துத் தானினைத்து இந்திரியங்களைச்செலுத்தமாட்டாவாதலால்ஆன்மாவுக்குவசவிருத்தியாம்அப்போதான்மாவானவன் மேலாகியபோகமோக்ஷமாகியவிருபயனையுமடைதற்பொருட்டு மாங்கிசமுடைத்தாகியதூலசூக்கும மானசரீரத்தைத்தேராகப்பண்ணி யிந்திரியமாகிய பரிகளைப்பூட்டிவாயுவைச்சம்மட்டியாகப்பிடித்துக்கொண்டுதான் தேர்ப்பாகனாய யசைவின்றியவிகாரியாயிருந்துதன்சன்னிதிமாத்திரத்திலே யந்தத்தேராகிய சரீரத்தைச்செலுத்தாநிற்பன். எ- று (௬அ)

அந்தஆன்மாவுந்தானாகச்செலுத்தவற்றேவென்னின்
றச்சிவன்றன்சன்னிதிமாத்திரத்திலேநடத்துவனெ
ன்பதனையுத்தரபூருவமாகவுணர்த்துகின்றார்.

வேறு

இயக்கினுடலுயிர்விதற்கியெனிற்பூணிக்கியந்திரத்தின் *
றியக்குவிக்குமிறையமலனெனிற்றொழிலுண்டிறைவனுக்கு *
மியக்கமிருநிலமெய்துமிரவிக்கேவுத வில்லை *
யியக்கமிரும்பெய்திபிடுங்காந்தத்துமிலைத்தொழிலே *

எ - று ஆன்மாவானவன் அவிகாரியாயிருந்துசரீரத்தையியக்குவிப்பனென்னிற்சகடையையியக்கும் பூணியானதையியக்குவிப்பானொருவன்போல விசுவத்தைநடத்துவன் நின்மலனாகியசிவனே யென்னிலத்தகர்த்தாவுக்குந் தொழிலுண்டாகவேணுமென்னிலஃதப்படியன்று பெரியநிலத்துள்ளார்தொழில்செய்கிறது ஆதித்தபகவானேவலல்லவேயஃதன்றிக் காந்தக்கல்லின்முன்னிரும்புசேட்டிக்கப்படுகிறதுங் காந்தக்கல்லினது தொழிலல்லவேயாதலாற்கர்த்தாவுக்குந் தொழிலிலைக்காண், ஆதித்தியன்காந்தக்கல் இவற்றின் சன்னிதிமாத்திரத்திலேயவை காரியப்படுமாறுபோல விசுவமுஞ்சிவனதுசன்னிதிமாத்திரத்திலே காரியப்படும் எ - று (௬௯)

சிவன்செகத்தையசரீரியாயிருந்துநடத்துவனென்
பதற்குதாரணபூருவமாகவுணர்த்துகின்றார்.

அவையவத்துங்காரியமெய்யாதியதற்கமலனிறை *
யவையவத்தவிரதாதிகாரியமுண்டாக்கினர்மெய் *

யவையவமுமாக்குமறிவதற் குமுதற்காரணத்தின் ※
றவையவத்தாற்பந்திக்கப்படுமவர்க்குமவர்வினைக்கும் ※

எ - து சரீரமானது மெய் வாய் கண் - மூக்குச் செவி - முதலியவவையவங்களுடனேகூடிக் காரியப்பட்டிருக்கையினலேயதனை யுண்டாக்குகைக்குச் சரீரமில்லாதசிவனே கர்த்தனச்சரீரமில்லாதவனே தனுவாதிகளை யுண்டாக்கவேணுமென்னில் அச்சுபார்தட்டுக்கண்முதலியவவையவங்களைப் பொருந்தியிருக்கப்பட்டதேர்முதலியவற்றை யுண்டாக்கினவர்களுடையசரீரமுமவையவங்களுடன்கூடியிருக்கக்கண்டோமேயாதலாற் சரீரத்தையுடைத்தானவர்கள்தானே தனுவாதிகளையுண்டாக்குவர்களென்னிற்றேர்முதலியவற்றை யுண்டாக்குமந்த விசுவகன்மாவுக்குமதனையுண்டாக்குஞ் சாமர்த்தியத்தையுடையபேரறிவினையுமவனது விசிட்டகிரியைகளையு முண்டாக்கத்தக்க சரீரங்களையுண்டாக்குமதற்க சரீரியாகியசிவனேகர்த்தன். எ - று எனவே - நிமித்தகாரணன் - ஈசுவரனென்பதாயிற்று. (எ௰)

ஆசாரியனை மாணுக்கனுனவன் சங்கைபண்ணிவினவுமதனையுணர்த்துகின்றார்.

அமல னிறைசடச்செயல்களனைத்தினுக்குமெனிலணுக்கள் ※
சமலரவர்சபக்கத்திற்றலைவரெனச்சாற்றினையென் ※
விமலவவரதிபாலரொளிற்காட்சிவிருத்தமுமுண் ※
டெமலமறவிருந்தவனேபரிகாரமிவற்றியம்பாய் ※

எ - து ஆன்மாக்கள்செய்யுங் கிரியைகளெல்லாவற்றுக்கும்நின்மலனுகிய சிவனே கர்த்தனென்று நீர்சொல்விற்சபக்கத்திலிரதத்திட்டாந்தமிட்டுக் கூறியது, ஆன்மாக்கள்மலத்தான் மறைக்கப்பட்டவர்களாகையாலவர்களைக் கர்த்தரென்று கூறியதெப்படி யஃதன்றியவர்கள் விசேஷித்தமலத்துடனே கூடினவர்களாதலாலவர்கள் கர்த்தாக்களாகார்கள், என்னில் - இரதமுதலியவற்றைப்பண்ணும் அவர்களைப்பிரத்திக்ஷமாகக்காண்கையால் - எல்லாவற்றுக்குஞ்சிவனே கர்த்தனென்றுசொல்லுவது பிரத்திக்ஷவிருத்தமாதலாற்கூடாது, எம்முடையமலத்தைப்போக்குதற்குத்திருமேனிக்கொண்டு, எழுந்தருளியிருந்தவரேயிந்தச்சந்தேகந்தீரும்படிக்குவகைசொல்லுவீர். எ - று (எக)

அதற்குவிடைமேலான்மாக்கள்தனுவாதிகளைப்பண்ணமாட்டாரென்பதுவும்பரமசிவன்சுத்தாத்து

வாமுதலியவற்றைச்சிருட்டித்து அதிலிருக்கும்வி
ஞ்ஞானகலர்முதலாயினேரையுண்டாக்கியவர்க
ளாற்சிருட்டியாதிகிருத்தியங்களைப்பண்ணுவிப்ப
னென்பதுமுணர்த்துகின்றார்.

ஆக்கையுமாக்குதற் குவலரலரனுக்கடமக்கமலன் *
ஆக்கையுமாக்குவனவருட்சிலர்க்கவருட்சிலர்சிலருக் *
காக்கையுமாக்குவரவ்வருட்சிலர்சிலருக்கவருள்ளு *
மாக்கையும்பிந்தினரிரதமாதியுநின்மலனருளால் *

எ – து ஆன்மாக்கள்தமது சரீரமுதலியவற்றைத் தாமாகவுண்டாக்கமாட்டார்கள், அந்தப்பரமசிவன் சுத்தமாயையையதிட்டித்துக்கொண்டு அணுசதாசிவர், அட்டவித்தியேசுரர், சத்தகோடி மகாமந்திரங்களையுமுண்டாக்குவன், அந்தவிஞ்ஞானகலருள்பரமசிவன் அனந்தாதிகளையதிட்டித்துக்கொண்டு அசுத்தமாயையில்சிருட்டியாதி கிருத்தியங்களைப்பண்ணுவிப்பன், அனந்ததேவநாயனார்சீகண்டபரமேசுரனையதிட்டித்து அவராலேபிரகிருதியிலுண்டான சிருட்டியாதிகிருத்தியங்களைப்பண்ணுவிப்பர், அந்தச்சீகண்டபரமேசுரன் பிரமாவையதிட்டித்துபஞ்சபூதத்தின் தூலகாரியசிருட்டியைப்பண்ணுவித்து அதில்மிதுனசிருட்டியால்சகலவான்மாக்களையுமுண்டாக்கித் தச்சன்முதலாயினேரைக்கொண்டு தேர்முதலானவற்றைசெய்விப்பன் பரமசிவனருளினல். எ – று

மேலிதன்விதியை விரித்தறிபுமிடத்துமுதலே சுத்தமாயையாகிய முதற்காரணமானதினின்றும் பரமசிவன் அதிகாரகர்த்தர்களையுண்டாக்கியவர்களாலே இழிரண்டுமாயையில்சிருட்டிகளுமதிற்றோன்று மதிகாரகத்தாக்களை யுண்டாக்கப்படுமென்று மதிகாரகத்தாக்கள்பரம கத்தரல்லர். என்று மருளிச்செய்தற்கு விளங்கவருளிச்செய்கிறார், பரமசிவனந்தவதிகாரகத்தாக்களான தாங்கள்தானுந்தங்கள் சரீரங்கள்தன்னையும் தாங்களிருந்துசஞ்சரிக்கும்புவனங்கள் போகங்கள் அதற்குஆதாரமாகிய அண்டங்கள் அதற்காதாரமாகிய சாதாரணமாகியதத்துவங்களையுந்தாங்களாகவுண்டாக்கிக்கொள்ளுகைக்குவல்லரல்லர்கள்அந்தச்சுத்தமாயையிற்றோன்றப்பட்ட அதிகாரகத்தாக்களான அணுசதாசிவர்அட்டவித்தியேசுரர்சத்தகோடி மகாமந்திரேசுரரில் அதிகாரகிருத்தியம் வேண்டாமென்று வெறுத்தமுன்றரைக்கோடிபேர்நீங்கலான மூன்றரைக்கோடிமந்திரேசுரர்க்கு மவர்க்கேற்றதிருமேனிகளைப்பரமசிவனேயுண்டாக்குவன், அவர்களிற்பிரணவர்முதலாகியஅணுசதாசிவர்பத்துப்பேரும்பரமசிவனே தன்சன்னிதிமாத்திரத்திலேயுண்டாக்கப்பட்

டதிவ்வியாகமங்களை யதிகரித்துக்கொண்டு கீழுண்டான அனந்ததேவநாயனார்முதலானவெட்டுப்பேர்களுமதற்குக்கீழான மூன்றரைக்கோடிமந்திரேசுரமற்றுமுண்டானவிஞ்ஞானகேவலர்களுக்கும் அனுக்கிரககத்தாக்களாகவிருப்பர்கள், இனிமற்றுமுள்ள அட்டவித்தியேசுரர் மூன்றரைக்கோடிமந்திரேசுரரில் அனந்ததேவநாயனாரானமகேசுரரானவர் நின்மலனாகிய பரமசிவனனுக்கிரகத்தினாலேயசுத்தமாயையிலுண்டாக்கப்பட்ட அண்டபுவனபோகம் ஆன்மாக்கள் எல்லாவற்றுக்கும் ஆதாரமாகிய சாதாரணதத்துவங்களையு மணடல்கார்முதலிய பிரளையாகலராயுள்ளசருவான்மாக்களுக்கு மவரவர்க்கேதனித்தனியே தோன்றப்பட்ட அசாதாரணமாகியசூக்குமதேகங்களையுமுண்டாக்காநிற்பர், இனிமூன்றரைக்கோடிமந்திரேசுரர்களும்அந்தமாயையிலுண்டான தூலமானஅண்டங்கள்புவனங்கள் போகங்கள்பிரளையாகலராயுள்ளார் தூலசரீரங்களெல்லாவற்றையும் நின்மலனாகியபரமசிவனனுக்கிரகத்தினாலேயுண்டாக்காநிற்பர்கள், அவர்களாலே தோற்றுவிக்கப்பட்டபிரளையாகலருட் பரமசிவன் அனுக்கிரகத்தைப் பெற்றுள்ளாரான நூற்றொருபத்தெட்டு ருத்திரர்களில் சீகண்டபரமேசுவரரான உருத்திரமூர்த்திபிரம்மவிட்டுணுக்களுக்குமற்றுமுள்ளசகலருக்குந்தனுவாதிகளை யுண்டாக்கிப்பிரகிருதியிற்றோன்றப்பட்டசாதாரண அசாதாரணமாயுள்ளதத்துவங்கள், அண்டபுவனங்களையெல்லாமுண்டாக்காநிற்பர், சீகண்டராலேயுண்டாக்கப்பட்ட பிரம்மாவானவர்பிருதிவிமுதலாகாசமீறாகப்பவுதிகமாகிய பஞ்சபூதங்களிலுண்டாகியதூலபரிணாமமாகிய அண்டங்கள் புவனங்கள் சகலராயுள்ளாரானோர். தூலசரீரங்களெல்லாநின்மலனருளினாலே யுண்டாக்குவர் அந்தப்பிரமாவாலே யுண்டாக்கின பஞ்சபூதமட்டும்விட்டுணுவானவர் நின்மலனருளினாலே யிரக்ஷிப்பர், அப்படியவர் களாலேயுண்டாக்கப்பட்டாரில் தேவேந்திர பகவான் விசுவகன்மா நவக்கிரகாதியான அதிகாரகத்தாக்கள் நின்மலனருளினாலேதங்கள்தங்களுக்குக்கட்டளையிட்ட அதிகாரங்களைப்பண்ணி யிருப்பர்கள், அவர்களுள்ளும் பிந்தினரான புவலோகவிராசாக்களானமனுமுதலாகிய விராசாக்களும் விசுவகன்மாவி னங்கிசம்பற்றிவருஞ்சிற்பாசாரியர்முதலானவர்களுந்தேராதியவாகனங்கள்மூர்த்திகளான விக்கிரகபேதங்களையெல்லாம் நின்மலனருளினாலேயுண்டாக்கியும் போக்குவரவுகளைப்புரிவித்துச் செய்யாநிற்பர்களெனவறிக, இதனாற்சொல்லியது சரீரங்களான அதிகாரகத்தாக்களெல்லாம் அவனருளாலேஉபரகத்தாக்களாக இருப்பதொழிந்து பரமகத்தாவ

ல்லவென்றதாம். [எ௨]

இன்னுமவர்கள்பரமகர்த்தாவல்லர்என்பதனைவிள
ங்கவருளிச்செய்கிறார்

உற்பவத்துமுடலாதிபுண்மையினுமொடுக்கத்தும் ※
அற்பறிவின்றிரோதானமனுக்கிரகமெனுமிவற்றுந் ※
தற்பரனல்விளைவுளதாந்தலைவரலர்தமோவினைக்குஞ் ※
சிற்கனனாதியமலன்சிவன்சாதகன்றேசால் ※

எ-து ஆன்மாக்கள்சங்கரிப்புண்டுகிடந்தகாலந்தொலைந்து பரமசிவன்றனுகரணபுவனபோகங்களைத்தோற்றுவிக்குமவதரத்திலும் சங்கரிப்புண்டுகிடக்கிறகாலத்திலுந்திதிகாலந்தொலைந்து சருவசங்காரகாலமாகிற வந்தவைதரத்திலுந்திதிகாலந்தன்னிலுமாகஇந்தநாலுகாலத்தில்திதிகால நீங்கலானமூன்றுகாலத்துமலபரிபாகம் வந்தவான்மாக்களையெல்லாம் பரமசிவனே யனுக்கிரகம்பண்ணுவர், அந்தப்பேர்களிலதிகபக்குவராகிய சிலரைத்திருவடியிலே சேர்த்துக்கொள்ளுஞ்சிலரையதிகாரகத்தாக்களாக்கியவர்களைக் கொண்டு சுத்தமாயை நீங்கலானவிரண்டுமாயையிலுண்டாக்கப்பட்ட அதிகார கத்தாக்களுக்கெல்லாம் பரமசிவனாலேயனுக்கிரகப்பட்ட அனந்தாதிகளைக்கொண்டே அனுக்கிரகமுதலான வஞ்சுகிருத்தியங்களையும்பண்ணுவிக்கும் அந்தவேளையிலு மந்தப்பரமசிவனாலே மலக்ஷயம்பண்ணிக்கொண்டார்களொழிந்துதங்களாலேயனுக்கிரகாதி வினையையுண்டாக்கிக்கொள்ளமாட்டார்கள் அந்தவதிகாரகத்தாக்கள்தாங்கள் பரமகத்தாக்களல்லரினித்திதிகாலத்திலதிகாரகத்தாக்களல்லாதமற்றுண்டானசிவான்மாக்களாயுள்ளார்களில்மலபரிபாகம்வந்தவான்மாக்களுக்குமலமென்பது போக்கியுஞ்சிலஅறிவுடைத்தாயிருக்கிறவான்மாக்களைத்திரோதானசத்தியவர்களுடைய மலசத்தியைச் செலுத்தாமல்கைவிட்டுஅனுக்கிரகித்தவிடத்துங்குருமுதலானஅதிகாரகத்தாக்கள்மலக்ஷயம்பண்ணுவார்களென்றஅவ்விடத்துத்தொழிலுக்குஞ்ஞானசொரூபனுயனுதியேயின்மலனாய்ஞானத்தைச்சாதிக்கவல்லவனானசிவனுடையபராசத்தியவர்களிடத்திலேயிருந்துண்டாக்குமாதலாலவர்கள்பரமகத்தாவல்லரவர்களுக்கும்பரமசிவனனுக்கிரகத்தாலேஅபரகத்தாக்களாகவிருந்துகத்தத்துவம்பண்ணுவர்கள். எ-று (எ௩)

இன்னும்பரமகத்தாவேமாயாகாரியமானவையெல்லாவற்றுக்குங்கத்தனெ ன்றுமவனுடையசாமர்த்தியத்தையும்விளங்கமூன்றுஅனுமானப்பிரயோகங் களினாலுமேதுவாலுமிரண்டுசெய்யுளாலருளிச்செய்கிறார்

உண்மையினான்முதற்பக்கத்துறுத்லினாற்சபக்கத்தும் *
நண்ணுமுருநான்கிறையைஞாபகக்காரியம்பணுவா *
னண்ணுமுருவைந்தினையுமிருளிலிநான்குருவினைமெய் *
பண்ணினனுமவனறிவுமுடலிலியும்பலமாமே *

எ-து. முற்பக்கமாகியஇந்தமண்ணிலே கடாதிகள் தோன்றுதற்குயோக்கிய முண்டாயிருக்கை யுண்மையாகையாலது சடமாகையால் தானாகத்தோன்றமாட் டாதே, ஒருசேதனனானகுலாலனாலே அவையவியவையவங்களாகத்தோன்றப்பட் டதுகாண்கையினாலேசபக்கமென்ற மேலானமாயைகளிலுந்தனுகரணாதிகள்நாலு ந்தோன்றுகைக்கு யோக்கியமுண்டாயிருக்கவு மதுகளைத்தோற்றுவிக்கைக்குஅந்த மாயைகள் செடமாகையாலவற்றைத்தோற்று விக்கமாட்டாதாகையா லந்தத்தனு கரணாதிகளை யவையவியவையவம் பொருந்தக் காரியபபடுத்தி த்தோற்றுவித்தா னொருகத்தாவுண்டென்றறியப் படுங் குலாலனைப்பொல வின்னுமவனுடையசத்தி சாமர்த்தியத்தையு மறிவின்பெருமையையு மறிவிப்போனாகச்சிவனுடையவிக்கிரக மென்றுசொல்லப்பட்டவுருவம் நாலுமுபயமொன்றுமாகியவஞ்சு விக்கிரகங்களை யுமிருளற்றஞானசொரூபமாகியிருக்கப்பட்டசிவஞ்-சத்தி-நாதம்-விந்து - என்னும ருவமாகிய விக்கிரகங்கள் நாலையும், ஆக. ஒன்பதுவிக்கிரகங்களையுங் காரிய ரூபமாகப்பண்ணினானுமந்தச் சரீரியல்லாத பரமசிவனேயெனவறிக, அப்படியா கில்சரீரமில்லாதபரமசிவனே யெல்லாவற்றையுஞ்செய்வானாகிற்சரீரிகளான அதி காரகத்தாக்களிருக்கவேண்டு வானேன் அவர்களாற் பயனில்லையேயென்னில் உ டலிலியுமென்றவும்மையாற் சரீரமில்லாத பரமகத்தாவாலுமவனனுக்கிரகத்தைக் கொண்டசரீரமுள்ள அதிகாரகத்தாக்களாலும் விசுவம்பலம்படும். எ-று

இந்தநூலில் வாராதபொருள்களெல்லாம் விரித்துக்கூறியது மற்றும்விரிந்ததமி

சய

ழ்ச்சாத்திரங்களிலுமாகமங்களிலுங் கண்டுவிரித்துக்கூறியதெனக்கொள்க, சித்தியார்சுபக்ஷத்தில் வித்தைகள்வித்தை யீசர்சதாசிவனொன்றிவர்க்கு, வைத்துறும்பதங்கள்வன்னம்புவனங்கண் மந்திரங்க டத்துவஞ் சரீரம்போகங் கரணங்கடாமெலாமு, முய்த்திடும்வயிந்தவந்தானுபாதானமாகிநின்றே. எனவும்-பரபக்ஷத்திற்புத்தன்மாத்திரமிகன்மதத்தில். அவையவம்பொருளாய்த்தோன்றும்அவையவமழிந்தாற்பின்னை, யிவை பொருளென்ன வேறொன்றிலாமையாற் பொருள்களின்றாம், அவைபொருளிலாமையாலே யறிவு மின்றாகுமென்று, நவைதருமொழியினாலேகளிலுமாத்திரமிகன்றானே- எனவும். கருவிதனித்தனியேகாணுமுயிர்கட்கெல்லாம்புரமுடைலார்தங்கும்பொழுது- எனப்படி- பசுபாசவியலில்திருவுளம்பற்றியதுங்கண்டுகொள்க, இன்னுங்காட்டின்விரியும். (௰௪)

ஆயாமமறைபொழுதிலறைந்தவனுபாடணத்தாற் *
றேயாருமனுமானவிதமூன்றினுறத்தெருளத் *
தாயானையனைத்துயிர்க்குந்தற்பரனைச்சிற்கனனை *
நேயாருநெஞ்சினர்க்குநிறையுறவேயிகழ்த்தினமே *

எ-து. பிராணாயாமவிதிசொல்லுகையிலேபிரசங்காப் பிரசங்கமாகிய அனுபாடணமானது சொல்லத்தக்க சத்திபொருந்துகையாலே விளக்கம்பொருந்தின அனுமானவிதமூன்றினாலும்பொருந்தியறியச் சருவான்மாக்களுக்கு மாதாவாகவிருக்கப்பட்ட மேலான பரமசிவனை ஞானசொரூபனை நேசம்பொருந்தின புத்தியையுடையவர்களுக்கு ஏற்றக்குறைவு வாராமனிறை பொருந்தவே சொல்லாநின்றோம். எ-று. [௰௫]

பிராணாயாமஞ்செய்தற்குமாத்திரையுத்தமாதிபே
தத்தால்மூவிதமென்றுணர்த்துகின்றார்.

வேறு

கைத்தலத்தாலேசானுப்புரிவலங்கணிக்கனிமொட் *
டத்தொகையனைத்துமொன்றேயாருமாத்திரையாயாமத் *
துத்தமநாற்பத்தெட்டாமொருபதுமிரண்டுநீச *
மத்திமமெண்மூன்றுங்கைநொடியுமாத்திரைமாட்டார்க்கே *

எ-து. இடதுகையினாலே யிடதுமுழந்தாளைப்பதினறுதரஞ் சுற்றியெண்

ணில் ஒருமாத்திரையெனப்பெறும், அந்தமாத்திரைகொண்டு நாற்பத்தெட்டுப்பண்ணுவது உத்தமப்பிராணாயாமம், இருபத்துநாலுபண்ணுவது மத்திமம், பன்னிரண்டுபண்ணுவது கனிட்டம், இவ்வாறுசெய்யமாட்டாதார் முற்கூறியவெண்ணிக்கையிலேகைநொடிமாத்திரையாலுத்தமமாதிபேதத்தாற்செய்க. எ-று (௭௬)

குசைநுனித்தீர்த்தபானத்தாலுண்டாயவிசிட்டமும்பிராணாயாமவிசேடமுமுணர்த்துகின்றார்.

குசைநுனிநீரைநாளுநுங்குடித்திடவிடைவிடாதே ✻
தசதசவருடங்கூடத்தங்கியபலத்தைச்சார்வார் ✻
இசைவுடன்பிராணாயாமமியற்றினொருகால்விண்ணில் ✻
அசைவறவிருக்கயாகமனைத்தையுமியற்றினாரே ✻

எ-து யாதாமொருவரனுட்டானஞ்செய்தமுடிவிலே யொருமாதநாடோறுங்குசைநுனியின்விழுகிற செலத்தைவலதுகையினாலேபானம்பண்ணினவர் நூறுவருஷம்பிராணாயாமம்பண்ணினபலத்தைப்பொருந்துவர், சொன்னபடியே பிராணாயாமம்பண்ணினபலத்தை யாதொருவரொருக்காற்பண்ணிலவர்கள் துபசயாகந் தானம் விரதஞ் சிவதீர்த்தம் இவைகளாலுண்டாகும்பலங்களையும் பெற்றுச்சுவர்க்கத்திற்பொருந்தியிருப்பர்கள். எ-று (௭௭)

பிரத்தியாகாரத்தையுமதனாற்பெறும்பலத்தையுமுணர்த்துகின்றார்.

மனத்தையுமிந்திரியங்களின்வழிமறித்துள்ளேயடக்கிவைத்துப் ✻
பினைச்சலியாமைசெய்கைபிரத்தியாகாரம்வேதத் ✻
தனைத்துளயாகபேதமனைத்தையுமியற்றினோர்கள் ✻
மனத்தையுமறித்தமைந்தரவர்சிவபுரத்துள்வாழ்வார் ✻

எ-து மனதுமிந்திரியங்களும் போகங்களைப்புசிக்கவந்தவிடத்துமிருந்தபசிவந்தவிடத்துமதனிடத்துச்செலுத்தாமலாமையானதெப்படித்தனதங்கங்களையுள்ளேயடக்கிக்கொள்ளுமதுபோலத்தானுஞ்சலியாமல்மனத்தைநிறுத்துவது பிரத்தியாகாரம், யாதாமொருவரிதனைநாடோறும்மியற்றுகிறாரவர் வேதத்திலே கூறுகிறயாகபலமெத்தனையுண்டத்தனையுஞ் செய்தார்கள். அடைந்தபலத்தைச்சிவலோகத்திலிருந்துபுசிப்பர்கள் எ-று (௭௮)

தாரணையுமதனாற்பெறும்பலமுமுணர்த்துகின்றார்.

நசையுடனிதையப்போதினட்டியபொருளிற்சித்த ✻
மசைவறநிறுத்தருனேதாரணமதனைச்செய்தார் ✻
கசிவுறுமூவேழ்சுற்றங்கடுநரகதனின்மீட்டு ✻
மிசையுறுசிவலோகத்துளிருப்பரோவிருப்பமிக்கே ✻

எ - து ஆசையுடனே மூலாதாரமுதலியதானங்களிலங்கங்கேபார்க்கக்கடவியபொருள்களைக்குறித்துமேலேமேலேபோய்த்தான் வேண்டியபொருளில் நிறுத்துதல் தாரணையெனப்பெறும், இப்படியாதாமொருவர் நாடோறுமிதனைச்செயினிரங்குகின்றதனது குலத்திலிருபத்தொருதலைமுறைமையுள்ளாராகியவெவ்விய நரகத்தின்கட்கிடந்தாரையெடுத்து மேலாகியசிவலோகத்தின்கணுண்டான போகங்களைமிகுந்த வாசையுடன்பொசித்துஅவர்களுடனிருப்பர். எ - று (௭௯)

தியானஞ்செய்யுமுறைமையும்பலமுமுணர்த்துகின்றார்

ஆற்றிடைப்புனறானெற்றேயவிச்சினமாகவோடன் ✻
மாற்றறவற்றேயீசன்மலர்ப்பதத்தறிவைவைத்துக் ✻
தேற்றுறநிற்கைதானேதியானமித்தியானஞ்செய்தார் ✻
மாற்றியேநரகிற்சுற்றமவர்களைப்போலவாழ்வார் ✻

எ - து ஆற்றின்கணிடைவிடாமற்செல்மானதெப்படியோடுகிறதப்படியேதான் கருதினபொருளையிடைவிடாமற் றியானஞ்செய்திருத்தலே தியானயோகம், இந்தத்தியானயோகத்தையாதொருவர்செய்யின்அவருடையசுற்றத்தாரெல்லாரையும் நரகத்தின்கண்ணெடுத்துச் சிவலோகத்திருத்தித்தனதுதேகத்தைவிட்ட வரைப் போன்றிருப்பர் எ - று [௮௰]

இனிமந்திரஞ்செபிக்குமுறையுணர்த்துகின்றார்

மானதமந்தமற்றைப்பாடிதவசனமென்றுந் ✻
தானொருமூன்றாஞ்சாற்றுமந்திரந்தகைமைசார்ந்த ✻
மானதமனத்தினாலேமந்திரிப்பதுவேவாய்க்க ✻
வேனையமந்தஞ்சற்றேபிதமுறப்பியம்பறானே ✻

எ - து வெளி. பாடிதம் - எ - து சொல்லல் (௮௧)

இதுவுமது

அருகிருந்தவர்தாங்கேட்கவுறைதல்பாடணமேயாதி ※
திருவுருக்கருதிச்செப்பிற்சிறப்புடைத்தெல்லாந்தூல ※
வுரைதனிற்சிறப்பேமந்தவுரையதுதன்னிற்சாலப் ※
பெருமையையுடைத்தேநெஞ்சிற்பேசிடாப்பேச்சுத்தானே ※

எ - து வெளி ஆதிதிருவுருக்கருதிச்செப்பவென்பதனை முற்றுங் கூட்டுக (அஉ)

மந்திரங்களையுச்சரிக்குமிடத்துஉச்சாரணபேதமு ணர்த்துகின்றார்

உற்றிடுமுயிரோவ்வொன்றேயுயர்ந்துயர்ந்தொருமூன்றாகு ※
மற்றையவுன்னதாதிகூடலுமொன்பான்வாய்க்கும் ※
பற்றிடநாசிநீங்கப்பத்துடனெட்டாமீரா ※
றுற்றிடுமுயிருமோர்ந்துச்சரிக்கவேபலிக்குமோதில் ※

எ - து அகாராதியாயிருக்கிற உயிரெழுத்துத்தனித்தனி யுச்சரிக்குமிடத்து ஒவ்வொன்று மும்மூன்று பேதப்படும், அஃதாவது உயரவுச்சரிக்கிறது உதாத்தமென்றுந், தாழவுச்சரிக்கிறது அனுதாத்தமென்றுஞ், சமமாயுச்சரிக்கிறது சொரிதமென்று, மிப்படிமூவிதமாம். இந்த மூவிதமும் ஒவ்வொன்று மும்மூன்றாக ஒன்பது பேதமாம், அஃதாவது ஒருமாத்திரைகொண்டது இலகுவென்றும், இரண்டு மாத்திரை கொண்டதுகுருவென்று,மூன்று மாத்திரைகொண்டது புலுதமென்றும் இப்படி யுதாத்தமூன்று மனுதாத்தமூன்றுஞ் சொரிதமூன்றுமாக ஒன்பதாம்,இந்த வொன்பதையும் நாசியைக்கூட்டி யுச்சரிக்குமிடத்து சானு நாசிகமெனப்பெயர் பெறும், நாசி கைகூடாமலுச்சரிக்கும்போது நிரனுநாசிகமெனப்பேர்பெற்றிப்படிப்பதினெட்டுப்பேதமாம்அகரமுதலிய வுயிரெழுத்துப் பதினாறுள் அலியெழுத்து நாலு நீக்கி நின்றபன்னிரண்டுயிரெழுத்துஞ் செபகாலத்திலே யந்தந்த மந்திரத்துப்பிரயோகத்துக்கீடாகவறிந்துச் சரிக்கில் மந்திர சித்திவரும். எ று [அங]

இப்படிமந்திரத்தின் விதியறிந்துச்சரிக்குமவர்களது மகிமையையுணர்த்துகின்றார்

அந்தரத்தியங்கவல்லவசுரருமணுகமாட்டார் ✻
சிந்தியசித்தக்கொத்தைப்பேய்களுந்தீண்டமாட்டா ✻
செந்தழலென்னவஞ்சித்தீயவாயரவுந்தீண்டா ✻
மந்திரநவிற்றுவாரைமறலியுமஞ்சுமன்றே ✻

எ - து முற்கூறிய விதியையறிந்துமந்திரமுச் சரிக்குமவர்களை யாகாசத்திலேசஞ்சரிக்குமிராக்ஷதர்களுங் கிட்டமாட்டார்கள், நாலுவிதமாகிய சித்தத்தையுடையவறிவில்லாதபேய்களுந்திண்டமாட்டா, பொல்லாதவிடம் பொருந்தியவாயினையுடையபாம்புகளுஞ்சிவந்த அக்கினியெனப்பயந்து தீண்டமாட்டா, இஃதன்றியெல்லாரையும் வாதைபண்ணுமியமராசனுமணுகமாட்டான் பயப்படுவன். எ - று (௮௪)

இதுவுமது.

வினைகளுமஞ்சும்வெய்யவினைஞருமஞ்சுவார்க ✻
ணினைவினிவிட்டமெல்லாமவர்க்கொருகணத்தினேருந் ✻
துனையவேசுழன்றுபோகுந்துட்டசார்த்தூலமற்று ✻
மனிதருணல்லாரேயோவமரரும்வாஞ்சிப்பாரே ✻

எ - து வெளி - துனைவு - விரைவு - சார்த்தூலம் - புலி [௮௫]

சகற்பசெபஞ்செய்யுமவர்கள்பெறும்பயனுணர்த்துகின்றார்.

பரமனையொருமைகூரப்பாவனைபண்ணியுள்ளே ✻
யுரைதனிலதிகநானமொழியவேவிதியினோதிப் ✻
பரவிடும்பத்தர்முன்னைப்பாவமும்பறிப்பன்வேண்டும் ✻
வரமெலாங்கொடுப்பன்வள்ளன்முத்தியுமவர்க்கேவாய்க்கும் ✻

எ - து மேலானசிவனை மிகுந்தவொருமைப்பாட்டுடனே மனதின்கட்டியானம்பண்ணியம்மந்திரத்தையேற்றக்குறைவின்றியேவிதிப்படியுச்சரித்துத்தோத்திரம்பண்ணும்பத்தர்களது முற்சென்னத்திலார்ச்சித்தபாவத்தையுந்தீர்ப்பன், அவர்கள்வேண்டும்வரத்தினையுமிம்மையிற்கொடுப்பன், மோக்ஷமுமவர்களுக்கேசித்தியாம். எ - று முன்னைப்பாவமுமென்றவும்மை எதிரதுதழீஇயவெச்சம் பத்தர்கள்வேண்டும் வரங்களைக்கொடுத்தலால் வள்ளலெனச்சிறப்பித்தார். வள்ளல் எ- து எழுவாய், கொடுப்பன் எ - து பயனிலை (௮௬)

சமாதியினிலக்கணங்கூறுகின்றார்.

பொருளெனுமாத்திரத்தாய்ப்புலனிறந்திரவிகண்ணுக் ※
கிருளறுத்திலங்கலென்னவெண்ணகத்திலங்கியெங்குந் ※
திரையறவுததியெல்லாந்தேங்கல்போல்விம்மிச்சித்தங் ※
கருதுருவல்லாமூலங்கண்டிரண்டறல்சமாதி ※

எ - து உண்மைப்பொருண்மாத்திரத்தாய்க் கருவிகரணாதிகளுடன் கூடா மலாதித்தியப்பிரகாசங்கண்ணினிடத்திருளைப்போக்கிப்பிரகாசித்தல்போலவிவன் கருதப்பட்டநினைவுள்ளேபிரகாசித்து ஆரவாரிக்கும் அலைகளறச்சமுத்திரமெல் லாவிடங்களினுநிறைதல்போல நிறைந்துபொலிந்துசித்தத்தாற் கருதமுருவமல் லாதவெல்லாவற்றுக்குங்காரணமானசிவத்தைத்தெரிசித்திரண்டற்றிருப்பதே சமாதி எ - று (அஎ)

சமாதிசித்தியாதார்க்குபாயமுணர்த்துகின்றார்

இடையினுமியங்கிடாதேபிங்கலைதனினும்வாயு ※
நடுமுனைநாடிதன்னினடக்குமேற்சமாதிவாய்க்குந் ※
திடமுடைச்சிலையேயென்னச்சித்திரமெனவிருப்பர் ※
விடையமுமுணரரந்தக்கரணமும்வேறுபட்டே ※

எ- து யாதாமொருவர்சமாதியைப்புரியுமிடத்து ப்பிராணவாயுவானதுஇடை யினும்பிங்கலையினுமோடாமற் சுழிமுனைநாடியின்க ணடக்குமிடத்து விடையத்தி ன்கட்சித்தத்தையையாமலந்தக் கரணங்களும் பசுகரணத்தைப் பொருந்தாமற்சி வகரணங்களாய்க்கடினத்தையுடைய கல்லெனவுஞ்சித்திரமெனவுமிருந்து சமாதி புரிவராயின் அவர்களுக்கேயச்சமாதி சித்தியாம். எ- று. [அஅ]

சமாதியடைந்தோர்நன்மையுணர்த்துகின்றார்

அட்டமாசித்தியென்றவணிமாதியவர்க்கேயாகு ※
மிட்டமாஞ்சந்தோபேதமியற்றவும்வல்லரொன்னின் ※
முட்டறவேதமாதிமொழியவும்வல்லர்நல்ல ※
துட்டியாற்சமாதிதன்னிற்றாங்கிய தூயோர்தாமே ※

எ- து. நல்லசந்தோஷமாகியசமாதியைப்பொருந்திய மகாத்மாக்களானோரிட்

டமாயிருக்கிற உத்தைமுதலிய சந்தசுவிருபத்தாறு பேதங்களையுஞ் சொல்லவல்லராவர்கள், அஃதன்றிவிசாரிக்குமிடத்து வேதாகம புராணங்க ளனைத்தையு முடிவுபோகவோதவும் வல்லராவர்கள், அவர்களுக்கேஅணிமாமுதலியவட்டமாசித்தியும்வந்துகைகூடும். எ- று.

புத்திகாரியமாதலாற்றுட்டியெனச்சிறப்பித்தார் (அகூ)

முன்னர்த்தொகுத்துப் போந்த அட்டமாசித்தியினது விலக்கணமீதென்றுணர்த்துகின்றார்

வேறு

அணுவினுநுண்ணுருவுகொள லணிமாவாழளற்றி னதிவேகத்தியங்கியுந்தோய்வற்றவுடலகிமாத், திணியபெருவரையெனமெய்ச் சிறப்புறுகைமகிமாச்சிந்தித்தபலமெவையுஞ்செறிந்துறுகைபிராத்தி, பிணைவிழியாராயிரவரொடும்புணர்ச்சிபெறுகைபிராகாமியீசிதைமாவலியுமடி பேணன், மணமலர்போலெவராலும்வாஞ்சிக்கப்படுகைவசிவசிதைவலியாராற்றடுப்பரியவாழ்வே

எ- து. அணிமாவென்னுஞ்சித்தியாவதுபரமாவணுவைப்பற்ற அதிசூக்குமவடிவையெடுப்பது, லகிமாவாவதுமகத்தாகிய வேகத்துடனே சேற்றுக்குள்ளேயமுந்தியிருந்தும்பின்ளைபூச்சியைப்போற் சேறுபடாமலெழுந்திருப்பது, மகிமாவாவதுகடினமானபெரியமலைபோலவடிவையெடுத்தல், பிராத்தியாவதுதான்யாதொருருபங்களைக்கொள்ளவேணுமென்றுமனதிலேநினைத்தாலந்தந்தரூபங்களுமாயந்தந்தப்போகத்தைப்பொசித்திருத்தல், பிராகாமியமாவது, மாயனேககாலத்திலெப்படிபதினாறுயிரங்கோபாலத்திரிகளைக் கூடியவர்க்கவராயிருந்தாரதுபோல ஆயிரந்திரிகளையேககாலத்திலே கூடியிருந்தனுபவித்தல், ஈசத்துவமாவது, சகலதேவர்களையுந்தன்னுக்கினை யானடப்பித்துக்கொள்ளுமது, வசித்துவமாவது, தன்னையாவராலுமணததையுடையபுட்பமானதெப்படி வாஞ்சிக்கப்படுவது அப்படிப்போற்சகலலோகங்களையுந் தன்வசமாக்குவது, வசிதையாவதுஇவனுடையபெலத்தைமிகுந்தபெலவான்களாலுந்தடுக்கப்படாமலிருத்தல். எ - று (கூ௰)

சமாதியையடைந்தவர்சிறப்பும்பெறும்பயனுமுணர்த்துகின்றார்.

வேறு

அடைந்திடுஞ்சமாதியாளர்க்கமரருஞ்சிறப்புசெய்வார் *
திடம்படுசித்தத்தாலேயவற்றினைத்தீண்டாதார்க்கு *
நடம்பயிறுதன்வேண்டும்வரத்தினைநல்கியென்று *
முடன்பிரியாதபேறுமுதவுவன்கருணையுற்றே *

எ - து சமாதியையடைந்தவர்களுக்குத்தேவர்களுஞ்சிறப்பைச்செய்வார்கள், திடமானசித்தத்தினாலந்த அட்டமாசித்தியை யபேட்சியாதபேர்களுக்கு நடனஞ்செய்யுஞ்சிவபெருமான் கருணைபொருந்தி விரும்பியவரங்களைக் கொடுத்தேக்காலமுந்தன்னிடத்தினின்று நீங்காதமுத்தியையுங்கொடுப்பன். எ - று இதற்குத்தேவிகாலோத்தரத்தில் ✠ அட்டமாசித் திமுதலென்னுங் கவியாற் காண்க. (௧௧)

பிராணாயாமமுதலியவற்றையுத்தரோத்தரவிசிட்ட
முணர்த்துகின்றார்,

அதிகமாயாமந்தன்னிலறுவரையடக்குமாற்றால் *
அதிகமேயதனிலுக்கைமனத்தினையகன்பாதத் *
ததிகமேயதனிற்சித்தத்தவிச்சினத்தியானமம்ம *
வதிகமேயதனினுள்ளத்தரனைவைத்தறையும்வாக்கே *

எ-து காமக்குரோதாதிகளின்வழிச்செல்லாமனிறுத்துமதனைப்பற்றப் பிராணாயாமமதிகம்அந்தப்பிராணாயாமம்பன்னிரண்டுகொண்டதுஒருதாரணை அந்தத்தாரணைபத்துக்கொண்டதுகாலமிடைவிடாமற்சிவத்தியானஞ்செய்வது-அதனைப்பற்றவும்பன்னிரண்டுகொண்டது சமாதியென்று இப்படிக்காலவரையறுத்து வேதாகமங்கள் சொல்லுமிதனைக்கேட்பாயாக. எ -று அம்ம - எ - து வுரையசை (௧௨)

---

தேவிகாலோத்தரம் - நிசம் - கவி

✠ அட்டமாசித்திமுதலனைத்துள்ளபேறுகளுங் ○
கட்டமாங்கதிகடரும்பரகதிகாணக்கொடா ○
மட்டிலாமாலையாய்வியாபகமாயறிவாகிக் ○
கிட்டலாகாமுத்திமற்றிவற்றாற்கிடையாதே ○

செபத்தியானமுமிவற்றாற்பெறும்பலமுமொன்றுக்
கொன்றதிகமென்றுணர்த்துகின்றார்.

வாக்கினுமதிகமூலவாக்கினுமனத்திறைவு ※
நோக்கரும்பொருளொத்தன்றுநேறுக்கமநோக்கரிட்டை ※
நோக்கிடிற்பலங்கடானுநுவன்றவிம்முறையானேன்மை ※
யாக்குவனவற்றையெல்லாமன்பருக்கருளிமூத்தன் ※

எ - து மூலவாக்காகியவைகரிவாக்காயுச்சரிக்குமதனைப் பற்றமந்தவொலி யாய்மந்திரத்தையுச்சரிப்பது விசிட்டம்-அதனினுமானதசெபம்விசிட்டம் அதனினு ம்வன்னரூபங்களுடன் மூர்த்தியை மனத்தாற்தியானிக்கலதிகம்,அந்தத்தியானத் தைப் பற்றவதற்குமேலாகிய சமாதியைப்பாராதேபார்க்குமது விசிட்டமூற்கூறி யசெபமுதலாயின பலன்களையடியார்க்கு அருளிமூத்தருகியசிவன். கிரமத்திறை லேயறிந்து அதற்கதற்கேற்றபலன்களைக்கொடாநிற்பன். எ - று
ஈண்டுமூலவாக்கென்றது ※ வைகரிவாக்கெனவறிக. (கூக)

இதன்மேற்சிவயோகத்தானிட்டையடைந்தார் பெ
றும்பலமுணர்த்துகின்றார்.

வேறு

சிலரோணயோகர்திடமாகமேனிசிவலோகராகமெனவே ※
பலகாலம்வாழ்வர்படிநீதியாள்வர்பசுபாசநாசமுறவே ※
நிலனீறுமாயவருகாலமேயநிகழ்வாயகாயமறவே ※
மலமாசுமாயவமலேசர்பாதமலர்சூடிவாழ்வர்மகிழ்வால் ※

எ - து சிவயோகத்தானிட்டை யடைந்தஞானயோகர் ,சிலர்சிவலோகத்திலே சிவனுடைய சகளமானதிருமேனிபோலச் சித்திபெற்றப்பலகாலம் வாழ்ந்துலக மெல்லாநீதிமுறைமையுடையாராயச் சார்பைபற்றிவரும் பசுபாசங்களுசத்தைப் பொருந்தச்சஞ்சரித்திருந்து சருவசங்காரகாலத்தின்மலக்குற்ற நீங்கவும்மிகமு

---

※ வைகரிவாக்கானது, உதானவாயுவைக்கூடின பிராணவாயுத்தன்றோடு கூடிவந்தவுசனருக்குமைமுதலாயுள்ளவாக்குக்களைச்செவியின் பகுதியிலேகேட் கநினைந்தபொருள்களையறிவியாநிற்கும், இதுதனைச்சும்பிறர்க்குக்கேட்க வுச்சத் தல்.

ஞ்சரீரமாறவும் பரமசிவன்பாதமலரை நிரதிசயானந்தத்துடன்பொருந்திவாழ்வர். எ-று [௩௪]

இனியிப்படிப்பட்டசிவயோகிகளைவழிபட்டவடி
யார்பெறும்பயனுணர்த்துகின்றார்.

அறுமாசைகோபமவைநாசமாகவறுமேறுபாவமறலு *
மறவேசெய்பாவமறணுகமாயுமதுமாயமாயையகலு *
மறமாயைதானுமகமாயைநீருமதுநீரமூலமலமு *
மறமூலநோயுமமலேசர்பாதமடைவார்கள்யோகரடியார் *

எ-து முன்சொல்லப்பட்ட ஞானயோகிகள் அடியாரானவர்கள் ஞானவான்களுக்குத்திருவுளத்துக்குவரவே பணிவிடைசெய்கையாற் பரமசிவன் அவர்களுக்குக்காமக்குரோதலோபமோகமதமாச்சரியமாகிய வறுவகைப்பொல்லாப்புமடாதபடிநீக்கிவிடும், விடவேஆகாமியங்கள்வந்தேறாது- ஆகாமியமேறாதேபோய்விடவேஅந்தஞானிகள் தருமருளுக்காலே யனுதியேசெய்த வளவற்றசஞ்சித கன்மங்களுங்கெடும். கெட்டுப்போகவேசரீரமுமாய்ந்துபோமந்தச் சரீரமெடாமற்கன்மமுமாயாகாரியமானசரீரமுங் கெட்டுப்போம் போகவேயசுத்தமாயையுமகலும் அசுத்தமாயையகலவே சுத்தமாயைக்குள்ளீடாக அசுத்தமாயாகாரியங்களைச் செலுத்தாநிற்குஞ் சூக்குமைமுதலான வாக்குகளடங்கும். அடங்கவேசுத்தமாயையடங்கும்அந்தச்சுத்தமாயையுந்தீரவே மூலமலமுமற்றுப்போம். அந்தமூலமலமாகியநோயுமற்றுவிடவே நின்மலனாகியபரமசிவன் பாதத்தை யடைவார்கள். எ-று (௩௫)

இனிச்சிவன்சிவசத்திப்பிரசங்கம்வந்ததோடே யான்மா வான்மசத்திப்பிரசங்கமுணர்த்துகின்றார்

வேறு

சிவன்றனக்கவளியந்தஞ்செகமந்நிதாலதேகம் *
அவனுடற்றாலமாறாறாருயிர்வர்க்கஞ்சூக்கம் *
பவன்றனக்குயிர்க்குமப்பாற்பராபரைபரமசூக்கம் *
அவன்சிவன்பரமசத்திதனையனுபவிப்பனார்ந்தே *

எ-து பரமசிவனுக்குநாததத்துவமுதலாகப் பிருதிவி தத்துவமந்தமாகமுப்பத்தாறுதத்துவங்களினுண்டாகிய வளவிறந்தவண்டங்களும் புவனங்களுமளவற்ற

வான்மாக்களுடைய தூலதேகங்களுமிவையெல்லா மதிதூலதேகமாயிருக்கும் அந்தச்சிவனுக்குத் தூலதேகமாவதுமுப்பத்தாறுதத்துவங்களுமாயிருக்கும் அளவற்றவான்மசொரூபங்களெல்லா மந்தச்சிவனுக்குச் சூக்குமதேகமாயிருக்கும்- அந்தவான்மசொரூபங்களுக்கு மேற்பட்டிருக்கப்பட்ட மேலான பரமசத்தியானதுஆன்மாக்கள்சொரூபந்தன்னிலு நுண்ணிதாய்ப்பரமசூக்குமமாயிருக்கும்- அந்தச்சிவன்றன்னுடையபராசத்தியுடைய பேரின்பத்தை யனுபவித்துக்கொண்டிருப்பன் எ- று. (௧௬)

இதுவுமது

பாரியைப்பரர்கண்பார்வைப்படாப்பதிவிரதைதன்னை *
யாரியமுணர்ந்தகாந்தனவடனைத்திளைப்பனூர்ந்தே *
பாரியைப்பரர்கண்பார்வைப்படாப்பராசத்திதன்னை *
யாரியனநுதிமுத்தனவடனைத்திளைப்பனூர்ந்தே *

எ - து ஆன்மசத்தியாகிய அந்தந்தவான்மாவுக்கே வுரித்தாய்ப் பிறரிடத்துச்செல்லாது பதிவிரதையாகவேயிருக்கப்பட்ட சத்திதன்னை, வடமொழியாகியவாகமங்களை நன்றாயாராய்ந்து ஞானியான புருஷனானவன் மலத்திரையங்களுநீங்கிச்சாயுச்சியத்தைப்பெற்றபோது பொருந்திக்களங்கமற்ற வின்பத்தையனுபவியாநிற்பன், இனி பநுதிமுத்தனுகவிருக்கப்பட்ட பரமசிவனுந்தன்னைவிட்டு நீங்காதிருக்கப்பட்ட பராசத்திபேரின்பத்தைப் பொருந்தியனுபவியாநிற்பன் எ - று [௧௭]

ஆன்மாவானவன்மலநீங்கிநூற்றற்சொரூபந்தானே
யின்பமாமெனத் தன்னைத்தானி ச்சித்தாவின்பமுண்டாகாதுஆன்மசத்தியின்பமே யாமென்றுவமை
முகத்தாலருளிச்செய்கிறார்

மண்டலத்தவருமற்றையவர்களும்வாஞ்சைசெய்தே *
யொண்டொடியாளைப்பின்பமுறுவரோயவர்தோளொன்றிக் *
கண்டிலந்தம்மைத்தாமேகாமுறல்களிப்பார்தங்கள் *
எண்டனக்கெட்டாவிச்சித்திறைவியைத்திளைக்குமென்றும் *

எ - து தெசத்திலுள்ளவர்களுமற்றத்தேவர்கள் முதலோருமாசைப்பட்டுப் பெண்ணைப்புணர்ந்தே யின்பமுறுவர்கள், அப்படியின்றித் தன்னைத் தானிச்சித்தின்

யம்பொருந்தினவர்களாகக்காணேம், அதுபோல ஆன்மாக்களானவர்களறிவுகளு க்கெட்டாத பரமசிவன் தனதுபராசத்தியின்பத்தையனுபவிப்பன், ஆதலாலான்மா க்களுடைய சத்திமலத்தை நீங்கினசாயுச்சி யத்திலேயான்மாவானவன் றன்ச த்தியின்பத்தையனுபவிப்பன் எ று (௧௮)

சிவனுஞ்சத்தியுமான்மாக்களுக்கு மாதா பிதாவெ
ன்பதனைபுணர்த்துகின்றார்

அணுக்களையவர்க்குமைந்தரன்னையுமத்தன்று னு ※
மணுக்களுக்கார்வங்கூர்ந்தேயணுக்கடன்சத்தியோடே ※
யணுக்களைப்புணர்ப்பர்சத்திப்பருவமுமறிந்துதாமே ※
யணுக்கடஞ்சத்திதன்னைத்திளைப்பரஞ்சனமுமற்றே ※

எ - து ஆன்மாக்களையச்சிவபெருமானார்க்குமைந்தர்கள், அவர்கட்குமா தாவும்பிதாவுமாகிய சிவபெருமானாரும் அவ்வான்மாக்களிடத்துவிருப்பமிகுந்தவ் வான்மாக்களது சத்தியுடனே அவ்வான்மாக்களைச் சத்தியினது பருவங்களையுமறி ந்துதாமேபுணருதலைச்செய்வர், அதனால் அவ்வான்மாக்கள் தங்கள் சத்தியைமல நீங்கியனுபவிப்பர்கள் எ று [௧௯]

இச்சிறப்பினையுடைய சிவதெரிசனப்பட்டவர்கள்
முறைமையைபுணர்த்துகின்றார்

அநாதியேயமலன்றன்னையகன்மனைக்காண்பரன்ப ※
ரநாதியபசுபாசத்தையறுத்தவனருளினாலே ※
யநாதியேயமலன்கன்மமாயனுபவிப்பரொன்ப ※
ரநாதியபசுபாசத்தையறுத்திலாரறிவிலாரே ※

எ - து அன்பரானஆன்மாக்கள் சிவனதருளினாலநாதியான பசுபாசங்களை ப்போக்கியநாதியேநின்மலனானசிவனைத் தனதுள்ளத்தே தெரிசிப்பர், அறிவில்லா தஆன்மாக்கள்அநாதியாய்வரப்படாநின்ற பசுபாசத்தை யவனதருளாற்போக்கிக் கொள்ளமாட்டாமலவனிடத்துக்கலந்திருந்தும் அவனேசெய்விக்கிறானென்னுமறி வையிழந்துயான்செய்தேன் பிறர்செய்தாரொன்னுந் தற்போதத்தால்வருங்கன்மத் தையனுபவித்தற் பொருட்டு இறந்துபிறந்து திரிவார்களென்றுசொல்லுவர்பெரி யோர். எ- று (௨௰)

தூலசரீரமுதலாகவொன்றுக்கொன்று மறியாதென்பதனையுமாண
வநோய்போனவிடத்து ஆன்மாச்சிவதெரிசனப்படுமென்பதனையு
முணர்த்துகின்றார்

நோக்குமோ தூலவாக்கைநுண்டனுவதனைத் தூல ✻
நோக்குநுண்டனுவுந்தன்னைநோக்குமோமீதுமாக்கை ✻
நோக்குமாருயிருந்தன்னைநோக்குமோமீதுமெல்லா ✻
நோக்குநின்மலனைநோக்குநோக்கறத்தனையுநோய்போய் ✻

எ- து- வெளி- ஓகாரம்- எதிர்மறை (௱௧)

முற்கூறியசிவதெரிசனப்படுமதனைத்திட்டாந்தமிட்டுணர்த்துகின்றார்.

ஆக்கையினாவியென்னவமலனாருயிரின்வாழ்வ ✻
னோக்கிலர்மூலநோயால்நோலறிவடங்கிநொய்யார் ✻
நோக்குவரமலன்மூலநோய்வலியடக்கப்பாகத் ✻
தோக்கொளியுணர்வைச்சேர்ந்தாரெனலுபசாரத்தொன்றும் ✻

எ- து சரீரத்திலான்மாவியாபித்திருக்கு மாறுபோல வந்தவான்மாவினிடத்தினுஞ்சிவன் வியாபித்துநிற்பன், இங்ஙனம் வியாபித்திருக்குஞ் சிவனை யாணவமலமேலீட்டாலிச்சாஞானக்கிரியைகளாற்றடைபட்டுக் கிஞ்சிக்ஞரானவர்கள்தெரிசிக்கமாட்டார்கள், பக்குவான்மாக்களுக்குப் பரமேசுரன் ஆணவமல சத்தியைக் கெடுத்துத்தானிரண்டறநிற்கு மதனைத்தெரிசிப்பிப்பன், இப்படிசிவதெரிசனப்பட்டபிரகாசத்தையுடைய வறிவைப்பொருந்தினார்களென்பது முன்னில்லாததையிப்போதுசென்று கூடினார்களென்றதன்று கண்ணிற்காசம்போனவாறே கண்ணுக்குமிருந்தபிரகாசமுண்டானாற்போல, இவனுஞ் சிவனதுபிரகாசத்தைப் பொருந்தினனென்பது. உபசாரம். எ- று (௱௨)

அதற்கோர்திட்டாந்தமுணர்த்துகின்றார்.

இருட்டெலையிருந்தான்றுஞ்சாவிணைவிழியொளியவ்வெல்லைப் ✻
பொருட்டனைப்புணர்ந்துங்காணாதொளியுறிற்புதைந்துநின்ற ✻
விருட்டறவுடலைக்காணுமேனையயாவுங்காணும் ✻
பொருட்டளிற்புணர்ச்சிகண்டபொழுதெனப்புகல்வரோயோ ✻

எ- து யாதாமொருவனிருட்டறையில் விழித்திருக்கிறவனுடைய கண்ணிற்பிரகாசமான தவ்விடத்திலிருக்கும் பதார்த்தங்களுடனே சம்பந்திச்சிருக்கையினுமறியான், பின்புதீபம்வந்து அந்தகாரத்தைப்போக்கவப்பொழுது தன்னுடைய சரீரத்தையுங்காணும்ஆண்டுள்ள பதார்த்தங்களையுங் காணுமதுபோல வான்மாவினுடையசத்தியைத்தடைபடுத்தின மலமானதுசிவசத்தியினாலே நீங்கவதுநீங்கின

விடத்து ஆன்மதெரிசனமுண்டாம் அதற்குமேலருட்டெரிசனமுஞ் சிவதெரிசனமுமுண்டாயதனுடனேகூடியிருப்பர். எ - று. [௱௩]

ஆன்மாச்சிவனைக்கூடிஞனென்பதனையேகதேசியாமென்றுசங்கித்துஅதனைமறுக்கிறார்

கூடிதலேகதேசியெனுமிருபொருட்கேகூடு ※
மோடிவான்றேடிக்கூடுமவரொவருபிருளுனம் ※
வாடலுந்தன்னுண்மெய்யைநோக்கறநோக்குவானி ※
னீடொளிபடலநீங்கக்கண்டனினிகழுமன்றே ※

எ- து. ஆன்மாச்சிவனைக்கூடிஞனென்னி லேகதேசியுமாய்க் கடபடாதிகளைப் போலப்பிரிந்துஇரண்டுபொருளாய்விடும், அஃதெங்ஙனமென்னில் வியாபியாயிருக்கிறவாகாசத்தை விரைவிற்றேடிக்கூடுகிறேமென்கிறவனெவன்றன் சொல்லுவஞைற்கூடுங்கூடுமென்றுசாத்திரஞ்சொல்லுகிறதெப்படியென்னிலான்மசத்தியைத்தடைபண்ணுமாணவமலம் அருளாற்போகவேயப்பொழுதுதற்சொரூபமும் விளங்கியதற்குமேலாகியபதிசொரூபத்தைப்பாராமற் பார்த்திருப்பதென்போலவென்னிலாகாசத்தில்விளங்காநின்றவாதித்தியகிரணமானதுமேகத்தினாலேதடைபட்டபோதுகாணுமலதுநீங்கினபோது அந்தப்பிரகாசமிவனுடைய கண்ணுக்குத்தோன்றுமாறுபோல. எ- று. (௱௪)

பேதாபேதமென்பதனைமறுத்துஆன்மாச்சிவனுடையவயிக்கத்தையுணர்த்துகின்றார்.

பேதமேலேகதேசிமுத்திபிற்பிரானுமேக ※
வாதமுமயக்கஞ்செம்புமலினநாசகனுமொன்றே ※
வாதலாலிரண்டுமல்லாவபேதமேயமலனுவி ※
வேதகருபிருங்கண்ணும்வேறெனுமொன்றுமென்னார் ※

எ-து ஆன்மாவுஞ்சிவனும்பேதமென்றுநீசொல்லுவையாகில்,ஏகதேசியாய்விடுங்காணப்படியன்று, முத்திதிசையிலான்மாவுஞ் சிவனுமொன்றெ ன்னிலேகவாதமுமாய்மயக்கத்தையுங்கொடுத்துவிடுங்கா ணிப்படியானாற் குற்றம்யாதெனிற் - செம்புந்தன்னுடையகாளிதத்தைப்போக்கு மிரதகுளிகையுமொன்றல்லவேயாகையினான்முற்கூறியவிரண்டுமின்றியான்மாவுஞ் சிவனுமபேதமாயேயிருக்குங்காண், வேதாகமங்களையுள்ளபடியறிந்த ஞாதாக்களான்மப்பிரகாசமுங் கண்ணினுடைய

பிரகாசமும் பொருந்தினவிடத்தவ் விரண்டையும்பிறித்து வேறென்றுமொன்றெ ன்றுஞ்சொல்லார்கள். எ - று உம்மைபிறந்தது தழ்இய வெச்சம் (௩௫)

இங்ஙனங்கூறியமுத்தான்மாக்களிடத்துண்டாகிய
வாணவமலமவர்களைவாதைபண்ணுமஞ்சமுமடை
யாமனிற்குமென் றுணர்த்துகின்றார்

கடல்விடங்கொல்லுங்கண்டார்தம்மையுங்காலகாலன் ☼
மிடறுறுங்கொல்லவல்லமிடலிலையெற்றேயற்றே ☼
யடியிணைசரணமென்றேயமலனையடைந்தார்தங்க ☼
ணடல்வலியடங்கன்மூலமலத்தினுக்கழிவுமின்றே ☼

எ - து தேவர்களமிர்தமதனம்பண்ணினவிடத்துண்டாகிய வாலகாலவிஷ த்தையாதாமொருவர்கண்டார்களவர்களையுங்கொல்லு, மித்தன்மையையுடைய விடங் காலனுக்குங்காலனாகியசிவனாதகண்டத்தில்வந்து பொருந்தியிருக்கவுமவ னைவாதியாதெப்படிதன்வலிகெட்டுநின்றது அப்படிப்பரமசிவனுடைய ஸ்ரீபாதத் தையடைந்தமுத்தான்மாக்களை மலசத்திவாதைபண்ணமாட்டாதுங் கெடாமனிற் கும். எ - று உம்மை - உண்டாரையுங்கொல்லுமென்னுமெச்சம் - மல ங்களுக்குட்பிரதானமாதலால் மூலமலமெனச்சிறப்பித்தார். [௩௬]

அநாதியானவாணவமலசத்தி முத்தியிற்கெடுமென்றுசொல்லிலா
ன்மசத்திசிவசத்தியுங்கெடாதோவென்னக்கெடாதென்றுணர்த்து
கின்றார்

அடங்குமேலநாதிமூலமலவலியதனைப்போல ☼
வடங்கிடுமநாதிமுத்தன்வலியணுவலியுமென்னி ☼
லடங்கிடாதநாதிமுத்தன்சத்தியாற்றடிக்கும்பாச ☼
மடங்குதுண்ணுக்கைநீங்கவணுவறிவதீதத்தாசால் ☼

எ- து. அநாதியாயிருக்கப்பட்டமூலமலமாகியவாணவமலத்தின்சத்தியானது சாயுச்சியத்தைப்பெற்றவான்மாக்களுக்கு ஆணவசத்தி யடங்குமென்றதுஆணவ மலமொன்றாயிருக்கையிலேயுமவர்களை மறைக்கிறதுதனித்தனிசத்தியாகமறைப்பி க்குமாகையா லந்தந்தச்சத்திமாத்திர மறையாமலந்தந்தச்சத்தி கெட்டுப்போகா மலுமிருக்குமென்று சொன்னதைப்பற்றி யநாதியாகமறைத்திருக்குஞ்சத்திமறை யாதுதன்வீரியங்குன்றியடங்குகையால் அதுபோலவநாதிமுத்தனாயிருக்கப்பட்ட பரமசிவன்சத்தியு மநாதியாகவிருக்கப் பட்டவான்மாவினுடைய சத்தியும் வீரியங்

கெட்டடங்குமென்றுநீசொல்லிலனுதியேமலத்திரையத்தையுநீங்கி விளங்காநின்றசிவனுடையசத்தியடங்காது ஆணவமலசத்தியாகியபாசத்தைமேலிடவொட்டாமலான்மாவினறிவுபிரகாசிப்பிக்கு நுண்ணிதாகிய சூக்குமதேகநீங்கினவதீதாவத்தையிலாணவமலத்தாலேயான்மாவினுடையவறிவற்றடங்கும். எ-று.

இதன்கருத்து ஆன்மாமோக்ஷத்தைப் பெற்றவிடத்து ஆணவசத்திகெடாமலடங்காதிற்குமென்றுஞ் சகலத்திற் றத்துவங்களாகிய சூக்குமதேகங்கூடியவிடத்து ஆன்மசத்திக்குஞ்சிலவிளக்கமுண்டாயுந் தத்துவங்களாகிய சூக்கும தேகநீங்கினவதீதாவத்தையில்மலசத்திமறைப்பால்- ஆன்மசத்தியடங்கியிருக்குமென்றும் பாசசத்திகளுக்குக்கேடில்லையென்றுஞ்சொன்னதாம். [ாஎ]

மேலான்மாசிவனுடைய வயிக்கமுணர்த்துகின்றார்

ஏகமன்றிறைவனுவியிரண்டுமன்றபேதமென்றே ⁂
யாகமவேதமெல்லாமயிக்கியபதத்தினுலே ⁂
யூகமுள்ளவர்தமுள்ளத்துணர்த்திடும்பிரத்தியாயத் ⁂
தாகமுமற்றென்றென்பரயிக்கியபதார்த்தமுனர் ⁂

எ-து ஆன்மாவுஞ் சிவனுமொன்றல்ல விரண்டுமல்ல வென்றே வேதாகமங்களெல்லாமவர்களிருக்கிற வயிக்கியத்தினுலே யபேதமென்று சொல்லும்இப்படிவிவேகித்துப்பிரத்தியமென்னுஞ் சத்தத்தினுலேயிதற்குஅயிக்கியபதமென்றுஅவர்களறிவினுலேயறிவிக்கப்பண்ணும் இப்படியந்தச்சத்தத்தினுடைய பொருளையறியாமலற்பவறிவையுடையோர் அயிக்கியமென்ற பதத்தின் அருத்தத்தையொன்றென்றுசொல்லுவர்கள். எ-று.

பிரத்தியமென்பது. அறிவு (ாஅ)

முற்கூறியவயிக்கியத்துக்குதாரணமுணர்த்துகின்றார்

தருநிழலொன்றேவன்றேத ரித்திருபொருளோவன்றே ⁂
பரமனுமுயிருமிந்தப்படியெனவபேதம்பாரார் ⁂
ஒருபுடையேகதேசமெனவுபமானமோரார் ⁂
அரிவைசொல்லமிர்தமென்றாறிவினலறிவதோசொல் ⁂

எ-து மரமுநிழலுமொன்றென்றுசொல்லப்பெறு, வன்றியிரண்டென்றுஞ்சொ

ல்லப்பெறு, வாதலாலவையிரண்டு மொன்றுக்கொன்று இப்படிபிறிக்கப்படாதிருந்தது அதுபோலப்பரமசிவனுமான்மாவுமிப்படிபிறிக்கப்படாமலிருக்கிற வையிக்கபாவத்தைவிசாரித்தறியார்கள், யாதொருவிடத்திற்றிட்டாந்தஞ்சொல்லுகிறதெல்லாமேகதேசதிட்டாந்தமொழிந்துமுற்றுமன்று, அஃதெங்ஙனம்மெனனிலிவள்வசனம்அமிர்தம்போன்றிருக்குமென்று லதனைநாவினாற்பருகியதனுட்சுவையையின்னபடியென்றுசொல்லப்படாது எ - று (௱௯)

இப்படியான்மாவுஞ்சிவனுமிருக்கிறவயிக்கத்தை
யறியாமல்மாயாவாதியொன்றென்றுசொல்லுமது
னைமறுத்துணர்த்துகின்றார்.

வேறு.

அத்துவிதமென்றசொலுமுன்முறைபினாய்க
வத்துவயமென்றசொலுமம்முறைபினாய்க
முத்தனிணையற்றொருவனென்றுமொழிவேதத்
தத்தமறியாரமலனாவிமலமென்பர் ✽

எ - து அத்துவிதமென்றசொற்பொருளைமுன்னையாசாரியர்கள் சொன்னமுறைமையில்விசாரிக்க, அத்துவயமென்றசொற்பொருளையுமந்தப்பிரகாரத்திலேவிசாரித்தறிக, வனாதிமலமுத்தனுமாய்த்தனக் கொப்பாருமில்லாதவனென்றுவேதங்கோஷிக்கவுமந்தவுண்மைப்பொருளையறியாமலினின்மலனாகியசிவனையுஞ் சமலனாகியவான்மாவையும்வித்தையாகிய மலத்தையுமொன்றென்றுகூறுமதுகூடாது எ - று ✠ பண்ணையுமோசையும்போலப்பழமதுவு,மெண்ணுஞ்சுவையும்போலெங்குமாம், ஆங்குவென்னுந்திருவாக்கினானுந்தெளிக. (௱௰)

அதற்குதாரணபூருவமாகஆறுசெய்யுளாலுணர்த்துகின்றார்

பார்த்திபனுமேவல்வினைபற்றினரும்வாழ்வுந் ✽
திர்த்தரசனேவலிடர்சேருநருமொன்றோ ✽

---

சிவஞானபோதம் - உம் - சூத்திரத்திரத்துள் - நேரிசைவெண்பா

✠ பண்ணையுமோசையும்போலப்பழமதுவு ௦
மெண்ணுஞ்சுவையும்போலெங்குமா - மண்ணாு ௦
ளத்துவிதமாதலருமறைகளொன்றென்னா ௦
தத்துவிதமென்றறையுமாங்கு ௦

வார்த்தவுடலோவுயிவனுருபிரணைத்து *
மூர்த்தமவன்மூர்த்தியெனவோர்கவறுமோகம் *

எ-து இராசாவு மிராசாவுக்கேவற்றொழில்செய்யும் பரிசாரகரும் அவனதுசதுரங்கபெலமு முலகத்துள்ளவான்மாக்களுக் கிடர்வந்தகாலத்து த்தீர்த்துமவர்கள்செய்தகுற்றத்தையறிந்து தெண்டித்தும் போக்கப்படுவதால் இராசாவும் அவனேவற்றொழில்செய்யும் அந்தப்பிராணிகளுமொன்றல்லவே, யஃதன்றிச் சத்ததாதுக்களாலேயெடுக்கப்பட்டசரீரமுமான்மாவல்லவே ஆயின்அதெப்படியென்னிற் சருவான்மாக்களுமவனுக்குவடிவாகவுமந்தச்சிவனந்தவடிவுக்கு மூர்த்திமானாகவுமிருக்குமுறைமையினை விசாரித்தறிவையாகி லுன்னிடத்துண்டாகிய அஞ்ஞானம் போம். எ-று- ஓகாரம்-எதிர்மறை (௱௰௧)

ஊடலிருவர்க்கொழியவுண்டுகொலொருத்தர்க் *
கேடணையுமேவலெழுவாயுமியனாலு *
மூடருணரார்மலைவுமுன்னொடுபின்னென்றே *
தேடுவர்சிவன்றனையுமாதரவுசெய்தே *

எ-து இருவர்க்கேசண்டையொழிந்து ஒருவர்க்கஃதில்லையே யந்த ✠ வேடணையுமொருவன் போ.வா.வென்றேவுதல்முதலியவும் இந்தமுறைமைகளைப் பிறித்துமுன்னொடுபின்பொருள்கோள்மலைவினறிச்சொல்லுஞ்சாத்திரத்தி னுண்மைபுமுணராதறிவற்றவர்கள்சிவனு மான்மாவுமொன்றாயிற் சிவனையாதரவுடனே கூடவேணுமென்றுவிசாரிப்பரஃதென். எ-று. ஓகாரம். வினு. [௱௰௨]

பொருந்தையுடலூனுமறவேயருள்புரிந்து *
தத்துவமசிப்பொருடருங்குரவனொன் *
றத்தவுதையத்தவலமாசினையறுத்தே *
சித்திபெறுமோபிரமமென்கொலிதுசெப்பாய்

எ-று பொருந்துபோன்றுள்ள பொருந்திய வுடலை யிடுவித்துத் தத்துவமசியென்னுமகாவாக்கியப்பொருளை யுபதேசித்தனுக்கிரகஞ்செய்யுமாசாரியனெவனென்றுதேடியதனுற்றற்பதமாகியசிவனையுந்தொம்பதமாகியவான்மாவையும் அசிபதத்தாலைக்கம்பண்ணப்பட்டு இருந்தவுபதேச காலத்தாற் பொல்லாதஅஞ்ஞானத்தைப்

---

✠ ஏடணை - விருபபம் - அது - அத்தவேடணை - புத்திரவேடணை - உலகவேடணை - எனமூன்றுவிதம்

போக்கிச்சித்தியை யடையுமோ பிரமமானது நீ சொல்லுமதுவென்னைசொல்வா
யாக. எ- று- ஓகாரம்- எதிர்மறை- கொல்- அய்யத்தின்கண்வந்தது ✠ தொம்பதந்
தற்பதந்- சேர்ந்திதானே - என்றுந்திருமந்திரத்திற் காண்க. [௱௰௩]

விண்டனுபவத்தெழுவிருத்தமெழுவாயு *
மண்டமவனன்றவனதாகமயலென்றே *
கொண்டவர்கள்விண்டவர்கள்கூடினர்களாகம் *
பண்டையபராபரனிணைக்கமலபாதம் *

எ- து முற்கூறியதத்துவமசிபிலபிக்கத்தை யொன்றென்பையாகிலுன்னிடத்தி
ல்விளங்காநின்றவனுபவத்துக்குமாறுபாடாய்விடும் அண்டசமுதலியநால்வகைத்
தோற்றமுமவனிடத்திற்றோன்றியதன்று. அதற்குஅவன் பின்னமென்றுயாதொரு
வர்கொண்டார்களவர்களேசரீரபெந்தநீங்கினவர்களாகையாலனாதியானபரமசிவ
ன்றிருவடியையடைந்தவர்கள். எ- று [௱௰௪]

மோசகனுயிர்க்கிருளனாதிமலமுத்தன் *
பேசுமியல்வேதமொழிபெற்றுமறிவற்றார் *
மாசறிவினோர்சிலர்கண்மற்றவையியல்பெற்றார் *
தேசிலநுணர்ச்சியினுமென்றறிகதிண்ணம் *

எ - து ஆன்மாக்களுக்காணவமலத்தைப் போக்கிறவனாதிமலமில்லாதவ
னருளிச்செய்தவேதவாக்கியத்தினுண்மையைப்பெற்றிருந்து மறிவில்லாதவர்க
ளேயான்மாவுஞ் சிவனுமொன்றென்பார்கள் அஃதன்றி வியாமுபகவானென்முதலாயி
னோரால்சொல்லப்பட்டகுற்றத்தைப்பொருந்தியசாத்திரத்தையோதியதனுண்மை
யையறிந்தார்களேயாகினுமவர்களறிவு, விளங்கினதல்லவென்று நிச்சயமாகவறி
வாயாக. எ - று [௱௰௫]

ஆக்கைசடமாருயிரையின்றியசையாது *
நோக்கிலர்கொல்பாவையுடலாவியெனுநொய்யார் *

---

திருமந்திரம் - முத்துரியம் - எம். கவி

✠ தொம்பதந்தற்பதந்தொன்முத்துரியம்போ O
னம்பியமூன்றுந்துரியத்து நற்று O
வம்புவியுன்னவதிருக்கத்தப்பாலைச் O
செம்பொருளாண்டருள் சேர்ந்திதானே O

சாக்கியருமற்றையர்கடாமுமுரையானு
மேக்கிலருணர்ச்சியினுமென்னையவர்வீடே

எ - து சரீரமானது செடமானபடியாலேயான்மாவையின்றியொருக்காலுஞ்சேட்டிக்கமாட்டாததனைவிசாரிக்கிலர்கொல்லோ மரப்பாவையானது சூத்திரதாரியையன்றிச் சேட்டிக்கமாட்டாதவாறுபோலவென வஃதன்றியற்பராயிருக்கிறசமணன்மற்றுள்ளசமையிகளுமவர்கள் சாத்திரத்தைப்படித்தறிந்தார்களேயாயினுமவர்கள் தங்கள்தங்கள் சமையமுத்திகளைச்சாதித்தார்களேயாயினுந் திரும்புகிறமுத்தியாதலாலதுபரமமான முத்தியல்லாதபடியாலந்த வறிவில்லாதவர்கள்சொல்லுகிற முத்தியெப்படிதான்கூடும் எ - று (௱௰௬)

மேற்பாமுத்திகளைமறுத்துத்தமதுமுத்தியீதென்று
ணர்த்துகின்றார்

கந்தமறல்பந்தமறல்கட்டிருவெண்சித்தி
யந்தமறிவூறுகடகாசமறலப்பு
முந்தவுறையுற்றநிரண்முத்தியலமுத்தி
பந்தமறவின்புறல்பிறப்பிலிபதத்தே

எ - து உருவம்வேதனைகுறிப்புபாவனை விஞ்ஞானமென்கிறபஞ்சகந்தமுங்கெடுகிறதேமுத்தியென்றுசொல்லும்புத்தன்முத்தியுஞ்சீவித்திலெவ்வேறு உருவங்கொள்ளுமணிமாமுதற்பிராகாமியமீறாகியஅட்டமாசித்தியென்று சொல்லப்பட்டயோகிகள்முத்தியுமாகாசமானது பாத்திரவசத்தால்கடாகாசமடாகாசமாகியிரண்டாய் நின்றாற்போலவுமொரு சந்திரனுபாதிவசத்தாற் சார்வங்கடோறும் பலவாய்நின்று தோன்றினாற்போலவும், பிரமமானது மாயாகாரியங்களானதேகங்கடோறுநின்று முத்தியிலொன்றுமென்னுமாயாவாதிமுத்தியு, மகாமேருவையடைந்த காகம்பொன்னிறமானாற்போலவும், உப்பளத்தையடைந்தநிரணதிகளந்தவுப்பேயானவாறுபோலவுந்தன்மைகெட்டு ஒன்றுமென்னுஞ்சிவசமவாதிமுத்தியுமிவைகளற்பமுத்தியாதலாலிவை பரமமுத்தியல்ல, ஆயினுமது முத்தியாதெனின் ஆணவாதிபெந்தநீங்கிச் செனனமரணமில்லாத சிவனதுசீபாதத்தையடைந்து சிவானந்தானுபூதியைத்திளைத்திருப்பதேமுத்தி எ - று (௱௰௭)

அந்தமுத்தியையடைந்தவர்கள்திரும்பார்களென்
பதுவுஞ்சிருட்டியாதிகிருத்தியங்களைச்செய்யார்க
ளென்பதுவுமுணர்த்துகின்றார்.

விண்டவர்கண் மூலமலம்வீற்றிவராதீனார் *
பண்டைமுறைநாடுடல்படைப்பதிலையீதுங் *
கண்டனையிழந்தவுயிர்காரணனிடத்தே *
புண்டிலவிடாதகிழியுற்றபொருளொத்தே *

எ - து கண்ணிற்காசம்போகக்கண்விளங்கினாற்போல மூலமலத்தைநீக்கிச் சருவஞ்ஞத்துவத்தையடைந்தவர்கள் ஆற்றுநீரானது சமுத்திரத்தையடைந்தாலது மீளாதவாறுபோல மோக்ஷத்தைப்பெற்றுமீண்டுவந்துடலெடார்கள் அஃதன்றிச்சிருட்டியாதிகிருத்தியங்களையும்பண்ணுர்கள், மீளாதமுத்திடைவர்களாயிற் சிவனுக்குப்பஞ்சகிருத்தியமெப்படியென்னிலனாதியேயான்மாக்களளவற்றிருப்பார்கள், அஃதெங்ஙனமென்னிலுலவாக்கிழியெடுக்கவெடுக்க வெப்படித்தொலையாமலிருக்கிறது அதுபோலமுத்தியடைந்த வான்மாக்களுக்குமளவில்லை யினிமுத்தியடையப்போகிறவான்மாக்களுக்குமளவில்லை. எ - று ✠பிறந்தநாள் மேலும் பிறக்குநாள் போலுந், துறந்தோர் துறப்போர் தொகை. என்னுந்திருவாக்கினுலுணர்க. (௩௰௫)

ஆசாரியனுபதேசத்தைப்பக்குவான்மாக்களுக்கு
ணர்த்தவேண்டுமென்பதுவுமபக்குவர்க்குணர்த்
திற்குற்றமென்பதுவுமுணர்த்துகின்றார்.

ஆக்கையினையைந்தலையநாகமெனவஞ்சி *
நீக்கினவர்க்குருகியேயுடனிந்த *
வாக்கறைகமற்றையர்தமக்கறையுமாந்தர் *
தீக்குழியினாழ்ந்தழிவர்சேர்ந்தவருமாய்ந்தே *

எ - து வெளி - சேர்ந்தவர் - எ - து - கேட்டமாணுக்கர் (௩௰௬)

பக்குவான்மாக்களுக்குப்போதியாதவாசானுக்குக்குற்
றமுணர்த்துகின்றார்.

உற்றசிறைசாலையெனவுறுடல்வெறுத்தே *
நெற்றிவிழிநின்மலனதாளிணையிணைய *
முற்றவர்தமக்குருகியோதுதல்செய்யாத *
குற்றமுடையானுமுறல்வீழ்வனயர்கொண்டே *

---

✠ திருவருட்பயன்உயிரவைநிலை - ௧ -

எ - று வெளி (௱௨௰)

பக்குவர்க்குப்போதித்தவாசாரியருமவரிடத்துக்கேட்ட
மாணுக்கரும்பெறும்பலமுணர்த்துகின்றார்.

ஆசிலர்தமக்குருகியன்புடனுணர்த்துந் ※
தேசிகனுந்தேர்ந்தவருஞ்சேர்ந்துசிவலோகம் ※
வாசமலர்மேலுறைவர்மாசறவுமந்தத் ※
தீசனடிகண்டனுபவிப்பர்தமதின்பம் ※

எ - று வெளி (௱௨௧)

பரசமையிகள்வந்துமேலிட்டவிடத்துஅவர்களைக்
கண்டிக்கச்சாமர்த்தியந்தன்னிடத்துண்டாயிருக்க
வுமவர்களைக்கண்டியாதிருந்தோர்க்குக்குற்றமெமா
ப்பின்முடித்தலென்னுந்தந்திரவுத்தியாலுணர்த்து
கின்றார்.

நிறுத்திடவலானமலனாநெறியையென்று ※
மறுத்திடவலானவலமார்க்கமயனுற்றே ※
நிறுத்திலன்மறுத்திலனெனிற்கரிசன்றே ※
மறுத்தவனைமாய்க்கைகரிசல்லவறமாமே ※

எ - று புறச்சமையிகளாகியபொல்லாதோர் தங்கள்தங்கள் கோட்பாடே பிரதானமாகச்சாதிக்கவந்தவிடத்துப்பரமேசுரனருளிச்செய்ததிவ்வியாகமத்தை யுள்ளபடியறிந்த வாசாரியன் அந்தந்தமார்க்கநூல்களைக்கண்டித்துத் தன்மதத்தைத்தாபிக்கவல்லனாயிருந்துந்தன்னுடையமத மேலானமதமெனச்சாதித்து நிறுத்திடாதிருப்பனாயினத் தப்பாவியிடத்துமேசம்பையாமலவனைச் சீயென்றுவார்த்தல்குற்றமன்றுஅதுவேபரமமானதன்மம். எ - று (௱௨௨)

வேதாகமத்தையுணர்ந்தவர்கள் தன்மமுதலியமூன்றைத் தமிழாற்
சொல்வதன்றிவீட்டுநெறியைத் தமிழாற்சொல்லார்சொல்லவேண்
டுமிடத்துவெவ்வடமாகவுரைசெய்க வென்றுணர்த்துகின்றார்

செந்தமிழிலின்பமிறுவாயலதுசெப்பார் ※
அந்தமிலியாநெறியிலாறுளையையாய்ந்தார் ※

இதுவுமது

கங்கைசெஞ்சடைத்தாங்கியகண்டனேகாளவல்விடமுண்டிருள்கண்டனே, மங்கைமாதவஞ்செய்திடவாடியேமகிழ்ந்துமற்றவளோடுறவாடியே சங்கமேவித்தருந்தமிழ்ச்சைவனேதவிரினன்றறியானுமசைவனே, திங்களூரினப்பூதிக்குஞ்செல்வனேநினைத்துநின்னைப்பவத்தினுஞ்செல்வனே.

எ-து. கங்கையைச்சிவந்தசடையிற்றரித்தெங்குநிறைந்தவனே, கருமையாய் வலிமிகுந்த விடத்தை யுண்டிருண்ட கண்டத்தை யுடையவனே, மங்கையாகியஉமையவள்திருமேனிவருந்தியரியதவத்தைச்செய்யவதையறிந்தவளோடுமுறவாடினவனே, மதுரையிற்சங்கத்தாரோடுபுலவராகியெழுந்தருளித்தமிழிலக்கணத்தையுதவுஞ்சிவபெருமானே, நீங்குதற்கரிய நன்மைகள் கெட நரக சொர்க்கங்களில் யானுந்திரிவனே, திங்களூரினவதரித்த ✠ அப்பூதிநாயனாருக்குச்செல்வமாகியிருந்தவனே, உன்னருளாலுன்னைக்கூடினபின்புபிறவியினிடத்துஞ்செல்லுவேனேசெல்லேன். எ-று. ஏகாரம் - எதிர்மறை (௩௨௬)

குமரன்றுதியுணர்த்துகின்றார்

வேறு

உமையாள்புதல்வாவுனதாளிணையே ❊
யிமையோர்தொழுவேயெதிர்சூரனையுங் ❊
குமையாவவர்வாழ்வருள்கூரியனே ❊
யெமையாளெமையாளிடரோடிடவே ❊

எ-து-வெளி (௩௨௭)

அகத்தியர்துதியுணர்த்துகின்றார்

---

அப்பூதிநாயனாருக்குச்செல்வமாகியிருந்தவனென்பது. திருநாவுக்கரசுசுவாமிகளருளிச்செய்ததிருப்பழனம்பண் பழந்தக்கராகம்

✠ வஞ்சித்தென்வளைகவர்ந்தான்வாரானேயாயிடினும், பஞ்சிக்காற்சிறகன்னம்பரந்தார்க்கும்பழனத்தா, னஞ்சிப்போய்க்கலிமெலியவழலோம்புமப்பூதி, குஞ்சிப்பூவாய்நின்றசேவடியாய்கொடியையே. [௰]

அதிபாதகமாகியபாவவிதம்
புதுமாமலர்சூடுதல்போற்புரிவேன்
விதியேவிழைபேன்வினைவேரரியாய்
பொதிமாமலைமாதவனேபுனிதா

எ- து- வெளி- விதியேவிழையேன். எ- து- சத்கன்மத்திலாசைசப்படேன் (௩௭௮)

பத்தாவது சிவஞானயோகவியலுரைமுற்றும்.



# பதினேராவதுபரிகாரவியல்

இவ்வோத்தென்னுதலிற்றேவெனின்; ஒத்து நுதலியதூஉ மோத்தினதுபெயருரைப்பவேவிளங்கும், ஆயினிவ்வோத் தென்னபெயர்த்தோவெனிற்பரிகாரவியலென்னும்பெய ர்த்து, ஆன்மாக்களுக்குவாதனுபெலத்தாலேயிருவினைப் பலன்களைப்பொசிக்குமிடத்தேறியபாவம்போம்படிக் குப்பரிகாரத்தைக்கூறியதெனவறிக, இத்தலைச்செய்யுள்- என்னுதலிற்றேவெனிற்பரிகாரவிதங்களிற்சிறிதுதொகு த்துணர்த்துதனுதலிற்று.

அறிந்திடுகபரிகாரமவலவினையறுத்தற்கறைந்திடுவாமருமுனிவவாகா ரசுத்தி, நிறைந்தபுனலான்மாசுநீக்கலுடற்காடைநிகழ்நீரினமுக்கறுக்கை கீசரைப்பேசிடினும், பிறந்திறந்தவாசூசம்பேணியறன்மூழ்கும்பெற்றியெ னப்பேசியவிம்முறையனைத்தும்பெற்றூர், சிறந்தபரிகாரத்தைச்செய்தவல மானதீவினையிற்றீர்ந்திடுவர்நன்பலமுஞ்செறிவார்

என்பது - வாராய்சிறப்பினையுடையவகத்தியமாமுனிவனே, ஆன்மாக்களார்ச் சித்தபாவம்போம்படி பரிகாரத்தையாஞ்சொல்லுவாம், அதனையறிவாயாக அஃ தெவ்வாறேனெனின் - உடம்பின்கண் - நவத்துவாரத்தாலுண்டாங்குற்றமும், சுத்தியாகையின்பொருட்டு நதிமுதலியவற்றின்மூழ்காமல்வெந்நீரி ன்மூழ்குங்குற்றமும்புடைவையிற் சுக்கிலமுதலியனபட்டகுற்றமும் இழி ந்தசாதிகளுடன்பேசினகுற்றமும், அவர்களுடைமையைப்பொசித்தகுற்றமும்

அந்தணர்முதலாயினோர்க்குண்டாகியவிருவிதவாகுசமும் போனவாறேமுழுகிச்சுத்தராகாதகுற்றமுமாகிய இங்ஙனங்கூறிய குற்றங்களைச்செய்தோர் அக்குற்றம்போம்படிக்கதற்கதற்கேற்றபரிகாரஞ்செய்துபாவங்கள்போனவாறேயே ஈடவைத்த பொன்போலவிளங்கிச்சுத்தாத்துவாவிலுண்டாகியபோகங்களைப்பொசித்திருப்பர்கள் எ - று நன்பலமுமென்றவும்மையான் மோக்ஷமுமெனவறிக. (௧)

அப்பரிகாரஞ்செய்தற்கதிகாரிகளைப்பிரித்துணர்த்துகின்றார்.

பரிகாரங்கிரகபதிக்கும்பிரமசாரிக்கும்பகர்ந்திடுவாம்பவுதிகனைநயிட்டிகனையென்று, விரதியருமிருவரிருவிதங்காமாகாமமெனவினையுங்கிரகபதியகாமவினையினுக்குப், பரிகாரம்பகர்ந்திடுவாமொழிபாலுங்காமம்பார்க்கவிருகுணிதமெனப்பவுதிகனுக்கிரட்டி, கிரகபதியினும்பரமவிரதிக்குநான்குகெழுமுமெனவறிகவினைப்பாவங்கள்கெடுப்பார். ※

எ - து ஈண்டியாம் - இல்வாழ்வானுக்கும்பிரமசாரிக்கும்பரிகாரஞ்சொல்வாம், அப்பிரமசாரிபவுதிகப்பிரமசாரிநயிட்டிகப்பிரமசாரியெனவிருவகையர், அவர்பாவமொனின், நூலின்கண்விதித்தகாலமளவும்பிரமசரியவிரதத்தையனுட்டித்துமுடிந்தவாறேவிவாகஞ்செய்யுமவன்பவுதிகப்பிரமசாரி, மரணாந்தம்வரைபிரமசரியவிரதியாய்விவாகஞ்செய்யாமலிருக்குமவன் நயிட்டிகப்பிரமசாரி, இவர்கள்செய்பாநிறகுங்கன்மமும்புத்திபூருவமாகவும் அபுத்திபூருவமாகவுமிருவிதப்படும், ஈண்டில்வாழ்வான் அபுத்திபூருவமாகச்செய்தகன்மத்துக்கேபரிகாரஞ்சொல்வாம், ஒழிபென்னும்பிரமாணத்தாலேமுற்கூறின திலிரட்டிபுத்திபூருவமாகச்செய்தகன்மத்துக்கெனவறிக, கிரகத்தனுக்குஅபுத்திபூருவத்துக்குச்சொன்னதிலிருமடங்குபவுதிகன்செய்தவபுத்திபூருவத்திற்கெனவறிக, அந்தப்பவுதிகனுக்குச்சொன்னதிலிருமடங்குநயிட்டிகப்பிரமசாரி செய்யும் அபுத்திபூருவத்திற்கெனவறிக, அதிலிருமடங்குபுத்திபூருவத்திற்குப்பொருந்தும்,ஆதலானான்மடங்காயிற்றெனவறிக, தான்செய்தவினைசெய்வினையெனப்பாவங்களிருவிதத்தால்வரும், அதுபுத்திபூருவம் அபுத்திபூருவம் என்னும்பேதத்தானான்குவிதப்படும், இப்படிக்கன்மபேதங்களையறிந்துஅதற்கதற்கேற்றபரிகாரங்களைச்செய்து பாவங்களைப்போக்குக, எ - று ஒழிபாலுமென்றவும்மையாற்பிரமசரிக்குச் சொன்னதுவானப்பிரத்தனுக்கும் நயிட்டிகனுக்குச்சொன்னது சன்னியாசிக்குமெனவறிக, இவர்கள்தாந்தாமேபரிகாரஞ்செய்தற்கசத்தராயிற்றம்மாசிரியாராலேயாதல் ஆசிரியர்புத்திரராலேயாதலிருமடங்குசெய்விக்கிற்குற்றம்போமெனவறிக. (௨)

முற்கூறியகாமம்அகாமம்ஈதென்றுணர்த்துகின்றார்

முற்றும்வினைதைவிகத்தான்மோகத்தானேயான்மூர்க்கராசர்சோரரிவர் முடுகுபயத்தாலும், அற்றுமுறையறிவழிந்துமகாமமெனவறிகவல்லனவே காமமெனவறிகவமலேசன், சொற்றனையுந்துணியாததுயக்கந்தைவிகமேதுணிந்தவரும்பேராசைதொட்டறிவுகெட்டும், பற்றிபிடும்வினைமோகம்பரமனுரைகேட்டும்பரலோகமார்கண்டாரென்றெண்ணும்பழுதும் ❊

எ - து தைவிகத்தாலுண்டாயவினையும், மோகத்தாலுண்டாயவினையும், மிகுந்தவியாதியாலுண்டாயவினையுமூர்க்கவிராசா - கள்வர் - இவர்களுடையமிகுந்தபயத்தால்வரும்வினையும் - பேய்பாம்புமாயமயக்கமுதலியவற்றாலறிவழிந்துசெய்யுங்கன்மமும், அகாமவினையெனப்பெறும் - இவையல்லாமலுண்டாம்வினைகள்காமமெனவறிக, வேதாகமங்களிலின்னதுசெய்தாலின்னபாவமென்றறுதியிட்டறிந்திருக்கவுமதற்குப்பயமின்றிச்செய்வது முற்கூறியதைவிகமெனவறிக. குறள் ✠ மோகஞ்சுகர்துக்கமுற்றுதலாற்புத்திதனக் கூகமொழிக்கையெனவோர், என்பதனால்வேதாகமங்களை போதியறுதியிட்டவர்கள் ஆசைமிகுதியாலதனைச் செய்வதுமோகமெனவறிக, உலோகாயுதனைப்போலிம்மைப்பயனையொழிந்து அம்மைப்பயனையார்கண்டாரென்று கருதுமதுவுமோகமெனப்பெறும் எ - று அகாமமெனினும் அபுத்திபூருவமெனினுமொக்கா, காமமெனினும்புத்திபூருவமெனினுமொக்கா, அமலேசன்சொற்றனையுமென்றவும்மைபான்மிருதிபுராணங்களுமெனவறிக. [௩]

நித்தியகன்மத்துட்டலைமையாகியசிவத்தியானத்தி
யைப்புலரிக்காலையிற்செய்யாதொழியிற்பரிகார
முணர்த்துகின்றார்.

உன்னிடுகசதாசிவமும்பிராமமெனுமுகூர்த்தத்தொழிந்திடிற்பின்னிருகுணிதமுணர்ச்சிக்கேயொருநான், குன்னிடுகவல்லதிறையுருவத்தைமூலமுனைத்திடுகவிருநூறுநீறுடலிற்பூசிப், பின்மனைபிற்புறப்படுகபிறைத்தானேயாகிற்பேசிடுகவகோரத்தைபிருநூறெண்பெறவே, யன்னமருந்தாதருந்திக்கௌவிடத்தையற்றைக்கபசவியம்பூணுனுமலசலமோசனத்தே ❊

எ - து சூரியனுதிக்குமுன்றேமுக்கானாழிகையென்னவெழுந்திருந்துசுத்திசெய்துதிருநீறுதரித்துக்கொண்டுசமாதிசெய்க, சமாதிசெய்தற்கருகமல்லாதார் சதாசிவமுதலியதிருவுருவைத்தியானஞ்செய்க, நித்திரைவசத்தாற்றியானியாதொழியினிருமடங்குதியானஞ்செய்க, நித்திரையன்றியிருக்கவுந்தியானஞ்செய்யா

---

✠ பதிபசுபாசப்பனுவல் - நான்காவது - பாசசாதகவியல் - ௬௰௮ -

தொழியினுன்மடந் ததியானஞ்செய்க இங்ஙனஞ்செய்யாதொழியினக்குற்றம்
போம்படிக்குமூலமந்திரத்தையிருநூறுருச்செபித்தல்செய்க, பின்திருநீறுதரித்து
த்தியானஞ்செய்து இல்லத்தின்கணின்றும்புறப்படுக, திருநீறுதரியாமற்புறம்பே
புறப்படினும் பூணூலைவலக்காதிலாதல்கழுத்திலாதல்வையாமலிருந்து மலசலா
திகளைநீக்கினும் அக்குற்றம்போம்படிக்கன்று பவாசமாயிருந்துபஞ்சகௌவியத்
தைச்சிவனுக்காட்டிச்சேடத்தைப்பருகிய கோரமந்திரத்தையிருநூறுருச்செபித்
திருக்கிலக்குற்றம்போமென்றவாறு - உம்மை - எதிரதுதழீஇயவெச்சம். (௪)

### மலசலமோசனகாலத்து வருங் குற்றத்துக்குப் பரிகாரமுணர்த்து கின்றார்

பார்த்தவன்முத்திரமல மும்பாற் பியிடும்போதிற்பருகிமுதற் பண்ணைவ
ணைப்பார்ப்பாரைப்பசுவைச், சேர்த்தறைகளொருநூறுகிகைபிழைத்தான்று
னுந்தேசத்தைப்பிழைத்தானுஞ்சிவாங்கனத்துஞ்சிறந்த, நீர்த்தடத்துநிறை
வாசநந்தனத்துமலநீர்நீக்கினனேலொருகானேஞ்சழிந்தானு நீக்கிச், சேர்
த்தறைகபிரமங்களொருநூறைஞ்ஞூறு செப்பிநிகவீசானஞ் சுடலைதிருப்பு
ரிக்கும்.

எ-து மலசலமோசனகாலத்துத்தேவர்கள்தவசிகள்அந்தணர் ஆதித்தன்சந்தி
ரன். அக்கினி தாரகை. மாதர்இவர்கண்முதலாயினரைப்பாராதொழிவானன்றிப்
பார்த்தானாகில் அகோரத்தையொருநூறுருச்செவிக்க- இஃதன்றிச் சந்தியாகாலமி
ரண்டினும்பகலினும்வடக்குமுகமாகவிராதவனும் அத்தவிராத்திரிக்கு நிருதிதிக்கு
ப்பார்த்திராதவனுமிரவில்தெற்குமுகமாக விராதவனும் விதித்ததேசத்தைப்பொ
ருந்திமலாதி விடாதோனும். அம்முறைசெபஞ்செய்க. சிவனாதுசன்னிதித்தெருவி
னும்புண்ணியதீர்த்தக்கரையினும் மணம்பொருந்தியதிருநந்தவனத்தினுமலசலங்
களைநீக்கினனாகில் நெஞ்சுவருந்தியுபவாசத்தைப்பண்ணி ப்பஞ்சகௌவியத்தைக்
கொண்டிருந்துபஞ்சப்பிரமங்களைநூறுருச்செபிக்க. திருவிழாநடக்குந்தெருவீதியி
னுஞ்சுடலைக்கரையினுமலசெலத்தை நீக்கினவனுமுபவாசமாயிருந்து ஈசானமந்தி
ரத்தையைஞ்ஞூறுருச் செபிக்கவக்குற்றம்போம். எ-று- தேசமென்பது- ஆக்கள்
சேர்விடம்-பொழிலின்புடை- சிலை-நீர்- நீடுநிலம்- உன்னதத்தலம்- கோமயம்- இ
வைமுதலியன. (௫)

நீராடுமிடமுந்தூசொலிக்குமுறையுமுணர்த்துகின்றார்

ஆடுகநீரினையாற்றுளரிதெனின்மற்றவற்றுமாடைதனினழுக்கறுக்கவருந்திடினுமலத்தாற், றூடிதமென்மூத்திரத்துஞ் சுக்கிலத்தினுலுந் தோய்த்திடுககாரத்திற்சுடுநீருஞ்சொரிக, கூடியிடக்கோசலமுங்குளிர்நீருஞ்சொரிககூட்டிடுகசுத்தமிருத்திகைதனையுந்துலங்க, வோடுபுனல்வெள்ளத்துமுமுத்தியொலித்தழுக்கையொழித்திடுகவாதபத்தினுலர்த்திடுகவுணர்ந்தே.

எ- து. நதிமுதலியவற்றின்கண்- முழுகுவது உத்தமம்- அஃதல்லாத தாமரையோடைகேணியிவைகளின்முழுகுவதுமத்திமம்- கிணற்றினும்வாவியினுமுழுகுவதுஅதமம்- இங்ஙனமியன்ற தொன்றின் முழுகி யனுட்டானஞ்செய்து பின்புடைவையைத்தோய்த்துலர்த்தவும் பொசித்தவிடத்துண்டான அசுசிபோகையின்பொருட்டுமவ்வாறுசெய்க-மலசலஞ்சுக்கிலமுதலியவற்றுற்புடைவையின்அசுசியாயினதுசுத்தியாகையின்பொருட்டுஅதனையுவர்முதலியகாரநீரிலேபோட்டுவெந்நீரும்புற்றுமண்ணுங்கூட்டியதிலுண்டானவழுக்கைப்போக்கிக் கோசலந்தெளித்துக்குளிந்தநீரிற்றுவைப்பச்சுத்தியாம் அஃதன்றிச்செலமோடுகிறவாறு முதலியவற்றிற்றேய்த்துக்கல்லிலடித்துத்தோரணமாகவிரண்டுகழியைநாட்டிமேலேயொருமூங்கிலைப்போட்டுஆதித்தகிரணத்தாலுலர்த்திடுக- நித்தியகன்மநூல்தெரிந்தென்றவாறு- வெள்ளத்துமென்றவும்மையாற்குளத்துமெனவறிக. (௯)

வியாதியினுலாறுமுதலியவற்றின்முழுகாதோர்க்குப்பரிகாரமுணர்த்துகின்றார்

அஞ்சினனேற்பிணியாளனுடியிடக்குளிர்நீரழன்றபுனலாடியபினகத்துநினைந்தறைக, தஞ்சமெனப்பிரமங்கள்சடங்கங்கண்முக்காற்றண்புனலுக்கன்னியனுமஞ்சினனேற்றனு, மெஞ்சலறவெண்பஃது மிருபஃது மியம்பவிருநூறுஞ்சாதத்தை யியம்பிடிக நூற்றெட், டஞ்சலெனு மகோரத்தையாடையறநீருளாடினனேனுணலொழிகவற்றையகாளலந்தே.

எ- து- வியாதியாளர்குளிர்ந்தசெலமாடப்பயந்துவெந்நீரின்முழுகின குற்றம்போம்படிக்குப்பஞ்சப்பிரமாங்கங்களை யதனைபபோக்குமெனக் கருதியதனைமுக்காற்செபிக்க. வியாதியன்றிருக்குமவனும் வெந்நீரின்முழுகினுற் சத்தியோசாதமுந்நூறுருச்செபிக்கச்சிவதீக்கையுடையவனுறுமுதலியவற்றுளாடையின்றிநீரா

டிஞானகிலன்றவருந்தியுபவசியாயிருந்தகோரத்தைநூற்றெட்டுருச்செபிக்கிற்குற்றம்போம். எ-று.

[எ]

ஆசூசவிதியுணர்த்துகின்றார்

ஒருவனுடல்விடினூருளுண்டவ்வூர்க்கசூசியொருதெருவுளொருமுக
டேலைம்பதுவிற்கிடையுண், டிருபதிற்றொருபதினுண் டிடைவிடினேமு
கடுமிடைசெலினேநாராசமிலையப்பாலசூசி, யொருபதினென்றளவுண்டுமற்
றையவீத்க்கண்ணானவுடலெடுப்பதன்முன்வேதமுத லோதேற், பரமனைய
ர்ச்சனைபுரியேன்முப்பதுதண்டளவுட்பற்றியிடுமாசூசம்பசுபதியாலயத்தின்

எ-து ஒருகிராமத்தி லொருவன்மரிக்கிலவ்வூர்க்கெல்லாமாசூசமுண்டு அல்லதொருதெருவிலொருமுகட்டுக்கூரையிடைவிடாதிருக்குமாகிலதற் கைம்பதுவிற்கிடைதூரமாசூசமுண்டு அஃதன்றிநடுமுகடுஇடைவிட்டிருக்குமாகில் முப்பது விற்கிடையாசூசமுண்டு ஒருதெருவின்கணடுவேநாராசம்வரில் அதற்கப்பாலாசூசமில்லை இருக்கிறவீடுவிட்டுப் பிழக்கடைப்புறத்துவீதியிலும் பக்கவீதியிலு மாசூசமுண்டானாற்பதினொருவிற்கிடைதூரமாசூசமுண்டு இங்ஙனங்கூறியதலங்களிலாசூசமுண்டானவிடத்துக்குற்றத்தையுடையசவமெடுப்பதற்கு முன்சிவபூசைமுதலியகன்மமும்வேதாகமபுராணமோதுதலுமொழிக,திருக்கோயிலைச் சூழ்ந்த வீதியிலொருவர்மரித்தவிடத்துமுப்பதுதண்டுக்குட்பட்டிருக்கிலாசூச முண்டென்றவாறு. சவங்கிடக்கப்பரார்த்தத்தினித்தியமுதலியகன்மஞ்செய்தாராயினக்குற்றம்போம்படிக்குக்கலசந்தாபித்தபிடேகஞ்செய்யினக்குற்றம்போமென்க (அ)

அந்தணர்முதலியோர்க்காசூசவிதியுணர்த்துகின்றார்.

எட்டுமிரண்டும் பிறந்தநாளிறந்தநாளு மிழுக்குண்டு மறையோருக்க
ரையருக்கீராறுண், டெட்டுடனேழேனையருக்கீரெட்டொன்றானமியல்வழி
யினியங்கியிடுஞ்சூத்திரருக்கிரட்டி, விட்டவர்க்குவிதிபுதல்விதன்னுடனே
பிறந்தாள்வேறல்லாநன்மாமனெழுவாயர்வியோகத், தொட்டுமொருமூன்று
நாளொழிந்தார்க்குமூழ்கவொழியுமொருபதினைந்துட் சிவகணிகையோர்க்
கே

*

எ-து- செனனமரணமிரண்டினுக்கும்பிராமணர்க்குச்சூதகம்பத்துநாளுண்டு இராசாக்களுக்கிருவகையாசூசமும்பன்னிரண்டுநாளுண்டு வசியருக்கவ்விருவகையாசூசமும்பதினைந்துநாளுண்டு தீக்கைபெற்றுவேதாகமங்களின்வழிநடக்குஞ்சூ

த்திரர்க்குஇருவகையாசூசமும்பதினைந்துநாளுண்டு அந்த நூல்களில் விதித்தவழிந டவாதசூத்திரர்க்குஇருவகையா சூசமு முப்பதுநாளுண்டு இவ்வநான்கு வன்னத் தார்க்கும்பூரணாசூசம். இனிமூன்றுநாளாசூசமுடையார்யாவரொன்னிற்றன்பெண் ணுந்தன்னுடைன்பிறந்தாளுந் தாயுடன்பிறந்த மாமனுமாகிய விவர்களுக்குமூன்று நாள்மரணவாசூசமுண்டு எழுவாயர்என்பதனால் தாயைப்பெற்றபாட்டன்பாட்டி தாயுடன்பிறந்தபெரியதாய்சிறியதாய் பெண்கொடுத்தமாமன் மாமிசாதகாசாரிய ர்போதகாசாரியர் மோக்ஷத்தைக்கொடுக்கு மாசாரியர் இவர்களுடையதேவிமார் மாணாக்கர்க்குமெனவறிக ஞாதியில்லாதவர்களிலொருவனைகசாதியாளுய்ப்பிரத் தியான்வீட்டில்வந்து மரிக்கிலவனுக்கு மூன்றுநாளா சூசமுண்டு இவர்களல்லா தோர்மரிக்கில் முழுகினமாத்திரம் வீடுடை யவனுக்குச்சுத்தி,மூன்றுநாளாசூசமு டையவர்களுக்கு அவர்கள்அவர்கள்மரித்துமூன்றுநாளுங்கடந்தவன்கேட்டாலொ ருநாளாசூசம் ஒருநாளாசூசமுள்ளார்க்குஅந்த ஒருநாளுங்கடக்கிற்கேட்டபொழு தேயாசூசம் தொண்ணூறுநாழிகையாசூசமுள்ளார்க்கு இராத்திரிகேட்கிலிராத்தி ரிமட்டாசூசம் பகற்கேட்கிற்பகல்மட்டாசூசமுண்டெனவறிக. இஃதுபிறநூன்மு டிந்ததுதானுடன்படுதலென்னுந் தந்திர வுத்தியாற்கூறியதெனவறிக. சிவபெருமா ன்றாருகாவனத்திலிருடிகண்மாதரைமோகிப்பித்தந்தவிகாரத்தினாலவர்களிடத்துக் கருப்பமுண்டாகிப்பிறந்தஉருத்திரகணிகைமார்க்கிருவகை யாசூசமும்பதினைந்து நாளுண்டென்றவாறு. உருத்திர கணிகைமாரிற்கொண்டவளார்த்தவள்வாங்கினவளாந் தவள்முதலாயினருக்காசூசம்ஆசூசதீபிகையின்விரித்துக்கூறினாரென்க,யா தாமொருசாதிக்கெவ்வளவுஆசூசமுண்டு அவ்வளவும் பிண்டோதகக்கிரியையைச் செய்க. ஆசூசம்போனவாறேயேகோதிட்டக்கிரியையைச்செய்க. இவ்விதியந்நூலி ற்காண்க மாதாவுக்குச் சக்களத்தியுடன்பிறந்தானு மாமனாதலால் வேறல்லா னன் மாமனெனச்சிறப்பித்தார். (௯)

தீக்ஷாவிசேடத்தாற்சங்கோசமானவாசூசமுணர்த்துகின்றார்

ஒடுங்கமனமமலனடிபொன்றினர்க்காசூசமொட்டாது சிவதருமவனியார்க்
கு மூலகம், விடும்பரிசில்லாவுலகதருமணிய தீக்கைவிரும்பினர்க்குநாள்
மூன்றுவிரவிடுமசூசி, சடங்கொருமையன்னியராற்சங்காரம் குருபூசைச
மைப்பிக்கவல்லதுநானீரவுடைதரித்தே, துடங்கலுமாஞ்சிவபூசைபிரண்
டாந்திக்கையினைத்தொட்டாருமிம்முறையைத்தொடங்கலுமாஞ்சூழ்ந்தே.

எ - து சங்கிலிட்டமுதலியநால்வகைமனதினுள்மூன்றுந்திரிகரணத்தோடு கூடின் ஆதலாற்சிவனிடத்திற்சுவலீனமானநாலாவதானமனதைப்பாதத்திலேலயிப்பித்திருக்கிறசிவஞானிகளுக்காசூசமில்லை, ஆசாரியனுலிருவினையுந்தீக்கையினாற் சோதிக்கப்பட்டுஆசூசமுடையவர்களுடன் கூடிப்பாகமும்புசிப்புமின்றித்தனியே பாகம் பண்ணிப், பொசித்திருக்குஞ் சிவதருமணியதீக்கையுடையார்க்கும் ஆசூசமில்லை, ஆசாரியன்மாணுக்கன்செய்தபுண்ணியங்களைமாயைக்குமேற்சுத்தி செய்யாமற்சுத்தாத்துவாவின்போகம்பொசிக்கையின்பொருட்டுஅதனைவைத்தப்பாவகன்மத்தையேசோதித்துப்புண்ணியகன்மத்தைச்சோதியாமற் சிகாச்சேதம்விதிவழிபண்ணப்பட்டிருக்கிறவுலகதருமணியதீக்கையையுடையவர்களுக்குஇருவகையாசூசமுமூன்றுநாளுண்டு,முற்கூறியசிவதருமணியதீக்கையுடையார்களும்பூருவாச்சிரமத்துடனேகூடியபாகமும்போசனமும்வேறின்றிக்கூடிப்பொசித்திருந்தார்களேயாயினவர்க்கு மூன்றுநாளிருவகையாசூசமுமுண்டென்க, இங்ஙனங்கூறியவிருவகையருஞ் சிவபூசைசெய்யாதமூன்றுநாளுமந்திரியாகஞ்செய்துபொசிக்க, அவர்களுடைய சிவலிங்கத்தைவேறேயொருவராலே ✠ சாதாரணமந்திரங்கொண்டு பூசைசெய்விக்க, அல்லது பத்திவயிராக்கியந்திடமுள்ளவர்களாயின், ஆசாரியன் தீக்கைசெய்துமண்டலத்தரானசிவனதுதிருமுன்னே நீயுள்ளமட்டுமேபூசியென்று கற்பித்துஅவர்கொடுக்கக்கைக்கொண்டலிங்கத்தைப்பூசியாமற்பொசிக்கலாகாதெனக்கருதிமுழுகியீரப்புடைவையைத்தரித்துக்கொண்டுசிவபூசைசெய்க, விசேடதீக்கையுடையபுத்திரருமம்முறைமையிற்பூசைசெய்க எ - று பிரத்தியாரைக்கொண்டுபூசைசெய்வித்தவர்கள் ஆசூசம்போனவாறேமுழுகிக் கௌவியத்தைப்புசித்துப்பின்புபிராயச்சித்தார்த்தமாகஅகோரத்தைமுந்நூறுருச் செபித்துப்பூசைசெய்க துடங்கலுமாமென்றவும்மையெதிர்மறை. (ய)

புத்திரன்மரித்தால்மாதாபிதாக்கள் செய்வதூஉம்பதியானவன்மரித்தாற்பாரிசெய்வதூஉமுணர்த்துகின்றார்

மரித்த௭நாளுணலொழிக மகவிழந்தபிதாவுமற்றிருநாட்கௌவியமா
ந்துகமாதாப்பாரி, பரித்தவனையிழந்த௭நாட் பணுகதலைவபனம்பண்ணிடு
கசாந்திராயணமாதிபதைத்தே, சரித்தபினைச்சிறிதுண்க தாங்கவுடறன்னைச்
சங்கரனற்றுளினையைச்சாரவறிவுண்டே, லருச்சனையைப் புரிந்திடுகவாரிய
ன்றனருள்பெற்றவனிதனிற்சயிக்கபுலனடக்குகவைந்தழுதே. ✱

எ - து- பிள்ளைசாகக்கொடுத்தபிதாவுமாதாவுமன்றைக்குபவசியாயிருக்கமாதா

✠ சாதாரணம் - பொது

வானவன் இரண்டாநாள் மூன்றுநாளாதல் விதிப்படிகௌவியத்தைத்தரித்து அத
னையேபொசித்துபவசியாயிருக்க, பதியைச்சாகக்கொடுத்த பாரியானவள்பட்டினி
யையுடையளாய்த்துக்கித்தழுது மயிருடனிருக்கிறது பதிக்குக்குற்றமென்பதனால்
முண்டிதம்பண்ணிக்கொண்டுசாந்திராயணமுதலியவற்றை யனுட்டித்துமுடித்துச்
சிறிதுநாளைக்குப்பினந்தவுடலின்கணுயிரிருக்குநிமித்தமாகச்சிறிதன்னமிகையையப்பு
மிளகுமின்றியொருபொழுது பொசித்துப் பாக்குத்தின்னாமலிருக்க தெய்வந்தொ
ழாஅள்கொழுநற்றொழுதெழுவாள் என்பதனாற்பத்தாவே தெய்வமென்றிருந்தபதி
விரதையானவள் அவனில்லாமையால் இனிச்சிவனையடையவேணுமென்னும்பத்தி
யுண்டாகிஆசாரியனையடைந்து அவன்செய்யுந்தீக்ஷையைப்பெற்று அவனையீச்சுர
கத்திருமேலுடையவனை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டருச்சனைசெய்க பூசிய
ன்கண்ணோடோறுந்தருப்பையைப்போட்டதனிற் சயனஞ்செய்க ஆமையானது
தன்னவையவங்களை யடக்குமாறுபோலப் பஞ்சேந்திரியங்களின் வழிமனஞ்செல்
லாமலடக்கியவனது சற்சரித்திரத்தைச் சொல்லித் துக்கித்திருக்க. எ-று. பிதாவு
மென்றவும்மையான் மாதாவுமெனவறிக [௰௧]

சுமங்கலியினாசார முணர்த்துகின்றார்

எந்திழைக்குப்பதியேவலியற்றுதலேநியதியீசனிணைத்தாளையேவச
றவுபெருகிற், காந்தனனுமதிபெற்றுக்கைக்கொள்கபூசைகசிந்திடியேவாய்ரு
துகலுழந்தொருமூன்றுநாளும், வாய்ந்திடச்செய்துடற்சுத்தி மற்றையாதி
தரவேமானதபூசனைபுரிகமற்றையநாட்புனலாட், டோய்ந்துருந்திக்கௌவியா
த்தைச்சூட்டுகபோதரற்குச் சூதகமுன்பெருகோய்மூன் றூட்டி விக்கப்பிற
ரால். *

எ-று. சுமங்கலிக்குப்பத்தாவினேவல் செய்தலே பரமமானதன்மம். இவ்வென்
றியும்அந்தப்பதியினேவல்செய்துவருகையிலுஞ்சிவனது ஸ்ரீபாதங்களையடையவே
ணுமென்னும்விருப்பமுண்டாகிலவர்களுக்குத்தனக்கெனச்சுதந்தரமில்லாமையா
ற்பத்தாவினனுமதியைப்பெற்றுசாரியனையடைந்து அவனிடத்திலுடையவனையெ
ழுந்தருளப்பண்ணிக்கொண்டுசிவபூசைசெய்க அவளுக்கிருதுவானது வந்தகாலி
லவளொருகன்மத்துக்குமுரியளல்ல அஃதெனெனில் முதனாளவள் சண்டாளி இர
ண்டாநாள் பிராமணனைக்கொன்றவள் மூன்றாநாள் வண்ணாத்தி யித்தன்மையையு
டையளாதலாலொருகன்மத்துக்குமுரியளல்ல மூன்றுநாளுஞ்சரீரசுத்தி நிமித்தமா
கநீர்முதலியவற்றைத்தீண்டாமல் வேறொருவரைத்தண்ணீர்தரச்சொல்லிச்சரீரசு
த்திசெய்துகொண்டுநாலாநாட்சௌசலம்புற்றுமண்முதலியவற்றாற்சரீரசுத்திசெய்

ஆந்திமுதலியவற்றின்மூழ்கிப்பஞ்சகௌவியந்தாபித்தருந்துக அதுகூடாதிருக்கிற்பால்நெய்யாதல் பருகிற்சுத்தியாம். பின்புசிவபூசைபண்ணுக அம்மூன்றுநாளும்அந்தரியாகஞ்செய்யாதொழியின் அக்குற்றம்போம்படிக்குஅகோரத்தையாயிரமுருச்செபிக்க அக்காலம்பூசியாதிருக்கிற்குற்றமன்று தான்பிள்ளைப்பெற்றசூதகந்தனக்குரியார்மரித்தசூதகம் வியாதியிவைகள்வரிற்றனக்கொத்ததீக்கையுடையவர்களைக்கொண்டுசாதாரணமந்திரத்தாற்பூசைசெய்விக்க. எ- று. (௰௨

## இருதுவருங்காலநியமமும் அவர்களைக்கூடலாகாத திவசமீதென்பதூமுணர்த்துகின்றார்

நிசிவேலையந்தியயாமத்திருதுநிகழி னேரிழைக்கற்றையநாளைமுதலெனவேநினைந்து, நசைபுறவேபதியவடோணண்ணுகவைந்தாநாளொன்றினுமாமிவைதனினுநணுகலமவாசி, யிசையினும் பூரணைபதினொன் கெட்டாறுதிதிமூன்றெட்டுடனீரிரண்டென்னுந் திங்கள்பிறப்பாய்கள், சுசியாயவெதிபாதமெனுமிவற்றுளொன்றுதொடினுமணைந்தாற்பவியாசொல்லிடுமந்திரமே ✻

எ- து. மாதர்கள்இராத்திரிநாலாஞ் சாமத்திருதுவாயினவர்களுக்குஅன்றுதானேமுந்தினநாளாகக்கொள்க பதியானவன்விருப்பத்துடனேயவளுக்கிருதுவானதுஐந்தாநாளுண்டாகாதிருந்தாலற்றைக்கவளைக்கூடுக நாலாநாளுண்டாகாதொழியினன்றுங் கூடுக அமவாசி பருவம் சதுர்த்தசி அட்டமி சட்டி திதித்திரையம் துவாதசி மாதப்பிறப்பு விதிபாதமுதலியபஞ்சபருவம் இவைகளிலொன்றுவந்தாகூடினுமாகாது இவைகளிற் காமமிகுதியாற் சேர்ந்தாற்றான் செபிக்குமந்திரமும்பலத்தைக்கொடாது. எ- று. பாரியைத்தீண்டுமிடத்து ஒற்றைபட்டநாட்களிற்புத்திரனிமித்தமாகத்தேவதேவமகாதேவமந்திரத்தையுச்சரித்துக்கூடிற் சற்புத்திரனுண்டாம் இஃதன்றி யிராத்திரிக்குத்திரியாமையென்னும் பெயருண்டாகையாலதனைமூன்றுகூறாகப்பிரித்துமுந்தினவிரண்டு கூறுகடக்கப் பிற்படிலன்றுதானே யொருதினமென்றுகூறுவதுபெரும்பான்மையாதலாலி வ்வாசிரியரதனைக் கூறிற்றிலர் நான்கினுமென்றவும்மையால்நாலாநாட்கூடிப்பிறந்தபிள்ளையற்பவயதில்மரித்தலானிழிவுசிறப்பாயிற்று ஏகாரமீற்றசை நாலாநாட்டொடுத்துப் பன்னிரண்டு நாளீறாக இருதுவுண்டாகில்அற்பாசமனம்பண்ணினவர் சுத்திசெய்யுமாறுபோலச் சுத்திசெய்க அப்பாலுமிருபதுநாளுக்குமேற்காலத்தில்வியாதியின்றியிருதுவாகில்மூன்றுநாளாசூசமென்றெணவறிக (௰௩)

## சிறப்புவிதியுணர்த்துகின்றார்

அந்தணர்க்கைந்தாநாளே யன்னரியர்க்கு நான்குமல்லாவைந்தா நியமா மமவாசியாதி, வந்துறினேமருவற்கவவற்றுள்ளுந்தவத்தை மதித்துவரிக்கின்றவரமுடையானேயாகில், அந்தணனுமைந்தாநாளைமேயன்மந்திரத்திலா குகியுஞ்செய்கபழிபகன்றிடவேயறிந்து, பைந்தொடியைத்தவம்பண்ணுறன் பரிசியானுகிற்பதைக்கவொருகெற்பத்தைவதைத்தபழிப்படுவான் ※

எ-து. தேவகன்மத்திலும்பிதிர்கன்மத்திலுமைந்தாநாளிருதுவானமாதர்க்குச் சுத்தியென்றுவசனமுண்டாதலாற்பார்ப்பாரும்பூசுரராகையால் ஐந்தாநாள் அந்தணர்மாதரைக்கூடவென்றார் பத்தாவுக்குநாலாநாட்சுத்தியென்பதுமன்றேற்றையர்க்குநாலாநாட்கூடவெனக்கூறியது இந்நாள்களில்அமவாசிமுதலியவாகாதநாள்கள்கூடிற்றீண்டாதொழிக-சூ-சிராடியபின்னீராறுநாளுங் கருவயிற்றுறாதுங்காலமாதலிற்பிரியப்பெருன்பரத்தையிற்பெயர்வோன் என்றதுமுற்காத்தன்னிருதுக்களைத்தொடுத்துத்தவசுபண்ணிக்கொண்டிருப்பானுகிலவ்வாந்தனைறு மைந்தாநாட்சேரற்க அப்படிச்சேராதகுற்றம்போம்படிக்குவிதிவழிமந்திரத்திருஞ்சேபயாமஞ்செய்க தவசுபண்ணுமன்மாதரையுமக்காலத்துஉள்ளூரிலிருந்து அவளைத் தீண்டாதிருப்பானுகிற்குழந்தைப்பிள்ளையைக்கெற்பத்தில் வதைத்தகுற்றத்தை யடையுமென்றவாறு (௰௪)

ஆகாதென்றகாலங்களிற்கூடல்முதலியவற்றிற்குப்பரிகாரமுரைத்துகின்றார்

விலக்கியகாலங்களிலும் புணர்ந்தாரேலயுதம் விளம்பிடுக பிரணவமேலோரொழுத்தஞ்சல்லார், மூலத்தடத்தைப்பகற்பொழுதின் முயங்கிடினுமிங்கமுறையறைகபசுப்புணர்ச்சிமுதலானநோக்கின், அலற்றவிரப் பாகனுமங்கினகோரமொரு நூற்றெட் டறைந்திடுகவரிவையர்தம் போகத்தை யவிழ்த்தே, சொலத்தொடங்கிச்சிலர்கேட்டதோடமறத்தனக்குச் சொல்லிடுகநூற்றெட்டுத்துரிசுடனேதுடைப்பார். ※

எ-து. பிராமணர்முதலியமூவருமாகாதென்றநாளிலொருகாற்கூடினுராகிற்பிரணவத்தைப்பதினுயிரமுருச் செபிக்க சூத்திராயிற் பஞ்சாக்கரத்தை யம்முறை செபிக்க பகலின்மாதரைக்கூடினுமுற்கூறியமுறைமையே செபிக்க அறியாமற்பசு முதலியபுணர்ச்சியைப்பார்க்கினும்பகல்நித்திரைசெய்யினுமகோரத்தைநூற்றெட்டுருச்செபிக்க சிலபேர்கள் இராவிற்றங்கள் கலவியிற்கூடினவார்த்தையைத்தங்களிலேபேசியிருக்குமதனையாதொருவர் விருப்பத்துடனே கேட்டாராகிலக்குற்றம்

யோம்படிக்ககோரத்தைநூற்றெட்டுருசெபிக்க பாவத்தை யுடனே போக்கவேணு மென்று கருதுமுத்தமர் எ- று- து ரி சு- பாவம். (௰௫)

பரதாரமுதலியவற்றைத்தீண்டிற்பரிகாரமுணர்த்துகின்றார்

பரதாரந்தனைவேசிதனைவிடலிதனையும்பரிசித்தான்மோகத்தாற்பதைத் துடலுந்தெளிந்தே, யொருநூறாயிரத்துடனையம்பதினாயிரமுமுச்சரிக்க வகோரத்தைக் கன்னிகைதோளொன்றி, லிருகுணித மிணங்க வினமல்லா ளாக்கண்ணாலிச்சையுறப்பார்க்கிலொருசதமுறவே யியம்பக், குருமனையை க்குணதோடமுறப்பார்த்தகொடியான் கூறிடுகசாதத்தையொருநூறுகுறி த்தே.

எ - து ஒருவனுடையபெண்சாதியையும் பொதுமடவாராகிய வேசியையு ம் புருடனிருக்கவும்புறத்திற்சோரமாகத்திரிகிறவிடலியையுமாசைமிகுதியாலொ ருகாற்றீண்டினனாகில் அய்யோவிப்படிசெய்துவிட்டோமேயென்றுடலுநடுங்கித் துக்கித்துப்பின்புதெளிந்துஅகோரமந்திரநூற்றைம்பதினாயிரமுருச்செபிக்க, கன் னிகையைத்தீண்டினனாகில்முற்கூறியதிலிரட்டிசெபிக்க, இணங்குதற்கருகமில்லா தவர்களைக்காமவிகாரத்தாற்பார்த்தானாகில்வாமத்தைநூற்றெட்டுருச்செபிக்க, பிராமணர்முதலியாலவருந்தங்கள்தங்கள்பாரியைப்பற்றத்தகுமொழிந்துதமக்க ன்னியமானமாதரையொருநாள்விகாரத்தாற்பார்க்கிற்பட்டினியிருந்து பிராமணர் நூற்றெட்டுமனையர்முதலானோர்நூறுநூறேற்றியும்வாமதேவத்தைச்சிவனைத்தசன்னி தியிற்செபிக்க, வாமதேவங்குய்யத்துக்கதிட்டாதாவாயிருக்கையால்அம்மந்திரங் கூறியதெனவறிக, குருமனையைவிகாரத்தாற்பார்த்தபொல்லாதவன் சத்தியோ சாதத்தைத்தியானம்பண்ணிநூறுருச்செபிக்க எ - று சூத்திரச்சிக்கும்வாழ் க்கைப்படுமுன்னிருநுவானவனுக்கும் விடலியென்றும்பெயர்சொல்லப்படும். (௰௬

நயிட்டிகப்பிரமசாரிக்குப்பரிகாரமுணர்த்துகின்றார்:

உரையாதேவிரகியரிவையர்பெயருமருவுமுன்னுதேகனவினவொடு ம்புணர்ச்சியுறினும், வெருவிவியனீர்மூழ்கியுணலொழிந்தக்கிரத்தைவிள ம்புகநாறெழுகினு மீர்வீரியத்தைவிளக்கிற், சுரிகுழலார்தோணினைவிற் சொல்லுகநானூறுதுயக்கமறவாமத்தைச்சொல்லிடுகவிருநூ, றிரவினிளை யாளொயொளிபிறக்கினன்வீரியத்தை யினவியோனியையிணங்கினரையுதமெ னுவார்.

எ - று விரத்தனானவன் மாதர்பெயரையுமுரையாதவர்கள் வடிவையுமனதிற் கருதாதிருக்கையிலுங்கனவின் கணவர்களுடன் கூடினானென்றிப்படிப்பட்ட குற்றம் போம்படிக்கு நல்லசிவதீர்த்தங்களிலுதையகாலத்தில் முழுகியுபவாசியாயத்திராத்தைநூறுருச்செபிக்க, நீர்கழிந்துகிடந்தாலுமம்முறையேயசெய்க, சுருண்டமயிரினையுடையமாதரைக்கூடவேணுமென்று நினைவினாற்பகலில் வலியவீரியத்தைவிட்டானாகிலறிவுமயங்குதலின்றிவாமதேவத்தை நானூறுருச்செபிக்க, வாமதேவத்தைச்சொல்லிடுகவென்பதிருபாலுங்கூட்டிக்கொள்க, இராத்திரியெதும்பையமுதலிய பருவத்தையுடையமாதரைக்கூடவேணுமென்றே கருதிவலியவீரியத்தைவிட்டானாகில்வாமதேவத்தையிருநூறுருச்செபிக்க, சாதியிற்குறைந்தமாதரைக்கூடில் அகோரத்தைப்பதினாயிரமுருச்செபிக்க எ- று ஈனயோனியென்பதுவாழ்க்கைப்படுவதன்முன் ✠ ஆசாரவைகல்லியஞ்செய்தவள்யோனியையெனவும்பெறும் [௰௭

நயிட்டிகப்பிரமசாரிபோகத்திலிருப்பமுறிலந்த
விரதத்தைவிதிப்படியேமுடித்துவிவாகஞ்செய்யா
விடத்துக்குற்றமுணர்த்துகின்றார்.

புரிந்தனனேற்போகத்தை விரதத்தைநாமிசைபுகன்றமுறையுறவிறக்கிப்
புனையிழையைவிதியாற், றிருந்தமணஞ்செய்தனைசெய்யாதின்வாழ்வினொ
டியிடற்மெரிவைபணைத்தனநூசிறையுடனி, னிரந்தமரியொழைத்தனைத்தாம்
வருடமுறக்கொடியனிரயத்தினமூழ்கிடுவனீற்றினுறுமெனைத்தும், வருந்
திடுவனவ்வளவுவருடமுமுற்றிடவேமற்றிதற்குப்பரிகாரம்வாக்கியத்துளதே.

✻

எ - று நயிட்டிகன்போகத்தின்கட்கருத்துற்றானாகிலாகமங்களிற்சொல்லியபடியேயாசாரியனிடத்துச்சென்று எனக்குப்போகத்தினிச்சையென்றுசொல்லியந்தவிரதத்துக்குண்டானவடையாளமாகிய சடைகிடாமணிமுதலானவற்றைப் பஞ்சாசனமென்னு மண்டலமிட்டவர்சன்னிதியிலாகமத்திற்சொன்னபடியதனையிறக்கிப்பின்புஆசாரியனானவனவனைமுழுகச்சொல்லியவனுக்கிரண்டுவெள்ளைப்புடைவையைக்கொடுத்துப்பதினாயிரமுருவகோரத்தைப்பரிகாரமாகச்செபிப்பித்து அவனையழைத்து நீகிரகத்தனாகவிருவென்றனுமதிபண்ணவவனும்விவாகம்பண்ணிக்கூடுக, இந்தப்படிவிரதத்தையிறக்காது மாதருடன்கூடுவனாகிலிந்தப்பிரமசாரியுடலில்வளர்ந்தஉரோமமெத்தனையுண்டத்தனைவருடமுமஃதல்லாமலவனுந்துனை

---

✠ ஆசாரவைகல்லியம் - ஒழுக்கக்குறைவு

ம் பண்ணினதிருநீற்றிலணுவெத்தனையுண்டவ்வளவு வருடமுங்கொடிதாகியரௌரவமுதலானநரகத்திற்கிடந்தழுந்துவனாதலாலிவையன்றியிதற்குவேறொருதவ்வியாகமங்களிற்பரிகாரமில்லை எ - று (௰அ)

பவுதிகப்பிரமசாரிபரதாரகெமனஞ்செய்யி
ற்பரிகாரமுணர்த்துகின்றார்.

பவுதிகனேமோகத்தாற்பரதாரந்தன்னைப்பரிசித்ததுயக்கமறப்பார்த்திருந்துநெஞ்ச, மூபவசியாயோங்காரமோரிலக்கமுறவேயுச்சரித்தாயாமவினையினைப்புரிகவுணர்வா, லவடனையேயறிந்தும்பின்னணைந்தானேயாகிலவனுக்குப்பரிகாரமாகமத்துமில்லைச், சுவையுறவேயவள்சொல்லைக்கேட்டானேயாகிற்றுயக்கமறவாமத்தைச்சொல்கவொருநூறே. *

எ - து பவுதிகப்பிரமசாரியானவன்சுகதுக்காதிகளினுடையமோகத்தாலறவுமயங்கியொருவன்பெண்சாதியைத்தீண்டினானாகில் அக்குற்றநீங்கநம்முடையவறிவிற்பொல்லாங்கினாலேயிப்படிவந்துவிட்டதென்றுமனதில்மிகவுஞ்சலித்துப்பரவசனுபவாசஞ்செய்துபிரணவத்தைநூறாயிரமுருச்செபித்துப்பிராணாயாமத்தைநூற்றெட்டுப்பண்ணில் அபுத்திபூருவமாகச்செய்தகுற்றம்போம், புத்திபூருவமாகவவளைப்பல நாட்கூடினானாகிலதற்குப்பரிகாரமாகமத்தினுமில்லை, விருப்பமுறவிகாரத்தாலவள்சொல்லும்வார்த்தையைக்கேட்டிருந்தானாகிலக்குற்றம்போம்படிக்குவாமமந்திரத்தைநூறுருச்செபிக்க எ - று ஆகமத்துமென்றவும்மையால் வேதாதியினுமெனவறிக. [௰௧]

புலைச்சிமேலோர்மனையிற்புகுந்தாலுமவள்கை
யாலருந்தினாலும்பரிகாரமுணர்த்துகின்றார்

புன்புலைச்சிமனைபுகுந்தாற்புத்தியிழப்பாகிற்போக்கிடுகமட்பாண்டமிற்புனிதம்புரிக, வென்செய்கோமெனவிரங்கித்தற்புருடமெண்ணணியியம்புகவையாயிரமுங்கிருச்சரத்தோடணி, தன்கையினாலறியாதுதானொருநாளருந்திற்றப்தகிருச்சரத்தயுதஞ்சாற்றிடுகவகோரம், அன்புடனேயானைந்துமமலனணிமுடியினூட்டியதுதனையருந்திற்புன்புலைபோயறுமே *

எ - து பொல்லாதபுலைச்சியானவளொருவன்வீட்டிலேயவளின்னாளென்றறியாதிருக்கப்புகுந்ததுண்டானாலக்குற்றம்போம்படிக்கு மண்பாண்டமானதெல்லாவற்றையும்புறம்பேயெடுத்துப்போட்டுமுழுகிக்கிரகத்தைக்கோமயகோசலத்தாலே

சுத்தி செய்யுமுறைமையிற்சுத்திசெய்க, இக்குற்றத்தையெப்படிபோக்கிக்கொள்வோமென்றிரங்கித்தற்புருடத்தைத்தியானித்து ஐயாயிரமுருச்செபித்து உடனே கிருச்சரத்தையுமியற்றிலக்குற்றநீங்கும், அந்தச்சண்டாளிகையாலேயபுத்திபூருவமாகவொருநாட்பொசிக்கிலப்புன்மைநீங்குதற்குத்தப்தகிருச்சரத்தையுமியற்றிஅகோரமந்திரத்தைப்பதினாயிரமுருச்செபித்துச்சிவனுக்குப்பஞ்சகெவ்வியத்தையாட்டிவித்துஅந்தச்சேடத்தைப்பொசித்துபவசியாயிருக்கிலக்குற்றம்போம் எ-று உ௰

இதுவுமது.

அறிந்துமொருநாளவள்கையருந்தினனேயாகிலேவகையகிருச்சரமுமியற்றிடுகவடைவே, சிறந்தவுருவாமத்தைச்சித்தத்தின்வைத்தேசெபபிடுகவயுதமுறவிரதமுஞ்செய்திடுக, வழிந்தவள்கையருந்தியதுவிரண்டுமூன்றுகிலதிகமறிந்தியற்றிடுகவப்பாலுமருந்திற், பிறிந்திடுவதலப்புன்மைசண்டாளனாகிப்பிரிந்திடுவன்முன்னிலைமையருந்துமுறைபிழைத்தான். *

எ-து பறைச்சியென்றறிந்துமொருநாளவள்கையாலே பொசித்தானாகில் அக்குற்றம்போம்படிக்குச்சாந்திராயணம், பராகம்பிராசாபத்தியந்தப்தகிருச்சரம் அதிதபனம், எனக்கூறியபஞ்சகிருச்சரங்களையுமடைவேயியற்றிச் சிறப்பினையுடையமாதர்வதனம்போன்றிருக்கிறவாமதேவமூர்த்தியைத்தியானஞ்செய்து பதினாயிரமுருச்செபிக்கசெயமுடிந்தவாறேவிரதத்தைமுடிக்க, இன்னுமொன்றறிந்திருந்து மிரண்டுமூன்றுநாளவள்கையாலே பொசித்தானாகின்முற்கூறியமுறைமையிலேசெபமுதலியவற்றையதிகஞ்செய்க,விப்படியனேகநாளருந்திற்கன்மசண்டாளனாகியபுலையனுக்கொருகாலுமிந்தப் பாவம்விட்டுநீங்காது, அனுலைன் பூருவசாதியுடன்கூடுவனோவெனிலிப்படியருந்துகிறமுறைபிழைத்தவன் மூன்றுவர்ணசாதியைவிட்டுச்சண்டாளனவன் எ-று விரதம் - பின்னர்க்கூறுகின்றார் (உ௬)

வண்ணாத்திமுதலாயினார் - மனையிற்புகுதல்முதலியவைக்குச்சுத்தியுணர்த்துகின்றார்

வத்திரத் தெனிருதுவினைமாற்றிடுவாளிலவண்ணாத்தியோற்பனைத்தினைலகருமகாரி,, யெத்தொகையவிழிகுலத்தாரியாதுமனையினினைங்கிடினேமண்பாண்டமெறிந்திடுகமண்ணூற், சுத்திசெய்கநிரகத்தைக்கோமயகோசலத்துஞ்சொல்லுகநாண்மூன்றையாயிரமயுதமகோர, மத்தகத்தாலறியாதேயருந்தினனேலொருகாலறைகபதினாயிரமுமைந்துறுமாயிரமும். *

எ - து நாலுவன்னத்துள்ளமாதர், இருதுவானபுடைவையைச் சுத்திபண்ணும்வண்ணாத்தி நீலவண்ணாத்திதோற்பணத்திபண்ணுதற்குவல்லமையையுடைய முச்சியமாதரிவர் முதலியவிழிந்த சாதியிற்றோன்றினவர்களும், அறியாமல வீட்டிற்பிரவேசித்தாராகில் மண்பாண்டத்தையெடுத்துப் புறம்பேபோட்டுமுழுக்ப்புற்றுமண்கோமயகோசலங்களாலுங்கிரகசுத்திசெய்க, மூன்று நாள் சத்தியோசாதத்தையையாயிரமையாயிரமுருச்செபிக்க, அவளைப்பரிசித்தானாகிற்பதினாயிரமுருவகோரஞ்செபிக்க, அவளின்னாளென்றறியாமலவள்கையாலொருகாலசனம்பண்ணினானாகில் அகோரததைப் பதினையாயிரமுருச்செபிக்கிலக்குற்றம் போம் எ - று (௨௨)

இதுவுமது

நாண்மூன்றிம்முறைநவிற்றிக்கௌவியத்தையருந்தநாளிரண்டேலிருகுணிதநவிற்றிடுகவறிந்தே, யூனுடையாளிருகுணிதமொருநாளைக்கியற்றவுண்டதும்பன்னாளாகிலுணவினையுமொழிந்து, நாணீராற் சாந்திராயணவிரதந்தன்னைநவிற்றுகமற்றுகார தோடநவை நணினு, நீணிலவுசடையமலற்கானைந்துமாட்டிநிசிவேலைதனிலருந்தவவலமெலாநீங்கும். ※

எ- து. இப்படிமூன்றுநாளும்பதினையாயிரம்பதினையாயிரமுருச்செபித்துமுடிவிற்பஞ்சகௌவியத்தைப் பொசித்திருக்க அபுத்திபூருவமாக வவள்கையாலேயிரண்டுநாட்பொசித்தானாகில்முப்பதினாயிரமுருவகோரத்தைச்செபித்துப்பஞ்சகௌவியத்தைப்பொசிக்க, அவள்கையாலேயறிந்தொருநாட்பொசித்தானாகில்முற்கூறியதினிருமடங்குசெபிக்க, அறிந்துபொசித்ததுவும் பலநாளாகிலதற்கேற்றியேற்றிச்செபமுஞ்செய்ததின் முடிவினூடோறுஞ் சுத்தசெலத்தாற் சாந்திராயண விரதத்தையனுட்டிக்க, யாதானுமோரிடத்திலேபொசிப்பிலுண்டான குற்றம்போம்படிக்குப்பிரகாசத்தையுடையசந்திரனைச்சடாமகுடத்திற்றரியாநின்றசிவனுக்குப்பஞ்சகௌவியத்தையாட்டி யதனையிராத்திரி பொசித்துபவசியாயிருக்க வதிலுண்டாகியகுற்றமெல்லாம்போம். எ- று. [௨௩]

முதற்கட்டொகுத்துப்போந்தசாந்திராயணமுதலிய விரதவிதியையுணர்த்துகின்றார்

முதற்பக்கமூவைந்துமொன்றிரண்டென்றேற்றி முகந்துவல க்கரத்தாலேநீருருந்திமுறையா, லதற்கபர பக்கத்தினெவ்வொன்றுகுறைத்தே யருந்

துதலேசாந்திராயணவிரதமாகும், பத்துணவுநீருணவு மின்றிப்பன்னிரு நாட்பட்டினியேபராகமினிப்பிராசாபத்தியந்தா, னுதித்தபகன்மூன்றாண்மற்றயாசகமுமொருமூன்றொருமூன்றுநிசியூண்முப்பகலகளிலனுணலாம் ॥

எ-து. பூருவபக்கத்துப் பிரதமைமுதலாகப் பதினைந்துநாளுஞ்சென்றதைவலதுகையாலேயொவ்வொருபிறங்கையாக நாடோறுமேற்றியேற்றிப்பொசித்து அபரபக்கத்துப்பிரதமைமுதனாடோறுமொவ்வொருபிறங்கையாகக்குறைத்துப்போஜனம்பண்ணிமுடிக்கிறது செலசாந்திராயணவிரதமெனவறிக. உதகோதனமென்னுமிரண்டினையும்பொசியாமற் பன்னிரண்டுநாட் சுத்தப்பட்டினியே யிருக்கை பராகமென்னுங்கிருச்சரமாம், ஆதித்தியனுதியாநின்றபகலிலே மூன்றுநாண்மத்தியானமொருநேரம் பொசித்தலு மதற்கடுத்த மூன்றுநாளொன்றுந்தொடாமல் அயாசகமாய்வந்ததைப்பொசித்தலுமூன்றுநாளிராத்திரியொருநேரம்பொசித்தலு மூன்றுநாள்வாயுவேயாகாரமாகப்பொசித்தலுமாகப் பன்னிரண்டுநாளுநியமத்தோடிருத்தல்பிராசாபத்தியமென்னுங்கிருச்சரமாம். எ-று. (௨௪)

இதுவுமது.

அருந்துகவாரமுற்றேயமொருமூன்றுபகலுளமுனிகளுமாவின்பாலருந்துகமுப்பகலு, மருந்திடுகவமுனிகளுமானெய்முப்பகலுமருந்தாதேயாதேனுமாகபகன்மூன்றன், வருந்துதலிம்முறைதன்னின்மூன்றென்றுதினமுமதித்திடுகதத்தகிருச்சரமென்றேமதியோ, ரருந்துதன்முப்பலப்பான் மூவைந்நாறுதினமுமதிதபனமாமென்றேயறிககிசறுப்பார். ॥

எ-து தாஞ்செய்தபாவத்தைப்போக்கவேணுமென்றறிந்தவர், வெந்நீரைமூன்றுபகலுஞ்சுடுகிறபசுவின்பாலைமூன்றுபகலுஞ்சுடுகிறபசுவினெய்யைமூன்றுபகலுமருந்துக ஒன்றும்பொசியாமல்மூன்றுநாளுமிருக்க, இப்படியேயருத்துமுக்கப்பன்னிரண்டுநாளிருப்பதுதத்தகிருச்சரமெனவறிக. இருபத்தொருநாண்மூன்றுபலப்பசுவின்பாலைப்பொசிக்கிறது அதிதபனமென்னுங்கிருச்சரத்தின்முறைமையென்றறிக. எ-று

வியாதிமுதலியவற்றால்விதிதனுட்டிக்கற்கு அசத்தராயிற்பிராசாபத்தியத்துக்கொரு பசுவுஞ்சாந்தபனத்துக்கதிலிரட்டியுமதிகிருச்சரம்பராகந் தத்தகிருச்சரமிவற்குமும்மூன்றுபசுவுஞ்சாந்திராயணத்துக்கெட்டுப் பசுவுங்கொடுக்க, அதிக்கிருச்சிரத்தற்குமூன்றுபசுக்கொடுக்க, பசுக்கொடுக்கமாட்டாதார்கோமூலியம் பன்னிரண்டுபணங்கொடுக்க, இம்முறையேகொடுக்கிலந்தந்தவிரதமனுட்டித்தபலத்தைக்கொடுக்குமெனவறிக. (௨௫)

### திருவிழாமுதலியவற்றிற்குப்பரிகாரமுணர்த்துகின்றார்

தேவனது திருவிழவஞ் சேவிக்கயாருந் திரண்டதிரு வீதிதனிற்றீண்
டார்தீண்டிடினும், பாவமிலைப்பரமேசன்பதிவணங்கச்செல்லும் பரிசினுமா
மகந்தனினும்பணிமொழிதன்பாணி, மேவியிடும்விவாகத்தும்வெண்பொடி
ப்பூசிடுக விரிபுனலின்மூழ்கிடுக மற்றையன வேலைப், பாவியரைப்பார்த்தா
னேலகோரசதாட்டகத்தைப்பகர்ந்திடுகபரிசித்தான்பகர்கபுனல்படிந்தே. *

எ-து. சிவனது திருவிழாவிற்றிருவீதியின்கண் ஜனங்களை நெருங்கிச் சேவை செய்யுமிடத்துத் தன்சாதியாயினும் பிறசாதியாயினுந்தீண்டில்அக்காலம் பரிசனதோடமில்லை சிவஸ்தலதரிசனத்துக்குப்போகுங்காலத்தும்அக்கினிட்டோமமுதலியயாகத்தின்கண்ணும் பார்ப்பார்முதலாயினோர் விவாகஞ்செய்யுங்காலத்துந்தீண்ட அருகரல்லாதோர்தீண்டினக்குற்றம்போம்படிக்கு விபூதியுத்தூளனம்பண்ணுக, இங்ஙனங்கூறியகாலங்களின்றியொழிந்தகாலங்களிற்பரிசனமாகிற் றடாகமுதலியவற்றின்மூழ்கிற்குற்றம்போம், அதிபாதகமுதலிய பாவங்களைச்செய்த பாவிகளைப் பார்த்தானாகிலகோரத்தைநூற்றெட்டுருச்செபிக்க, அவர்களைத் தீண்டினானாகில்முழுகியகோரத்தைநூற்றெட்டுருச்செபிக்க. எ-று.

(௨௧)

### அதிபாதகாதியரன்னமருந்திற்குற்றமுணர்த்துகின்றார்.

அருந்தினரேலக்கணமேபதிதரெனவறிகவதிபாதகாளமமரர்ப்பழிப்பா
ரன்ன, மருந்தினரேலொருமாதமுறப்பதிதராவரபவாதர்பிசினர்பிளையற்ற
ரொன்றிவர்சோ, றருந்தினரேல்வருடமுறப்பதிதரெனவறிகவஞ்சாச்சூத்
திரர்கரிசுக்களிபில்லாவனையர், பொருந்தமணம்புணர்நாண்முன்புரிவார்
புல்லறிவரெனுமிவர்தமன்னத்தைப்புசித்தார்கடாமும். *

எ-து சிவநிந்தைபண்ணினவர்களன்னத்தைப்பொசித்தவர்களந்நேரமேபதிதராவர்கள்தேவர்களைத்தூடணஞ்சொன்னவர்களன்னத்தையொருமாத மிடையறாது பொசித்தவருமந்நேரமேபதிதராவர்கள், ஒருவர்சொல்லாத வார்த்தையைச்சொன்னதொன்றுபடுதூறுகச்சொன்னவர்களன்னமும்பிராசகரத்துடனேகோட்சொல்லுகிறவரன்னமுமலடியன்னமுமொருவருடமிடையறாதுபொசித்தார்களாகிலவர்களப்பதிதரெனவறிக, பாவத்துக்குப்பயப்படாதசூத்திரருடைமையுமான்மாக்களிடத்திலிரக்கமில்லாதவிராசாக்களுடைமையும்விவாகம்பண்ணுவதற்குமுன்

ருகப்பிராமணர்மாயேசுரர்க்கென்றுகொடுத்தம்பண்ணினஉடைமையையுமுயர்ந்தசாதியாயினுமிழிந்தசாதியாயினுமற்பராயகதியில்லாதவர்களாயினவர்களுடைமையையும் ஒருவருடம்படையாமறுத்துப்பொசித்தவர்களும்பதிதராவர்கள். எ - று (௨௭)

இதுவுமது.

கன்னிகையைவிற்பார்கள்பரதாரந்தன்னைக்காமுறுவார்மனைவிருத்தைகண்டறிந்துந்துறவார், பொன்வினைசெய்கொல்லர்மரக்கொல்லர்பொருட்பெண்டிர்புலைவினைஞர்மதுவினைஞர்புரந்தாரைமறந்தார், கொன்னனைமேயாடுமவராடுமவர்வாளாற்சேவிப்பார் பூவிற்பார்செக்கார்சொக்கிடுவார், தெள்ளுமிவரெழுவாயரன்றியருந்தேவிழுக்காணவனமுளத்தைப்பழுக்காக்கிவிடுமே. *

எ - து. உத்தமமாகியபிரமமுதலியவற்றிலொன்றுங் கன்னிகையைத்தானஞ்செய்யாமற்பணம்வாங்கிவாழ்க்கைப்படுத்துமவரும் பரதாரங்களையிச்சிக்குமவருமனைவிபிறர்முகம்பார்க்கவவளைநீக்காதுவாஞ்சித்துக்கூடுமவரும் பொன்முதலியபஞ்சலோகங்களைப்பணிபண்ணுந்தட்டார்தச்சர்முதலாயினோரும் பரத்தையரும் ஆட்டுவாணியருங்கள்வாணியருஞ்செய்நன்றிகொன்றவரும்பலரையும்புகழாகப் பாடித்திரிகிறவருங்கழைக்கூத்தாடியரும் வாளாற்சேவகஞ்செய்கிறவருங்கவனத்துப்பூவையெடுத்துமுடிபூவுக்குவிற்கும்பூவாணியருமெண்ணெய்வாணியருஞ்சந்தையிற்சொக்குப்பொடிபோட்டுக்களவுசெய்பவருமாகியவிவர்கண்முதலாயினோரன்னமுதலியவற்றைவாங்கியொருக்காலும்பொசிக்கக்கடவனல்லனிவர்களன்னங்குற்றமுள்ளவாதலாலதனைப்பொசித்த வான்மாக்களுக்குச்சித்தசுத்தியைப்பண்ணாமற்பாவத்தையுண்டாக்கும். எ - று. எழுவாயர் - எ - து - கன்னார் - கொல்லர் - வண்ணார் - குருநிந்தனைசெய்வோர் - பறைசாண்டிமுதலாயினோரெனவறிக. (௨௮)

அதற்கோர்புறனடையுணர்த்துகின்றார்.

அழுக்குளமேபாவத்தையாக்குதற்குத்துணியுமவ்வினையாலினையாத்தினைமுழுங்கியழுந்துவரோ, யிழுக்காமொழித்தவரோயிசைப்பார்களிற்றமேறிடுவர்பரலோகமின்புறவேயிருப்பர், வழுக்காயமொழிக்குமனமில்லாத்துகவம்புரிந்துமறந்திடுவர்பிறப்பினையுந்திறந்திருப்பர்சிவன்றாள், சழக்கானமனத்தாரோசடலத்தைப்பேணித்தமக்குவருந்துயரத்தைச்சாற்றினுந்தாங்கேளார். *

எ - று அந்தஅழுக்கானவுள்ளமேயான்மாக்களுக்குச்சித்தசுத்திபிறவாமற் பாவத்தைச்செய்தற்கொருமைப்பாட்டினைக் கொடுக்குமதனாலேபாவத்தையே செய்துநரகத்திற்போட்டவருந்திநோவர்கள், ஆதலாற்பொல்லாதென்றவவர்களன்னத்தையொருக்காலும் பொசியாமற்றள்ளினர்களேநல்வினைப்பயனையடையக்கருதுமவர், அதனாலீசுவர்க்கமுதலியவுலகங்களையடைந்தாண்டுள்ளபோகங்களைப்பொசித்திருப்பர்கள், குற்றத்தையுடையசரீரத்தைமேலெடாதபடிக்குப்பூமியின்கண்ணேவந்தரியதவசுகளையுஞ் சிவபூசைகளையும்பண்ணியதினாலே யொருகாலுஞ்செனனமெடார்களாதலாற்சிவனது திருவடிநிழலின்கீழே சிவானந்தானுபூதியை யனுபவித்துக்கொண்டிருப்பர்கள், மனக்கோணலுடையபொல்லாதவர்களிம்மையின்கட்சரீரத்தையே போற்றிப்பொல்லாதவர்களன்னத்தைப்பொசித்ததனாலே மறுமையின்கண்ணரகத்திலேவிழுந்தழுங்குமுறைமைகளை நூல்களினாலேபலகாற்சொல்லினுமதனைக்கேளார்கள். எ - று பிறப்பினையுமென்றவும்மையான் - மரணத்தையுமுறுவர்கள்.

(௨௧)

விவாகமுதலியவற்றிற்பொசிக்கிற்பரிகார முணர்த்துகின்றார்

அருந்தினனேல்விவாகத்தி லகோரசதமனைகவாயிர முச்சரித்திடுக நாலைநாளருந்தி, னருந்தினன்சீமந்தத் துமாயிர முச்சரிக்க வவ்வளவே நாமகரணத்தருந்தினனு, மருந்தினனேலன்னத்தைய ருந்திடு நாளு மவ்வளவேயுச்சரிக்கவறைந்திடுகவுயுக, மருந்தினனேற்சிரார்த்தத்திற்சபிண்டிதனில நந்திலையாயிரமப்பாலருந்திலறைகவொருநூறே.

எ - று. ஒருவன்விவாகத்திலுண்ணாதியல்லாதார்பொசிக்கிலகோரநூறுருச்செபிக்க, நாலாநீர்ச்சடங்கிலுஞ் சீமந்தக்கலியாணத்திலும் நாமகரணகாலத்திலும் ஊட்டுக்கலியாணத்திலும்பொசித்தானாகி லகோர மாயிரமுருச்செபிக்க, ஏகோதிட்டத்திற்பொசித்தானாகி லகோரம் பதினாயிரமுருச்செபிக்க, சபிண்டிகரணத்திற்பொசித்தானாகிலகோரமாயிரமுருச்செபிக்க, வருடந்தோறுஞ்செய்யுந்திவசத்திற்பொசிக்கிலகோரநூறுருச்செபிக்க. எ - று.

வந்ததுகொண்டுவாராதது முடித்த லென்னுவர் தந்திரவுத்தியால் திரை யிபக்ஷகம். ஊனமாசிகம். ஊனஷாண்மாசிகம். ஊனாப்திக மிவைகளிற் பொசித்தானாகிலகோரமோவ்வொன்றுக்காயிர முருச்செபிக்க, பும்சவனத்துக்கு நூறுருச்செபிக்கவெனவறிக.

[௩௰]

இதுவுமது

அறிவழிந்துவீரியத்தையவலமலசலத்தை யருந்தினனுமதோசாதியகத்தினருந்தினனு, மெறிவிழிப்பட்டிராங்கிமனம் புலைச்சியிலைத்தோளையினைங்கவெனுமிழுதையுமென்றியம்பியவெல்லோரு, மறிவுறவேயகோரத்தையயுதமுறவறைந்தேயருந்துகவானைந்தினையுமமலனைனிமுடியிற், செறிவுறவேதிளைத்தாட்டிமுப்பொழுதும்பூசை சிறப்புறவேசெய்விக்கவவ்வினைகளறும்.

எ-து. சித்தோன்மத்தத்தினாலேயறிவழிந்துயிந்திரிய முதலியவற்றைப்பொசித்தவனுந்தான்பொசித்தற்கருகமல்லாத வீனசாதிகள் வீட்டிற்பொசித்தவனும்வெருவுதலையுடையவிகாரப்பார்வையினாலேமனதிரங்கியத்தப் புலைச்சியைத்தீண்டக்கருதுமறிவிலனுமாகியவிம்மூவரு மிப்படிசெய்தோமென்றிரங்கியகோரத்தைப்பதினாயிரமுருச்செபித்துமூன்றுகாலமுஞ்சிவனுக்கு விசேடபூசையாகப் பூசிப்பித்துக்கௌவியத்தையாட்டியதனைப்பொசித்திருக்கிலக்குற்றம்போம். எ-று. இளைத்தல் பலகாற்செய்தல் (௯௧)

கனகமுதலியபாத்திரங்களினதுசுத்திபிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

அருங்கனகபாத்திரமுன்மரப்பலகையுந்தமமுனீராற்சுத்தியுமமருவருப்புண்டாகிற், பொருந்திவிடும்புளிதங்கோசலத்தான்மண்ணீராற்பொருகரியின்மருப்புவளைசுத்திமுதற்புளிதமிகுத்துகடைந்திடவுமீரா ஞடோறுமாம்புளிதங்கோமயத்துமறலாறுமாறு, மெரிந்தபுனன்மண்ணனிவற்றாலிலங்கியிடுமவலமெய்திடிற்புளிநீராற்றுயிரந்தாவிலங்கும் *

எ-து பொன்முதலியபஞ்சலோகங்களினாற்பண்ணைப்பட்ட பாத்திரங்களைந்தாருவினாற்பண்ணைப்பட்ட சருக்குச்சருவமுதலானதும்வெந்நீராற்சுத்தி, மகளிர்சூதகமுதலியவருவருப்புற்றால் வெள்ளிமுதலியபாத்திரங்கோசலத்தாலுமுவர்நீராலுஞ்சுத்தி, யோரிற்பொரப்படாநின்றயானைக்கோடு-சங்கு, முத்துச்சிப்பியிவையிரிந்துகடைந்திடின்முதற்சுத்தி, நித்தியசுத்தியுமிக்காக்கலாற்றுன் அவைகளிலசுசியுறிற் கோமயத்தாலுந்தண்ணீராலும்வெந்நீராலும்புதுமண்ணாலுஞ்சுத்திசெய்க, செம்பிலசுசியுண்டாகிற்புளிநீராற்சுத்தியுமாம் எ-று

அவலம் - என்பதனையிருபாலுங்கூட்டுக, உரையிற்கோடலென்றுமுத்தியாற்பொன்மஞ்சட்பொடியாலும்வெள்ளியுப்புக்கடலிக்காச்சலாலுஞ்சுத்தியென்க (௯௨)

வெண்பொடியாற்றண்புனலால் வெண்கலமுன்விளங்கும்வெதுப்பிய நெய்தடவியமலமுத்திபிடவிளங்குந், திண்கலசவெண்கலமுன்றீண்டிய பிடிற்காகஞ்சிறப்புடையகௌசிகமும்பெருங்கடுகுசெறிந்த, தண்புனலாற் றுதபாதியரிட்டத்தைக்கலந்ததண்ணீரால்சிறுதிதடந்திரைநீர்தன்னுன், மண்பயிலக்கோசலமும்வாரியும்வார்த்திடினேமலினமுறினசினத்திற்புனிதமிகவாய்க்கும். *

எ - து வெண்கலபாத்திரமுதலானவைவெண்ணீற்றாலுஞ்சலத்திறுவுஞ்சுத்தி, யவற்றைக்காக்கைதீண்டிற் பசுவின்வெண்ணெயுருக்கித்தடவியமலிற்சாய்ச் சிற்சுத்திசிறப்பினையுடையபட்டாடைகள்வெண்கடுகுகூடினநீராற்சுத்தி, தருப்பைமுதலாயினமோர்சேர்ந்தசலத்தாற்சுத்தி, புலித்தோன்முதலானவைபெரியகுளங்களிற்றோய்த்தெடுக்கிற்சுத்தி, தோன்முதலியவற்றிலசுசிபடிற் புற்றுமண்ணாலுந்தண்ணீராலுங்கோசலத்தாலுங்கழுவிற்சுத்தியாம் எ - று கவுசிகமென்றவும்மையால்வெண்பட்டுமலைபிலுண்டானசெம்மறியாட்டுக்கம்பளமுங்கவரிமாமயிருமுதலாயின பூவம்பழத்துடன்கூடினநீராற்சுத்தி. அசிறுதியென்றதருன்மரவுரியுமொங்கிலாற்செய்ததுமெனவறிக (௬௬)

அன்னசுத்தியுணர்த்துகின்றார்

பாண்டத்திற்பதமதனைப்பற்றிடினேவாயாற்பன்றிகரநாய்பூனைகாகமிவற்றொன்று, வேண்டற்கபாண்டத்தோடன்னத்தைவிடுகமிக்கவிராசியினேகதேசத்தின்வியாவிற், சீண்டெற்றிச்சேடத்திற்றிருநீறு கொழுமிக்கெவவியத்தும்புரோக்கிக்கவுண்கலத்திற்கெழுமின், மாண்டற்றமசகாதியுறும்புறத்தைமாற்றிமற்றையபாற்றிருநீறுமருவுதலின்வரமே. *

எ - து. பன்றி. கழுதை. நாய். பூனை. காகம். இவற்றொன்று பாண்டச்சோற்றில்வாயிடிலதனைப்பாண்டத்துடனேபுறம்பேயெடுத்துப்போடுக, பாவாடையிற்சொரிந்திருந்தமிருந்தவன்னத்திலொருபுறத்திற்பன்றிமுதலியவாயிட்டதாகிலவ்வாயளவுமெடுத்துப்புறம்பேபோட்டுநின்றவன்னத்தைத்திருநீற்றாலும்பஞ்சகௌவியத்தாலுஞ்சுத்திசெய்க, அசனஞ்செய்கையி லுண்கலத்துக்கொசுகுமுதலாயினவிழுந்தசெத்ததாகிலவ்வளவுமெடுத்துப்புறம்பேபோட்டுக்கையைக்கழுவிக்கொண்டுமேசிடித்தவன்னத்தைத்திருநீற்றாற்புரோக்கித்துச்சுத்தி செய்யிற்பொசித்தற்குச்சிறப்பாம் - எ - று

உளையிற்கோடலென்னுமுத்தியாற்பூனை-கிரி-பெருச்சாளி- முதலாயினவன்னமுள்

ளபாண்டத்திலவாயிடிலபாண்டத்தையேழுதரமத்திரமந்திரத்தாற்கழுவிப்பின்பு தருப்பையாற்பரியக்கினிகரணஞ்செய்யிற்சுத்தியாம்,அன்னமில்லாதபாண்டமாயினதற்கதற்கேற்றசுத்திசெய்க. (௩௪)

தேன்முதலானவைக்குச்சுத்தியுணர்த்துகின்றார்.

தேன்வடித்துச்செந்தழலிற்செறிக்கவுறும்புனிதந்தெண்ணீரிற்செறித்துப்புக்காய்ச்சியிடச்சிறக்கு, மான்வெண்ணெயாம்புனிதமழலின்வெதுப்பிடலுமறலெண்ணெயாதியருக்கியத்தாலும்புனிதங், கான்மலிந்தகற்பூரங்குங்குமங்கத்தூரிகமழ்சாந்துபுழுகு சவாதெனுமிவையுங்கமழு, மான்பாலும்புனிதங்கன்றருந்தியபின்முலையுங்கழுவியறலாற்கரந்தேவெதுப்புதலுமழலின். *

எ - து தேனைவத்திரத்தால்வடித்துக்காய்ச்சிற்சுத்தி, யுப்பைத்தண்ணீர்வார்த்துக்கழுவிக்காய்ச்சிற்சுத்தி,பசுவின்வெண்ணெயையுருக்கிவடிக்கிற்சுத்தி, திருமஞ்சனமும்நல்லெண்ணெமுதலாயினவுமணம்பொருந்தியகற்பூரமுதலாயினசுகந்ததிரவியங்களுமருக்கியப்ரோக்கணத்தாற்சுத்தி, கன்றூட்டியாவின் முலையையுங்கழுவிப்பாலைக்கறந்துகாய்ச்சிற்சுத்தியாம். எ - று ஆதியென்றதனாற்றிரணகாட்டமுதலாயினவுமுலையுமென்றவும்மையாற்கையையுமெனவறிக. (௩௫)

இலிங்கசுத்திமுதலியவற்றையுணர்த்துகின்றார்

தெண்ணீராற்கோசலத்தாற்றிருநீற்றான் மயத்தாற் சிறந்துநிலப்புற்றுமணாற்சிவலிங்கஞ்சுத்தி, விண்ணிவந்தவிலவத்தின்பத்திரத்தின் சாற்றான் விசேடித்தசுத்திநிவேதனபொன்மாதி, புண்ணியவற்கியசலத்தைப்புரோக்கிக்கப்புனிதம்பொருவரியபரமசிவன்பூரணத்தைப்பிரி, னெண்ணவலார்க்குயிர்ச்சுத்தியேனையதத்துவத்துமிவையைந்தமுறையறிபினிவைகளுஞ் சுத்திசெய்தும். *

எ - து கோசலங்கோமயந் திருநீறு சுத்ததலத்துப்புற்றுமண்குளிர்ந்ததிருமஞ்சனமிவைகளாற் சிவலிங்கஞ்சுத்தி, யிதுசாமானியசுத்தி யாகாசவளவாகவளர்ந்தவில்வப்பத்திரத்தின்சாற்றினாலே சிவலிங்கத்தையபிடேகஞ்செய்யிற் பிராயச்சித்தத்திலதற்குவிசேடசுத்தியாம், சிவனுக்குநிவேதனம்பண்ணச்சமைத்தஅன்னாதி, யருக்கியசலத்தினாற்புரோக்கிக்கிற்சுத்தியாம், ஞாதாக்களானவர்கள் ஒப்பில்லாதபரமேசுரன் ஆன்மாக்களிடத்தில் வியாபித்திருந்தமுறைமையை யுள்ளபடிய

றியினவர்களுக்குயிர்ச்சுத்தியாம்,நாதமுதன்மண்ணீறுனதத்துவங்களிலேசிவன்வி யாபித்திருக்குமுறைமையையுள்ளபடியறியிற்றத்துவசுத்தியாம் எ - று (௩௬)

நித்தியானுட்டானம் பூசைதவறிற் பரிகாரமுணர்த்துகின்றார்.

சாற்றிடுகதவறிடினோர்சந்தியசாத்தைச்சதமுறவேசதுர்த்தியெனுஞ் சந்திநிலைதவறி, னேற்றியொருநாற்குணிதமியம்பிடுகதவறினெழிற்பூசை யகோரத்தையெண்ணுகவாயிரத்திற், போற்றியுடன்பூசையினைப்புரிந்தி டுகவறிந்தான்புகன்றிடுகவிருகுணிதம்புசிப்பொழிகவழலி, னேற்றிய வி யியற்றிடுகபன்னாளுந்தவறினிந்தமுறையறிந்தியற்றப்பூசனை வாய்த்திடு மே. *

எ - து முதற்காலம் அபுத்திபூருவமாகச்சந்தியாவந்தனம் பண்ணுதொழி யினக்குற்றம்போம்படிச்சத்தியோசாதத்தை நூறுருச்செபிக்க, நாலாஞ்சந்திதவ றில் அம்மந்திர நானூறுருச்செபிக்க, புத்திபூருவமாகி லிருமடங்குசெபிக்க, ஒ ருகாலஞ்சிவபூசையையபுத்திபூருவமாகச் செய்யாதொழியிலகோரத்தையாயிர முருச்செபித்துப்பின்பு சிவபூசைசெய்யிலக்குற்றம்போம், புத்திபூருவமாகவொ ருகாலம்பூசைபண்ணுதொழியினுபவசியாயிருந்து அம்மந்திரத்தை யிரண்டாயிர முருச்செபிக்க, பலநாளும் பூசைதவறிடிலிம்முறையேற்றியேற்றிச் செபஞ்செய் து பவசியாயிருந்து அக்கினிகாரியஞ்செய்யிலக்குற்றம்போம் எ - று

ஏற்றியென்னுங் கருத்தாலிரண்டாஞ்சந்திமூன்றாஞ் சந்திதவறிடில் அபுத்தி பூருவ த்திற் இருநூறு முந்நூறும் புத்தி பூருவத்திற்கிரட்டியுஞ்செபிக்க, சமைய் புத்தி ரன் - சாதகன் - போதகன் - இந்நால்வர்க்குமந்நாற்சந்தியுமெனவறிக, ஒருநா ண்முதற் பத்துநாளீறுகப் பூசைசெய்யாதிருக்கி லொவ்வொருகாலப் பூசை க்கு மூவாயிர மூவாயிர முருவாக நாடோறுமேற்றிச்செபஞ்செய்க, பத்துநாளைக் குமேற்பதினைந்து நாளளவும் பூசியாதொழியினுளொன்றுக்கு முப்பதினுயிரமுரு ச்செபித்துக்கலசத்தாபனமும் பண்ணியபிடேகஞ்செய்தோமமுஞ்செய்யிற் குற்ற ம்போகுமெனவறிக, சத்தியோசாதத்தைசாதமென்றதுதலைக்குறை [௩௭]

எ-து. சிவலிங்கமானது அக்கினியினாலே திருமேனியிற் பூர்வவன்னம்விட்டு வேறுவன்னமாகக் காண்கினுஞ் சிதறிப்போகினு மிப்படிவந்து விட்டதே யென்று மனதிற்றுயரமுற்று ஆசாரியனைவணங்கி யிக்குற்றம்போக்கியருளவேணுமென்று விண்ணப்பஞ்செய்து பவசியாயகோரத்தை நூறாயிரமுருச்செபித்து அவ்வாசாரியனால்வேறொருலிங்கத்தை யெழுந்தருளப் பண்ணிக் கொண்டு பூசைசெய்க, கள்வர்முதலாயினோர் சிவலிங்கங்கொண்டு போகிலது வருமோவென்று நாற்பதுநாளு பவசியாயிருந்து பின்பு முற்கூறியபடிபரிகாரஞ்செய்து எழுந்தருளப்பண்ணிக் கொள்க அக்கினியந்தச்சிவலிங்கத்தைத்தீண்டிற் பழுதிலவாயிருக்குமாகிலுபவசியாய்முப்பதினாயிரமுருச்செபிக்கிலக்குற்றம்போம் அப்படிச்செய்யாது பத்தியினாலுடல்விடுவோமென்கைபொல்லாது. எ-று மற்றுமென்றதனால்-வானரம்-காகம் - பருந்து - எலி - முதலாயினவற்றாலபாயம்வரினுமிம்முறைசெய்க (௩௯)

ஊனுறுபடிற்றிருமேனிபரார்த்தத்துமொழிக்கவுரித்தாகுமற்றொன்றுச
யம்பொழுவாயொழியேற், கூறிடுகவீரயுதம்பதமேனிகுழுகிற்கடங்கிடினி
ற்றாளிபடிற்கூறுகவோரயுதம், நூறுமிருநூறுமுறநுவல்கநிழல்கடந்தா
ன்பீடத்திற்சாய்ந்திடினுமவ்வளவேநுவல்க, வாயிபிடவபராதமுருண்டிடி
னாயிரமீராயிரம்பின்னும்முருண்டாலப்பாலோரயுதம் *

எ-து மானிடர்தாபித்தபரார்த்தலிங்கத்துக்கினிமுதலியவற்றாலூறுபடின் ஒழிக்க, மற்றையான்மார்த்தலிங்கத்தினுஞ்சுவயம்பு முதலியஇலிங்கத்தினுமூறுபடினொழியற்க, சிவலிங்கத்திற்கால்படினுங்கடக்கினுமிருபதினாயிரமுருச்செபிக்க, காலிற்றாள்திருமெனியிற்படிற்பதினாயிரமுருச்செபிக்க, இலிங்கத்தின்சாயைகடக்கினுமெழுந்தருளியிருக்கிறபீடத்திற்சாயினுமகோரத்தைமுந்நூறுருச்செபிக்க, பீடத்திலொருகாலுருண்டாலகோரமாயிரமுருச்செபிக்க, இரண்டுதரமிலிங்கமுருண்டதாயிலிரண்டாயிரமுருச்செபிக்க, இரண்டுதரத்துக்குமேற்பட்டுருண்டுகீழ்வீழிற்பதினாயிரமுருச்செபிக்க. எ-று அவ்விலிங்கத்திலேயரையங்குலத்துக்குமேற்படப்பழுதாயின் அவ்விலிங்கத்தையொழிக்க, பீடத்திலேமூன்றங்குலத்துக்குமேற்பழுதாயினத்தப்பீடத்தையொழிக்க, அந்தலிங்கப்பிரமாணத்தில் வேறொருலிங்கத்தில் முன்புபோலமானிடமாகத்திருமேனியைச்செ

ய்துபிரதிட்டையையவ்வழியேசெய்க, சயம்புதைவிகமாரிடங்கா ணவமிவைகளி ற்பழுதாயினுமக்கினிவாதையினாற்பழுதாயினு மந்தச்சிலையைத்தானே முன்புபோ லேசந்திக்கவைத்துத் திடமுறுதற்பொருட்டுச் செம்புமுதலான வற்றாற்பட்டங்க ட்டியதனையேபூசைசெய்க, பீடம்பின்னமாகில்சீர்ணோத்தாரணவிதியாலதனையெ டுத்துப்போட்டுப் பெண் சிலையினாலேமுன்புபோலே திருமேனிக் கொண்டுபிரதிட் டைசெய்க [௬௰

ஆதார நிராதாரத்தினால் வருங்குற்றத்துக்குப் பரிகாரமுணர்த்து கின்றார்

அயுதமியம்பாதாரத்தொடுவிழினேசானுக் காதாரமறவிழினேயீரயுத
மறைக, வயுதமிரண்டறைந்திடுகவாய்த்திவலையணுகிலறைந்திடுகமூன்றயுத
மணுகிடினேகோழை, நியுதமுறநிகழ்த்துகவாழ்நீர்தன்னிற்படியினின்மாலி
யப்புனலிற்படிந்திடினுநியுதம், விதிவினைதானிலைப்புருடமாத்திரத்தின்வீழ்
ந்துவிண்டிடினேசிவலிங்கம்பீடம்பிண்டிடினும் *

எ-து பெட்டகக்கோயிலுடனே சேமப்பிழைவரிற்சானுக்குப்பதினாயிர முருச் செபிகக, ஆதாரமின்றிஇலிங்கமாத்திரஞ்சேமப்பிழையாகிற் சானுக் கிருபதினாயிர முருச்செபிக்க, வாய்த்திவலைசிவலிங்கத்திற்றெறிக்கி லிருபதினாயிரமுங்கோழைப டின்முப்பதினாயிரமுஞ்செபிக்க, பெரியமடுக்களிற்கைதவறிவீழினூறாயிரமுருசெ பித்துமுடித்தவாறேயாசாரியனாலே வேறொருலிங்கத்தையெழுந்தருளப்பண்ணிக் கொள்க. நின்மாலியபாத்திரத்திலேவிழினூறாயிர முருச் செபிக்க, ஒருபுருடப்பிர மாணத்தினின்றுஞ்சேமப்பிழையாய்ச் சிவலிங்கம் பீடமிவைகளிற் பின்னலங்கன மானாலதற்குப்பரிகார மில்லை. எ- று. [௬௧

ஆசாரியர்முதலாயினார்நிழலைக்கடக்கினுநைவேத்தியமாதியிற்றாட ணம்வரினுமதற்குப்பரிகாரமுணர்த்துகின்றார்

தேசிகன்றனிழல்கடந்தார்செபிக்கசதத்தினையந்திருவேடத்தார்நிழலை
க்கடக்கினுஞ்செப்பியவா, றுசகலவுகோரத்தையந்தணர்தந்நீழலாவினிழல்
விளக்கினிழல்கடந்திடினூறறைக, வீசனதுநிவேதனத்திற்கிருமிமயிரிணங்
கிலிழித்திடுகநிவேதிக்கிலியம்பிடுகவொருநூ, றுசகலவிருதூணி யரிசியுமர்
பிழிவுவிருநாழியையுழக்கெக்காலத்துமாகா. *

எ-து. ஆசாரியருடையநிழலைக்கடக்கில்முந்நூறுருச்செபிக்க, சாதாகர்புத்திரர்சமையிமுதலியதிருவேடத்தார்நிழலைக்கடக்கினு மப்படியே பார்ப்பார் பசுத்துருவிளக்குஇவைகளினிழலைக்கடக்கினூறுருவகோரத்தைதச்செபிக்க, இட்டலிங்கத்துக்குவைத்தநைவேத்தியாதிகளிற் புழு மயிர் முதலானசெந்துக்கள்விழுந்தாலதனைநைவேத்தியம்பண்ணுதொழிக, அஃதன்றிக்கிடக்கின்றதறியாமல் நைவேத்தியம்பண்ணிணுலுகினூறுருச்செபிக்க, இட்டலிங்கத்துக்கு உத்தமம் இருதூணி மத்திமம்இருநாழிஅதமம்ஐயுழக்குஅமுதுபடிஆதலால்அவ்வதம மொருகாலுநைவேத்தியத்துக்குஆகாது. எ-று.

உத்தமத்திலுத்தமம். இருதூணி. மத்திமந்தூணி அதமங் குறுணி. இருநாழிஐயுழக்குஅமுதுபடிவைக்கிற்பைசாசபோசனமானதா லொருகாலு நைவேத்தியத்துக்காகாதென்றுரைப்பாருமுளர். (சஉ)

இட்டலிங்கத்தைப்பார்ப்பார்முதலாயினூர்தீண்டிற் பரிகாரமுணர்த்துகின்றூர்

தீக்கையிலா வந்தண ராதியரிட்ட லிங்கந்தீண்டியிடிற் சிறப்புறவேபூசையினைச்செய்தே, நோக்கிமுறையுறநூறு நுவல்க விருநூறு முந்நூறுநானூறுவாமசமையத்தார், மூர்க்கரொனும் வேடர்முதலோர் தீண்டினபுதமொழிந்திடுகநாய்காகந்தீண்டின்மூவயுத, நாய்க்கடுவான்றீண்டிபிடி னயின்றிடுகநியுதநம்பனுக்குப்பூசையினைச்செய்துவிதிநயந்தே. *

எ-து. தீக்கையில்லாதபார்ப்பார்முதல்நாலுவன்னத்தார்இலிங்கத்தைத்தீண்டிற்பஞ்சகெவ்வியமுதலியவற்ருல் விசேடபூசைபண்ணிப்பார்ப்பார்முதல்நால்வர்க்குநூறுநூருகவேற்றிச்செபஞ்செய்க, சைவபேதமாகிய மூலதந்திராவதசாத்திரத்தின்வழியனுட்டிக்கும் வாமசமையத்தாருமூர்க்கராகிய வேடர்முதலாயினவிழிகுலத்தாருஞ்சிவலிங்கத்தைத்தீண்டிற் பதினுயிரமுருச்செபிக்க, நாய்முதலானமிருகமுங்காகமுதலானபறவையுந் தீண்டில் முப்பதினுயிரமுருச்செபிக்க, நாய்க்கடுவானிலிங்கத்தைத்தீண்டினூருயிரமுருச்செபிக்க, இங்ஙனந்தீண்டலாகாதென்றபேர்கள்சிவலிங்கத்தைத்தீண்டில் விசேடபூசையைச்செய்க. எ-று.

உரையிற்கோடலென்பதனுற்சுவசந்தலளிதத்தின் வழியனுட்டிக்குந்தெக்கணசைவர்தீண்டிற் பதினுயிரமுருவும் வாமசமையி தெக்கணசமையி யிவர்களுடன்பேசினூறுருவுஞ் செபிக்க, நாய்க்கடுவானென்பதுசண்டாளன்பிராமணியுடனேகூடிப்பிறந்தவன். (சங)

செபமாலைமுதலியவற்றிற்குப்பரிகாரமுணர்த்துகிறூர்

திருவுருவுக்குரைத்தபரிகாரத்திற்பாதி செபமாலைசிவஞான மெய்ம்மொழியா
ய்க்கொண்டுசெய்க, கருதிடுககண்டைக்கும்பாதத்திற் பாதியைக்குவசியபிஷேகக
லசமதுகடுகித், திருமுடியைத்தினெடியிடுவீரயுதஞ்செபிக்கத்தின்னரியவ
ர்க்கியம்வீழிற்சிகையிலுருண்டிடிலு,மிருசதமாயிரமைஞ்ஞூறியம்புகநாய்க்
கடுவான்மெரிசிக்கிலைந்தயுதமியல்விதிசெய்திடைக்கே ※

எ - து சிவலிங்கத்துக்குக்கூறிய பரிகாரத்திற் பாதிசெபமாலை சிவாகமமு
தலிய விதைகளிற்காலபடிலும் விழிலும்பரிகாரஞ்செய்க சிவலிங்கத்துக்குச்சொ
ன்னதிலெட்டிலொன்றுமணிமுதலிய வுபகரணங்களிற் காலபடிற் பரிகாரஞ்செய்
க அபிஷேககலசங்கை நழுவித்திருமுடியிற்படிலிருபதினாயிரமுருச்செபிக்க சாமா
னியமாகப்படிற்பதினாயிரமுருசெபிக்க அருக்கியசெலந்தாபித்திருக்கையிலேவீழி
லிருநூறுருச்செபிக்க அஃதுடையிலாயிரமுருசெபிக்க வுப்பாத்திரமுருண்டதாகில
ஞ்ஞூறுருச்செபிக்க நாய்க்கடுவான் இலிங்கத்தைத்தீண்டிக்கிலைம்பதினாயிரமுருச்
செபிக்க ஆகமத்திற்சொன்னபடிசிவலிங்கத்துக்குப்பூசைசெய்தென்றவாறு

எழுவாயென்றதனால்வேதமிருதிபுராணமாதிகளெனவறிக (௬௬

சிவலிங்கமுதலியவிற்பார்க்குப்பரிகாரமில்லையென விர
ண்டுசெய்யுளாலுணர்த்துகிறூர்

சிவலிங்கம் விற்பார்கள்சிவஞானந்தனையுந்திருவுருவமதனையுந்தீரா
ப்பாதகரே, யவர்தமக்குப்பரிகார மறையாகமமுமாரணத் திலுங்கண்டிலரு
ளையாருயிர்க்குத்துணையைச், சிவனையுணர்பொருட்டாலேசெய் வாரேற்பு
சைசிறப்புடையவைதிகரோசைவரோதெளிந்தவெவரேனும்பதிதரவரொனவெ
ண்ணியிணங்கேலிற்புகுந்தாற்றீண்டியபாண்டத்தைவிடவிளித்தே ※

எ- து சிவலிங்கம்வேதாகமங்கள்சந்திரசேகரர் முதலானவிக்கிரகங்களைவி
லைகுறித்துவிற்றவர்கள், எப்போதுமொழியாதபாதகத்தையுடையவர்கள் அவர்க
ளுக்குப்பரிகாரமாகமத்திற்கூறிற்றிலர் வேதாந்தத்தெளிவாய்நிறைந்தவுயிர்க் குத்
துணையாகியசிவனைப்பத்தியினாற்பூசிப்பதன்றிவிலைபொருட்டுப்பூசிக்குமவர்கள்சிற
ப்புடையவைதிகராயினுஞ்சைவராயினுமற்றைத்தெளிந்தவெவரேனுமவர்களைப் ப
பதிதரொனவிசாரித்துஅவர்களுடனெருக்காலுங்கூடாதொழிக அவர்கள் பிறரொ
ருவர்வீட்டில் வந்துபாண்டத்தைத்தீண்டிலதனைக்கழித்துப்போடுக எ - று

ஆதிசைவராகியசிவப்பிராமணர்முதலானவர்கள்திரவியமுதலிய கூலிவாங்கிப்பூசிக்கிலவர்களுமப்படியோவெனில் அவர்களுக்கதுவே விகிதமானகன் மமாதலாற்குற்றமில்லையென்றுஆகமமோதுமெனவறிக (௬௫)

பொருணசையாற்பூசையினைப்புரிவார்கண் மாலைப்புரந்தரனைத் திசைமுகனைப்புரந்தரன்றன்சேனைப், பெருமானைவிநாயகனைப்பேரறங்காப்பாரைப்பேருலகத்தாயரெனப்பேசுமெழுவரையும், இருமையினும்பயனிழந் தாரவர்தம்மையினைங்கேலிகலாதேசாக் கியரோடேனையர்தம் மோடும், விரவிடினுந்திருநீறுமெய்ப்பூசியிடுகவிளம்பிடுகசிவனுமம்வெறுப்பொழிகவெவர்க்கும் ※

எ - து இங்ஙனங்கூறியதெய்வதைகளெல்லாரையுங்கூலிவாங்கிப்பூசிக்குமவர்கள் இம்மைமறுமையிரண்டினையுமிழந்தவர்களென்றுவிசாரித்தவர் களுடனொருகாலுங்கூடாதொழிக சாக்கியர்புத்தர்களிவர்களுடன்வாதஞ்செய்யாதவர்களைத்தீண்டினுமாகாதீர்த்தசெலத்திருலேதானத்தைப்பண்ணிவிபூதித்தானஞ்செய்துஇருபதினுயிரமுருவகோரத்தைச்செபிக்க மற்றையாவரிடத்தும் வெறுப்பின்றியொழுகுக எ - று ஏனையவொன்றதனுற்சாருவாகன்முதலியரெனவறிக இருபதினுயிரமென்றதுசொல்லெச்சம் (௬௬)

சிவதிரவியமுதலியதபகரிக்கிற்பரிகார முணர்த்துகின்றூர்

பாமசிவனுலையத்திற்பதார்த்தரணமற்றும் பற்றுதே பற்றியிடினழுங்கியுளம்பதைத்து, வெருவியபராதத்தைப் பொறுத்தருளென்றிறைஞ்சி விண்ணப்பஞ்செய்தபியா தெடுத்தவனுற் குணிதங், கருதி யெடுத்தவனைந்துகுணிதமுறக்கொடுத்துக்கடிதினியற்றிடுக சாந்திராயணத்தைக்கசிந்தே, மருமறையோர்பொருள்குரவனரும்பொருள்கொண்டானுமம்முறையிற்கொடுத்திடுகவவலவினையறுமே. ※

எ - து. திருக்கோயிலுக்குஞ் சிவனுக்கு முடையோக மல்லாத பதார்திரணமுதலானதாயினு மவைகளைத் தீண்டாதொழிக. அந்தத்திரணாதிகளை யபுத்திபூருவமாக வெடுத்தானாகிலிப்படிவந்ததேயென்று மனதிலே துக்கித்து ச்சுவாமியையிக்குற்றம்பொறுக்கவேண்டுமென்றுவேண்டிக்கொண்டு எடுத்ததற்குநான்மடங்குகூட்டிக்கொடுக்கிலக்குற்றம்போம். புத்திபூருவமாக வெடுத்தானாகில் ஐம்மடங்குகூட்டிக்கொடுத்துச்சாந்திராயண விரதத்தை யங்கேயநுட்டிக்கிலக்குற்றம்போம் பி

ராமணர் ஆசாரியர் திரவியத்தையபகரித்தவனும்அம்முறையேசெய்யிலக்குற்றம் போமென்றவாறு. (௬௭)

இதுவுமது

கூடியெடுத்தனுபவித்தான் பாதமுறக்கொடுக்கக் கூடினனைக்கூடினனு ம்பாதத்திற்பாதி, யோடிபிடவூனவினைவுரைத்திடுகநியுத முரூபிதனையடுத்த வனுமுரைக்கவதன்பாதங், கூடினனைக்கூடினனும் பாதத்திற்பாதிகூறிடுகவ ந்தணர்தம்பொருளினைக் கொண்டானும், பாடிய விம்முறை செபத்தைப்ப ணிற்றீருமந்தப்பாவவினையல்லதழற்குழிதன்னிற்படுத்தும். *

எ- து. சிவதிரவியத்தையொருவனுடனேகூடியெடுத்தனுபவித்தவன் அதிலைத் தொன்று கூட்டிக் கொடுக்க அதனைக் கூடியெடுத்தவனுடனே கூடினவனு மெட்டி லொன்றுகூட்டிக்கொடுக்க. அதனைபுத்திபூருவமாகயெடுத்தவன் அதற்கஞ்சுகுணி தங்கொடுத்துவிரதமனுட்டித்தக்குற்றம்போம்படி யகோரமந்திரத்தை நூறுயிரமு ருச்செபிக்க. எடுத்தவனுடனே சேர்ந்தானுமதி லைத்தொன்றுசெபஞ்செய்க. அத னையெடுத்தவனுடனடுத்தவனுடன்கூடினவனு மதிற்பாதிசெபஞ்செய்க. பிராமண ர்திரவியத்தையெடுத்தவனும்எடுத்தவனுடன்கூடினவனுங்கூடினவனுடன்கூடினவ னுமுற்கூறியசெபஞ்செய்க. இவ்வாறுபரிகாரஞ் செய்யாதொழியி னஃதுரௌரவ முதலானநரகங்களின்வீழ்த்தும். எ- று. உரூபியெனினு மகோர மெனினுமி மூக்கா- அந்தணர்தம்பொருள்கொண்டானுமென்ற வும்மையால் அரசர்முதலாயி னார்திரவியத்தையெடுத்தவனுமெடுத்தவனுடன் கூடினானுங்கூடினவனுடன் கூடினா னுமம்முறைசெய்க. (௬௮)

ஆசாரியர்நைமித்தியமாகியசிவலிங்கப் பிரதிட்டையுந்தீக்ஷையும்ப ண்ணிலதின்வருங்குற்றமும். மூவகையாசிரியரைக்கொடியவார்த் தைசொல்லல் முதலிய குற்றமும் போம்படி பரிகார முணர்த்து கின்றார்

பார்த்திவருமற்றையருமுயத்தேவபதிட்டைபண்ணினனேலாசானுமி ருநியுதம்பகர்க, தீர்த்துணலுஞ்சிவாகமத்தினுண்மைதெளியாதேதீக்கைபு ரிதேசிகனுமஞ்சிலக்கஞ்செபிக்க, வார்த்தையினைக்கடினமுற வசனித்தானு கின்மந்திரிக்க வோரிலக்கம் பாதியதன் பாதங், கூர்த்தவருட் சோதகனைப் போதகனைமுத்திகொடுப்பானைப்பதம்பணிந்துகுறைபொறுத்தாளென்றே.

ஏ- து. இராசாமுதலானவர்கள்சத்தகியடைய நிமித்தமாகவாசாரியன்சிவலி ங்கப்பிரதிட்டைபண்ணில் அக்குற்றம்போம்படிக்குபவசியாயிரண்டுநூறுயிரமுரு ச்செபிக்க. சிவாகமத்தினுட்கூறியமுறைமையையறியாமற்றீக்கைசெய்யுமாசாரிய னும்பவசியா யைந்துநூறுயிர முருச்செபிக்க. சோதகர். போதகர். முத்திகொடுப் போர்- என்னுமூவகையாசிரியரைப்பார்த்துக்கொடியவார்த்தையைச்சொன்னானு லிலக்குற்றம்போகையின்பொருட்டுஅவர்களைவணங்கி நூறுயிரம் ஐம்பதினாயிரம் இருபத்தையாயிரமடைவிற் செபிக்கிலக்குற்றம்போமென்றவாறு- தீர்த்தனனு மென்பதனையிருபாலுங்கூட்டுக. மூவகையாசிரியருக்குக் கூறிய தொகை. எதிர்நி னிறை- சைவாகமத்தையிதுவென்றுதெரிசிப்பிக்கையாற்சோதகரெனப்பெயராயி ற்று. மாணாக்கர்க்காகமமாதிகளைப்போதிக்கையாற் போதகரெனப்பெயராயிற்று நிருவாணதீக்கையை மாணாக்கர்க்குப்பண்ணி மோக்ஷத்தையடைவிப்பிக்கையான் முத்திகொடுப்போரெனப்பெயராயிற்று. (உகூ)

இதுவுமது

தாக்கிடினேதன்னதுகையவனுடலந்தன்னிற் சாற்றிடுகவாறிலக்கமாயு
தத்தாற்றடிபி, னேற்றியிருகுணிதமுறாபியம்பிடுகபூசையியற்றிடுகசிறப்புற
வேயீசனுக்கஞ்சென்னுங், கூற்றுடைய சாந்திராயண விரதமுதலுங்கொள்
கவிரதத்தினையுமுடிவினடிகுறுகிப், போற்றியுள பொருளெல்லாங்கொடுத்
தவன்செய்தீக்கைபொருந்திடுகவருந்தவரைப்பிழைக்கினுமிப்புரிவே. *

எ- து. மூவகையாசாரியரிலொருவரை யாதொருவர்தமதுகையாலடிக்கிலாறு நூறுயிரமுருவகோர்த்தைச்செபிக்க. ஆயுதத்தாலிரத்தம்புறப்படவெட்டிற்பன்னி ரண்டுநூறுயிரமுருச்செபித்துச்சிவனுக்குமகாபிடேகமு நைவேத்தியமுஞ்செய்து செலசாந்திராயணமுதல் ஐவகைச் சாந்திராயணத்தையு மனுட்டித்துமுடிந்தவா றேஆசாரியரைப்பாதத்திற்பணிந்து தமக்குள்ளபொருளெல்லாமவருக்குக்கொடு த்துப்பஞ்சகமலமென்னு மண்டலத்தை வேதிகையினிட்டு அதுமுன்னாகத்தீக்கை யைப்பெறுக - அரியதவசிகளையுடையசாதகர் முதலாயினாரை யடிக்கினும்வெட்டி னுமிம்முறைசெய்யிலக்குற்றம்போமென்றவாறு.

பஞ்சகமலமண்டலமாவது. யாகசாலைமண்டபத்துக்குநடுவேதிகையைப்பதினாலு க்குப்பதினாலுபதம்பண்ணி நடுநாலுபதத்தில் வெண்டாமரையையிட்டு நடுவிற்கர்.

முடித்தலென்னுந்தந்திரவுத்தியால் இருபதுருச்செபத்துக்கொரு கலசந்தாபித்தபி
டேகஞ்செய்க (௫௨)

பரிகாரஞ்செய்தற்கு நியமவிதியுணர்த்துகின்றார்

உண்மைமொழியுரைத்திடுகை யொண்டொடியார் கலவி யொழிந்திடு
கைபிரிதவிலூண்பூதலத்திலுறங்கல், எண்ணையினைத்தீண்டாமைகௌவிய
த்தைத்தினமுமிறைவனணிமுடிக்காட்டி யருந்தலிவையெல்லாம், பண்ணு
தலேபஞ்சவருடத்தளவும்விரதம்பரிகாரந்தேசிகனைப்பழித்தவினைப்பகைக்
கும், புண்ணியர்தமடியிணையும் புரிந்துபணிந்தவர்தம் பொருவரியவருள்
பெறலும்புன்மைவினைபோமே. *

ஏ- து. வெளி. கௌவியத்தையருந்தும்போதுஇடையிடையேகையைக்கழுவித்
தத்துவத்திரையத்திருலேயதனைகொள்க. (௫௩)

பிரமவதைக்குப்பரிகாரமில்லையாயினுமொரோவாற்றாற் பரிகாரமு
ணர்த்துகின்றார்

அறிவிலரையந்தணனையதஞ்செய்தானவலனு யிரமாணிரைநடுவேமண்
டலத்தையாக்கி, யறைகவதனடுவிருந்தே யீசானநியுதமாக்கிடுகநிதியாளன்
மகவினையையாங்கே, பொறையுறவேசாந்திராயணம்பின்புபுரிகை பொதுவ
லதுபுலனைந்தும்வென்று திருநீற்றின், அறையின்மக வுருத்திரத்தையறைந்
துநினைந்தரனையயறுநாண்மரணமுடிவுறுந்தகொலையறுமே. *

ஏ- து. அபுத்திபூருவமாகப்பிராமணனைக்கொன்றகுற்றம் போம்படிக்கு, ஆயிர
ம்பசுநிற்கிறகோட்டத்தினடுவே தேனுமண்டலத்தை யெட்டுமுழத்திற்சதுரசிரமா
கவிட்டுவருஜனையொன்பதுகோட்டமாகப்பிரித்து ஒவ்வொரு கோட்டத்தையொவ்
வொருதளமாகவு நடுக்கர்ணிகையாகவுமிட்டு அவைகளிற் சுரபி முதலானவைகளை
ஞானரத்நாவலியிற்சொன்னபடி பூசித்து அந்தமண்டலத்தின் முன்னாக விருந்துஈ
சானமந்திரத்தை நூறாயிரமுருச்செபித்து நிதியுடையவனாகிலவ்விடத்திற்றானேயா
கத்தைச்செய்துசாந்திராயணவிரதத்தை யனுட்டிக்க, இங்ஙனங்கூறியன, பொது
விது, அல்லாதபோதுபஞ்சேந்திரியங்களையடக்கித் திருநீற்றறையிலிருந்து சிவபெ
ருமானைத்தியானித்துவேதத்திற்சொல்லியசதருத்திரமெனுமந்திரத்தைச்செபித்
துமுப்பதுநாளிருக்கிலக்குற்றம்போம், இப்படிமரணாந்தமளவுமிருப்பானாகிற்புத்
திபூருவமாகச்செய்தகுற்றம்போமென்றவாறு, தேனுமண்டலமென்பதனை மண்ட

லமென்றதுதலைக்குறை. (௫௪)

மதுபானிக்குப்பரிகாரமுணர்த்துகின்றார்

பண்ணினனேலறிவிலனாய்மதுபானம்பார்ப்பான்பரமேசனாலயத்திற்
றற்புருடம்படர்க, வெண்ணியுறவிலக்கமகமியற்றிடுகதிநியன்பராகமெனுங்
கிருச்சரத்தையியற்றிடல்பொதுவே, வெண்ணெயழல்வெதுப்பிவாய்வாக்
கலுமாமன்றிவெதுப்பியகோசலம்வெந்தவெண்கலமுமாகும், புண்ணியவெ
ண்ணீற்றறையினுருத்திரத்தைப்புகன்றுபொருந்தலுமாமுன்புகன்றபாவமிர
ண்டும்போமே. ※

எ - து பிராமணனானவன் அறியாமல்மதுபானம் பண்ணினானாகிற் சிவாலயத்தில்மண்டலமுன்புபோலிட்டுஅதிலேவியோமவியாபிமகாசிவர்முதலாயினார் க
ளைப்பூசித்து அந்தமண்டலசமீபத்திலிருந்து தற்புருட மந்திரத்தை நூறாயிரமுரு
ச்செபிக்க, திரவியவானாகிலயாகத்தைச்செய்து முற்கூறியபராகமென்னுங்கிருச்சு
ரத்தைச்செய்க, இதுபொதுவிதி அல்லதுபசுவின் வெண்ணெயைநன்றாக வுருக்கி
க்கொதிக்கக்கொதிக்க வாயில்வார்க்குக அல்லது கோசலத்தைநன்றாக்காய்ச்சி வா
யில்வார்க்குக அல்லதுபஞ்சலோகங்களையொழுக வுருக்கிவாயில்வார்க்குக அல்லது
முன்போலத்திருநீற்றறையிலிருந்து மகாருத்திரத்தைச் செபிக்கில் அபுத்திபூரு
வமும்புத்திபூருவமுமடைவேபோமென்றவாறு (௫௫)

சொன்னந்திருடினார்க்குப்பரிகாரமுணர்த்துகின்றார்

கனகமொருகழஞ்சளவுகருத்தழிந்து கொண்டகள்வனுடல் சுடுகளரி
யெல்லையினைக்கலந்தே, பனுகவகோரத்தைநியுதத்தை நிநியாளன்பனுமு
கமகம்பொதுப்பிரசாபத்தியமேயல்லா, லெனைமுசலத்திரும்பாலேயெற்
றுகமன்னவனேயென்றறிகவல்லதுவெண்ணீற்றறையையெய்தி, முனமு
ரைத்தமுறைமுயலின்மோசனமேயாகுமோகவினைமுன்னுணர்வின்முற்றிய
தீவினையும்.

எ - து அறியாமலொருகழஞ்சுபொன்திருடினகள்ளனானவன், ஆயிரம்
பேரிற்குறையாமற் சுட்டசுடுகாட்டிற்சுடுகாடென்னுமண்டலத்தைமுன்புபோலெ
ட்டிதழுநடுக்கர்ணிகையுமாகவிட்டு, அதில்அகோரப்பியோமமென்று அகோர
கலைமந்திரத்தாற்பூசித்து அந்தமண்டலசமீபத்திலிருந்து அகோரமந்திரத்தை நூ
றாயிரமுருச்செபிக்க, திரவியவானாகில்யாகத்தையாண்டுச்செய்க, இதுஇரண்டு

ம்பொதுவிதி - அல்லது - பிரசாபத்தியவிரதமனுட்டிக்க - அஃதன்றியவன்அரச னிடத்திற்போய்இராசாவேநான்பொன்றிருடினகள்ளன் அக்குற்றம்போம்படிக்கு இருப்புலக்கையாலடியுமென்றுசொல்லியவனாலடிக்கப்பட்டுமரிக்க- அல்லதுமுன் புபோலநீற்றறையைப்பொருந்திமுன்சொன்னமுறைசெய்யிற் புத்திபூருவம் அபு த்திபூருவமிரண்டினாலும்வருங்குற்றமும்போம் எ - று ஏகாரம் - தேற்றம் [௫௬]

குருமனைவியைப்புணர்ந்தவனுக்குப் பரிகாரமுணர்த்துகின்றார்

அற்றறிவுகுருமனையையொருநாளுற்றணைந்தா னழலோம்புஞ்சாலைத னில்வாமத்தையறைக, வுற்றிடவேயோரிலக்கமகமியற்றி நியன்றத்தகிருச் சரமியற்றவொக்குமிருவருக்கு, மற்றலதுகுய்யத்தைப் பீசத்தைக்கருக்கா ன்மாற்றிபுணன்மறந்துதிசைதெற்கியங்கிமரிக்க, முற்பகர்ந்த முறையுறவே நீற்றறையின்முயல்கமுயங்கிலமிந்திரண்டாநாணரகனைத்துமூழ்கும். ✻

எ- து. மோகவசத்தாலறிவற்றுக்குருமனைவியையொருநாட் கூடினனாகிலக்கி னிகோத்திரஞ்செய்கிற யாகசாலையிற் கிழக்கே காருகபத்தியஞ் சதுரசிரமாகவு மேற்கேயாகவனீயம் வட்ட மாகவுந் தெற்கே தெக்கணாக்கினி யர்த்த சந்திரனைப் போலவுமிட்டுஅதில்அக்கினியையுண்டாக்கியதிற் றற்புருடாயவிர்மகேயென்னுமந் திரமுதலாகவடைவேபூசித்து அந்தமண்டலசமீபத்திலிருந்து வாமதேவ மந்திரத் தைநூறுயிரமுருச்செபிக்க, திரவியவானாகில் யாகத்தை யாண்டுச்செய்க, புத்திபூ ருவமபுத்திபூருவமாகச்செய்தவர்கள் தத்தகிருச்சரமனுட்டிக்க இதுபொதுவிதி அ ல்லாதபோது குய்யத்தையும் பீசத்தையுங் கருக்காலரிந்து போட்டுத் தென்றிசை யைநோக்கியுபவசியாய்ப்போகிமரிக்கிலக்குற்றம்போம்புத்திபூருவமாகவிரண்டா நாளும்அவளைக்கூடினானாகி லிருபத்தெட்டுக்கோடிநரகத்திலும்அழுந்துவன். எ- று (௫௭)

கொலை களவு கள் காமஞ் செய்தநால்வருடன்கூடினவஞ்சாம்பா விக்குங்கோவதைக்கும்பரிகார முணர்த்துகின்றார்.

கூடியவ ரிவர்தம்முளொருவனுடன்சரதங் கூறிடுகநியுதமுற க்குலவ ரையினுச்சி, மாடுடையன்புரிந்திடுகமகவினையயாங்கேவருந்திடுக மற்றை யநிதபனத்தைமதித்துத், தேடரியதேனுவினைத்தெளியாதுசெகுத்தான்செ ப்புகவோரிலக்கமுறவகோரத்தைத்தெளிந்தா, ஞடியிருகுணிதமுற நவின் றிடுகவந்தநாயகனைமனத்திருத்திபூணெழிந்துநைந்தே. ✻

எ-று. பிரமவதைமுதலான பாதகங்கள்செய்தநால்வருள் ஒருவனுடனொருவ
ன்கூடிலவனுஞ்சாம்பாதகத்தையுடையவன், அக்குற்றம்போம்படி சத்தியோசாத
மந்திரநூறாயிரமுருச்செபித்துப்பருவதாக்கிரத்தின் மண்டலமிட்டு அதினடுவே வாம
தேவருமுதற்பாரிசபருவதமீறாகவைந்திலுஞ்சதாசிவமுதலிய கலாமந்திரங்களைய
டைவேபூசித்து அந்தப்பருவதத்திலுச்சியிற்றனவாறாகில் யாகத்தைச் செய்து அதி
தபனமென்னுங்கிருச்சரத்தின்முறைமையைவிசாரித்துவருத்தமுறவனுட்டிக்கில் அ
க்குற்றம்போம், தெரிந்துக்கிரிதாகிய பசுவை யபுத்திபூருவமாகவதைத்தானாகில்
அகோரத்தைநூறாயிரமுருச்செபிக்க, புத்திபூருவமாகச்செய்தவன் இப்படியதுவி
ட்டதென்றுபவசியாயகோரமூர்த்தியை மனதிற்றியானித்து அம்மந்திரத்தைஇரு
நூறாயிரமுருச்செபிக்கில்க்குற்றம்போம். எ-று. (௫௰௪)

மகாபாதகத்துக்குப்பரிகாரமுணர்த்துகின்றார்.

கங்கைநதிப்புனலாடிக்கடப்பாடுநீந்து காசிவிசுவேசனடிக்கமலமிசை
பணிந்து, தங்கியொருநாளுனல்காமாதிகளுந்தவிர்ந்து காமமந்தப்பதிக்கமே
காபாவமொன்றுதவிருந், திங்களுறவினாவிந்துபுரிமாபாவமொன்று நீருங்கே
தாரஞ்சீசயிலங்காளத்தி, சங்கைதசரதன்மகனைத்தணந்ததலமாரூர்சடைம
ருதுகுடமூக்கையாறெழுவாய்த்தலத்தும். ௫

எ-று. கெங்கையிலேமுழுகித்தமக்கியன்றமாத்திரந் தானங்கொடுத்துக் காசி
யென்னுந்திருப்பதிவீட்டிலெழுந்தருளியிராநின்ற விசுவநாதனுடைய தாமரைமல
ர்போன்றசீபாதங்களைவணங்கித்தான் காமக்குரோதலோபமோக மதமாச்சரிய
முதலானகுற்றங்களைவிட்டொருநாளுடைவசியாயிருக்கில் அபுத்திபூருவமாகச்செய்
தமகாபாதகங்களிலொன்றுபோம், இவ்வாறொருமாதமளவு செய்யிற் புத்திபூருவ
மாகச்செய்தமகாபாதகங்களிலொன்றுபோம், அக்காசியன்றிக்கேதாரமுதற்றிரு
வையாறீறாகச்சொன்ன புண்ணியதலங்களிலு மிவ்வாறுசெய்யி லக்குற்றம்போம்
எ-று. எழுவாயென்றதனால் திருவாலவாய் சுவேதாரணியந் திருவெண்காடுமுத
லாகியமற்றுமுண்டானபுண்ணியதலங்களிலுமெனவறிக, சங்கைதசரதன்மகனைத்
தணந்ததென்றது, தசரதனாயிந்திரன் புத்திரனில்லாதகுற்றத்தினுக்குச்சங்க
கோத்தரம்பண்ணித்திருவாரூரில்வந்து தியாகராசனைப்பூசித்தப் புத்திரனுண்டா
கையாற்சங்கைதசரதன்மகனைத்தணந்ததலமாருமொனச்சிறப்பித்தார், இரா
மேச்சரமென்றுஞ்சொல்லலாம். (௫௰௫)

சிவஞானிகளைப்பூசிக்கினுமக்குற்றம்போமெனவுணர்த்துகின்றார்

அனாதிமலமுத்தனவன்சிவனுயிர்கட்குயிராயகலாதேவினைப்பலன்கள ருத்திமலமறுப்பான், மனாதியினுக்கெட்டாதா னெனமதித்துத் தம்முண்ம னோலயவாழ்வுறவவன்றாள் கண்டவர்தாள் வணங்கி, யனாதியிவனெனவெ ண்ணரியொருபகற்பூசனை யியற்றினர்களொருதிங்களுறவியற்றினார்கள், முனாதியவ்வாறொழுகினார் தாமுற்றியமாபாவ முட்டாம லியற்றினர்கள்விட் டார்நீமுழுதும். *

எ- று. வெளி. மனாதியினுக்கெட்டாதானென்பது. சாத்துவிதமுதலானமனதி னாலறியப்படாதவன், மனோலயவாழ்வென்றது, சுவலீனமானமனதையதீதத்தில யிப்பித்துஆண்டுள்ளவின்பத்தையனுபவித்தல். (௬௰)

உருத்திராக்கந்தரிக்கினும்பாவம்போமென்றுணர்த்துகின்றார்

அரித்திடவேயவலவினையனுமதித்தார்கண்டி யாமலகபலத்தினளவாக வுமேயன்பாற், றரித்திடுகசிகைதன்னிற்கன்னத்திற்களத்திற் றடவரைமா ர்பிடைப்புயத்துத்தாங்குகபூணூலி, னுருத்திரசாதனமாயின்கண்டத்தினுமி னுமொன்றிடுஞ்சிவபுரியை யதுதானுமென்றே, விரித்தவுரை மெய்யென வேயுணர்ந்தாரெல்லாரும்விருப்புறவேதரித்திடுககண்டியினைவிணங்கே.

எ- று. வெளி. அரித்தல். போக்குதல். கண்டிஉருத்திராக்கம். ☩ கண்டியிற்ப ட்டகழுத்துடையீர் கரிகாட்டிலிட்ட பண்டியிற்பட்டபரிகலத்தீர். என்பதனாலறிக ஆமலகம். நெல்லி. (௬௧)

மேலுமொருபாயமுணர்த்துகின்றார்

பூசிடுகநீற்றினையுந் தீவினையைப்போக்கப் புரிந்தார்க டிருநீறு பூசினை ளாட்பணிந்து, பேசிடுகமதுரவுரையவரோவற்றன்னைப் பெற்றிடுக முற்றிடுக

---

திருநாவுக்கரசுசுவாமிகள்அருளிச்செய்ததிருவீழிமிழலை. திருவிருத்தம்.

☩ கண்டியிற்பட்டகழுத்துடையீர்கரிகாட்டிலிட்ட *
பண்டியிற்பட்டபரிகலத்தீர்பதிவீழிகொண்டீ *
ருண்டியிற்பட்டினிநோயிலுறக்கத்திலும்மையைவர் *
கொண்டியிற்பட்டுமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௪)

பேணியொருப்பட்டே, கூசினர்களவர்தம்மைக்கும்பிடவுமேவற் குறித்திய ற்றிவிட த்தானுங்கொடுநரகக்குழியாழ், நீசரொன நினைந்திடுக நின்மலனைத்த ம்முளனினைப்பாரை நினைப்பார்கள் வினைப்பாவ நீங்கும். *

எ-து. வெளி. ✠ செடிகொணோயினடையார் திறம்பார் செறுதிலினை - கடி யசூற்றமுங்கண்டகலும்புகல்தான்வரு - நெடியமாலோடயனேத்தநின்றார் திரு வாஞ்சியத்-தடியர்பாதமடைந்தாரடியாரடியார்கட்கே-என்றுமகாவாக்கியத்தானு ணர்க. [௬௨]

சிவபத்தர்கள்பெருமையுணர்த்துகின்றார்.

மண்ணாளுமன்னவன்றன்மகன்குணந்திங்கிரண்டும்மையாகத்தார்பாரா தேவனாங்கடுவெரஞ்சி, பெண்ணாளுமிறையமலன்றிருவேடந்தரித்திட் டார்கள்குணங்குணக்கேடெனுமிரண்டுமெண்ணார், விண்ணாளத்தி வி னைமைவீட்டிப்பிடவிழைந்தார் விரும்பியவாடபணிவர் விமலனுணர்விலங்க, லொண்ணாதேயெனக்கருதியொருப்பட்டேயமலனெறிப்பயிபுரிவாழ்வு மற் றையருக்குண்டோ. *

எ-து வெளி ✠ எவரேனுந்தாமாகவிலாடத்திட்டதிருநீறுஞ்சாதனமுங் கண்டாலுள்கி, யுவராதேயவரவரைக்கண்டபோதேயுகந்தடிமைத்திறநினைந்தங் குவந்துநோக்கி, யவர்தேவரிவர்தேவரென்றுசொல்லிரண்டாட்டாதொழிந்தீ சன்றிறமேபேணிக், கவராதேதொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்றாப்பூர்நடுதறி யைக்காணலாமே - என்றுமகாவாக்கியத்தானுணர்க (௬௩)

முற்கூறியபார்ப்பாருட்பதிதரையும் அக்குலத்தழிந்தறி ரிபுமாதரையும் பூதிசாதனமணிந்தொழுக்கந்தவறினதவ சிகளையும் வைதத்தல்கூடாதென்பதூஉம் இவர்கள்குற்றக்கு றைவுசெய்யின்விசாரித்துநிவர்த்திசெய்தல் ஆசிரியர்க்குக்கட னென்பதூஉமுணர்த்துகின்றார்.

---

✠ திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த திருவாஞ்சியம். பண். இந்தளம். பா. (௧)

✠ திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்த திருக்கன்றாப்பூர் - திருத்தா ண்டகம் (பா) ௩

அந்தணர்தங்குலத்துமுதித்தழிவுபுரிவாரையதஞ்செய்யேற்பரிகாரமெவ்வகைக்குமறியேம், வெந்தவெண்ணீறணிந்தமலன்வேடமணிந்தாரும்விப்பிரரும்வேண்டியதுசெய்துவினைவிடினுஞ், சிந்தையிறெய்யுமொன வேதேறியவர்தம்மைத்தெளியற்கதெளிந்துமவர்தமைச்செகுத்தாராயி, னுந்தழிவர்நிரையத்திற்றேசிகனுக்கவரைநோவிக்கைநிலைநிறுத்தல்கடன் விதித்தநூலான். *

எ-து வெளி - அந்தணர்தங்குலத்துதித்துமென்றவும்மை - சிறப்பு - அதஞ்செய்யேல் - என்றது - கொல்லேல் - இதுவடமொழி - தெளியற்க - என்றது - சாதியிற்கூட்டாமற்றள்ளிவிடுதல் - செகுத்தல் என்றது - கோறல் - நோவிக்கை எ-து அடித்துக் கோவிக்கை - விதித்தநூல் - என்றது - வேதாகமத்திலின்னதற்கின்னபடிசெய்கவென்னுநீதிசாத்திரமெனவறிக. (௬௪)

தன்னிமித்தமாகப் பிறனொருவன் பிராணவதை பண்ணவவனைத்தடாதிருக்கிற்குற்ற முணர்த்துகின்றார்

என்றனைநீபுன்மைமொழியிசைப்பாயேயென்றுமெனதுதனந்தாராதேயேகுவையேயென்று, நின்றனக்கோவுரித்திந்நிலமெனக்குமென்றுநின்முன்னேயென்னுயிரைநீக்குவனேயென்றுந், தன்றனையேதான்வதைக்கிற்றடுத்துமுறைபுரியாச்சலத்தெகிரியவன்றன்னைத்தன்னதுகையாலே, கொன்றவனேயாதலினுற்றடுத்திடுககொலையைக்கொடுத்திடுககணக்குளதுகொலைக்கஞ்சுங்குணத்தார். *

எ-து வெளி - புன்மொழியென்றது-பொல்லாதவார்த்தை, ஏகுதலென்றது போகுதல் நீக்குதலென்றது விடுதல், சலமென்றது - கோபம் - உம்மையெண்ணும்மை. (௬௫)

கோபமுதலியவற்றாற்பிராணவதைபண்ணினோர்பெறும்பலனீதென்றுணர்த்துகின்றார்.

கோபத்தாறுகத்திற்கொடுநோயான்மற்றுஞ்சூற்றத்தாற்றன்றன்னைக்கொலைபுரிகைகுணமோ, பாவத்தான்மிக்காரேதமைத்தாமேவதைக்கும்பதர்மலிதாந்தணர்க்கும்பாங்கல்லக்கும்பீ, பாகத்திற்பட்டழுங்கிச்சீக்குழி

க்கும்படிவர்பகர்வருடமறுபதினாயிரமுறவோராங்கே, சாகத்தாக்குளரிங்
தழிகைசங்கரனாலயத்திற்றவறுறினேயவர்மலன்புரியதனைச்சார்வார். ௸

எ - று. வெளி - கொடுநோய் - மகாவியாதி - குணமோயென்றுமோகாரம் - எதிர்மறை - கும்பீபாகஞ் - சிக்குழியென்பன - நாசம் - பாங்கு - உரிமை. (௯௬)

குற்றஞ்சாராக்கொலையிஃதென்றுசிறப்புவிதியுணர்த்துகின்றார்.

படைபிடித்துத்தங்கையிற்பற்றாராச்சமரிற்பாய்படக்கப்போர்புரியும்
பார்ப்பாரைப்பற்று, ருடமிறுத்தாரெலவர்க்குப்பிரமகத்திப்பாவமென்று
வதன்றெனவுணர்கவுள்ளத்தேகன்ன, மிடனுறமேவகன்னிருவிவ்வேற்றுமை
லார்மனையின்வேண்டியதுகொண்டியங்கும்வேலைதனில்வேந்தன், படைய
வளைப்பந்தித்தேயப்பொழுதுநாசம் பண்ணிடினும் பிரமவதைபடற்குபாத் ௸
திபர்பால்.

எ - று. வெளி. படை ஆயுதம் பற்றார் சத்துருக்கள் இடித்தல் தணித்தல் படையெடுத்துப் போர்செய்த பார்ப்பாரைப் பிடித்து வதைக்கினுங் குற்றமில்லையென்க (௯௭)

சூத்திரர் முதலிய மூவரையும் வதைக்கிற்பரிகார
முணர்த்துகின்றார்

ஓராயுதஞ்சூத்திரனையொடுக்கினனுச்சரிக்கவுருத்திரனையொண்டொடிக்
குங்குழவிக்குமொக்கு, மீராயுதம்வசியனைக்கொன்றிறுத்தவனுச்சரிக்க
வேந்திறைக்குங்குழவிக்குமிக்கணக்கேயியம்ப, வோராயுதமீராயுதம்பார்
த்திபனையொடுக்கிலுச்சரிக்கவொண்டொடிக்குங்குழவிக்குமொக்கு,மீராயு
தஞ்சூத்திரனையெண்ணியிறுத்தாவியம்பவேனையர்க்குமிசைக்கவிறுதணித ௸
மெண்ணியிறுத்தான்.

எ - று. சூத்திரனையுமக்குலத்துமாதரையுமவர்கள்பிள்ளைகளையுங்கொன்றவன்அகோரமந்திரத்தைப்பதினாயிரமுருச்செபிக்க, மென்னிலையவிருவருக்கும்வைக்குபிம்மந்திரத்தாற்பதினாயிரம்பதினாயிரமுருவேற்றிவேறத்திச்செபிக்க, சூத்திரர்முதலானமூவரையும்புத்திபூருவமாகக்கொன்றவன் இருபதினாயிரசாற்பதினாயிரமவ பதினாயிரமம்மந்திரத்தாற்செபிக்க, எ - று. [௯௮]

அண்டசமுதலியவற்றைவதைக்கிற்பரிகாரமுணர்த்துகின்றார்

வதைத்தவனேமயிலன்னங்குக்குடமும்பாம்புமற்றுமுளவண்டசமு மற்கடமுமறப்பான், மதித்தறைகவகோரமிரண்டாயிரமாற்சாலமறப்பா லேவதைத்தானோராயிரமாஞ்சாதம், வதைத்தவனேயசமேதிமற்றையமா ன்மரையுமந்திரிக்கவகோரமொருநூறுநானூறு, வதைத்தவனேவராகத் தைவன்மிருகமற்றுமதித்தறைகவொருநூறுமறந்தவினைமாயும். *

எ-து மயில்முதலானபறவைகளையபுத்திபூருவமாகக்கொன்றானாகில் அகோ ரமிரண்டாயிரமுருச்செபிக்க, புத்திபூருவமாகில்நாலாயிரமுருச்செபிக்க, பூசை யையபுத்திபூருவமாகவதைக்கில்ஆயிரமுருவும்புத்திபூருவமாகில்இரண்டாயிரமு ருவுஞ் சத்தியோசாதத்தைச்செபிக்க, ஆடு - மான் - மரை - யெருமை - முத லானவற்றைஅபுத்திபூருவமாகவதைக்கில்நூறுருவும்புத்திபூருவமாகவதைக்கில் நானூறுருவுமகோரமந்திரத்தைச்செபிக்க, வனத்திலேசஞ்சரிக்கிறதுட்டமிருக மான - பன்றி - சிங்கம் - கரடி - முதலானவைகளையபுத்திபூருவமாகக்கொன்று ளுகில்நூறுருவும்புத்திபூருவமாகில் இருநூறுருவுமகோரத்தைச்செபிக்கிலக்குற் றம்நீங்கும் எ-று மற்றையவென்பதனால்அதற்கினமானவைகளுமெனவறிக. [௬௬]

இதுவுமது

வதைத்தவனேநாய்நரியுஞ்சாதத்தைமறப்பின்மந்திரிக்கவாயிரமீராயி ரமேமதித்தான், வதைத்த வனேமூடிகத்தைவாலமூடிகமுமந்திரிக்கசாத த்தையொருநூறுமறந்தான், வதைத்தவனேயென்பில்லாவடிவைபறிவின் றிமந்திரிக்கவைம்பஃதுமற்றையவனூறும், வதைத்தனனேற்பலகிருமி யொருநாளின்மறப்பான்மந்திரிக்கமூன்றயுதமதிக்கிலிருகுணிதம். *

எ-து அபுத்திபூருவத்தினாலே - நாய் - நரி - யிவைகளைவதைக்கிலாயிரமு ருவும்புத்திபூருவமாகிலிரண்டாயிரமுருவுஞ்சத்தியோசாதத்தைச்செபிக்க, பெ ருச்சாளி - யெலி - யிவைகளையபுத்திபூருவமாகக்கொன்றவனூறுருவும்புத்திபூரு வமாகிலிருநூறுருவுஞ்சத்தியோசாதத்தைச்செபஞ்செய்க, வெறுப்பிற்றோன்றி யவென்பில்லாதகிருமிமுதலியவற்றைவதைக்கில் அபுத்திபூருவத்துக்கைம்பதுருவு ம்புத்திபூருவத்துக்குநூறுருவுஞ்சத்தியோசாதத்தைச்செபிக்க, ஒருகாற்பலகிரு மிகளைக்கொன்றால் அபுத்திபூருவத்துக்குமுப்பதினாயிரமும்புத்திபூருவத்துக்கு அறுபதினாயிரமுஞ்செபிக்க. எ-று (௬௭)

நாய்முதலியவைகடிக்கிற்பரிகாரமுணர்த்துகின்றார்

உடலூறுபடக்கடிக் கொடியநரிமங் கடமுமுரகமுந் தேள்விட முமிழு
மொழியுமடுநீருண்; மிடறுநின்றுயுதமுறவிளம்ப வகோரத்தைவிக் கிரகமி
னேந்துசுழல்விழிமூன்றுமுடையார், சடைமுடியிற்றலைமாலைக்கரியவுருக்கரா
ளந்தாடிமுகந்தடமார்பிற் சற்பவிருச்சிகப்பூண், படைசூலமழுத் தண்டுவெ
ள்வலப்பாவிடப்பாற்பற்றியுள்ர்கட்டங்கந்தலைபலகைபாசம்.

எ - து நாய்முதலானவைசரீரத்தூறுபடக்கடிக்கினுமவ்விடம் பொருந்தின
ந்தடாகங்களிற் கழுத்தளவுதண்ணீருணின்று சுழலாநின்றமூன்று விழியினையுஞ்
சடாமகுடத்திற்றலைமாலையினையுங் கரியநிறத்தினையுந்தீக்குணத்தினையுந்தாடி. யினு
முகத்தினும்பெரியமார்பினும்பாம்பு த்தேளாபரணத்தினையுஞ் சூலமழுதண்டெவா
ளைப்பற்றியவலப்பாற்கரத்தினையு, மாத்திரைக்கோல் தலை பலகை பாசத்தைப்பற்
றியவிடப்பாற்கரத்தினையுமுடையவகோர தேவநாயகனைத் தியானம் பண்ணி (௭௧)
அகோரம்பதினாயிரமுருச்செபிக்கிலக்குற்றங்கணீங்கும் எ - று

பொன்முதலியவற்றைதானம்வாங்கிற்பரிகாரமு
ணர்த்துகின்றார்

தாங்கினனேற்றனத் தைபரிதாலத் தைக்கழஞ்சுதரத்தாதாவகோரத்
தைச்சாற்றிடுகவாயுதந், தாங்கிருளினடமாடியாலயத்திற்பாவந்தொலைக்க
ருளென்பாவமெனச்சொல்லுகமுன்னூறு, தாங்கினனேற்றபிலத் தைக்கதி
யாமெய்தனையுந்தரித்திடிற்காற்பாசத்தைக்கம்பளத்தைமற்றுந், தாங்கினா
னேற்றதுபரிதனையெருதுதன்னைத்தானியத்தைத்தரணியையுஞ் சாற்றுக
வோரயுதம்.

எ - து பொன்முதலியவற்றையும் அரிதாரமுதலியதாதுக்களையு மொருகழ
ஞ்சுதானம்வாங்கின், அவர்கள்சிவாலயத்திருந்து அகோரமந்திரத்தைப்பதினாயி
ரமுருச்செபிக்க, பால் தயிரானெய் யெண்ணை பருத்தி கம்பளம் இவைகளைத் தா
னம்வாங்கினவர்களுஞ் சிவன்சந்நிதியிலேயிந்தக்குற்றத்தைப்போக்கி யருளவே
ண்டுமென்று வேண்டிக்கொண்டு அகோரத்தைமுந்நூறுருச்செபிக்க, குதிரை யானை
யெருது யிவைகளையும் நெல் பூமி யிவைகளையுந்தானம்வாங்கிற் சிவாலயத்திருந்
து அகோரத்தைப்பதினாயிரமுருச்செபிக்க எ - று மற்றுமென்பதனாற் பட்டு
முதலான புடைவை ரத்னக்கம்பளம்வெண்பட்டு முஞ்சிப்புல் இவைகளை வாங்கி
னுமிம்முறைசெபிக்க. (௭௨)

பத்தரானவர் ஆசிரியர் முதலாயினோர்க்குமடங்கட்டு
வித்து அதற்குவேண்டு முபகரணத்துடனே தான
மாகக்கொடுக்கிலதனைவாங்கினகுற்றம் போம்படி
பரிகாரமுணர்த்துகின்றார்.

சிறப்புறவேதிருமடத்தைச்செய்துதலைவணங்கித்தேவவினியானுமுய்
ச்செறிந்திருக்கவென்றே, யறத்தினையா தரித்தான் கைய்துபரித்தா னாகில
னைந்திடுகதியுத முறவாலயத்தினமர்ந்தே, பெறற்கரியாயான்றரவேபெற்றி
தனையென்றன்பிழைதீரவருந்துகவுள்ளளவு மெனப்பேசுங், குறிப் பினன்
கைக்கொண்டுமாறாந்தமுணல்கொடுமைகொள்கசிலநாளினுக்கேயவன் வி
னைக்குக்குறைந்தே. *

எ-து. சிவபத்தர்கள்திருமடஞ்செய்து அதற்குவேண்டுமுபகரணத்துடன் ஆசி
ரியர்முதலாயினோரை அடியேனுய்யும்வண்ணந்தேவரீர்நீங்காது இத்திருமடத்திலே
யெழுந்தருளியிருக்கவேண்டுமென்றுவணங்கிக்கொடுக்க அதைவாங்கினவர்கள்சிவா
லயத்திலிருந்து அகோரம் நூறாயிரஞ் செபிக்கக்கடவர் யாவர்க்கும்பெறுதற்குஅரி
யோய் அடியேன்கொடுப்பதனைப்பெற்றுஎனதுகுற்றநீங்கவுள்ளகாலவரையும்புசித்
திருக்கவேண்டுமென்றுஇரந்துகூறுவானது குறிப்பினையுணர்ந்துஅவனிடத்திற்பெ
ற்றதனைத்தாமுள்ளளவும்அருந்துதல்கொடிது ஆதலான், அவன்வினைகெடுமாறுள்
ளமிரங்கிச்சிலநாள்அருந்தக்கடவர். எ-று. (௭௩)

அதனைவாங்கிச் சிவனுக்கு நிவேதியாதிருக்கிற் பரிகார முதலியன
வுணர்த்துகின்றார்

பரப்பிறர்கைத்தாங்கியதுசங்கரற்குநாளுஞ் சமைத்துநிவேதனஞ்செ
ய்கதவறியானாலூற்றெட், டுனைக்கசிவகுரவனுக்குமூட்டுகநாடோறுமொரு
தேசத்தபருட்டிலுன்னியவன்பாதஞ், சிரத்தையுறமலர்தூவித்திசையதனை
நோக்கித் தெண்டெனவேபணிந்தெழுக சிவனேசருடனே, விருப்புடனே
நாடோறுமிசைந்திடுகநீக்கைவேறாந்தோர்சாதியினுமொருபந்திமிசைவே. *

எ-து. தாதாக்கள்தரவாங்கினதை நாடோறுஞ் சிவனுக்கும் ஞானசாரியனுக்
குநைவேத்தியஞ்செய்க, செய்யாதொழியின் அக்குற்றம் போம்படி யகோரத்தை
நூற்றெட்டுருச்செபிக்க, ஆசாரியர்சமீபத்தில்லாவிடத்து அவர்பாதந் தன்றலையிற்
பொருந்தவாதரவுடனே தியானம்பண்ணி மலரால்அருச்சித்து அத்திசையைநோக்கி

தெண்டாகாரமாய்வணக்கஞ்செய்க, இங்ஙனஞ் செய்தபின்பு சாதகர்முதலாயினருடன்கூடயிருந்துபோசிக்கக்கடவர், தனக்கொத்ததிட்சையுஞ் சாதியுமுடையவரிலவர்களைக்கூடவைத்துநாடோறும்போசித்தலேசிறப்பு. எ- று. (எச)

பந்திபோசனத்தால்வருங் குற்றமும் பாண்டத்தால்வருங்குற்றமும்போம்படிக்குப்பரிகாரமுணர்த்துகின்றார்

அற்றழியவாகாரதோடங்களென்று மருவினையு மெனக்குவிரைந்தழிந்தொழியவென்றும், பெற்றசிரத்தையினாலேயாக்கடனைப் பேணிப் பெற்றவற்றினைந்நினையும்பேதமிலிதன்னை, நெற்றிவிழிநின்மலனை நேயத்தாலாட்டிநிசியருந்திலாகாரதோடங்கணீங்கு, மற்றழியுமரும்பாவநல்வினையுமாகுமவனதுநற்புரிதன்னையடைந்துறலுமாமே. ※

எ- து. பந்திபாண்ட மன்னகாரமுதலியவற்றால் வருங்குற்றம் போகவேண்டுமென்றும், நான்செய்தமகத்தாயிருக்கிறபாவம் விரைந்தழியவேண்டு மென்றும்ஒருவனாதரவினாலேபசுக்களைநன்றாகப்போற்றியதனிடத்துண்டாகியபால்முதலியவற்றால் ※பிரமகூர்ச்சத்தைத் தாபித்துஅபேதனாகியும், நெற்றிக்கண்ணையுடையநின்மலனாகியுமிருக்கிறசிவனுக்கபிடேகஞ்செய்து உபவசியாயிருந்துஅதனைப்பருகில் அக்குற்றம்போய் மகத்தானபாவங்களும்போம், அதனாலேசித்திபுத்திபிறந்துசற்கன்மத்தையனுட்டித்ததற்குரித்தாய தபோபலத்தினாலே யவனது மகாசிவலோகத்தையடைந்துமிருக்கலாம். எ- று.

அடைந்துறலுமாமென்றவும்மை. சிறப்பு. ஏகாரம். ஈற்றசை. (எரு)

பிரமகூர்ச்சத்துக்குரியபசுக்களின்முறைமையுங்கோமயங்கொள்ளுமுறைமையுமுணர்த்துகின்றார்.

பிணிமூப்புச்சாகன்றுபிறந்திளையகன்றுபெறுங்கன்றுகருக்கன்றுபெருக்கன்றாண்மலமென், றெணியவிருநான்கொழிந்தவெவ்வையுமினியனவேபிவற்றுநித்தமயமாநியாட்டிடுகவிறைக்கே, மணிலணவாமுன்மயத்தைத்தாமிரத்திற்கொள்கவானிடையேகமலத்தின்வகிர்ந்துநடுமயத்திற், பிணியிலர்கைப்பெருவிரலிற்பாதியெனுமளவுபெற்றிடுகமற்றையவுங்கிகாளுமுறைபேசுவமே. ※

---

※ பிரமகூர்ச்சரம், பஞ்சகௌவியம்.

எ - து வியாதிப்பசு - கிழப்பசு - கன்றுசெத்தபசு - கன்றுபோட்டுபத்து நாட்சூதகமுடையபசு - கொரிக்கன்றுகியபசு - சினைப்பசு - மலட்டுப்பசு - மலத்தைத்தின்னும்பசு - என்றுகருதுமெண்வகைப்பசுக்களையு நீக்கியமற்றப்பசுக்களெல்லாமினிமையையுடையனவாம், இவற்றின்கட்டோன்றியகோமயமுதலியவற்றுல்சிவனுக்கபிடேகஞ்செய்க, இவையிற்புகைநிறத்தையுடையபசுக்கோமயமிடும்போது பூமியில்விழுமுன்னிடையேதாமரையிலையிலேந்தினகோமயத்தினடு வேநோயில்லாதார்கைப்பெருவிரலிற்பாதிமாத்திரம்வகிர்ந்தெடுத்துக்கொள்க மற்றைக்கோசலமுதலாயினவுங்கொள்ளுமுறைமையைமேற்சொல்வாம். எ - று மயம் - எ - து - தலைக்குறை, (எசு)

கோசலமுதலியவைகொள்ளும்பசுவினிறமுமவற்றின்பலமு முணர்த்துகின்றார்.

பலமொன்றுநீர்கொள்கநீலநிறப்பசுவிற்பால்கொள்கபலமைந்திற்செம்மைநிறப்பசுவின், பலமூன்றினுறத்ததியைப்பானிறத்திற்கொள்கபலமிரண்டினெய்கொள்ககபிலைநிறப்பசுவி, னலநிவைகளரியனவேற்கபிலைதனிற்கொள்கவைந்தினையுமதுதானுமரியதுவேயாகிற்,பலநிறத்தும்பாலெழுவாயைந்தினையுங்கொள்கபசிதணியவூட்டியபின்பால்கொள்கபாங்கே. *

எ - து வெளி - கபிலைநிறம் - கருமைசேர்ந்தபொன்னிறம் - ஒருபலமாவன - இரண்டுகுன்றிகொண்டது - ஒருவுழுந்து - உழுந்துபத்துக்கொண்டது - ஒருகழஞ்சு - கழஞ்சு - எட்டுக்கொண்டது - ஒருபலமென்றறிக. (எஎ)

பஞ்சகெவ்வியந்தாபித்தற்குக்கோட்டங்கொள்ளுமுறைமை யுணர்த்துகின்றார்.

கோட்டந்தண்டிலத்தொண்டான்கொள்கதருப்பையிறைற்கொள்ளலுமாமுகணமைந்திற்குறித்தநிறமுறவே, திட்டிடுகநடுப்பூர்வந்தெற்குவடக்கொழிவுஞ்சிறப்புறவேயீசத்திற்பொதுமைநிமஞ்செய்க, கூட்டிடுகவிவைதம்மிற்கனகபாத்திரங்கள்கொள்ளலுமாம்வெள்ளியிறைற்பலாசினுங்கொண்டிடுக, வீட்டுடையதாமிரத்தினியற்றலுமாமுறையேயிவற்றினுக்குப்பெயர்களையுமியம்பியிடுவாமே. *

எ-து. சிவன்சன்னிதியில்இருமுழமாதல், ஒருமுழமாதல், சதுரசிரமாகமெழு

கியதின்பேரில்நெல்லாதலரிசியாதல் பரப்பிப்பதுமமாக வொன்பது கோட்டம்பி றப்பித்து, அதில்அஞ்சாதல்மூன்முதல்தெற்பையை வடக்குங் கிழக்குநுனியாகக்கி ழக்குமுதலாகப்போட்டந்தக்கோட்டத்தினடுவில் வெள்ளையுங்கிழக்குமுதல்வடக் கிருகவடைவேபொன்மை. கருமை. வெண்மை. செம்மையாகவிந்தவன்னமிட்டீசானகோட்டத்திற்பஞ்சவன்னத்தையுங் கூட்டியிட்டந்தக் கோட்டங் களை யடைவேபூசித்துப்பொன்முதலியவற்றுலுண்டாக்கியபாத்திரங்களை யியன்றதொன்றை வைக்கக்கடவர், அந்தக்கோட்டங்களின்பெயரைமேற்சொல்வாம். எ- று. நவகோட்டம்பிறப்பித்த லேப்படியெனில். அஞ்சக்கஞ்சு சூத்திரம்போடிற்கோட்டம்பதினாறும். அதினடுவினாலுபதத்தையுமழித்தொன்றுக்குக, திக்குகளில்நடுப்பதமிரண்டையுமொன்றுக்குக, ஆகப்பதம், ஒன்பதாம் (எ௯)

கோட்டபூசைபண்ணுமுறையுணர்த்துகின்றார்

புரிகசிவதத்துவகோட்டாயநமவென்றேபூசைநடுக்கோட்டத்திற் பூருவகோட்டத்திற், புரிகசதாசிவதத்துவகோட்டாயவென்று பூவானும்பூசனைபைத்தென்புடைக்கோட்டத்திற், புரிகவித்தியா தத்துவகோட்டாய நமவென்றுபூவானும்வடபாற்கோட்டத்திலிடம்பூசை, புரிகபொதுப்புருட தத்துவகோட்டாயகாலதத்துவகோட்டாயவெனமேல்பாற்பூவாலும். ⁕

எ- து. வெளி. (எகூ)

மேற்கூறியமுறைமையேபாத்திர பூசையும் பான்முதலியதிரவியமிடுமுறைமையுமுணர்த்துகின்றார்

உரைத்தமுறைநிரையுறவேபாத்திரப்பேருணர்க வொளிருஞ்சுப்பிரதிட்டைசுசாந்தையேயென்றுந், தெரித்தறைகதேசோவற்பாத்திரமேயென்றுஞ்சிறப்புடையுவிரற்றினசபாத்திரமேயென்றும், பரிக்குமிய னல்லமிர்தபாத்திரமேயென்றும்படித்தறிந்துபஞ்சகநற்பாத்திரத்தின்பெயரால், அருச்சனையைநமோந்தமுறவலரானுமாக்கவுடைவுறவேபாறதிநெய்நீர்மயமாக்குகவே. ⁕

எ - து வெளி (அ௰)

மேற்பான்முதலியதிரவியங்களை யீசானமுதலான மந்திரத்தால்அபிமந்திரிக்குமுறைமையுணர்த்துகின்றார்

உச்சரிக்கவீசானமந்திரத்தையொருகா லுத்தமத்த பால்வலக்கைதொட்டொருமைபுறவே, யுச்சரிக்கபுளிப்பொழிந்ததநியிருகாற்புருடமொள்ளியவத்திரத்துவடித்தொளிவுடையநெய்யின், உச்சரிக்கவகோரத்தை மூக்காஞன்குறவேயொழுகுசலம்வாமத்தையுச்சரிக் கமயத்தின், உச்சரிக்கசத்தியோசாதத்தையைங்காலுடல்வெறுத்தான்கோமயமுன்புரிந்திடுகவுணர்ந்தே

எ- து. உத்தமமாகியவலக்கையிற்றற்சனிமுதனுலுவிரலாலும் ஈசானமந்திரங்கொண்டொருகாற் பாலைத்தொட்டபிமந்திரிக்க, ஏனையவுமிவ்வாறேயேற்றியேற்றியபிமந்திரிக்க,இதுசிருட்டிக்கிரமம் இதுகிரகத்தனுக்கென்றறிக. முத்திகாமனுனவன்சத்தியோசாதமுதலானமந்திரத்தைக்கோமயமுதலானதிரவியத்திலேந்துமுதலாகவொவ்வொன்றுகுறைத்தபிமந்திரிக்க. எ- று. (அக)

மேற்சுத்தோதகந்தாபிக்கு முறையும் அவைகளையொன்றாகக்கூட்டு முறையுமுணர்த்துகின்றார்

அரிச்சிக்கவீசானத்தவ்வியத்தகோட்டமதன்மீதுசத்திதத்துவபாத்திரத்தையலரால், அரிச்சித்தோர்பலத்தளவு சுத்தசலம்பூரித் தறுகுகுசைசந்தனமுமதனுடனேகலந்து, தெரித்தறிந்தசிவகாயத்திரியையறுவாரஞ்செவித்திடுகமூலத்தைச்சிறப்புறவேசெப்பிப், புரித்திடுக மயநீரி னீர்நெய்யி னெய்யைப்பூரிக்கததிதன்னிற்றதிபாலிற்புகவே. *

எ- து. ஈசானதிக்கில்அவ்வியத்தகோட்டத்தைப்பூசித்து அதிலேபாத்திரத்தைவைத்துஅந்தப்பாத்திரத்திலேசத்திதத்துவத்தைப்பூசித்து அதிலேயொருபலஞ்சுத்தசலத்தைப்பூரித்துஒட்டைநீளத்திலேகூர்ச்சத்தைப்பண்ணி யதினுடனேயறுகுஞ்சந்தனமுமதிலிட்டுசிவகாயத்திரியைநாடோறுஞ்செபித்து அதனுண்மையை யறிந்தவர்கள், அக்காயத்திரியையாறுபிரகாரமந்திரிக்க, பின்புமூலமந்திரத்தைநன்றாகவுச்சரித்துக் கொண்டு கோமயங். கோசலத்திலும். கோசலம். நெய்யிலும். நெய்தயிரிலும். தயிர். பாலினும்.ஒன்றாகக்கூட்டுக, எ- று. அல்லது எல்லாத்திரவியத்தையும்பாலிலேகூட்டலுமாம். (அஉ)

சுத்தோதகங்கூட்டிப்பூசிக்கு முறைமையுணர்த்துகின்றார்.

உச்சரித்தே சிவகாயத்திரிதன்னை யொருகா லுதகத்தைப் பாலுடனே யொடுக்கிடுகவனைத்தும், உச்சரிக்கபிரமாங்கஞ் சிவகாயத்திரியு மொருநூற் றெட்டுறமூலமந்திரமுமுரைக்க, வெச்சமறவெண்டிசைக்கும்பந்தனத்தைப் யற்றி யியற்றிடுக வவகுண்டங்தேனுவின் முத்திரையும், உச்சரித்தேசத்திம னுவுறுத்திடுகமகத்தென்றுரைத்தபெருமுத்திரையுமூலத்தையுரைத்தே. *

எ- து. சிவகாயத்திரியையொருகாலுச்சரித்துச்சுத்தோதகத்தைப்பாலுடனே கூட்டுக், அஃதுச்சரிக்கவருகமல்லாதார். இருதயமந்திரத்தையுச்சரித்துச்கூட்டுக எல்லாங்கூட்டியிருக்கிற நடுவிற்பாத்திரத்தைத்தொட்டுச் சங்கிதையையுஞ்சிவகா யத்திரியையுமொருகாலபிமந்திரித்துப் பண்மாறப்பண்ணி யபிடேகஞ்செய்க, பரி காரநிமித்தமாகின்மூலமந்திரத்தை நூற்றெட்டுரு பஞ்சகௌவியத்திலேயபிமந்திரி த்துத்திக்குபந்தனஞ்சேரடிகாமுத்திரையினாலும் அவகுண்டனம்பரிகாரமுத்திரை யினாலும். தேனுமுத்திரை. வவுஷடந்தமானசத்திமந்திரத்தாலும். பரமீகரணம்மூ லத்தாலுங்கொடுக்க. எ- று. பரமீகரணமெனினும். மகாமுத்திரையெனினுமொக் கா. (௮௫.)

பஞ்சகௌவியத்தைவிதிவழிதாபித்துச்சிவனுக்கபிடேகஞ்செய்யிற்
பிறரறியாமற்றான்செய்தபாவம்போமென்பதுணர்த்துகின்றார்

ஆட்டிடுகபச்சிமதிக்கானனனுக்கமலற்கதுதன்னையான்புரிந்த வவலவி னைக்குய்யம், ஓட்டிடுகவென்றதனையுண்டுபகலிரவுமுறங்காதே பூருவதிக்கா னனனையுற்றே, நாட்டமவன்றிருமேனிநாடியிடநாவா லோங்காரமுன்மூலம ந்திரத்தைநவின்று, வீட்டிடுகபிறரறியாதேபுரிந்தவவலவினைதன்னை மற்றை வினைபோக்குவதுவியப்போ. *

எ- து. பச்சிமதிக்குமுகமாயிருக்கிறவாலயத்துச் சிவபெருமானுக்கு அப்பஞ்ச கௌவியத்தையபிடேகம் பண்ணி யான்பிறரறியாமற் செய்தவினையை யோட் டவேண்டுமென்றுபகற்பொழுதுண்டிரவு உறக்கமுமில்லாமலந்தச்சிவனுக்குக்கீ ழதிக்குமுகமாக விருந்து, கண்ணாற்றரிசித்து, நாவாற் பிரணவமுன்பான ப ஞ்சாக்கரத்தைச்செபித்து, அத்தீவினையையொழித்திடுக, அஃதுவியப்போ வியப்ப ல்ல. எ- று. வலம். நல்லது. அஃதல்லாததவலம். வினைக்குய்யம். என்றது. பிறரறி யாமற்றானேசெய்தபாவமெனவறிக. (௮௬)

அனுதாபித்தபிடேகித்தற்குக்காலவிசேடமு மெளிதிற்றுயிக்குமோ
ர்வகையுமுணர்த்துகின்றார்

ஆட்டிடுகவபரபக்கத்தட்டமியினிசியிலானைந்து மமலேசனணிமுடியி
லன்பா, லூட்டிடுகதேசிகன்றன் றனக்கடிமையொட்டி யோட்டுதற்குத்தீவி
னையையொருப்பட்டான் றனக்குக், காட்டியவிம்முறைநவமி பதினான்குகா
றுங்கருத்துறவேசெய்தருத்திற் கரிசவலங்கழியு, மீட்டியிவை யைந்தினையு
மிரதயத்தாற்செபித்தேயிறைவனணிமுடிக்காட்டியருத்தலுமாமெளிதே. *

எ-று. அபரபக்கத்தட்டமிநவமிசதுர்த்தசியிர்தமூன்றுதிதிகளிலாசாரியனைவன்பிரமகூர்ச்சத்தைத்தாபித்து சிவனுக்கபிடேகஞ்செய்து தனக்கடிமையாகவுடன்பட்டுத்தீவினையையோட்டுதற்குத்துணிந்துபவசியாயிருக்கிறமாணுக்கனுக்குஅருந்தவிக்கிலவன்பிறரறியாமற் செய்தகுற்றத்திலொன்றுபோமல்லாதொருபாத்திரமாகிற்சுப்பிரதிட்டாயநமோவென்றுபாத்திரத்தையுமருச்சித்துச்சிரசினாலேயைந்துபாத்திரத்தையுமாவாகனம்பண்ணி யதிலேயைந்தையுங்கூட்டி யிருதயமந்திரத்தாலருச்சித்து அபிடேகஞ்செய்து அதனைமுன்புபோல விராத்திரியுமுபவசியாயதனைப்பொசிப்பிக்கிலக்குற்றத்திலொன்றுபோம். எ-று. (அரு)

பஞ்சகௌவியமுண்டாதற்பொருட்டுக் கபிலைபூசையுணர்த்துகின்றார்

ஆருயிரினருவினையையறுத்தறத்தையாக்க வமலவரனருள்புரியப்பாற்
கடலினூறித்துப், பாரிடமைப்பாற்றியிடும்பயோதரியேதாயேபற்றுகபுல்லெ
ன்றுவடமொழிப்பொருளைப்பகர்க, யாரியத்தைவல்லாரா ரியம்பகர்ந்துபுல்
லையருத்திடுகவரைக் ய ந்தைத் தெளிந்திடுகவல நந், கூரருளாற்கூட்டிடுகசம்
பிடுகபாலுங்கொண்டுமுறையமலன்முடிக்காட்டுகபோங்குற்றம். *

எ-று நின்மலனாகியசிவன்றனது கிருபையினாலேயான்மாக்கள் செய்தபாவத்தைப்போக்கிமோக்ஷமடைதற்பொருட்டுத்தேவர்களுமசுரர்களுங்கூடியமுதங்கடைகிறகாலத்திற் பாற்கடலிற்றோன்றியான்மாக்கடுக்கத்தைப்போக்காநின்றபயோதரத்தையுடையமாதாவே நான்தருகிறபுல்லைநீகைக்கொள்வாயாகவென்றுவடமொழிப்பொருளைச்சொல்லுக, அம்மொழிக குரியாரவ் வடமொழி மந்திரத்தைச்சொல்லியப்புல்லையருத்திடுக, நந்தைமுதலியபசுக்களின்பெயராலருக்கியங்கொடுத்து மந்திரத்தாலருச்சித்துவலமாகவந்துவணக்கஞ்செய்து முற்கூறியமுறையேயபான்முதலாயினகொண்டுபிரமகூர்ச்சந்தாபித்துஅதனைச்சிவனுக்கபிடேகஞ்செய்யிலவன்செய்தபாவமெல்லாம்போம் எ-று (அசு)

மனவாக்குகளால்வரும்பாவம்போம்படிபரிகாரமுணர்த்துகின்றார்.

சங்கரனைச்சதாசிவனைத்தரித்திதையமலரிற் றண்புனலுளாழ்ந்திருந் துவாயுவினைத்தடுத்து, மங்கமனோதோடமெனச்சிவகாயத்திரியையமானதத் தாலட்டசதமுச்சரிக்கமாயும், பொங்கியபொல்லாங்கொன்றுவாக்கினதுபு ன்மைபோமென்றுவாக்கடக்கப்பொறியமுலையோம்பி, மங்கை யொருபங்க னடிமலர்சூட்டியென்றன்வாக்கியன்றதோடத்தைமாற்றிடுவாயெனவே *

எ - து இதயகமலத்தின்கட்சதாசிவமூர்த்தியைதியானஞ்செய்துவாயு வைமதித்துக்குளிர்ச்சியினையுடைய செலத்தின்கண்அகமருடணமாகமூழ்கியிருந் துசிவகாயத்திரியைநூற்றெட்டுருமானதமாக மூன்றுநாட்செபிக்கில்மனத்தாலன் னியமனையாடன்னையணையுமாதரவுகூரஎன்றுமுன்மூருவதுபாவவியலிற்கூறிய நா ல்வகைக்குற்றத்திலொன்றுபோகும்,மூன்றுநாளுணவொழிந்துமவுனியாய்ச்சிவபூ சையோமத்தைப்பண்ணிச்செபமுமுற்கூறியமுறையேசெய்து சுவாமிநான்வாக்கி னாற்செய்தகுற்றத்திலொன்றுபோக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ளில் அழு கையுங்கோளும்பொய்யுமயலபவாதந்தானுமென்றுமுன்மூருவதுபாவவியலிற் கூ றியநால்வகைக்குற்றத்திலொன்றுபோகும் எ - று (அஎ)

காயத்தினால்வரும்பாவமுந்தும்மல்முதலியவற்றால்வருங்குற்றமு ம்போம்படிபரிகாரமுணர்த்துகின்றார்.

கழிந்துவிடுங்காயத்திற்கரிசொன்றுவிளையக்கட்டுணாக்கைநாண் மூ ன்றுவிட்டுண்ணலுங்கடுக, வொழிந்தறலைச்சந்திதொறுமூண்டு மடவார்தே ரளொன்றுதேசிவனடியையொருப்பட் டேநினைக்கி, விழிந்த விருமற்றும்ம ல்பொருமலிவையெழினேயெழுமூன்றேங்காரமுறவியற்றுகவாயாம, மொ ழிந்தவர்சூத்திரர்தம்மைச்சூத்திரரோமொழித்தேயுச்சரிக்கவைந்தெழுத்து மைம்முகனேயுணியே. *

எ - து மூன்றுநாளுபவசியாய்ச் சந்தியாகாலங்கடோறுமூழ்கி நியமஞ்செ ய்து சலத்தைப்பொசித்துமவுனியாய்மாதர்கலவியைப் பொருந்தாமற் சிவனைத் தியானஞ்செய்துமுற்கூறியமந்திரத்தையுறுதியாகச்செபஞ்செய்யின் ஆருவதுபா வவியலில், அழுகையுங்கோளுமென்றகவியுள்மற்றையமனையாடோளைத்தழுவுத லாதியானகாயத்தினால்வருங்குற்றநாலிலொன்றுபோம், பொல்லாதெனறுசொ ன்னவிருமல்முதலாயினதுண்டாயினக்குற்றம்போம்படி யிருபத்தொருபிரகாரம் பிரணவத்தையுச்சரித்துப்பிராணயாமஞ்செய்க, சூத்திரரானவர்கள்சதாசிவமூ ர்த்தியைத்தியானஞ்செய்து பிரணவநீக்கிப்பஞ்சாக்கரத்தையுச்சரித்துப் பிராணு

யாமஞ்செய்க. எ - று (அ௮)

மேற்றொகுத்துப்போந்தசதாசிவநாயனார்க்குத்தி
யானமிரண்டுவிருத்தத்தாலுணர்த்துகின்றார்.

உச்சிமுகமீசானமொளிதெளியபளிங்கேயுத்தரபூருவதிசையைநோக்கியுறுமுகந்தே, நிச்சயித்தமுகத்தின்கீழ்ப்பூர்வதிசைநோக்கிநிகழுமுகந்தற்புருடங்கோங்கலர்போனிறமே, யச்சுறுத்துமகோரமுகமறக்கரிதுகராளம்விழ்தாடிவலத்தோளிற்றென்னோக்கியமருஞ், செச்சைநிறத்தெரிவைமுகமிடத்தோண்மேல்வாமஞ்சிறுபுறத்தின்முகஞ்சத்தியோசாதந்திகழ்பால். ※

எ - து ஈசானமுகஞ் சிறுபிள்ளைமுகம்போன்றுசுத்தப்படிகமயமாயனவரதமுமீசானதிசையைப்பார்த்துமேனோக்கினதாயிருக்கும்இங்ஙனங்கூறியமுகத்தின்கீழ் கோங்கம்பூநிறம்போன்றதற்புருடம்யௌவனத்தையுடையவர் கண்முகம்போன்றுகிழக்குமுகமாய்விளங்காநிற்கும் கண்டவர்களுக்குப்பயங்கரமுமாய்க்கீழ்நாலாநின்றதாடியையும்புறப்பட்டவெயிற்றினையு முடைத்தாய்க்கறுத்துவிருத்தர்முகம்போன்றவகோரமுகம்வலதுதோளின்மேல்தெற்குமுகமாகவிருக்கும்,வெட்சிப்பூநிறம்பெற்றுமாதர்வதனம்போல அவர்களாபரணத்தையுமுடைத்தாய்வாமதேவமுகமிடத்தொளின்மேல்விளங்காநிற்கும், பிடரியில்மேற்றிசையைப்பார்க்கவிருக்கிறசத்தியோசாதமுகம் இராசாக்கள்முகம்போன் றுபால்நிறம்பெற்றிருக்கும். எ - று சிறுபுறம் - பிடரி (அ௯)

திருவுருவந்தெளிபளிங்குசடாமகுடந் திகழிசிறுபிறையு மூவைந்து திருநயனம்வலப்பாற், கரதலத்திற்சத்தி யபையஞ்சூலநீண்ட கட்டங்கந்தமருகமுமற்றையிடக்கரத்தின், வரதமுமாதுளங்கபலம் போகிசெபமாலைமணமலிநீலோற்பலமுமுடையர்வயதிரெட், டிருவிரட்டிபுறுப்பிரண்டுபதம்பதுமாதனந்தானுறவிருப்பர்சதாசிவர்தத்துவதவிசினுகந்தே.

எ- று. படிகம்போன்றதிருமேனியையுஞ்சடாமகுடத்திற்கொன்றைமாலையிளம்பிறையையும்பதினைந்துதிருநயனமும்வலப்புறத்துத்திருக்கரத்தில்வேல். அபையஞ். சூலம். மாத்திரைக்கோல். தமருகமிவைகளையுமிடப்புறத்துத்திருக்கரத்தில்வரதம். மாதுளம்பழம். பாம்பு. செபமாலை. நீலோற்பலம். இவைகளையுந்தரித்துப்பதினாறுவயதையுமுப்பத்திரண்டுறுப்பையுமிரண்டுபாதத்தையுமுடைய சதாசிவதே

வநாயனார்சதாசிவ தத்துவத்திற் புத்திகாரியமாக த்தன்மஞ்ஞானமுதலிய சிங்கக் கால்களையு மாயிரந்தளத்தையு முடைய பத்மமேயாதனமாக வெழுந்தருளி யிருப்பர். எ- று. (௬௰)

லயாங்கத்திற்சதாசிவத்தியானமுணர்த்திமேற்போகாங்கபூசைசெய்தற்குட்பிரமாங்கங்கள்மூர்த்தியாதலையைந்துசெய்யுளாற்பிறித்துணர்த்து கின்றார்

திருவுருவந்தெளிபளிங்கு திரிநயனம்பிறையுஞ் செறிசடையர்வலக்கரத்திற்றிரிசூலம்வரதங், கருதுகமற்றைய கரத்திற் செபமாலை யபையங் காருணிகர்க்கீசானர்க்கவர்தமக்குக்களிட்டர், திருவுருவங்கோங்கினலர் திரிநயனங்கரமுன்செப்பியதே திருநாமந்தற்புருடதேவர், வரியரவு மிளம்பிறையுஞ்சடைமுடியின்வைத்தார்மலரடியைமறவாதார்வல்வினையைமாய்ப்பார். ※

எ- று. திருமேனிபடிகம்போன்றுமூன்றுதிருநயனத்தையுமுடையராய்த்திருச்சடாபாரத்தில் ஞானசந்திரனையும்வலப்புறத்திற்சூலம். வரதம். இடப்புறத்திற்செபமாலை. அபையம். இவைகளைத்தரித்தூக்கிருபையையுடையராயீசானதேவ ரிருப்பர், அவர்க்குதாழ்ந்திருக்கிறதற்புருடதேவர்கோங்கம் பூப்போன்ற நிறத்தையுமூன்றுதிருநயனத்தையும் வலப்புறத்தில் சூலம். வரதம். இடப்புறத்திற். செபமாலை. யபையந். திருச்சடாபாரத்திலிளம்பிறையையுந் தரித்திருப்பர். இந்தமூர்த்திகளைத்தியானஞ்செய்தவர்களேவலிதானவினைகளைப்போக்கினவர். எ- று. (௬௧)

கரியவுருவெரியசடைகபாலநிரைமாலை கராளமுகங்கவிற்றாடிகண்மூன்றுவட்டங், கரதலங்களொருநான்குங் கட்டுரைத்தபடியே காட்டினமுன்னிருநான்குகரமுமுளவொன்றே, வெருவியிடமருவலரைவெருட்டியபைந்திரத்துவிக்கிரகாகோரமெனவிளம்புபெயருடையா, ரிருபதமுமொருபொழுதுமறவாதேயேத்தியெண்ணுமவரிடர்வினையைபிடிப்பார்களென்றும் ※

எ - று வெளி - எரியசடையென்றது அக்கினிச்சுவாலை போன்ற குஞ்சியையுடையசடை கபாலநிரைமாலையென்றது பிரமவிட்டுணுக்கள்கபாலத்தையொழுங்காக்கிக்கோத்துமுழங்காலளவாகத்தரிக் குமாலை முன் உடனாறுபடையென்னும் எக ஆம் திருவிருத்தத்திலெட்டுப் புயமாகத்தியானங்கூறினதை உரைத்துமென்றலென்னுந்தந்திரவுத்தியால் இத்திருவிருத்தத்திற்கூறினார் [௬௨]

தேமொழியாளுமையென்னத்திருமுகமுந்தோடுந்திலதநுதற்சிறப்புமிருளளகவிதச்செறிவும், வாமமெனுந்தேவர்க்குவாய்த்தனவேசெம்மைவடிவுமவர்கரதலங்கண்ணுதிதனில்வகுப்பே, சேமவுருத்திகழ்சங்கஞ்செடாமுடியிற்பிறையுந்திரிநயனங்கரதலங்கள்செப்பியமுற்படியே, நாமம நுசத்தியோசாதமெனநவின்றநாதற்குநயந்தவரைநினைக்கவினைநாசம். *

எ - து வெளி - மாதர்முகம்போலவாமதேவமிருத்தலாற்றேமொழியாளுமையென்னச்சிறப்பித்தார், சேமம் - இன்பம் - இவ்வின்பந்தானே திருமேனியென்க. [௬௩]

திருவுருவமிரதயர்க்குத்தவளமெனத்தெளிகசேடித்தவுறுப்பனைத் துஞ்செப்பியமுற்படியே, திருவுருவங்கனகமெனச்சிரத்தினுக்குத்தெளிகசேடித்தவுறுப்பனைத்துஞ்செப்பியமுற்படியே, திருவுருவஞ்சிந்தூரமெனத்தெளிகசிகைக்குச்சேடித்தவுறுப்பனைத்துஞ்செப்பியமுற்படியே, திருவுருவம்வண்டினிறங்கராளமுகங்கவசஞ்சேடித்தவுறுப்பனைத்துஞ்செப்பியமுற்படியே. *

எ - து வெளி (௬௪)

ஒவ்வொன்றேதிருமுகமுநேத்திரங்கட்குணரிலுடலொளியுமிரவிமதியுதாசனனைபொக்கு,மிவ்விரண்டேகரதலமும்வரமபையமவையுமிவ்விரண்டேவிழியுமெனவெண்ணிடுகவெழிலார், செவ்வரத்தந்திருவுருவங்கரதலமீரைந்துந்திருநயனமொருமூன்றுஞ்சினத்திடித்தகுரலும், மிவ்வகையெல்லாமுடையரத்திரமொன்றியம்புமிவரடியைபிரதயத்தினிருத்தினிடரிலையே *

எ- து. நேத்திரமூன்றுக்கு மொவ்வொருதிருமுகத்தை யுடையராய் முச்சுடர்போன்றநிறத்தையுமிவ்விரண்டுதிருநயனத்தையும்வரதமபையமாகியவிவ்விரண்டுகரங்களையு முடையராய் நேத்திரதேவர்கள் விளங்கா நிற்பர்கள், பிரகாசத்தையுடையசெவ்வரத்தம்பூப்போன்றநிறத்தையு மூன்றுதிருநயனத்தையுங்கோபத்திலேயிடிபோன்றதிருவாக்கினையும்வலப்புறத்திற்கமண்டலம். வேல். சூலம். மழு. பிரமதண்டம். இடப்புறத்தில். வாள். கேடகம். நாராசம். வில். செபமாலை. யிவைகளைப்பத்துக்கரங்களிலுந்தரித்திருப்பபொன்றுதிவ்வியாகமங்களில் அத்திரமூர்த்தித்தியானஞ்சொல்லுமிவ்வத்திரமூர்த்தியை யிருதயத்திற்றியானிக்கிலிடர்களில்லை. எ- று. ஏகாரம். தேற்றம். சிலவாகமங்களில்வலப்புறத்திற்சூலஞ்செபமாலையென

வுமிடப்புறத்திற்கபாலமுங்கமண்டலமுமெனவும்பேசுமாகக்கூறும். (௧௫)

அகளமாகியசிவன்றானே ஆன்மாக்கள் போகமோக்ஷமடைகையின் பொருட்டுச்சகளீகரித்ததென வுணர்த்துகின்றார்

வாக்குறையாலறிவரியன்வாக்குணர்ந்தமனத்து மறிப்பரியனறிவரி யனாதிமலமுத்த, னேகமலநோயாளர் போகவிதநுகர்ந்து போயமுத்த ன்மயத்தைநோக்காதேநோக்க, நீக்கமிலாப்பஞ்சவித நிறத்துருவி னிகழ்ந் தானிலனீறுமவனுருவே நீங்கினனேநிலத்து, மாக்கையிலா னாக்கை யினை யாதரித்தானனுக்கட்குழக்கறுக்கவல்லதறிவாரவனையாரே. *

எ-து. வைகரிமுதலியவாக்கினாலுமவ்வாக்கினாலுண்டாகிய வாசகப்பிரமாண ங்களினாலுமறிதற்கரியவனாய்ச் சாக்கிரத்திலறிந்த மனத்தாலு மளவிடுதற்கரிய வனாய்த்தனக்கொருவருமொப்பில்லாதவனுமாயனாதியே மலத்தினின்றும் விடுப ட்டவனுமாயிருக்கிறசிவன் ஆணவமாகியவியாதிகளையுடைய வான்மாக்களுடேனா ந்தன்னைத்தியானஞ்செய்து அபரபோகம்பரபோகமாகியபோகபேதங்களைப்பொ சித்துக்கண்ணுக்குப்படலம்போனவாறேபதார்த்தங்கள்விளங்குமாறுபோலவான வாதியின்வாதையில்லாதுதற்சொருபத்தைப்பாராமற்பார்த்திருக்கவே ஆன்மசொ ருபம்விளங்கித்தற்சொருபம்விளங்கப்பஞ்சவன்னசொருபமாகிய அஞ்சுதிருமுகத் தினையுடையசதாசிவமூர்த்தியையதிட்டித்துக்கொண் டிருவேலவியாபித்திருந்தான் எனவேயேனையவிடத்தும்வியாபிக்கவில்லையோவென்னில்நாதமுதற்பிருதிவியீறான தத்துவங்களெல்லாமவனுக்குத்திருமேனியேயென்னுங்கூறிய நாதமுதற்பிருதிவியீ றானதத்துவங்கடோறும்விடப்பட்டுநீங்காதிருக்கையினாலேதனக்கென்னவொருவ டிவில்லாதவச்சிவன்றிருமேனிக்கொண்டதுயாதுகாரணத்தாலென்னிற்றன்னைத்தி யானஞ்செய்யுமான்மாக்களுடையசெனனமரணமாகிய துற்றத்தைப்போக்குகை யின்பொருட்டன்றித் தனக்கொரு பிரயோசன நிமித்தமன்று. அவன் றிருமேனிக் கொண்டுவேதாகமங்களையருளிச்செய்யாதபோது அவனுடையமகிமையையார்தா னறிவார்கள். எ-று. (௧௬)

முத்தியினையடையக்கருதுமவர்க்கோருபாயமுணர்த்துகின்றார்

சேர்ந்திடுகசதாசிவநற்றிருவெல்லையட்டந் தீவினையுந்தீர்ந்துசதாசிவபு ரியைச்செறிவார்; சார்ந்திடுகவப்புரியுட்டமையுணர்ந்தார்தாளைத் தாமறிவ ரெம்பிணியுமருந்துமெனத்தம்மு, ளோர்ந்தவர்தமேவலினுக்கொருப்படுக

விருப்பாலுயிர்க்குயிராய் நின்றசிவனுள்ளொருமையுணர்ந்தே, தீர்ந்திட
வேபசுபாசமூலமலமதுவுந்தேசிகனையதிட்டித்துத்திருவருளைப்புரிவன். ※

எ - து காசிமுதலியதிருப்படைவீட்டிலியன்றதொன்றையடைந்துஅந்தத்தலத்தில்நித்தியகன்மமுடிந்துச்சிவாலயச் சேவைபண்ணி யந்தத்தலத்திலிருக்கிலவர்களுகன்மவாதையின்றிச்சதாசிவபதத்திலுண்டாகியபோகத்தைப்பொசித்திருப்பர்கள், அந்தத்திருப்படைவீட்டில்வாசமாயெழுந்தருளியிருந்து தம்மையுணர்ந்தஞாதாக்களைச்சென்றடைந்துமாதாவானவள்குழந்தைக்குவியாதியின்னதென்றறிந்துமருந்துகொடுக்குமாறுபோல இவர்நமக்குப்பக்குவத்துக்கீடாகஅனுக்கிரகஞ்செய்வரென்றுதன்மனத்திற்கருதிவிருப்பத்துடனேநாடோறுமவருடையஏவலைச்செய்துவரினப்பொழுதுசருவான்மாக்களிடத்திலும்வியாபியாயிருக்கிற சிவனிந்தமாணாக்கன் கபடமன்றியொருமைப்பாட்டாற் செய்யும்வழிபாட்டினையறிந்துஞானாசாரியனையதிட்டித்துஆன்மாக்களுக்குஆணவமுதலியமலங்களைநீக்கிச்சிவானந்தானுபூதியைஅனுபவிக்கும்பொருட்டு அனுக்கிரகம்பண்ணுவன் எ - று
தீவினையுமென்றவும்மையால் - ஆணவாதியுமெனவறிக. (௧௭)

அவரனுக்கிரகம்பெறுமுறைமையுணர்த்துகின்றார்.

எழுதுகொடியிடைமடவாரிணைவிழிவேலெறியுமிளவுருவந்தளருருவு
ம்வேறொன்றென்றே, யழுதகனைப்பரிப்பதனுக்கருவருத் தேயழுங்கியநா
திமலமுத்தனழுக்கறுப்பானென்றடைந்தா, ரொழுகுமவநவவாய் தனூனு
டலினுதியாரொண்குரவனுபதேசத்துற்றதுலலோக, முழுதுங்குமொடுங்
கிடுநாண்மூலமலந்தனிலுமுத்தருமாயநாதிமலமுத்தனடிப்பிரியார். ※

எ - து வல்லிசாத கக்கொடிபோன்றெழுதப்பட்டிருக்கிறவிடையினையுடையமடவார்களது இரண்டுவிழியாகிய ஆயுதங்களினாலேவாதைப்பட்டிருக்கிற இளமையுமுதிர்மையும்வேறல்லஅவ்விரண்டினாலுஞ்சுகமில்லையெனக்கருதிப்படிதளர்கைவளர்கையாகியபரிணாமத்தினையுடையசரீரத்தைச்சுமக்குதற்குச்சிறைச்சாலையிலிருக்கிறவனருவருக்குமாறுபோலவதனையருவருத்துஅழுதுசீயென்றுநக்கித்துஇந்தக்குடும்பத்தைப்போக்குவாரரொன்றுதேடி யான்மாக்களுடைய வாணவாதிதோடத்தையறுத்தியேமலமில்லாதசிவனேபோக்குவனெனக்கருதியடைந்தவர்கள்நவத்துவாரத்தினையுடையசரீரத்தைப்பொருந்தார்கள் ஞானாசாரியருபதேசித்தமுறைமையிலேநின்றுசமாதியைப்புரிந்திருந்துஒப்பில்லாதநாதத்துவத்திலிந்திராதி

புவனங்களைப்பொருந்தியாண்டுள்ளபோகங்களைப்பொசித்துத்துலைந்தவாறேமகாச
ங்காரகாலத்திலனாதிமலமுத்தனாயிருக்கிற சிவனதுசீபாதகமலத்திற்சேர்ந்துமீளா
திருப்பர்கள். எ - று (௯௮)

நின்மலஞானமுள்ளார்சிறப்பினையுமஃதில்லாதார்தன்மையினை
யுமுணர்த்துகின்றார்.

வாழ்க்கையினைமகிழ்ந்தாலும்வாழ்க்கையவமதித்துவனத்துவனைதனி
ற்கனிகாய்மூலமிவைமாந்தி, யாக்கையினையொறுத்தாலுமாக் கையினையா
க்கியளித் தழிக் குமமலனுளனவன்பெயரோதாயே, நீக்கமறவுயிர்க்குயிரா
ய்நிற்பனவனெனவேநினைந்தொருமையுறநின்றார்மலமனைத்துநீங்க, நோக்க
றவேநோக்குவர்களுளத்தொளித்துநின்றநுண்ணியனையவரல்லாருடனேறு
நுழைவார்

எ - து தருமமுதலியமணத்தினால்விவாகஞ்செய்துமகிழ்ச்சியுடனில்வாழ்க்
கையினிருக்கினுமிந்தயில்வாழ்க்கையைச்சீயென்றுகருதிக்காடுமலையிலுண்டா
கியகாய்-கனிகிழங்கு-முதலியவற்றைப்பொசித்துவானப்பிரத்தனாயிருந்தாக்கையி
னையொறுக்கினுஞ்சகலவான்மாக்களுக்கும்பிரகிருதிசம்பந்தமாகியதேகத்தையுண்
டாக்கிச்சிருட்டிதிதிசங்காரமாகியதொழில்களைப்பண்ணுவானொருகத்தாவுளனெ
ன்றுஅந்தக்கத்தாவின்றிருநாமமேதாகிலுமுருக்கமாகக்கேட்டுச்சருவான்மாக்களி
டத்துமந்தத்தன்மைவிட்டு நீங்காமல்வியாபித்துநிற்குமுறைமையினையறிந்து அந்
த ஒருமைப்பாட்டுடன்எப்போதுங்கருதிநின்றவர்கள், ஆணவமுதலியமலங்களி
ன்வலிகெடவணுவுக்கணுவாய்நிற்கிறசிவனைநோக்காதேநோக்குவர்கள். இத்தன்
மைவாராதவான்மாக்கள்பூட்டையும் நீரும்போலப்பிறந்து மிறந்துந்திரிவார்கள்
எ - று எனவேகிரகத்தினிற்பிரமசாரியும் - வானப்பிரத்தனிற்சன்னியாசியுமடங்
கிற்று (௯௯)

தீவினைகட்குச்செய்யும்பரிகாரங்களுள் மேலானபரிகாரமீதென்று
ணர்த்துகின்றார்.

பரிகாரந்தீவினைக்குப்பலவிதமேயவற்றுட் பரமானபரிகாரம் பரமசிவ
ஞான, மிரவியொளியிருளறுக்கையெற்றற்றேபாவ மெனைத்தனைத்து மஃத
றுக்கையிருண்மலத்தின்வலியு, மொருவுமதன்முன்பாவவிதமொழிகைவிய
ப்போவுயிர்க்குயிராயிரண்டறவேயொருவாதேநிற்கும், பரமசிவன்பத்தினி
யைப்பாராதேபார்க்கத்தன்பதிக்கும்பார்ப்பிக்கு மதுபரமஞானம்.

எ- து. ஆன்மாக்கள்செய்தபாவம்போம்படிக்குப் பரிகாரம்பலவிதமாயிருக்கு.ம், அவற்றுள்மேலான பரிகாரஞ்சிவஞானமே யஃதெத்தன்மைத்தெனிற். பூதவிருளையாதித்தப்பிரகாசமெப்படிபோக்குமப்படியேபாவவிதங்க ளெத்தனையுண்டத்தனையுமிக்கன்மமட்டன்றுஅக்கினியைச்சேர்ந்தவித்தானதுயெப்படிதான்கெடாமற்றன்சத்திகெட்ட தோவதுபோல வக்கன்மத்துக்கு க்காரணமாகிய வாணவாதியுந்தான்கெடாமற்றன்சத்திகெட்டுநிற்குமாதலாலச்சிவஞானத்தின்முன்னேபாவங்கள்போமென்பததிசயமன்றேயாதலாற் சருவான்மாக்களிடத்திலுமெப்போதும்விட்டுநீங்காமனிற்குஞ்சிவசத்தியினது சீபாதகமலங்களை யூனதிட்டியினாற்பாராமல் ஞானதிட்டியினாற்பார்க்கில். அந்தச்சத்தியேதாரகமாய்த் தனக்குப் பதியாயிருக்கிறசிவனையனவரதமுமனுசந்தானம்பண்ணிவைக்கும் அதுவேபரமமானசிவஞானம் எ- று. பரிகாரம்பலவிதமாவன. கெங்கைமுதலாயினதீர்த்தத்தின்முழுகல். மந்திரஞ்செபித்தல். ஓமஞ்செய்யல். கிருச்சிரசாந்திராயணமுதலியவிரதமனுட்டித்தல் காசிமுதலிய திருப்படைவீட்டைச் சேவித்தல். தலங்களிற் சிவலிங்கப்பிரதிட்டை செய்தல். முதலியனவாம். (௱)

இப்பரிகாரஞ்செய்தற்குப் பக்குவரிவரொன்பதும் அபக்குவர்க்குணர்த்தின்வருங்குற்றமு முணர்த்துகின்றார்.

பரிகாரவியலிதனைப்பாவவினைக்கஞ்சிப் பழிக்குமழிந்திவையிரண்டும் பாற்றியிடப்பணிந்து, குருபாதமலர்தலையிற் கொண்டமூவான் குறிப்பைக் குறித்தறிந்தாண்டாறிரண்டிட் குரவனுளங்குழைந்தே, பரிவுறவேயவன்றனக்கேபகர்ந்திடுகவஞ்சாப்பாதகர்க்குப்பகரற்கபகர்ந்தானேயாகி, லெரிவாயநிரையத்திலிருவரும் வீழ்வாரோயெவராவர் துணையமலனுரையிலங்கித்தார்க்கே. ※

எ - து இந்தப்பரிகாரவியலையுள்ளபடியாராய்ந்து பாவவினைக்குமிம்மையின்னபாவத்தைச்செய்தானென்னும்பழிக்கும்பயந்தழிந்துஅவ்விருவகையும்போகும்படியாசாரியனது சீபாதகமலத்தைத்தனதுதலையிற்சூடிக்கொண்டமூதுதண்டுபோலநமஸ்காரஞ்செய்யு மாணாக்கனுட்கருத்தையவ்வாசாரியன்விசாரித்துப்பன்னிரண்டுவருஷம்பரிச்சித்துஅறிந்து தீக்கைசெய்தவனுக்கு அக்குற்றம்போம்படிக்குக்கிருபைசெனித்துப்பரிகாரஞ்சொல்லுக, பாவத்துக்குப்பயப்படாதமாணாக்கற்குப்பரிகாரம்பகராதொழிக, அபக்குவர்களுக்குப்பரிகாரங் கூறிலக்கினிச்சுவாலைபோலவெரியாநிற்கிறநரகத்திலேயவ்விருவரும்வீழ்ந்துகிடப்பார்கள், பரமே

சுரனருளிச்செய்தவேதாகமங்களின்வழியே நடவாதுநிந்தித்தவான்மாக்களுக்கு யாவர்துணையாவார் ஒருவருந்துணையாகார்கள். எ - று ஏகாரந்தேற்றம் (௱க)

முடிந்ததுமுடித்தலென்னுந்தந்திரயுத்தியாலுணர்த்துகின்றார்.

வேறு.

என்றுபரிகாரவிதமாசறவிசைத்தான் *
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் *
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினைநைய *
நின்றமுனியன்றுணரநிற்குணவிணைந்தே *

எ - று வெளி. [௱உ]

சிவத்துதி.

வேறு.

அன்னியம்பசுபாசமெனப்படுவனையநாதியேமலமற்றவனப்பனே *
கன்னிபாகங்கலந்தகணவனேகருதுமெய்யடியார்தங்கணவனே *
முன்னமேபுரமூன்றையுமட்டனேமுத்தர்கண்டுமுகந்துறைமட்டனே *
தென்னன்றேவியுநின்கண்சிறப்பரோசெறிகிலார்கள்பிறந்துஞ்சிறப்பரோ *

எ - று பசுவுக்கும்பாசத்துக்குமிலக்கணமாயிருக்கப்பட்டநின்றசுவாமியே அநாதிகாலத்திலேயாணவமுதலியகுற்றமில்லாதஅழகனே, பார்வதியார்தவஞ்செய்துவந்தநாளிற்றிருமேனியிலொருபாகங்கொடுத்துச்சேர்ந்தகண்போன்றவனே, மெய்யடியார்விரும்பப்பட்டநாயகனே, பூருவத்திலேமுப்புரத்தினையுமொருகணத்திலேசங்கரித்தவனே, முத்தான்மாக்கள்தெரிசித்துச்சிவானந்தானுபூதியையநுபவிக்கப்பட்டஅமிர்தசொரூபனே, பாண்டிமாதேவியுமும்முடையதிருக்கடைக்கணவலோகனத்தினாலே முத்திபெற்றனளே, தேவரீர்சிபாதகமலத்தையடையாதவர்கள்பிறந்தும்நல்லகுணமில்லாதவர்கள் எ - று (௱௩)

இதுவுமது.

நடலைவாழ்வினைநீக்கியநம்பனே நயந்துபார்த்தற்களித்தசொன்னம்பனே, சுடலைநீறணிசுந்தரவேடனேசுரத்துநாய்புடைசூழச்செல்வேடனே, க

டலினஞ்சினையுண்டகளத்தனே கரிசர்நெஞ்சிஞெளித்தகளத்தனே, யுடலி
ற்பூணெனப்பாம்புமுடையனேபுழுவையின்னுரித்தோலுமுடையனே. *

எ-து. துன்பவாழ்வினின்று நீக்கியநம்பனே, அருச்சுனற்குக் கிருபைசெய்து பாசுபதங்கொடுத்தபெரியசுவாமியே, ஆதிப்பிரமாவின்மயானத்திருநீற்றைத்தரித் தவெற்றிப்பாட்டைமிக்க அழகை யுடையவனே, அருச்சுனனிமித்தமாக வேதங்க ளையாகிப்புடைசூழப்பாலைநிலத்தில் நடந்தவேடரூபனே, கடலின்கணெழுந்தநஞ் சினையுண்டகண்டத்தையுடையவனே, பாவிகளிதையத்திற்பிரகாசியாமலொளித்த கள்ளத்தையுடையவனே, திருமேனியின்கட் பாம்பாபரணத்தை யுடையவனே, பு லித்தோலையுடையாகவுடையவனே. எ-று. (௱௯)

குமரன்றுதி.

வேறு

முருகனேயெனக் *
கருமுறைசறும் *
பருகுபாலினும் *
பெருகுமின்பமே *

எ-து. வெளி. (௱௰)

அகத்தியர்துதி.

பொதியமாமலைக் *
கதிபனேயெனக் *
கதியுமாமுடற் *
பொதியுமாயுமே *

எ-து. வெளி. (௱௰௧)

பதிஞேராவதுபரிகாரவியலுரை
முற்றும்.





## பன்னிரண்டாவதுகோபுரவியல்

இவ்வோத்தென்ன பெயர்த்தோவெனிற் பஞ்சகௌவியம் பாவத்தைக்கெடுத்துப்புண்ணியத்தைத் தருமெனமுற்கூறினார்அக்கௌவியத்தைத்தருநந்தைமுதலிய வாக்கணிற்குமிடத்தின் றன்மைமுதலியவற்றைக்கூறுகையாற்கோபுரவியலென்னும் பெயர்த்து, இத்தலைச்செய்யுளென்னுதலிற்றோவெனிற்· கந்தனை வினாத லுணர்த்திற்று.

ஆக்குவதுமழிப்பதுவுமறத்தினையுமறத்தினையு *
மாக்கட்குருமைந்தெனவேயறைந்தனை முன்னறுமுகவ *
வாக்களவைநிலவுமெலையருள்விரியவெனக்கறிய *
வாக்கமுறவனைத்துயிர்க்கு மவற்றாலுமலைலறவே *

எ- து. வாராய்சண்முகதன்மத்தையுண்டாக்குவதும் பாவத்தைப்போக்குவதும்பசுக்களிடத்துண்டாகின்ற பஞ்சகௌவியமேயென்றுபரிகாரவியலில் முன்புகூறினை, அப்பசுக்கணிற்குமெல்லையை யெனக்கு விளங்கவருள்செய்வாயாக, சருவான்மாக்களுமிப்பசுக்களின் சொரூபத்தையுள்ளபடி யறிந்ததனைப்பூசித்துஅதனிடத்துண்டான கௌவியத்தைப் பரமேசுரனுக்க பிடேகம்பண்ணியதனாலேயவர்களவர்கள்செய்தபாவங்களைப்போக்குகையின்பொருட்டு. எ- று. (க)

வினாதற்குத்தர முணர்த்துகின்றார்

என்றிசைத்தமுனிவரனுக்கெழிலுடையகுமரதரன் *
நன்றறைவமெனநவின்றுநாதனடித்தேசுடனே *
யொன்றிவிழித்துலகனைத்துமுறைத்தவற்றுட்சிவபுரத்து *
ணின்றிழிந்துநிலத்துறையுமெனுங்கதையுநிகழ்த்திடுவாம் *

எ- து, என்றுவிண்ணப்பஞ்செய்தவிசிட்டமானஅகத்தியனுக்குஅப்படியேயுனக்குநன்றாகச்சொல்வாமென்று குமாரசுவாமிதிருவுளஞ்செய்துபரமமானநிட்டையைப்புரிந்துவிழித்துப்பிருதிவியண்டத்திலுண்டானஅளவு கீழ்ப்பிரமாணங்களைச்சொல்லிஅந்தவண்டத்தினுளிருக்கிறசிவலோகத்திற்பரமேசுரன் சன்னிதிமுன்னிருக்கும்வீரஇடவத்தினதுஇனமான நந்தைமுதலியவைந்துகோமாதாக்களும் பூமியின்கணிழிந்துவந்துநிற்குஞ்சொரூபத்தையுமுனக்குச்சொல்வாம். எ- று. குமரதரன்வடமொழி. (உ)

அண்டப்பகுதியையறியப்புகில்அணுமுதலியபிரமாணமறியாவிடத்தறியப்படாவாதலால்அவ்வணுமுதலியவற்றைமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

இன்னுழையுங்கதிரணுவெட்டெட்டிணங்கிற்கசாக்கிரகம் *
சொன்னவிதனிருநான்குமிலீகையெனத்துணிந்திடுக *
இன்னவிலீகையினையவிருநான்கேயூகையென *
வுன்னிடுகயூகையினெட்டியவையெனவுன்னுகவே *

எ- து. கிரகத்திற்சாளரவாசலாதித்தகிரணத்தாலுண்டாகிய-துகள்-அணு அதுபதினாறுகொண்டதுசிறுபிள்ளைகள் மயிர்நுனியாகிய கசாக்கிரகம் அதுஎட்டுக்கொண்டது- இலீகை- அது-எட்டுக்கொண்டது- யூகை- அது எட்டுக்கொண்டது-யவை எ- று. இலீகை-ஈர்- யூகை- பேன்-யவை- நெல்- அணு- எட்டுக் கொண்டது-திரிசரேணுவென்க. (௩)

இன்னயவைபிருநான்குமங்குலமென்றெண்ணிடுக *
சொன்னவிதமறுநான்குமுழமெனவேதுணிந்திடுக *
பன்னுமுழமொருநாங்குந்தனுவெனவேபார்த்திடுக *
மன்னுதனுவிரண்டினையோர்தண்டெனவேமதிக்கவரோ *

எ - து இந்தநெல் குறுக்காக - எட்டுக்கொண்டது உத்தமமானமாத்ருங்குலம், அது-இருபத் துநான்குகொண்டது-முழம், அது-நான்குகொண்டது - வில் - அது-இரண்டுகொண்டது-தண்டம் எ - று ஏழுநெற்கொண்டதுமத்திமாங்குலம்-ஆறுநெற்கொண்டது அதமாங்குலம்-இஃதன்றிநெல்லினீளத்தான் மூவிதமுழமென்க-முழமெனினும் அத்தமெனினுமொக்கும்-அரோ-அசை. [௪]

தெண்டமிரண்டாயிரத்தைக்குரோசமெனத்தெளிந்திடுக *
கொண்டவிருகுரோசத்தைக்கேவியூதியெனக்கொள்க *
மண்டியநாற்குரோசத்தையோசனையாமதிக்கமணி *
னண்டமொன்றிற்சதகோடியோசனைவித்தாரமுமே *

எ - து தண்டம்இரண்டாயிரங்கொண்டது-குரோசம்-அது-இரண்டுகொண்டது-கெவியூதி-அக்குரோசம்-நான்குகொண்டது-யோசனை-அந்தயோசனை நூறுகோடிகொண்டது-பிருதிவிதத்துவத்திலுண்டாகியவோரண்டத்தளவின் விரிவு எ - று வித்தாரமுமென்றவும்மையாலுயரமுநூறுகோடியெனவறிக, குரோசம்-

கூப்பிடுதூரம்-கெவியூதி-அரைக்காதம்.] (ரு)

பூமிமுதனுதமீறுகவண்டங்கள்போகப்போகஅளவேற்றமென்பதை மூன்றுசெய்யுளாலுணர்த்துகின்ருர்.

மண்டனக்காயிரகோடியண்டமுள்வாரிக்கு *
மெண்டொகைபிற்பேதமிலேவிரிவுயர்ச்சியேறியுறு *
மண்டனிலுந்தசகுணிதம்வாரிக்குவாரியினு *
மொண்டழற்குமுறைத்தமுறைபிரகிருதிமுடிவுமுறும் *

எ-து பிருதிவிதத்துவத்துக்கு ஆயிரகோடியண்டமுண்டு - அப்பிருதிவிதத்துவத்தைப்பற்ற அப்புதத்துவம்பதின்மடங்குவிரிவுமுயர்ச்சியுமேற்றமுண்டு-அந்த அப்புதத்துவத்தைப்பற்றத்தேயுமுதல்பிரகிருதியீருகஆண்டங்கள்பதின்மடங்குவிரிவுமுயர்ச்சியுமேறியுறும், எ-று (சு)

குணிதசதமிராகத்திற்கூடுமூனயதுதனினுங் *
குணிதசதம்வித்தைக்குக்கூடுமூனயராகத்துங் *
குணிதசதநியதிக்குக்கூடுமூனவித்தையினுங் *
குணிதசதங்காலத்துநியதியினுங்கூடிடுமே *

எ-து முற்கூறியபிரகிருதியைப்பற்றஇராகம்நூறுமடங்குயரமும்விரிவுமேற்றமுள-அந்தஅராகத்தைப்பற்ற வித்தியாதத்துவநூறுமடங்குவிரிவுமுயர்ச்சியுமேற்றமுள, அந்தவித்தையைப்பற்றநியதிதத்துவ நூறுமடங்குவிரிவுமுயர்ச்சியுமேற்றமுள,அந்தநியதிதத்துவத்தைப்பற்றக்காலதத்துவநூறும்டங்குவிரிவுமுயர்ச்சியுமேற்றமுள எ-று (எ)

குணிதநியுதாயுதமேகலேக்குமுனிற்கூடியிடுங் *
குணிதமொருகோடியென்மாயைக்குங்கூடியிடுங் *
குணிதமுறுஞ்சுத்தவித்தைகோடியுடனேரயுதங் *
குணிதவிதமிம்முறையினுதார்த்தங்கூடிடுமே *

எ-து முற்கூறியகாலத்தைப்பற்றக்கலேதத்துவநூற்ருருபதினுயிரம்விரிவுமுயர்ச்சியுங்கூடுங்கலேயைப்பற்றமாயைகோடிமடங்குகூடும், மாயையைப்பற்றச்சுத்தவித்தைகோடியேபதினுயிரமடங்குகூடும், சுத்தவித்தையைப்பற்ற இலக்ஷமதிகம் ஈசுரம் ஈசுரத்தைப்பற்றச்சாதாக்கியம் இலக்ஷமதிகம் அதனைப்பற்றவிந்துலக்ஷமதிகம்இப்படியேயொன்றுக்கொன்றுபோகப்போக,மேலசிதத்துவமிப்படிய

ளவுபட்டதன்று எ - று மேற்பட்டதுவியாபகம் கீழ்ப்பட்டதுவியாப்பியமென வறிக. (அ)

பிருதிவியண்டத்தின்வகையுணர்த்துகின்றார்.

மண்டனக்காயிரகோடியண்டமெனமதித்தவற்றோ *
ரண்டமுறுமளவினையுமதனுலகமனைத்தினையுங் *
கண்டிடுகமுனிவரனேகழறிடுவங்கற்பார்க்கும் *
பண்டைவினைப்பாவமறப்பரலோகபதமுறவே *

எ - து வாராய்முனிவரனேபிருதிவியிலொருதட்டில்தேங்காய் விளாங்கனிபரப்பினாற்போலஆயிரகோடியண்டமுண்டென்றுயுத்திபண்ணியவற்றுளோரண்டத்துக்குண்டானஉயரவகலங்களின்பிரமாணங்களையுமதிலுண்டாயிருக்கிறபுவனங்களையும்யாஞ்சொல்வாமறிவாயாக, இதனாற்பிரயோசனம்யாதெனிலிந்தவண்டபேதங்களைச்சொல்லுமாகமத்தையதிகரித்தவர்க்குப்பூருவத்திலார்ச்சித்தகன்மாதிகள்க்ஷயம்பிறந்துசிவசாயுச்சியத்தையடைகையின்பொருட்டு எ று (க)

மேலதனைத்தொகுத்திரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

வேறு

தரைக்குக்கீழ்க்கோடிதானுறுமைம்பது *
தராக்குமேற்கோடிதானுறுமைம்பது *
தரைக்குண்மேருத்தடவரைத்திக்கெலா *
முரைத்தவைம்பதுறுங்கடாகத்தொடும் *

எ - து கீழண்டவோடுதுடங்கிப்பூலோகம்வரையைம்பதுகோடியோசனையும் பூலோகத்துக்குமேலண்டகடாகவோடுவரையைம்பதுகோடியோசனையும் பூலோகத்தின்மத்தியிலிருக்குமகமேருவினடுவினின்றுங் கிழக்கு- மேற்கு -தெற்கு - வடக்கு - இந்தநான்குதிசைகளின் அண்டவோட்டின்கனமீறாகவைம்பதைம்பது கோடியோசனைதூரமும்பொருந்தும் எ -று (ம)

பொன்மயத்தகடாகப்புறத்திசை *
தன்னிற்சாரும்புவனஞ்சதமவை *

தன்னினூற்றுவர்தங்குவரீசன்மே
லுன்னிலாறுபுரமிரண்டோர்கவே

எ - து பொற்சொரூபமாய்ப்பதினாயிரஞ்சூரியப்பிரகாசமாய்✠குக்குடாண்டம்போன்றிருக்கிறவண்டகடாகப்புறம்பேயிந்திரதிக்குமுதலியபத்துத்திக்கிலுமிருக்கிறநூறுபுவனத்திலும் உருத்திரர்களூற்றுவரிருப்பார்கள், அவர்கள்புவனத்துக்குமேற்காலாக்கினியுருத்திரர் முதலியர்புவனமாறு-அவைக்குமேற்புரமிரண்டுண்டவையுணர்வாயாக எ - று அவையாவையெனின் - இந்திரதிக்கில் - கபாலீசன் - அசன் - புத்தன் - வச்சிரதேகன் - பிரமத்தனன் - விபூதி - அவ்வியன் - சாத்தா-பினாகி - திரிசோதியன் - என்றவுருத்திரர்கள்- ௰ - அக்கினிதிக்கில் - உருத்திரன் - உதாசனன் - பிங்கலன் - காதகன் - அயன் - சுவலன் - தகனன் - வெப்புரு - பிரமாந்தகன் - க்ஷயாந்தகன் - என்றவுருத்திரர்கள் - ௰ - இயமதிக்கில் - யாமியன் - மிருத்தியு - அரன் - தாதா - விதாதா - கத்திரு - காலன் - தன்மன் - சங்யோத்தா - வியோக்கிருதன் - என்றவுருத்திரர்கள் - ௰ - நிருதிதிக்கில்- நிருதி மாரணன்-அரந்தா-குரூரதிருட்டி-பயாந்தகன்-ஊர்த்துவகாயன் - விரூபாக்ஷன்-தூமிரு-லோகிதன்-தெங்கிட்டிருணன்-என்றவுருத்திரர்கள் - ௰ - வருணதிக்கில்-பெலன்-அதிபெலன்-பாசஅத்தன்-மகாபெலன்-சுவேதா-செயபத்திரன்-தீர்க்கவாகு-செலாந்தகன்-வடவாமுகன்-தீமான்-என்றவுருத்திரர்கள் - ௰ - வாயுதிக்கில் - சீக்கிரன்-லகு-வாயுவேகன்-தீக்ஷணன்-சூக்குமன்-க்ஷயாந்தகன் - பஞ்சாந்தகன்-பஞ்சசிகன்-கபத்தி-மேகவாகனன்-என்றவுருத்திரர்கள் - ௰ - குபேரதிக்கில்-நிதீசன்-ரூபவான்-தன்னியன்-சௌமியன்-சௌமியதேகன்-பிரமத்தனன் - சுப்பிரகடன்-பிரகாசன்-இலக்குமிவரன்-சோமேசன்-என்றவுருத்திரர்கள் - ௰ - ஈசானதிக்கில்-வியாத்தியாதிபன்-ஞானபுகன்-சருவன்-வேதபாரகன்- மாத்திருவிருத்தன்-பிங்கலாக்ஷன்-பூதபாலன்-பெலீப்பிரியன்-சருவவித்தியாதிபன்-தாதா-என்றவுருத்திரர்கள் - ௰ - அண்டகடாகவோட்டுக்குக்கீழேவிட்டுணுதிக்கில் - அனந்தன் - பாலகன்-வீரன்-பாதாளாதிபதி-விபு-இடபத்துவசன்-உக்கிரன்-சுப்பிரன்-உலோகிதன்-சருவன்-என்றவுருத்திரர்கள் - ௰ - அண்டகடாகத்தின்மேலே-பிரமதிக்கில்-சம்பு-விபு-கணத்தியக்ஷன்-திரியக்ஷன்-திரிதேசகவாதகன்-சன்வாகன்-விவாகன்நபன்-லீப்சு-விலக்ஷணன்-என்றவுருத்திரர்கள் - ௰- ஆகியவிந்தநூற்றுவரும்-இந்திராதியரானவுலோகபாலகர்பெலத்தையுமடக்கியவர்களவர்களாற்பூசிக்கப்பட்டுக்கொண்டிருப்பார்கள், இவர்கள்புவனம் - ௱ - காலாக்கினி-கூர்மாண்டர்-ஆடகேசுர

---

✠ குக்குடாண்டம் - கோழிமுட்டை.

ர்-பிரமா-விட்டுணு-உருத்திரன்-இவர்கள்புவனம் -௬- அண்டகடாகத்துக்கு மேலேசூக்குமப்பிருதிவியில்-பத்திரகாளி-வீரபத்திரர்கள்-இவர்கள்புவனம் - ௨ - ஆகப்பிருதிவிதத்துவத்திற்புவனநூற்றெட்டென்க. (௰௧)

கீழ்அண்டகடாகத்தினளவுங்காலாக்கினியுருத்திரர்மனை
முதலியதன்மையுமூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

அண்டகடாகக்கனமுண்டொருகோடியதனடியுட் *
கண்டிடுககாலாங்கியுருத்திரர்க்குக்கனகமனை *
யுண்டதற்குன்னதங்கோடியோசனையீரைங்கோடி *
மண்டியமெய்த்தழற்கொழுந்தைங்கோடியுறும்வளர்புகையும் *

எ - து - கீழண்டகடாகத்தினுடையகனமொருகோடியோசனை, அந்தவண்டகடாகத்தினுள்காலாக்கினியுருத்திரர்க்குகனகமயமானவாலயங்கோடியோசனை, அவருடையதிருமேனியிலக்கினிச்சுவாலை பத்துக்கோடியோசனை, அந்தச்சுவாலையிற்புகையைந்துகோடியோசனையுண்டு. எ - று (௰௨)

யோசனையாயிரமனையுளரியணையினுயரந்தான் *
யோசனையீராயிரமென்றதன்விரிவையுணர்ந்திடுக *
தேசுடையகாலாங்கியுருத்திரர்தந்திருமேனி *
யோசனையுமொண்டமூலாலயுதமெனவுன்னுகவே *

எ - து காலாக்கினியுருத்திரருடையவாலயத்தினிருக்குஞ்சிங்காதனத்தினுயரமாயிரம்யோசனை, அந்தச்சிங்காதனத் தின்வித்தாரமிரண்டாயிரம்யோசனையெனவறிக, பிரகாசத்தையுடையவந்தக்காலாக்கினியுருத்திரநாயனார்திருமேனியினுயரம்பதினாயிரம்யோசனையக்கினிசொரூபமாயிருக்குமென்றறிவாயாக. எ-று ()

தரித்துடையர்வலக்கரத்திற்றயங்கொளிவாட்சரத்தினையும் *
பரித்துடையரிடக்கரத்திற்பலகையினைத்தனுவினையு *
முருத்திரர்களொருபதின்மருறைவரவருறையவர்போ *
லுருத்திரர்களொவ்வொருவர்க்கொருகோடிபரிச்சிதமே *

எ - து அந்தக்காலாக்கினியுருத்திரதேவநாயனார்வலக்கையின்மிகவும்பிரகா

சத்தையுடையவாளும் அம்பும் இடக்கையில் கட்கமும் வில்லுந் தரித்திருப்பர், இந்தக்காலாக்கினியுருத்திரதேவநாயனரைச் சூழ்ந்தவரைப்போலுருத்திரர்கள் பதின்மரிருப்பர்கள், அவரைச் சேவித்திருக்கிற பதின்மரையுமொவ்வொருவரையொவ்வொருகோடியுருத்திரர்கள் பரிவாரமாகச் சூழச் சேவித்திருப்பர்கள் எ - று

ஆகக்கடாகங்கூடக் காலாக்கினியுருத்திரர் புவனம் பதினோருகோடியுடனொன்க. (௰௪)

அப்புவனத்தின்மேல்நரகங்களினளவையுமன்று
செய்யுளாலுணர்த்துகிறார்

இனையபுரிமிசைநிரயமெழுநான்குகோடியுறு
நினையினவையெழுநான்குநிலைமடமேயெனநிலவுந்
துனியுறுவரவைதன்னிற்றுரிசரவற்றினுக்களவு
முனிவிருநூறாயிரமுமுப்பஃதுகோடியுமே

எ - று இந்தக்காலாக்கினியுருத்திரபுவனத்துக்குமேலேயிருபத்தெட்டுக்கோடிநரகமிருக்கும், இந்நரகபுவனத்தைவிசாரித்தறியுமிடத்து அதுவொன்றின்மேலொன்றாக இருபத்தெட்டுத்தளமாகக் கட்டினமனைபோன்றிருக்கும், அதில், அதிபாதகமுதலிய பாவபேதங்களைப்புரிந்தவர்களிடத்துவாதையுறுவர்கள், அந்நரகங்களினளவுவிசாரிக்குமிடத்து முப்பதுகோடியேயிரண்டுநூறாயிரம்யோசனையுயரமெனவறிக எ - ( )

இடையிடையிற்படிகளைக்கும்படுகுழிக்குமிடைவெளிக்கும்
படுமுயரமவற்றடங்கும்படிகளைகட்களவுநிக
ழிடையிடையிற்குழியாழமிலக்கமிடைவெளிதானும்
புடைவிரிவுமண்டகடாகத்துடனேபொருந்திடுமே

எ - று முற்கூறியமுப்பதுகோடியேயிரண்டுநூறாயிரம்யோசனையுயரத்துள் நடுவேநடுவேயிருக்கிறவிருப்பமையத்தாலுண்டாகியபடங்களும் நரகக்குழிகளினாழங்களும் அவையவைகளின்மேலேயிருக்கிறவிடைவெளிகளினுயரமுமடங்கும், அவைகளினிடையிலிருக்கிற படங்களுக்களவதிகமாயிருக்கும், இடையிடையினரகக்குழிகளினாழம் நூறாயிரம்யோசனையாம், அந்தநரகக்குழிகளுக்குமேலேயிருக்கிறவொவ்வொருஇடைவெளியுயரமும் நூறாயிரம்யோசனையாம், அந்தநரகங்களின்புடைவிரிவுகளைவிசாரிக்குமிடத்து நாலுதிக்குமண்டகடாகத்துடன்பொருந்தும். எ - று (௰௫)

புடமிருப்புமயமிருபத்தொன்பதுளபுடமொவ்வொன் ✻
றடைவுமொருகோடியுநூற்றைம்பதினுயிரந்தானு ✻
மிடமுறுமெண்ணுயிரமுமறுநூறுமிருபஃது ✻
மடியக்கன்றபுடத்துயர்ச்சியதிகமிருபஃதாமே ✻

எ - து முற்கூறியபுடங்களிருபத்தொன்பதிருப்புமயமாயிருக்கும், ஒவ்வொருபுடத்தினுயரங்கோடியே நூற்றைம்பத்தெண்ணுயிரத்தறுநூற்றிருபதுயோசனையெனவறிக, அப்புடங்களினுயரத்தைப்பற்றவெல்லாவற்றிற்குமடியிற்பொருந்திய புடத்துயரமிருபதினுயிரம்யோசனையதிகமுள்ளதெனவறிக. எ - று (௰எ)

அந்தநரகத்தின்மேலிடைவெளியுங்கூர்மாண்டர்புவனமும்
அவர்தன்மையுமூன்றுசெய்யுளாலுணர்த்துகினுர்

நிரயமிசைநிராலம்பமுப்பதினுயிரநில்வு ✻
முறைசெய்தநிராலம்பத்துச்சிமிசையோரிலக்கம் ✻
வுறையவொருகோடியுறுமண்ணவற்றுட்கீழ்பாகங் ✻
குறியவிரும்பிடைப்பாகமேல்பாகங்கனகமயம் ✻

எ - து இங்ஙனங்கூறியவெல்லாநரகத்துக்குமேல் வெளிமுப்பதினுயிரமுயரம், அந்தவெளிக்குமேல்நூறுயிரங்குறையக் கோடியோசனையுயரங்கூர் மாண்டர்புவனம், கீழ்பாகமண்ணுகியுநடுப்பாகமிரும்பாகியுமேற் பாகங்கனகமாகியும் பொருந்தும் எ - று (௰அ)

மேல்யபாற்கனகபுரிவீற்றிருப்பர்கூர்மாண்டர் ✻
காலவழுவிரவியுருக்காளமுகமழுவுங்கை ✻
கோலமுறுவட்டவிழிகொண்டுடையரவர்தம்மைப் ✻
போலுமுருத்திரர்பலருமுடையடைவர்போற்றிசைத்தே ✻

எ - து மேலாயிருக்கிறகனகபூமியிலேநரகத்துக்கதிபராகியகூர்மாண்டதேவராயுள்ளோர்பிரளயகாலாக்கினியும்பிரளயகாலாதித்தியனும்போன்றதிருவுருவுங்கரும்பாகியமுகமுமழுத்தங்கியகையுமஅழகுபொருந்தி வட்டமாய்க்குழிந்திருக்கிறதிருநயனமுமுடையராய்எழுந்தருளியிருப்பர், அவரைச்சூழ்ந்தவரைப்போன்றிருக்கிறவுருத்திரர்அநேகரவரைத்தோத்திரஞ்செய்துசேவித்திருப்பர். எ - று மழுவுமென்றவும்மையால்வலக்கைகளில்மழுவன்றி யம்பையுமிடக்கைகளில்வில்லையும்பலகையையும்பயங்கரமாய்த்தோன்றியவீரப்பல்லிணையுமுடையரென்க (௰௯)

பிணைவிழியார் துணைமுலையார் பிடிநடையார் துடியிடையார் *
பணையனதோளிணையிளையார் பலர்பரவப்படுமொழியார் *
றிணைமுறுமாகணமுறைமையிற்செறியவமர்கூர்மாண்டர் *
எணமுடையார்கணமடையாரிடர்கிளையத்திறையவரே *

எ - து பிணைவிழிமுதலியவுறுப்புக்களையுடையராகியகன்னியர்கள்பலர்பதத்தையுடையவுரைகளாற்றோத்திரஞ்செய்யத்திண்ணமுற்றபெரியகணங்கள்தாந்தாம்நிற்குமுறைமையிலேசெறிந்துநின்றுசேவிக்க, அந்தக்கூர்மாண்டதேவர்எண்ணமுடையாராகிக்கணப்பொழுதுந்துயரத்தையடையாராகியந்தரகங்களுக்குக் கதிபதியாயிருப்பர் எ - று (உ0)

அந்தக்கூர்மாண்டபுவனத்துக்குமேலுள்ளவிடைவெளியும்
பாதாளங்களின்றன்மையுமாறுசெய்யுளாலுணர்த்துகின்றார்

உரைத்தபுரிமிசைவெளிதானொன்பதினாயிரமாந் *
தெரித்ததன்மேலாபாதபாதாளநீர்க்கத்தைத் *
தரித்திடுகபத்திலக்கமெனவடிவந்தமனியமே *
பரித்தவிரிவயுதமிடைவெளிதானுமதன்படித்தே *

எ - து இங்ஙனஞ்சொல்லிய கூர்மாண்டபுவனத்துக்கு மேலிடை வெளியொன்பதுநூறாயிரம்யோசனையுயரம், இந்தவிடைவெளியின்மேற்பொன்மயமாயிருக்கிறஆபாதபாதாளத்தினுன்னதத்தைப்பத்துநூறாயிரம்யோசனை யெனவறிகஇதற்குமேலிடைவெளியின்பரப்புப்பதினாயிரம்யோசனை யதனுயரமும்பதினாயிரம்யோசனை எ - று (உக)

பொருந்துமதுமுப்பாகம்பூருவத்திற்றிதியோ *
யிருந்திடுவர்நாகேசரிடைப்பாகிற்பச்சிமத்தில் *
வரந்திகழும்வாளரக்கர்மற்றையபாதலந்தோறும் *
பரந்திடுமிப்படிபாகம்வெளியுயரம்பரப்பெல்லாம் *

எ - து. அந்தப்பாதாளம் மூன்றுகண்டமாயிருக்கும் அதின்கீழ்ப்பாகத்திற் சங்குசருகியென்னும்பெயரையுடைய அசுரனிருப்பன், மத்தியபாகத்திற் குளிகனென்னும்பெயரையுடையநாகராசனிருப்பன், மேற்பாகத்தில்விசிட்டமானபிரகாசத்தையுடையவிகடனென்னு மிராக்கதனிருப்பன், இப்படியே மற்றைப்பாதாளங்க

டோறும்மூன்றுபாகமுமதிலிருக்கிறவதிபதிகளுமப்பாதாளங்களின் விரிவுயரமும். எ- று. இனிபத்மதலபாதாளமுதலிய ஆறுபாதாளங்கடோறு மொவ்வொன்றில்மூன்றுகண்டத்திலிருப்பர்கள்யாவரெனில். பிரகலாதரன். சுபாலகன். கற்கந்துகன் பராக்கிரன். பிருதற்கெர்ப்பன். பெலி. எனத்தயித்தியர்க ளறுவர். வாசுகி. கம்பலன். கார்க்கோடகன். காளாங்கன். துர்த்தெரிசனன். தச்சகன். எனநாகராசாக்களறுவர். உலோகிதாக்ஷன். யமன். விசடனன். கராளன். நிருகாதன். பிங்கலன். எனஇராக்கதரறுவர், இந்தஅதிபதிகள்பதினெண்மருமம்முறையேயிருப்பர்களெனவறிக, இஃதன்றியொருகண்டத்துக்குமும்மூன்றுபெயராக மூன்றுகண்டத்துக்குமொன்பதின்மருண்டென்க, ஏனையவுமிவ்வாறுகாண்க. (உஉ)

அதன்மீதுபதுமவொளிபத்மதலமெனவறிக *
வதன்மீதிந்திர நீலநிதலதலமெனவறிக *
வதன்மேற்புச்சியராகச்சுதலதலமெனவறிக *
வதன்மீதுவெள்ளிமயமாதலமென்றறிகவரோ *

எ- து. அந்தப்பாதாளத்துக்குமேல்பத்மதலபாதாளம்பத்மாக்கிரம்போன்றிருக்கும், அதற்குமேல்நிதலதலமென்னும்பாதாளம் இந்திரநீலநிறம்போன்றிருக்கும், அதற்குமேல்சுதலதலமென்னும்பாதாளம்புட்பராக நிறம்போன்றிருக்கும்,அதற்குமேல்மாதலபாதாளம்வெள்ளிமயமாயிருக்குமெனவறிவாயாக. எ- று. (உங)

அதன்மீதுரசாதலத்தைமுத்தொளியென்றறிந்திடுக *
வதன்மீதுபாதாளநவமணிபோலெனவறிக *

வதன்முடிவுட்கன்னியர்களெண்ணூறுயிரவருள *
ரதன்மேலேபத்திலக்கமிராலம்பமாயிடுமே *

எ- து. அதற்குமேல்ரசாதலபாதாளம்முத்தினதுபிரகாசம்போன்றிருக்கும், அதற்குமேல்பாதாளம்நவரத்னப்பிரபைபோன்றிருக்கும், அந்தப்பாதாளத்தின்முடிவிலெண்ணூறுயிர நாககன்னியர்களிருப்பர்கள், அப்பாதாளத்தின் மேலிருக்குமிடைவெளிபத்திலக்கம்யோசனையுண்டு. எ- று. (உச)

மயிலனையார்சாயலினுன்மானனையார்விழியதனுற் *
குயிலனையார்மொழியதனுற்கொடியனையாரிடையதனுற் *
சயிலனையார்முலையதனுற்றளவனையாரிளநகையால் *
வெயிலனையாருடலொளியாற்பாதாளவிலாசினிமார் *

ஏ - து வெளி - சயிலம் எ - து - அம்கெட்டுசயிலென்றுமிற்று - தள வு (உரு)

முல்லையரும்பு.

சுரிகுழலாரரிகுழலார்சுவைமொழியார்நவைமொழியார *
வரிவளையாருருவளையார்மதர்விழியாரரிதர்விழியார் *
உருவுடையார்குருவுடையாரொளிநகையார்தெளிநகையார் *
அருகிடையார்பருகிடையாராடகர்தாளலர்மதுவே. *

எ - து சுருண்டகுழலினையுடையார், அரிந்தகுழலோசைபோன்றவினிமை யானமொழிகளையுடையார், குற்றங்களையொருகாலுஞ்சொல்லாதவர்; வரியாகிய வளையினையுடையார், உருவமொருகாலும்வளையாதவர், மதர்த்தவிழியினையுடை யார், இதரபதார்த்தத்தைப்பாராதார், அழகானவுருவத்தையுடையார், மிகுந்தபா ரத்துக்குடையாதவர், ஒளியாகியநகையினையுடையார், ஊழியத்திற்றெள்ளிதாகிய நகையையுடையார், சுருங்கியவிடையினையுடையார், ஆடகேசுரர்பாதமலர்த்தே னைப்பருகுதற்கிடையாதவர், மேற்கூறியநாககன்னியர்களாகியபாதாளவிலாசினி மார். எ - று (உசு)

ஆடகேசுரபுவனமுணர்த்துகின்றார்.

அதன்மேலேநவலக்கமாடகநாயகர்புரிதான் *
புதுமைதிகழ்மனைபொன்னால்யோசனையாயிரம்புகலிற் *
கதமுடையதயித்தியர்கள்கட்டரவர்வெட்டரக்கர் *
விழிமுறையிற்பதம்பணியவீற்றிருப்பாராடகரே *

எ - து அநதப்பாதாளங்களுக்குமேலேயாடகேசுவரர்புவனமொன்பதுநா றாயிரம்யோசனை, அதிலாடகேசுரர்க்குப்புதுமையேகொடுக்குஞ்சொன்னமயமா யிருக்கிறவீடுஆயிரம்யோசனையுயரமாயிருக்கும், அதில்கோபத்தையுடைய அசுரர் களாலும்விடத்தையுடையநாகர்களாலும்வெட்டிமையையுடையவரக்கர்களாலும த்திமைத்தாரமென்னுஞ்சுரபேதங்களாற்றோத்திரஞ்செய்துவிதிப்படிநமஸ்காரம்ப ண்ணவீற்றிருப்பராடகேசுரர் எ று (உஎ)

அதன்மேற்பூமியினளவுமுன்தொகுத்ததைப்பூமிவரைமுடித்து முணர்த்துகின்றார்.

அப்புரியின்மிசைத்தாகவவனிகனமொருகோடி *
யொப்பரியகடாககனமொருகோடிமுதலாக *

விப்புவனியீருகவேழேழொன்றெனுங்கோடி *
தப்பறவேயோசனையின்றொகைமுறையிற்றரிக்கவரோ *

எ - து அந்தஆடகேசுரர்புவனத்துக்குமேற்பூமியினுடையகனங்கோடியோசனை, முற்கூறியஅண்டகடாகமுதலிந்தப்பூமியீருகத்தவறின்றித்தொகையினுடைவிலைம்பதுகோடியோசனையாம் எ று

அவையாவன. அண்டகடாக வோட்டின் கனம். ஒருகோடி. அதற்குமேற்காலாக்கினியுருத்திரர்கனகமனையொருகோடி, அவருடையதிருமேனிச்சுவாலைபத்துக்கோடி, அச்சுவாலையின்புகை யைந்துகோடி, ஆகப்பதினேழு கோடி, அதற்குமேல் நரகமுப்பதுகோடியேயிரண்டுநூறாயிரம், அதற்குமே லிடைவெளியாகிய நிராலம்பமுப்பதினாயிரம், அதற்குமேற்கூர்மாண்டர்புவனந்தொண்ணூற்றொன்பதுநூறாயிரம், அதற்குமேலிடைவெளியொன்பதுநூறாயிரம், ஆகமுப்பத்தொரு கோடியேபத்துலக்ஷத்துமுப்பதினாயிரம், அதற்குமேல் ஆபாதபாதாளம். பத்து லக்ஷம், அதற்குமேலிடைவெளிபதினாயிரம், அதற்குமேற் பத்மவொளிபாதாளம். பத்துலக்ஷம், அதற்குமேலிடைவெளி பதினாயிரம்,அதற்குமேலிந்திரநீலநிதலதலம். பத்துலக்ஷம், அதற்குமேலிடைவெளிபதினாயிரம், அதற்குமேற் புட்பராகசுதலதலம். பத்துலக்ஷம், அதற்குமேலிடைவெளிபதினாயிரம், அதற்குமேல்வெள்ளிமயமகாதலம். பத்துலக்ஷம், அதற்குமேலிடைவெளி பதினாயிரம், அதற்குமேல். முத்தினொளி போன்றரசாதலம். பத்துலக்ஷம், அதந்குமேலிடைவெளிபதினாயிரம், அதற்குமேல்நவமணிபோன்றபாதாளம். பத்துலக்ஷம், அதற்குமேலிடைவெளி பதினாயிரம், அதற்குமேல்நிராலம்பம். பத்துலக்ஷம், அதற்குமேல். ஆடகேசுரர்புரியொன்பது லக்ஷம், ஆகவெண்பத்தொன்பதுலக்ஷத்தெழுபதினாயிரம், அதற்குமேல்பூமியின்கனம்ஒருகோடி ஆகவண்டகடாகமுதலிந்தப்பூமிவரையைம்பதுகோடியென்க. (உஅ)

பாதாளவதிபதியும்பெலத்துவாரவளவுமுணர்த்துகின்றார்

பாதாளப்பெலவழிக்கும்பாதாளமேழினுக்கு *
மாதாரமதிபதியுமாடகநாயகர்தாமே *
பாதாளப்பெலவகலம்யோசனையாயிரம்பகரிற் *
பாதாளமுதனிரையவிறுதியினும்படர்ந்திடுமே *

எ- து. ஆடகேசுரநாயனார்பாதாளத்துக்கும்பெலத்துவாரத்துக்குமாதாரமாய

திபதியுமாயெழுந்தருளியிருப்பர், அந்தப்பெலத்துவாரத்தின் வட்டமாகியஅகலத்தைச்சொல்லில்ஆயிரம்யோசனையாம், அந்தப்பெலத்துவாரம் பாதாளமுதல்நிலையமீறுகவுஞ்செல்லும். எ- று. பொன்மயமாயிருக்கிற பாதாளத்துக்கதிபதியாகையால்ஆடகேசுரனெனப்பெயர்கூறினார் (௨௯)

இனியிப்பூமியினளவு மேருவின் றன்மையும்ஐந்துசெய்யுளாலுணர்த்துகின்றார்.

அறைந்தாஞ்சொன்முறையுறவேபிரமாண்டத்ததோபாகஞ் *
சிறந்தபெருவளையுட னுஞ் சேடித்தவுறப்புடனு *
மறைந்திடுவாமறிந்திடுகவவனிதலத்தகலமுமெண் *
ணிறைந்தசதகோடிநடுமேருவுறநிலவிடுமே. *

எ து வாராய்முனிவரனேயிப்படிமேலேயிருக்கிறபூமிமுடிவாகப்பிரமாண்டத்தின்கீழ்பாகத்தினுடையசொரூபத்தையொழுங்குறச்சொன்னோம், இனியுனக்குச்சிறப்பையுடைத்தாயபூலோகத்தினடுவேயிருக்குமகாமேருவையுமட்டகுலபருபதங்களையுநவகண்டமுதலியவற்றையுஞ்சொல்வோமறிவாயாக, அந்தப்பூலோகமெவ்வளவகலமென்னினூறுகோடியோசனையாயிருக்கும், மக்கட்குநாபிநடுவானாற்போலவிந்தப்பூமிக்குநடுவேமகமேருநிற்கும் எ று நூறுகோடியிற்குறைவில்லாமையாலெண்ணிறைந்ததெனச்சிறப்பித்தார் (௩௰)

பாதலத்தின்மிசைத்தாதிப்படுகடலேப்புடையுடுத்த *
பூதலத்தினடுநிலவும்பொன்னசலம்யோசனைதான் *
பாதலத்திற்பதினாறாயிரமுறவேபடிந்தழுந்தி *
மீதலத்துமவைகுறைந்தநியுதமுறவிளங்கிடுமே *

எ து பொன்மயமானஅம்மகமேருவானதுமுற்கூறியபாதாளத்துக்குமேலாகியேழுசமுத்திரகங்ளாலுஞ்சூழப்பட்டபூமியினடுவேபொருந்திப்பூமிக்குக்கீழ்ப்பதினாறாயிரம்யொசனையளவுபுதைந்துபூமிக்குமேல்,எண்பத்தினாலாயிரம்யோசனையுயரம்விளங்காநிற்கும். எ று கீழ்முதல்மேல்வரைநூறாயிரம்யோசனையுயரமென்றறிக. (௩௧)

அடியகலம்பதினாறாயிரமாகுமவற்றிரட்டி- *
முடியகலம்பதுமமலர்ப்பொகுட்டினைப்போன்முற்றியுறும் *

புடைபரந்தமேகலையுமிடைமூன்றுபொருந்தியிடும்
முடிவிடத்துமேகலையிற்பலசிகரமுளைத்துளவே

எ-து அம்மகமேருவினடிவிரிவுபதினாறுயிரம்யோசனை, யதனுனிவிரிவுமுப்பத்தீராயிரம்யோசனை, அஃதெவ்வாற்றுனெனிற்றாமரைக்காய்போலடிசிறுத்து நுனிவிரிந்துமுடிவுபெறும், அதன்புடையிலொன்றுக்கொனறுவிரிவுஅதிகமாய் மூன்றுமேகலைபொருந்தும், அவற்றுள்நுனிமேகலையில்பலகொடுமுடிமுளைத்துண்டாயின என்று அவைவருமாறு-மேருவினடியில்அந்தராளம் இருபத்தையாயிரம் யோசனையுயரம், அதற்குமேல்முதன்மேகலையினுயரமூவாயிரம்யோசனை, அதன் புடைவிரிவுபதினாயிரம்யோசனை, அதன்மேலிரண்டாம் அந்தராளமிருபத்தையாயிரம்யோசனையுயரம், அதன்மேலிரண்டாமேகலைமூவாயிரம்யோசனையுயரம், அதன்புடைவிரிவுபதினாலாயிரம், அதற்குமேல்மூன்றும்அந்தராளமிருபத்தையாயிரம்யோசனையுயரம், அதற்குமேல்மூன்றுமேகலையுயரம்மூவாயிரம்யோசனை, அதன்புடைவிரிவுபதினெண்ணாயிரம்யோசனை, ஆகமேகலைமூன்றுக்குமந்தராளமூன்றுக்குமுயரமெண்பத்தினாலாயிரம்யோசனையுயரமெனவறிக, பலகொடுமுடிகளாவன கிழக்குமுதல்அமராபதிமுதலியவெட்டுக்கொடுமுடிகளுமவ்வெட்டுக்கொடுமுடிகளினிடையிடையில்தேவகன்னிகைகள்முதலாயினார்வசிக்கக்காமவதிமுதலியகொடுமுடிகளிருபத்திரண்டும்விளங்காநிற்குமென்க விரிக்கில் ஆயிரங்கொடுமுடியுண்டென்க. (௩௨)

இந்திரனைமுதலாயவெண்டிசைப்பாலருமவற்றிற் *
றந்தமக்குத்தக்கதிசைக்கொடுமுடியிற்றங்கிடுவ *
ரந்தவரையெட்டினுக்குநடுவாகவணியுறவே *
முந்திமுளைத்தெழுசிகரமூன்றுளவேமூவர்க்கும் *

எ-து இந்திரன்முதலிய வெட்டுத்திக்குப் பாலர்களுந் தத்தமக்கேற்ற திசைக்கொடுமுடிகளிலிருப்பர்கள், அந்தக்கொடுமுடியெட்டுக்குநடுவி லழகுபெறத்திருவிளையாட்டுநிமித்தமாகப்பிரமவிட்டுணுஉருத்திரர்கள்மூவர்க்குமாதியிற்றோன்றியமூன்றுகொடுமுடிகளுள. எ-று.

இதன்வகை கிழக்குமுதலாகஅமராபதியிலிந்திரனுந்,தேசோவதியி லக்கினியும்,சம்யமனியில்யமனும், கிருட்டினங்காரவதியில். நிருதியும், சுத்தவதியில் வருணனும், கெந்தவதியில்வாயுவும், மகோதயபுரியில்சோமனும், எசோவதியி லீசானனுமிருப்பர்களென்க. எண்டிசைப்பாலருமென்றவும்மையால்அமராவதிக்குத்தெற்குக்காம

வதியிற்றேவகன்னிகைகளும், அதற்குத்தெற்குசொன்னபுரியிற்சித்தவதிகளும், அதற்குத்தெற்குஅம்சுமதியில் ஆதித்தர் பன்னிருவர்களும், அதற்குமேற்கு. சுமாவதியிற்சாத்தியசாதிகளு, முற்கூறியவக்கினிதிக்குக்குமேற்கு ரோவதியென்னும்புரியில் விசுவகன்னியர்களு முற்கூறிய சம்யமனிக்கு மேற்குமாதிருசுத்தாபுரியிற் சுத்தமாதாக்களும், அதற்குமேற்குரோகிதையென்னும்புரியி லுருத்திரர்களும், அதற்குமேற்குகுணவதியென்னும்புரியில்யமதன்மராசனுக்குப்பரிவாரமான சூலத்தைத்தரித்தசத்திகளும், அதற்குமேற்கு பிங்கலபுரியில். மகாதேவன். சிவாத்துமன். உருத்திரன். சங்கரன். நீலலோகிதன். ஈசானன். விசையன். வீமன். தேவதேவன் பவோற்பவன்.கபாலீசன். ஆகியஏகாதசவுருத்திரர்களு,முற்கூறியநிருதிக்குவடக்குக்கிருட்டிணவதியில்பசாசகளும், அதற்குவடக்குகைமையென்னும்புரியில்பித்திரதேவர்களும், அதற்குவடக்குசித்தவதியில்வித்தியாதரர்களும், அதற்குவடக்குசித்தபுரியில் கின்னரரும், வாயுவுக்குக்கிழக்குகாந்தாரியென்னும்புரியில் சித்திர ரதனென்னுங் கெந்தருவனும், அதற்குக்கிழக்குசித்திரையென்னும்புரியில் தும்புருநாரதரும், அதற்குக்கிழக்குபிரமஸ்தையென்னும்புரியில் குய்யகசாதிகளும் சோமனுக்குக் கிழக்கு சித்திரவதியென்னும்புரியில் குபேரனும், அதற்குக்கிழக்கு சூதையென்னும்புரியில் தன்மதேவர்களும், அதற்குக்கிழக்குசித்திபுவாவென்னும் புரியில். மாயனும், ஈசானனுக்குத்தெற்குபற்மபுரியில்பிரமாவும், அதற்குத்தெற்கு காமசுகாவதியில் அசுவனிதேவர்களும், அதற்குத்தெற்குமகாமேகபுரியில் விநாயகனு மிருப்பர்களென்க, இப்புரிகளிருபத்திரண்டு முற்கூறியஅமராவதிமுதலியபுரிகள். எட்டும். கூடிமுப்பதாயின, இம்மேகலையிரண்டினுள்ளுஞ்சித்திர கெந்தருவதேவர்க ளிருப்பர்களென வறிக. (௩௩)

தடவரையினடுவெச்சிதனின்முனைத்தசிகரத்தின் *
வடிவுடையமனோவதிதான்மலரயன்வாள்புரியதற்குக் *
குடதிசையிற்கொடுமுடியில்வைகுண்டங்கோவிந்தன் *
இடம்வடபாற்குணதிசையிலேசோவதிசங்கரர்தடமே *

எ - து. அந்தமகமேருவி னடுவே பதினாயிரம்யோசனை விரிவையுமுயரத்தையுமுடைத்தாய்ச்சருவரத்னங்களாலும் விளங்குவதாயெல்லாப்போகங்களுடனுங்கூடியமனோவதியென்னுங்கொடுமுடியில் பிரமாவெழுந்தருளி யிருப்பர், அந்தமனோவதியென்னும்புரிக்குமேற்குப்பதினாலாயிரம்யோசனை விரிவையுமுயரத்தையுமுடைத்தாய்ச்சருவரத்னங்களாலும் விளங்குவதா யெல்லாப்போகங்களுடனும்வைகுண்டமென்னுங் கொடுமுடியில் மகாவிட்டுணு விருப்பர், அந்தமனோவதிக் கீசானதி

சையிலிருபதினாயிரம்யோசனைவிரிவையுமுயரத்தையுமுடைத்தாய் வெள்ளிமயமாய் எசோவதியென்னும்பெயர்பெற்றிருக்குங் கொடுமுடியில் ஸ்ரீ கண்டபரமேசுரரெழுந்தருளியிருப்பர், எ - று. எசோவதியெனினுஞ். சோதிகிரியெனினுமொக்கும். அச்சிகரத்தைச்சூழ நந்திமுதலிய அட்டகணங்களுஞ்சூழ்ந்திருப்பர்களென்க. (ரு௪)

மேருவைச்சுற்றியதிசைநான்கினுமுள்ள மலைமுதலியவற்றைநான்குசெய்யுளாலுணர்த்துகின்றார்

இத்தகையதடவரையினடிவாரத்தெல்லைதனி ※
லத்திரிதான்பூருவத்தின்மந்தரமொன்றமுந்தியுறு ※
மத்திரிதானுயர்கந்தமாதனந்தென்றிசையமரு ※
மத்திரிதான்பச்சிமத்தின்விபுலமுறுமழகுறவே ※

எ- று. இங்ஙனங் கூறியமகமேருவுடைய அடிவாரம் நான்குதிக்கிலும்அம்மகமேருவுக்குறுதிநிமித்தமாக விட்கம்பசயிலம்நாலுள. அவையாவன. கிழ்திசையிலேம்பதினாயிரம்யோசனையுயரமானமந்தரபருபதஞ் சுவேதநிறமாய்ப்பூமிக்குளெண்ணாயிரம்யோசனையும்மேலேநாற்பத்திராயிரம்யோசனையுயரமுமுடைத்தாயிருக்கும், அந்தவளவுடன்தென்றிசையிற்கனகமயமான கந்தமாதனகிரிநிற்கும், அவ்வளவுடன்பொருந்திநீலநிறம்போன்றுமேற்றிசையில்விபுலகிரிநிற்கும். எ- று. (ருரு)

உத்தரத்திற்பாருசுவவத்திரியொன்றுற்றமுந்தும் ※
வைத்தவரைமுறையுறவேமரமொருநான்கமருமவை ※
யுத் தமத்தகதம்பமுதலுயர்நாவலொளிர்போதி ※
மொய்த்தூறுபத்திரமொளிருமுதும்ரமென்மொழிப்பொருளே ※

எ - று முற்கூறியவளவுடன்வடதிசையில்மாதளைவித்துநிறம்போன்றுபாருசுவவத்திரியென்னுங்கிரிநிற்கும், அந்தகிரிநாலிலொவ்வொருகிரியின் அடியகலமெண்ணாயிரம்யோசனையுமேலகலம்பதினாயிரம்யோசனையுயரமுமாயிருக்கும், அம்மலையுச்சிகளின்நாலுதருக்கணிற்கும்;அவையாவனகிழக்குமுதலுத்தமமாகியவுயர்ச்சியையுடைய-கடம்பு - நாவல் - அரசு - நெருங்கிப்பிரகாசத்தையுடைத்தாய்த்துளிர்த்தஆலமரம் எ - று அவைகளினுயரமொவ்வொன்றுக்கு ஆயிரம்யோசனை--அவைகளின்சாகைகளேஞ்ஞூறுயோசனையுயரம் - பூக்கள் - குடம்போலவு- பழம் - யானைபோலவும் பழுத்துதிராநிற்குமென்க. (ருசு)

குணதிசையிலருணமெனுங்குளமிலவுங்கடவுளாக்கீழ் *
மணமலியுமானதமுந்தென்றிசையின்வாய்த்துளது *
குணமருவுஞ்சிதோதம்பச்சிமத்திற்றங்கியுறு *
மணவிளியமாமடுவும்வடதிசையினுற்றிடுமே *

எ – து கிழக்குமந்தரமென்னுமலையடிவாரத்திலருணமென்னுங்குளம்பொருந்தும் – அதிற்கடப்பம்பழச்சாற்றினின்றும் – அருணன்புறப்பட்டுக்கீழ்த்திசையிற்பாயும், தென்றிசைக்கந்தமாதனமென்னுமலையடிவாரத்தில் கந்தமலிமானதமெனுங்கானமானதசாசென்னுங் குளம்பொருந்தும் – அதில் நாவற்பழச்சாறுவிழுந்துதெற்கேமேருவைச்சூழப்பாயும், மேற்றிசையிபுலமென்னுமலையடிவாரத்திற்குளிர்ச்சியைப்பொருந்தாநின்ற சிதோதமென்னுங்குளம்பொருந்தும் – அதில் – அரசமரம் பொருந்தியின்றுபால்முதலியபஞ்சதாரையாகப்பொருந்திமேற்றிசையிற்பாயும், வடதிசையிற்பாருசவமென்னுமலையடிவாரத்திற்பொலிந்தநிறத்தையமகாமடுவென்னுங்குளம்பொருந்தும் – அதில் – ஆலமரத்தின்சாகையினின்றுமுண்டான – பால் – தயிர் – நெய் – தேன் – முதலியபொருந்திவடதிசையிற்பாயும், எ – று (௩௪)

சயித்திரகாப்புருவத்தினடிவாரத்தனிற்றழைக்கும் *
விசித்திரநந்தனவனமுண்டென்றிசையின்விளங்கிடும் *
வசித்திடுநல்லவைப்பிரசவனங்குடபான்மன்னியிடு *
முசித்ததிருதாக்கியமும்வடதிசையிலொடுங்கிடுமே *

எ – து கிழக்குமலையடிவாரத்திற்சயித்திரகாவென்னும்பெயரையுடையநந்தனவனம்விளங்காநிற்கும், தெற்குமலையடிவாரத்தில்விசித்திரையென்னுநந்தனவனம்விளங்காநிற்கும், மேற்குமலையடிவாரத்தில் வசிக்கத்தகுநல்லவைப்பிராசையென்னுநந்தனவனம்பொருந்தியிடும், வடக்குமலையடிவாரத்தில் திருதாக்கியமென்னுநந்தனவனமுண்டாகாநிற்கும். எ – று

இந்தப்பூந்தோப்புகளினடுவேநான்கோடைகளுள – அவையாவன கிழக்குசயித்திரகாநடுவிலனேகந்தாமரைப்பூவுடனுங்கூடியதாகவென்னுமோடையுந்தெற்கில் விசித்திரகாநடுவின் அனேகங்குமுதோற்பலங்களுடன்கூடியமான தசாசவென்னுமோடையுமேற்குவைப்பிரசநடுவில்செந்தாமரைகளுடன்கூடியவிமலோதகமென்னுமோடையும் – வடக்குத்திருதாக்கியநடுவிலனேக நீலோற்பலங்களுடன்கூடியமனோரதமென்னுமோடையுமென்க இவைவந்ததுகொண்டொரிதாதுமுடித்தலென்னுந்தந்திரவுத்தியாற்கூறியவெனவறிக. (௩௫)

முற்கூறியநாவல்மரத்தின், தன்மையையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

நறவனையகனியுதிருநன்னாவலெந்நாளு *
முறுதியுறவுயிர்க்கெல்லாந்தென்கிரியிலோங்குதலாற் *
பெறுநவகண்டமும்பெரியநாவலந்தீவெனும்பெயரை *
மறுவறுமக்கனித்தீநீர்வளையதனைவலம்வருமே *

எ - று தெற்குமலையில்நிற்கும் நாவல்அனவரதமுந்தேன்போன்ற வினிமையையுடையபழத்தைச்சொரிந்து தன்சாற்றைப்பருகினவான்மாக்களுக் கெல்லாம் பெலமுண்டாக்கிநிற்கையால்நவகண்டங்களு நாவலந்தீவெனப்பெயர்பெறும், குற்றமற்றவினிமையுடைய அக்கனியின்சாறுகனகமயமாய்மேருவை வலமாகவந்து அந்தநாவல்மூலத்திற்றிரும்பவந்தடையாநிற்கும். எ - று

நன்னாவலெனச்சிறப்பித்தமையால் அதிலொவ்வொருபழத்துக்குப்பதினைங்கலச்சாறுண்டாயிருக்குமெனவறிக, அந்தச்சாறுநாற்றிசையும்வளையப்பெருகுகையால் நாவலந்தீவெனப்பெயர்பெற்றதென்க-மறுவறுமென்பதனாலச்சாறு கனகமயமென்பதனையறிவிப்பது. (௫௯)

மேருவினைவலமாகிமேவியிடுமந்நீரை *
யாருமவர்களேகநிறமாவரயுதாயுளுறச் *
சாரவொருமூன்றுடனுந்தங்கியவாயிரந்தழைக்க *
வூருமுயிர்மற்றையவுமுண்டதனையொளியுறுமே *

எ - று மகமேருவைவலமாகவருகிற நாவற்பழச்சாற்றை யருந்தினவர்களெல்லோரும்பொன்னிறமாய்ப் பதின்மூவாயிரம்வயதுடனேபொருந்தியிருப்பார்கள், அவர்கள்மட்டோ அன்று அதனைப்பானம்பண்ணின்-ஊர்வன-பறப்பன-நடப்பன-தத்துவன-தவழ்வன-கொடிசெடிமுதலியவுங்கனகமயமாயிருக்கும் எ-று ()

அட்டகுலபருப்பதத்தின், தன்மைகளையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

தடவரையின்றென்றிசையிற்றங்கியிடுமொருசயிலங் *
குடகடலைக்கூடவொருதலைகூடக்குணகடலை *
யிடமுடையவிதன்றென்பாலித்தகைத்தோர்வரையிசையுந் *
திடமுறமுன்முறைநிகழுமிமையகிரியதன்றென்பால் *

எ - து மகம்மேருவுக்கடுத்ததெற்குப்பதுமராகநிறம்போன்ற நிடதபருப்பதங்கிழக்குமேற்குஞ்சமுத்திரத்தையுறநூறாயிரம்யோசனைநீளமாயிருக்கும், அதற்குத்தெற்காகப்பொன்மயமான ஏமகூடபருப்பதமேற்குங்கிழக்குஞ்சமுத்திரத்தை யுறத்தொண்ணூறாயிரம் யோசனைநீளமாயிருக்கும், அதற்குத்தெற்காகக்கடைமாய்ப் பனிநிறம்போன்றஇமையபருப்பதம்-எண்பதினாயிரம் யோசனைநீளமாயிருக்கும் எ - று (௮௧)

வடபாகத்தொருகிரிமுன்வருத்தபடிவதியுமதன்
வடபாலுமொருகிரிமுன்வருத்தபடிவதியுமதன்
வடபாலுமொருகிரிமுன்வருத்தபடிவதியுமினிக்
குடபாலிற்குணபாலிலொவ்வொன்றுறுகுறுமே

எ - து மேருவுக்குவடக்குரத்னநிறம்போன்ற நீலகிரிகிழக்குமேற்குஞ்சமுத்திரத்தையுறநூறாயிரம்யோசனைநீளமாயிருக்கும், அந்தநீலகிரிக்குவடக்காகச்சந்திரப்பிரகாசம்போன்ற சுவேதகிரிகிழக்குமேற்குஞ்சமுத்திரத்தையுறத்தொண்ணூறாயிரம்யோசனைநீளமாயிருக்கும், அந்தச்சுவேதகிரிக்குவடக்காகச்சந்திரகாந்தநிறம்போன்றசிருங்ககிரியெண்பதினாயிரம்யோசனைநீளமாயிருக்கும், இனிமகமேருவுக்குமேற்காகவடக்கில் நீலகிரியையுந்தெற்கில் நிடதகிரியையுமுறத்தெற்குவடக்காகநீலநிறமான கெந்தமாதனகிரிமுப்பத்திநாலாயிரம்யோசனைநீளமாயிருக்கும், மேருவுக்குக்கிழக்காகநீலகிரியையு நிடதகிரியையுமுறத்தெற்குவடக்காகப்பொன்னிறமானமாலியவானெனுங்கிரிமுப்பத்திநாலாயிரம்யோசனைநீளமாயிருக்கும். எ-று இவைகளினுயரமுங்கிரியும்பின்னர்க்கூறுகின்றார். (௮௨)

நவகண்டத்துள்பாரதகண்டத்தின்றன்மையையாறுசெய்யுளானுணர்த்துகின்றார்.

அட்டகுலபருப்பதங்களமரவிடைநவகண்டம்
பட்டபடிபார்க்கவிமகிரித்தென்பாற்பாரதத்தை
யொட்டிமுதலுரைத்திடுவாமதனையொழிந்தனவெல்லாம்
கட்டமறுமமருலகத்தினையெனவேகருதுகவே

எ - து இங்ஙனங்கூறிய அட்டகுலப்பருப்பதங்களினுடையவிடையிடையிலுள்ளதேசங்களைநவகண்டமென்றறிந்திடுக, இமயகிரிக்குத்தெற்காய்த்தென் சமுத்திரத்துக்குவடக்காய்நடுவாயிருக்கிறபாரதகண்டத்தைமுதலாகத்தொடுத்

நச்சொல்வாம், அந்தப்பாரதகண்டமொன்றையுமொழிந்தவெட்டுக்கண்டங்களுந் துக்கமின்றிச்சுகத்தையுடைத்தாயிருக்கும், அஃதெங்ஙனமென்னிற்றேவலோகத் துக்குச்சமமானபோகங்ளுடன்பொருந்துமெனக்கருதுக எ - று (சாஙு)

பாரதமுங்வதீவபாகமுமுமவற்றுள்ளுஞ் *
சீரியநாகுமரியெனுந்தீவதனிற்சிறந்திருப்ப *
நாரியராமந்தணருமல்லாருமருமறையின் *
காரியமுமுறுமதனிலின்னுமுளகழறிடுவாம் *

எ- று. அப்பாரதகண்டம் இந்திரதீவுமுதலான வொன்பதுதீவாகப்பிரியும், அவ்வொன்பதுதீவுள்ளுங்குமரித்தீவேசிறப்புடைத்து, அக்குமரித்தீவிற் பூச்சியராயிருக்கிறபிராமணரும்அவரல்லாதமற்றவர்களுஞ்சிறந்திருப்பர்கள், அஃதன்றியத்தீவில்வேதங்களின்காரியமானயாகாதிகளும்பொருந்தும், அஃதன்றியின்னுமுள்ளவற்றைச்சொல்லிடுவாம். எ- று.

அந்தணருமென்றவும்மையாலொருவர்க்கொருவர்தாழ்ச்சியான அனாயரும். வையியருந்- சூத்திருமென்க. அல்லாதாரொன்பது. அனுலோமர். பிரதிலோமர். விராத்தியர். அந்தராளரென்க. அவர்யாரெனின். சூ. பார்ப்பாரரசர்வணிகர்வேளாளர்நாற்குலத்தவருஉந்தங்குலடையிடையினுமுயர்ந்தவாணினுமிழிந்தபெண்ணினும்வியந்தகூட்டத்தவரனுலோமர், இழிந்தவாணினு முயர்ந்தபெண்ணினும் பெயர்ந்தகூட்டத்தவர்பிரதிலோமர், அனுலோமர்குலத்தாணினு மவ்வழி பிரதிலோமகுலப்பெண்ணினுமுயர்ந்தகூட்டத்தாரோயந்தராளர், பிரதிலோமகுலத்தாணினும்பின்னிலையனுலோமகுலப் பெண்ணினும் வியந்தகூட்டத்தவரோ விராத்தியராகும், ஒருமொழி யொழிதன்னினங்கொளற்குரித்தே. என்பதனால். இருக்குமுதலிய நான்குவேதமும். மந்திரமுதலியஆறங்கமும். மனுமுதலிய பதினெட்டுத்தருமசாத்திரமும். காமிகமுதலியவிருபத்தெட்டுஆகமங்களும். பிரமமுதலிய பதினெண்புராணமும். மகாபாரதமிதிகாசமுதலியவு நியாயவைசேடிகமுதலியசாத்திரங்களும் வழங்குமென்க. (சாசா)

கங்கைமுதனதிபலவுங்காசிமுதற்பதிபலவும் *
பொங்குமயேந்திரம்பொதியமுதன்மலையும்பொருந்தியிடு *
மங்கதற்குமேயாசனேயோராயிரமுண்டெனவறிக *
வெங்கொடியமிலேச்சரிடமெட்டினுமெண்ணாயிரமே *

அங்கமெதிர்நிரனிறையாற்சமாய்க்கியமுமணிமலையுஞ் *
சங்கமுந்தண்குமுதமுநல்வாரமெனுந்தலந்தானுந் *
ஓங்கமலிபொதியத்தென்பாற்றொடர்ந்தவடிவாரத்தி *
னங்கனகவிலங்கையுமேழ்வளைச்சாரலடித்தேசம் *

எ-து வடக்கேதொடுத்துஎதிர்நிரனிறையாகப்பாரியாத்திரமலையடிவாரத்தில்-அங்கமென்னுந்தேசமும், விந்தியகிரியடிவாரத்திற்சமாய்க்கியமென்னுந்தேசமும், இருக்கபருபதத்தின்அடிவாரத்தில்-அணிமலையென்னுந்தேசமும், சுத்திகாசலத்தடிவாரத்திற்சங்கமென்னுந்தேசமுஞ், சையமலையடிவாரத்திற்றண்மைபொருந்தியகுமுதமென்னுந்தேசமும், மலையபருவதத்தடிவாரத்தில்நன்மையினையுடையவராகமென்னுந்தேசமும், மிகவுமுயர்ந்திருக்கிறபொதியமலைக்குத்தெற்காகியமயேந்திரகிரியினடிவாரத்தழகியகனகமயமாகியஇலங்கையென்னுந்தேசமும் பொருந்தும். எ-று கனகமயமானஇலங்கையென்னுந்தேசம் ரத்னபூமியுடன்கூடியைந்நூறுயோசனைசமுத்திரத்துக்குட்புகுந்திருக்குமெனவறிக-அந்தவிலங்கையொழிந்ததேசமாறும்உபத்திபெனப்பெறும் [௬௮]

கயிலையின்சிறப்பிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்.

இமையகிரிவடகுணபாலிமையவர்கடொழுதேத்த *
வுமையுடனேபசுபதிதானுறைவிடமாநிகரிமிசையிற் *
றமையுணர்ந்தபோதனருந்தங்குவரச்சயிலத்திற் *
கமையுடையாரகன்பெயரைக்கயிலையெனக்கழறுவரே *

எ-து மேற்கூறியவிமயகிரிக்கீசானத்திற்றேவர்கள்வணங்கியேத்தும்படி பார்வதியுடன்பசுபதியாகிய சிவபெருமானெழுந்தருளியிருப்பன் ஒப்பற்றமலையினிடத்து-அதிற்றம்மையறிந்தபோதனர்கள்தங்கியிருப்பர், அம்மலையின்பெயரைப் பொறுமையையுடையபெரியோர்கள்கயிலைமலையென்றுசொல்லுவர் எ-று (௬௯)

ஆகமங்களனைத்தினையுமருமறைகளொருநான்கு *
மோகமறமுனிவர்க்குமொழிந்தருளவொழிந்தனவு *
மாகருமோமாமலையுறைமலர்நாவிற்கலைவணங்க *
மேகவிறையுநன்மிசையுமிருக்கவிரும்பினனினிதே *

எ-து இமயத்துக்குவடகிழக்காக கிம்புருடகண்டத்தில் வெள்ளிமயமாய் நாலுசிகரமானசிகரங்களுடனிருக்கும்கயிலையின்கண்ணுந்தேவர்களும்-பிரமாவும் விட்டுணுவும்-மலரானசிருக்கித்துத்தலையால்வணங்கவேகருணையசிவபெருமான் இனிதாகவெழுந்தருளவிரும்பினான், அவ்விடத்திலாறுக்கெளிற்சனகர்முதலியமுனிவர்களுக்

குக்காமிகாதியானவிருபத்தெட்டுத்திவ்வியாகமங்களையும்-இருக்குமுதலிய நான்கு வேதங்களையு மற்றவைகளையு முணர்ந்தியாணவாதிமலங்களைப்போக்கிச்சிவசாயுச் சியத்தையடைவிக்கையின்பொருட்டு எ - று (௫௰)

நவகண்டங்களின்பெயர்களுமவைகளிருக்குமிடங்களுங்
மூன்றுசெய்யுளாலுணர்த்துகின்றார்

இமகிரிக்குந்தென்கடற்குமிடைப்பாகம்பாரதமே *
யிமகிரிமற்றேமகிரியிடைப்பாகங்கிம்புருட *
மமைநிலவுநிசதகிரித்தென்பாகமரிவருட *
மிமையவருமிருந்தபெருவளாச்சாரிளாவிரதம் *

எ - து தென்சமுத்திரத்துக்குமிமையகிரிக்குநடுவே பாரதகண்டம், இமகிரிக்குவடக்குஏமகிரிக்குத்தெற்குங்கிம்புருடகண்டம், ஏமகிரிக்குவடக்குநிடதகிரிக்குத்தெற்குப்பொதுமையைப்பொருந்தப் படாநின்றஅரிவருடகண்டம், மகாமேருவைச்சூழ்ந்ததேவர்களிருக்குமிடம்இளாவிரதகண்டமெனப்பெயர்பெறும் எ - று

இமையவருமென்றவும்மையாற்சித்தர்-கந்தருவர்-இராக்கதர்-வேதாளகணங்கண்முதலியோரெனவறிக. (௫௧)

நீலகிரிவடதேசமிரமியமேயெனநினைக *
பாலனையகிரிவடபாலிரணியமேயெனப்பார்க்க *
சீலமுளார்சிருங்கிரிவடபாலைத்தென்பாலை *
யோலமிடுமுததிக்குங்குருவெனவேயுன்னுகவே *

எ- து. மேருவுக்குவடக்காயிருக்கிறநீலகிரிக்குஞ்சுவேதகிரிக்குநடு இரமியகண்டம், சுவேதகிரிக்குவடக்குச்சிருங்ககிரிக்குத்தெற்கு இரணியகண்டம், சிருங்ககிரிக்குவடக்குஆரபாரத்தையுடையவடசமுத்திரத்துக்குத்தெற்கு குருவெனப்படுவமாகவுடையவர்களிருக்குங்குருகண்டமெனவறிக. எ- று. (௫௨)

குடகடற்குக்கீழ்க்கேதுமாலமெனக்குறித்திடுக *
மிடலுடையவியன்கந்தமாதனத்தின்மேற்கதுவா *
னிடமுடையமாலியவானெனுங்கிரிக்குங்கீழ்பாற்கீழ்க் *
கடலினுக்குமேல்பாகம்பத்திராமாக்கருதுகவே *

எ- து. மேற்சமுத்திரத்துக்குக் கிழக்குப்பெலத்தையுடைய கெந்தமாதனகிரிக்

கு மேற்குகேதுமாலகண்டம், விரிவையுடையமாலியவான்கிரிக்குக்கிழக்குக்கீழ்ச்ச முத்திரத்துக்குமேற்குப்பத்திராசுவகண்டமெனப்பெயர்பெறும். எ- று. (௫௩)

பாரதகண்டமொழிந்தவெட்டுக்கண்டத்திருப்பார்க் குணவுமுதலி யவற்றையெட்டுச்செய்யுளாலுணர்த்துகின்றூர்

உண்டிடுவர்கருங்குவளையுருவமதியனையரரி ✻
கண்டமதிற்கலந்திருப்பார்காலமுமோராயுதமுள ✻
கண்டியின்கனியுணவுகருங்குவளைநிறமாயு ✻
ளண்டயுதமுமபர்கேதுமாலத்திலுறைவார்க்கே ✻

எ- று. அந்தப்பத்திராசுவகண்டத்திருப்பவர்கள் செய்தற்பூவைப்பொசித்துச்ச ந்திரப்பிரகாசம்போன்றநிறத்தைப்பெற்றுப்பதினாயிரம்வயதையுடையராயிருப்ப ர்கள். கேதுமாலகண்டத்திலிருக்கிறவர்கள்வருக்கைப்பலாப்பழத்தைப்பொசித்து நீலநிறத்தையுடையராய்ப்பதினாயிரம்வயதுபொருந்தியிருப்பர்கள். எ- று. அரிகண்டமெனினும்பத்திராசுவகண்டமெனினுமொக்கும். (௫௪)

ஆயுங்காற்குருகண்டத்தமர்வார்கடமக்கெல்லா ✻
மாயுமுவாயிரமுமயுதமும்வேண்டியகனியுண ✻
டேயுமுடற்பச்சைநிறந்திறுவருளரிருவரவ ✻
ராயுதாத்தொருபொழுதிலுணைப்பெண்ணெனவமர்வார் ✻

எ- று. குருகண்டத்திலிருக்கிறவர்கள் சொருபத்தை விசாரிக்கிறபதின்மூவா யிரம்வயதுடன்பொருந்தியெப்பொழுதுமெவ்வண்ணராய்ப்பொற்கொன்றைநிறத் தையுடையராய்த்தமதுகருத்துக்குவேண்டினமரத்தின்பழத்தைப்பொசித்திருப்ப ர்கள், அவர்களுக்கொருபொழுதுக்குள்ளேகருப்பந்தரித்துஆண்பெண்ணெனவிர ண்டுபிள்ளைகள்பிறந்திருப்பார்கள். எ- று. (௫௫)

அந்தகையகுருகண்டவடபாகமருதன்னிற் ✻
சித்தரொடுமுனிவருஞ்சாரணருஞ்செறிந்திருப்பர் ✻
அப்பாதுவமுலபலத்தசோமனெனத்துளங்கொளியா ✻
முத்தமத்தசந்திரநீவெனும்பெயருமுளததற்கே ✻

எ - று முற்கூறிய குருகண்டத்தில்வடக்குச்சமுத்திரத்துக்குள்ளே யெண் ணாயிரம்யோசனையுள்ளதீவிற்சித்தர்களுமுனிவர்களுந்திகம்பரர்களுநெருக்கியி

ம் வெள்ளிநிறம்போன்றிருக்கும்-அவர்கள்பொசிப்பு இனிய கருப்பஞ்சாறும்.
எ-று (ருகூ)

பொன்னுருவர்கிம்புருடர்புசிப்பிறலிப் புன்கனியே *
மன்னுமயுதாயுளர்மனக்கவலைதனையில்லார் *
இன்னமிலாநரைதிரையுங்கிளருடலிற் பிணியிவையு *
மின்னுருறைமற்றையவேழ்கண்டத்துமெண்ணுகவே *

எ-று. கிம்புருடகண்டத்திலிருக்கிறவர்கள் பொன்னிறமாயிருப்பார்கள், அவ கள்பொசிப்பு இத்திக்கனி அவர்களுக்கு நிலைபெற்ற வயதுபதினாயிரம், அவர்கள்ம னக்கவலையுமின்றியத்தியாத்மிகமுதலிய துக்கத்திரையங்களும் நரைதிரையுமின்றி மிகவுஞ்சந்தோஷத்துடனேகூடியிருப்பார்கள், அந்தக் கிம்புருடகண்டத்துக் குற்ற படிமற்றையேழுகண்டத்திலிருப்பார்களுக்கும்பொருந்துமெனக்கருதுகஎ-று(கூய

சங்குறைத்தவிருநான்கு கண்டத்துளெல்லோர்க்கு *
போங்கியிடுங்கிருதயுகம்போலொழிந்தயுகமெல்லா *
நீங்கரியநன்மையினைநிறுத்தியிடுநிறையறிவு *
தாங்கிடுவரவருடலினுரமாதிதன்னையுமே *

எ-று. வெளி. (கூக)

பாரதகண்டத்திலிருக்கிறவர்கள் தன்மையை யிரண்டுசெய்யுளானு ணர்த்துகின்றார்

ஆதியுளவியாயுளுருவாகாரமவையெல்லாஞ் *
செறியுறுகத்தினுக்கிசையப்பாரதத்துட்டிகழ்வார்கட் *
குறுமுணவுபலத்துறலாலுருவதுமின்றியுமுண்டு *
பொருபலசுறுங்கைதவிகமாகிய மூன்றிற்பிறழாவே *

எ-று. பாரதகண்டத்திலிருக்கிறவர்களுக்குஅறிவும்பெலமுஞ் சரீரமுங்கிருதயு கம்போலாதுமற்றையவுகங்கட்குத்தக்கபடிபேதமாகப்பொருந்தும், அவர்கட்குவ பயுறவுமுகவியதொழிகளினாலுண்டாகியதேபொசிப்பு. அஃதன்றியுமுழுவினையா மற்றுமேனையுண்டாகியகுளச்செந்நெல்புல்லரிசி காட்டிலுள்ளகாய்கனிமுதலியபொ சிப்புகளுமுண்டு-அவர்கள்அத்தியாத்மிகம். ஆதிதைவிகம். ஆதிபௌதிகம். எனக்கூ றிய துக்கத்திரையங்களையுமொழியாமலனுபவிப்பார்கள். எ-று.

துக்கத்திரையமாவன தேவர்களால்வருந்துனபம். ஆதிதைவிகம். பிருதிவிமுதலிய பூதங்களால்வருந் துன்பம்ஆதிபௌதிகம், இராசா. மிருகம். பசு. பக்ஷி. முதலியவற்றால்வருந்துன்பம். அத்தியாத்மிகம். என்னை. வெண்பா. கருவிற்றுயர்செனிக்குங் காலத்துயர்மெய், திரைநரைமூப்பிற்றிளைத்துச்செத்து, நரகத்தின், ஆழுந் துயர்பு வியையாளின்பமாதியெலாம், ஊழ் முதவுதைவிகமென்றோர் (௧)

பனியால்டியாற்படர்வாடையிருந், துனிதென்றலிறுஞ்சுகமுந் - தனையனைய. தீ ஞமின்பின்னலுநெருப்பினுந் துயரின், போரிற்பவுதிக மாகும். (௨)

தன்னாற்பிறராற்றனக்குவருந்திங்குநல, மின்னுவிலங்கரவந்தேளொறும்பு, சென் முதனீ - ரட்டையலவன்முதலைமீனரவமாதியினுங், கட்டமுமிங்காத்மிகமெகாண்ட (௩௨)

மற்றையநற்றலமெவற்றும்வாழ்வார்கள்பாரதத்தைப் *
பற்றிவினைநலம்பயின்றார்முற்பலத்திலெனப்பார்க்க *
முற்றியுறவினைபலவுறவளைத்ததலமிதுவதனான் *
முற்றவினையனைவருமிவ்விடமதனுண்முயல்வாரே *

எ - து பாரதகண்டங்கன்மபூமியாகையான் முற்சென்னங்களிலார்ச்சித்த கன்மபலத்தையாண்டனுபவித்துஅந்தக்கன்மபலத்தாலேகிம்புருடமுதலியவெட்டுக்கண்டங்களிலுண்டாகிய போகபேதங்களையாண்டாண்டு பொசித்திருப்பார்களௌனவுரைக்க, ஒருகருமஞ்செய்தவன் அந்தத்தலத்திலேயிருந்து அந்தந்தப்பலத்தைப்பொசியாமல்வேறோர்தலத்திலேயப்பலம்பொசிக்குமாறுபோலவிந்தப்பாரதகண்டத்திலேகன்மபரிபாகமானவாறேமற்றக்கண்டங்களையடைந்திருந்துபோகங்களைப்பொசித்துத் தொலைந்தவாறேபின்பிந்தப் பாரதகண்டத்தைவந்தடைந்தெல்லாருஞ்சத்கன்மங்களையேபண்ணுவர்கள் எ - று (௩௩)

நவகண்டத்தின்யோசனையளவைபுணர்த்துகின்றார்

தென்றிசைப்பாரதமாதிசிறந்தபெருவளைவடபாற் *
குன்றமொருமூன்றினுக்குமப்பாலைக்குருவந்தத் *
தொன்றியிடும்யோசனையுமொருநூறாயிரமுண்டு *
நின்றகுணக்கொடுகுடக்குமிவ்வளவேயிகழ்ந்துங்கால் *

எ - து தெற்குப்பாரதகண்டமுதல்மேருவுக்குவடக்காயிருக்கிற நீலகிரிமுதலிய மூன்றுகிரிக்குமப்பாலாயிருக்கிற குருகண்டமீறாகப்பொருந்தப்பட்டயோசனைநூறாயிரம்எனவறிக,மற்றைக்கிழக்குமேற்குநூறாயிரம்யோசனைவிரிவுண்டு எ-று

அவைவருமாறு - பாரதகண்டம் - ஒன்பதினாயிரம்-கிம்புருடகண்டம்-ஒன்பதினாயிரம்-அரிவருடகண்டம் - ஒன்பதினாயிரம் -இளாவிரதகண்டம்-பதினெண்ணாயிரம்-மகமேரு-பதினாறாயிரம்-இரமியகண்டம்-ஒன்பதினாயிரம்-இரணியகண்டம்-ஒன்பதினாயிரம்-குருகண்டம்-ஒன்பதினாயிரம்-சிருங்ககிரிமுதலிமவானீறாகமலையாறுக்கும்-பன்னீராயிரம்-ஆகத்தெற்குவடக்குத்தொகையானேநூறாயிரம்யோசனை யெனவறிக, பத்திராசுவகண்டம்-முப்பத்திராயிரம்-மாலியவான்கிரி-ஆயிரம்-இளாவிரதகண்டம்-பதினெண்ணாயிரம்-மகாமேரு-பதினாறாயிரம்-மேற்குக்கெந்தமாதனகிரி-ஆயிரம் கேதுமாலகண்டம்முப்பத்திராயிரம்-ஆகக்கிழக்குமேற்கும்நூறாயிரம்யோசனையுண்டென்க

(சுச)

நவகண்டத்தின்பெயர்க்காரணமுணர்த்துகின்றார்

மனுகுலத்துள்வருமங்கிநேத்திரனுமன்னவன்றன்
றனையர்பரதனை முதலோர்சவுரியரொன்பதின்மருளர்
இனையவர்களாண்டமையாலெய்தியபேரெனவிவற்றை
நினைகபாரதனுக்குரிமைபாரதமேநிகழ்த்துங்கால்

எ - து இந்தநாவலந்தீவில்மனுகுலத்தில்வரப்படாநின்றராசா அக்கினிநேத்திரன்-அவனுக்குப்பரதன்-கிம்புருடன்- அரி-இளாவிரதன்-பத்திராசுவன்-கேதுமாலி-இரமியன்-இரணியன்-குரு-எனவீரப்பாட்டையுடையபுத்திரரொன்பதின்மருளார், இந்தக்கண்டங்களை யொவ்வொருத்தராக வொன்பதின்மரும்பிறித்தாண்டமையாலவர்களவர்கள்பெயராலேயந்தக்கண்டங்களின்பெயராயிற்று, அதில்பாரதனென்னு மரசனிக்கண்டத்தையுரிமையாகவாண்டமையால் பாரதகண்டமெனப்பெயராயிற்று எ - று

ஏகாரந்-தேற்றம்-அஃதென்போலென்னிற்பாண்டியன்-சோழன்-ஆண்டதேசத்தைப்பாண்டிமண்டலஞ் சோழமண்டலமென்றாற்போலென்க, சுவாயம்புவென்னுமனுவின்புதல்வன்பிரியாவிரதன்அந்தப்பிரியாவிரதன்புத்திரர்கள்-பதின்மருளார், அந்தப்பதின்மருள் -மேதா - அக்கினி -வாகு - என்னும்மூவரும் வயிராக்கியத்தாலே சன்னியாசமாயிருந்தார்கள், மற்றஅக்கினிநேத்திரன்முதலிய வெழுவருஞ் சம்புத்தீவுமுதலிய வேழுதீவையுமொவ்வொருத்தராகப் பிறித்தாண்டார்களெனவறிக.

(சுரு)

ஏழுதீவினளவுமேழுகடலினளவுநான்குசெய்யுளாலுணர்த்துகின்றார்.

எண்ணுகயோசனைப்பிலக்கமென்றிணையநாவலன்றீ *
வெண்ணிடுகவிதன்புடை சூழுவரிவிரிவிப்படியென் *
றெண்ணிடுகவிதற்கப்பாற்சாகமிரண்டிலக்கமெனக் *
கண்ணிடுகவதற்கப்பாற்பாற்கடலுமக்கணக்கால் *

எ - து இந்நாவலம் பெருந்தீவைநூறாயிரம்யோசனைத்தெனமென்று கருதுக இந்நாவலம்பெருந்தீவைச் சூழ்ந்தவுப்புக்கடல்நூறாயிரம்யோசனையென்று கருதுக, இந்தவுப்புச்சமுத்திரத்துக்கப்பாற்சாகத்தீவுஇரண்டுநூறாயிரம் யோசனை, அந்தச்சாகத்தீவு க்கப்பாற்பாற்கடலிரண்டுநூறாயிரம்யோசனைதூரம் எ - று

முற்காலத்திற்பருப்பதங்களெல்லாஞ்சிறகுடனேகூடப்பறந்தூருதேசத்திற்போயிருக்கிறபொழுது அதிலிருக்கிறபிராணிகளுக்குமிகவும்பீடைவருகையால்தேவர்களெல்லாருந்துக்கித்து இந்திரனுக்குமுறையிட அப்பொழுதிந்திரன் அப்பருப்பதங்களினுடையசிறகைச்சேதித்தபோதுபயப்பட்டுலவணசமுத்திரத்திற்பன்னிரண்டுகிரிகள்பறந்துவந்துகிழக்குமுதலியதிக்குகளில்விழுந்தன - அவையாவன - கிழக்குச்சமுத்திரத்தில்இடபகிரி-துந்துபிகிரி-தாமிரகிரி-மூன்றும்-தெற்குச்சமுத்திரத்திற்-சக்கரகிரி-மைநாககிரி வலாககிரி-யெனமூன்றும்-மேலைச்சமுத்திரத்திற்சோககிரி-வராககிரி-நந்தனகிரி-எனமூன்றும்,வடக்குச்சமுத்திரத்தில்-கங்ககிரி-சந்திரகிரி-துரோணகிரி-எனமூன்றுமாகப்பன்னிரண்டுமெனவறிக, அவற்றிற்சக்கரகிரிக்குமைநாககிரிக்குநடுவேகுதிரைமுகம்போன்றவடவாமுகாக்கினியெப்போதுஞ்சொலித்துக்கொண்டிநிற்குமெனவறிக,இரண்டாவதாகியசாகத்தீவுக்குராசாமேதாதிதி-அந்தஇராசவுக்குப்புத்திரர்களெழுவருளர்-அவர்களியாவரெனிற்சாந்தன்-அபையன்-சிரமுகன்-அனந்தன்-சிவன்-கேஷமன்-துருவனென எழுவரையும்அபிடேகம்பண்ணியவர்களவர்கள்பெயராலத்தீவையேழாகப்பிரித்துக்கொடுத்தான்-அந்தச்சாகத்தீவிற்கொடுமதகம்-சந்திரசம்சயகம்-நாரதம்-மந்தாரந்-சோமகம்-இடபம்-வைப்பிராசம்-என்றமலைகளேழுமுள அம்மலைகளினின்றும்,அநிருநதிமுதலியநதிகளேழும்-புறப்பட்டுப்பாற்கடலிற்போய்விழும், அந்தத்தீவிலிருக்கிறபேயர்க்குப்பொசிப்புப்பால்-அவர்கள்நிறஞ்சந்திரப்பிரபைபோன்றிருப்பார்கள்,அந்தத்தீவில்சாகமென்னுமரம்நிற்கையாற்சாகத்தீவெனப்பெயர்பெற்றதென்க,அந்தப்பாற்கடலில்வடக்கேசுவேததீவில்-நடுவேவைகுண்டம், அதில்அநேகங்கோபுரமும்பிரகாரமுமுள அவ்விடத்திற்கமலையாருடன்கூடித்திருமாலாதிசேடன் மேல்சயனஞ்செய்வரெனவறிக.

(௩௰)

எண்ணிடுகவதற்கப்பாற்குசைத்தலநான்கிலக்கமென ※
வெண்ணிடுகவதற்கப்பாற்றயிரதுமுனையிலக்கத் ※
தெண்ணிடுகவதற்கப்பாற்கிரவுஞ்சமெட்டிலக்க ※
மெண்ணிடுகவதற்கப்பானெய்க்கடலுமெட்டெனவே ※

எ - து முற்கூறியபாற்கடலுக்கப்பாற்குசைத்தீவுநான்குநூறுயிரம்யோசனை, அந்தக்குசைத்தீவுக்கப்பாற்றயிரக்கடல்நான்குநூறுயிரம்யோசனை, அந்தத்தயிர்க்கடலுக்கப்பாற்கிரவுஞ்சத்தீவுஎட்டுநூறுயிரம்யோசனை, அந்தக்கிரவுஞ்சத்தீவுக்கப்பால்-நெய்க்கடலுமெட்டுநூறுயிரம்யோசனைவிரிவுண்டு. எ - று

அந்தக்குசைத்தீவிற்பொன்மயமான குசைநிற்கையா லப்பெயர்பெற்றது, அந்தக்குசைத்தீவுக்குஇராசா- வசு- அந்தவசுவென்னுமிராசாவுக்குப்புத்திரர்களெழுவர் அவர்யாவரென்னில்சுவேதன். லோகிதன். சீமுதன். அரிதன். விபுத்தியுதன். மானசன். சுப்பிரதன். என்க அவ்வெழுவர்களும் பிரித்தாண்டமையால் அவரவர்பெயராலத்தீவு. ஏழுபிரிவாயிற்று, அவ்வேழுதீவுக்குமேழுகிரியுள. அவையாவனகுமுதகிரி, ஊதகிரி. வராககிரி. துரோணகிரி. கங்ககிரி. மயிடகிரி. குமுதவானகிரி. என்க, அந்தக்கிரிகளினின்றுஞ்சுவேததோயநதிமுதலிய வேழுநதிகளும் புறப்பட்டுத்தயிர்க்கடலிற்போய்வீழும், அதிலிருப்பார்க்குப் பொசிப்புத்தயிர். அஃதன்றிபலங்களமிர்தமிவையிற்றையும்பொசித்திருப்பார்கள், இனியக்கிரவுஞ்சத்தீவுக்கு இராசாசோதிமான். அந்தஇராசாவுக்கு ஏழுபுத்திரர்களுளர், அவர்கள்யாவரென்னில். உற்பிதன். வேணு. மண்டலன். இந்தகாரன். திருதிமான். சுப்பிரபாகன். கபிலன். என்க அவ்வேழுபுதல்வர்களும்பிறித்தாண்டமையால் அவரவர் பெயராலத்தீவுஏழுபிரிவாயிற்று, அவ்வேழுதீவுக்கு மேழுகிரியுள. அவையாவன. வித்துருமகிரி. ஏமநாமகிரி. திருதிகிரி. புட்பதெந்தகிரி. குசலகிரி. லோகிதகிரி. மந்தரகிரி. யென்க, அந்தவேழுகிரிகளினின்றும்மகிபாபாவென்னுநதிகள்முதலியவேழும்புறப்பட்டுநெய்க்கடலிற்போய்வீழும், அந்தத்தீவிலிருக்கிறவர்கள் நெய்மயமாயிருக்கிற அமிர்தபலசாரங்களைப்பொசித்திருப்பர்கள், அவர்களுக்கு நிறமுற்கூறியதே. அக்கிர வுஞ்சத்தீவில். ஏமநாமகிரியில்கிரவுஞ்சனென்னுமசுரன்சிறிதுநாளாண்டுகொண்டிருந்துகுமாரசுவாமியுடன் போர்செய்து மரிக்கையா லதுகிரவுஞ்சமெனப்பெயர்பெற்றதென்க (கூஎ)

எண்ணிடுகவதற்கப்பாற்சான்மலியெண்ணிரண்டிலக்க ※
மெண்ணிடுகவதற்கப்பாலிக்கிரதமுற்படியே ※

பெண்ணிடுகவதற்கப்பாற்கோமேதமெண்ணுன்கென் ✲
றெண்ணிடுகவதற்கப்பான்மதுக்கடலுமுனையெண்ணுல் ✲

எ- து. முற்கூறியநெய்க்கடலுக்கு அப்பாற் சான்மலித்தீவு பதினாறுநூறுயிரம் யோசனை, அந்தச்சான்மலித்தீவுக்கப்பாற் கருப்பஞ்சாற்றுக்கடல்பதினாறுநூறுயிரம்யோசனை, அந்தக்கருப்பஞ்சாற்றுக் கடலுக்கப்பாற் கோமேதத்தீவுமுப்பத்திரண்டுநூறுயிரம்யோசனை, அந்தக்கோமேதத்தீவுக்கப்பாற் சுரைக்கடல்முப்பத்திரண்டுநூறுயிரம்யோசனைவிரிவு. எ- று.

அந்தச்சான்மலித்தீவுக்குஇராசா-சுந்தமான்-அந்தஇராசாவுக்குப்புத்திரர்களெழுவர்-அவர்யாவரென்னில்நமோதுற்கன்-தனுசுமான்-பாவகன்-அந்தகாரகன்-முனி-துந்துமி-குசலன்-என்க,அவ்வெழுவர்களும்பிறித்தாண்டமையாலவரவர்பெயராலத்தீவேழுபிறிவாயிற்று, அவற்றிற்கிரிகளேழாவன-கிரவுஞ்சகிரி-வாமனகிரி-அந்தகாரகிரி-திவாகிருதகிரி-தீவிபிந்துகிரி-புண்டரீககிரி-துந்துமிகிரியென்க, அவைகளினின்றும்-புண்டரீகமுதலியநதிகளேழும்புறப்பட்டுக்கருப்பஞ்சாற்றுக்கடலிற்போய்வீழும், அதிலிருக்கிறவர்களுக்குப்பொசிப்புகருப்பஞ்சாறு, அந்தத்தீவிலாயிரம்யோசனையுயரத்தையுமுடைத்தாய்க்கனகமயமானஆதித்தப்பிரபைபோன்றிருக்கிறஇலவமரநிற்கையாற்சான் மலித்தீவெனப்பெயர்பெற்றதென்க, இனிகோமேதத்தீவுக்கு இராசாஅவ்வியவாகனன் அந்தவிராசாவுக்குப்புத்திரர்களெழுவர் அவர்யாவரென்னில்-செலதன்-குமாரன்-சரித்தகன்-குமுதன்-சுந்தனன்-மகாமத்திரன்-சுகுமாரன்-என்க-அவ்வெழுவர்களும்பிறித்தாண்டமையாலவரவர்பெயராலத்தீவேழுபிறிவாயிற்று, அவற்றிற்கிரிகளேழாவன கேசரகிரி சேடகிரி-சுரதவதகிரி-அம்பிகிரி-கெயோபகிரி-மேககிரி-சிங்ககிரியென்க, அவைகளினின்றுங்கெபத்திமான்முதலியவேழுநதிகள்புறப்பட்டுமதுக்கடலிற்போய்வீழும், அந்ததீவிலிருக்கிறவர்களுக்குப்பொசிப்புச்சுவாதுபலங்கள், கோமெதத்தீவெனப்பெயர்பெற்றதுயாதெனில், மனுகுலத்திற்கோபதியென்னும்பெயரையுடையவிராசாகோசலனென்னும்பெயரையுடையயாகநிமித்தமாகத்தேவேந்திரனுடையயாகத்துக்கதிபதியாயிருக்கிறபிருகுமகாவிருடியைவரிக்கையால்கௌதமர்இந்திரனுடையயாகத்துக்குவந்திருக்கிறவிவரைவரிக்கலாமோவென்றுஅந்தவிராசாவைக்கோபாக்கினியாற்சபிக்க-அந்தவிராசாவுமந்தயாகநிமித்தமாகவந்திருக்கிறபசுக்களும்நாசுத்தையடைந்து அந்தப்பசுக்களுடையநிணமிந்ததத்தீவைமறைக்கையாலதற்குக்கோமேதத்தீவெனப்பெயராயிற்று. (கூ௯)

எண்ணுகயோசனையெட்டெட்டிலக்கமெனவதற்கப்பா ✲
லண்ணியபுட்கரணிதலத்தகலத்தையதற்கப்பா ✲

லண்ணியசுத்தோதகத்தினகலமுமுன்னறைந்தபடி *
திண்ணியமால்வரையுமினியிவற்றினுக்குத்தெரிப்பாமே *

எ- து. முற்கூறியசுரைக்கடலுக்கப்பாற் புட்கரணிதலத்தகலத்தை யறுபத்து நான்குநூறாயிரம்யோசனையெனக்கருதுக, அந்தப்புட்கரணித்தீவுக்கப்பால். நல்ல தண்ணீர்க்கடலினகல மறுபத்துநான்குநூறாயிரம்யோசனை, சாகமுதலியதீவிற்க டினமாய்ப்பருத்திருக்கிறமலைகளைத்தொகுத்துச்சொல்வாம். எ- று.

அந்தப்புட்கரணித்தீவுக்குஇராசா. அசன். அந்த விராசாவுக்குப் புத்திரர்களிருவர் அவர்யாவரொன்னில். தாக்கியன். மத்தியனென்க, அவ்விருவரும் பிரித்தாண்டமை யாலவரவர்பெயராலத்தீவிரண்டுபிரிவாயிற்று, அவற்றிற் கிரிகளிரண்டாவன. மந் தரகிரி. உத்தரகிரியென்க, அந்தக்கிரிகளிரண்டுமென்பதுயோசனையுயரமு மிருபத்த ஞ்சுயோசனைவிரிவுமாயிருக்குமென்க. (சூகூ)

சாகத்தீவுமுதலியதீவின்மலைகளினதளவையுணர்த்துகின்றார்

சாற்றியிடுஞ்சாகமுதலைந்தினுக்குந்தடவரையு *
மூற்றமிகுமெவ்வேழுண்டொருகிரிசக்கரம்போல *
மாற்றறவேபுட்கரணிதலத்தைவலமாய்வதியுந் *
தேற்றுததிமுடிவிடத்துந்திகழுமொருவரையதுபோல் *

எ- து. சாகத்தீவுமுதலியவைந்தீவினு மொவ்வொன்றுக் கெவ்வேழாகமுப்பத் தைந்துமலைகளுண்டு, அஃதன்றி. புட்கரணிதீவிலிருக்குமொப்பற்றமானதகிரி. யந் தத்தீவைச்சக்கரம்போலயிடைவிடாமல்வலமாகச்சூழ்ந்திருக்கும்,அஃதன்றிச்சுத் தோதகசமுத்திரத்தைச்சூழவிடைவிடாமல்சக்கரவாளகிரிவிளங்கும். எ- று.

ஐந்தினுக்குமென்றவும்மையாற்புட்கரணித்தீவில்மலைகளின்டிருக்கின்றன, ஆகத் தீவு. ஆறுக்குக் குலபருப்பதங்கள் முப்பத்தேழெனவறிக, தடவரையு மென்றவும் மையாற்சாகமுதலியவைந்துதீவினுள்ளு முப்பத்தைந்துநதிகளுமுண்டென்க, புட் கரணித்தீவிலிருக்கு மானதகிரியிற் கிழக்குமுதலிய நான்குதிக்கினுமுலகபாலர்கள் நால்வர்க்குநான்குபுரியுள, அவையாவன. இந்திரனுக்கு விசுவோகசானுவென்னும் புரியும் இயமனுக்குச்சங்யமனியென்னும்புரியும், வருணனுக்குச் சுத்தவதி யென்னு ம்புரியும், சோமனுக்கு விபாவதியென்னும் புரியுமென்க, தேவபூசை நிமித்தமாகச் சொன்னமயமானதாமரைப்பூ அத்தீவின்கணுண்டாயிருக்கையா லந்தத்தீவுபுட்கர ணித்தீவெனப்பெயர்பெற்றது, மலைகளையும் நதிகளையுமீண்டுக்கூறியிருக்க.ஆண்டுக் கூறியதென்னையெனின். ஈண்டாசிரியர் தொகுத்தமையா லாண்டுஒப்பின் முடித்த

லென்னுந்தந்திரவுத்தியாற்கூறியதெனவறிக. (எய)

சாகமுதலியதீவிலிருப்பர்கள்தன்மையையுணர்த்துகிறார்

சாகமுதலிருமூன்றிற்றங்குநர்கடமக்கெல்லாஞ் *
சோகமிலையெந்நாளுந்துய்த்திருப்பர்சுகமவர்தம் *
மாகமதினரையுமிலைத்திரையுமயுதாயுவுளர் *
மோகமிலர்கலியுகத்துங்கிம்புருடர்முறைபெறுவார் *

எ - து சாகதீவுமுதலாறுதீவிலுமிருக்கிறவர்கள், சம்புத்தீவினுட்குமரிகண்டத்திலிருக்கிறவர்களைப்போல வெப்பொழுதுஞ்சுகதுக்கமுறாமல் சுகவாசியாய் நரைதிரைமூப்பின்றிநித்தியயௌவனராய்ப்பதினாயிரம்வயதுடையராயிருப்பர்கள் அஃதன்றிக்கலியுகத்துமோகமில்லாதவராய்க்கிம்புருடகண்டத்திலிருக்கிறவர்களுக்கொத்திருப்பர் எ - று (எக)

பூலோகத்தைத்தொகுத்துணர்த்துகிறார்

எழுதீவுமெழுகடலுமீழமயமெனுநிலனுந் *
தழல்போலுமொளியிப்பாற்றமப்பாற்றகுமலையுங் *
குழுவாயபேரிருளுமதற்கப்பாற்குரைகடலு *
மழகாயவண்டகடாகாந்தமும்பூதலமாமே *

எ - து சம்புத்தீவுமுதலியவேழுதீவும்-லவணசமுத்திரமுதலிய வேழுகடலும்-பொன்மயமானபூமியும் அக்கினியைப்போலுமொளிமுற்பாகத்திலும்இருள்பிற்பாகத்திலுமுடையலோகாலோக்கியமென்னும்பெயர்பெற்றசக்கரவாளகிரியுமத்தகாரபூமியுமாரபாரத்தையுடையபெரும் புறக்கடலுமண்டகடாகமுடிவுமாகிய விவையெல்லாம்பூலோகமெனப்பெறும் எ-று (எஉ)

சக்கரவாளகிரியின்றன்மையையுணர்த்துகின்றார்

இசைத்தவிதத்திருளொருபாலொளியொருபாலேய்ந்தகிரி *
வசிப்பர்முதற்பாகத்தின்வடிவியக்கரிராக்கதரும் *
பசுத்தவிராக்கதர்தாம்பைசாசர்திசைப்பாலகரு *
மிசைப்பயிலும்விண்ணவர்பொன்னிலத்துவிளையாடுவரே *

எ - து இங்ஙனஞ்சொல்லப்படாநின்றவொளியொருபாலும் இருளொருபா

ஞமிருக்கிறசக்கரவாளகிரியில் வடிவையுடையவியக்கரும்சந்திரனும் பசுமைநிறத்தையுடையவிராக்கதரும்பசாசுகளும்அட்டதிக்குப்பாலர்களும் மேலேயிருக்கப்படாகின்றதேவர்களும்வாசஞ்செய்வர்-அதுவன்றிமுற்புறமாகியகனகமயமான பூமியினிழிந்துசஞ்சரித்துவிளையாடிப்பின்புதங்கடங்களெல்லையையடைந்திருப்பர்கள் எ - று (எ௩)

சக்கரவாளகிரிக்கப்புறத்திருட்பூமியிலிருப்பாரையுணர்த்துகிறார்

விதித்தவுரைமரணமலால்விபரீதமுறவிதிக்கு *
வதைத்தவர்கடமைத்தாமேமையதுறவதிவார்கள் *
புதைத்தவிருளுலகத்துட்பொருளல்லாப்புல்லியரோ *
கதத்துமருந்துயரத்துந்தம்முடலைக்களைவாரே *

எ - து சிவாகமத்திற்சொல்லியபடி மிகுந்தசிவகாரியங்குருகாரியஞ்சங்கமகாரியமாகத்தான்றன்னுடையதேகவெறுப்பாற்றுன்புராணதிகளிற்சொல்லியபிருகுப்பிரபாதமாதல்-கெங்கைமுதலியதீர்த்தத்திலாதல்தேகம்விடுதலன்றிச்சாத்திரத்துக்குவிரோதமாகத்தம்முடையவுடலைத்தாமேவிட்டவர்களிருட்பூமியாகியவுலகத்தின்மயக்கத்தைப்பொருந்திக்கிடப்பர்கள், ஆதலாலிப்படிப்பட்டமரணமாகாதென்றறியாமற்கோபத்தினுலும்வியாதிமுதலியபீடைக ளினுலும்வலியவுயிரைவிட்டவர்கள்-ஒருபொருளிலுஞ்சேராதகீழ்மக்களாவர்கள் எ - று (எச)

அண்டகடாகமுதல்மகமேருநடுவரையிலும்ஐம்பதுகோடி-யோசனைதூரம் என்பதைமூன்றுசெய்யுளாலுணர்த்துகிறார்

அழகாயகடாகத்துக்களவுகனமொருகோடி *
யெழுநூறாயிரத்துடனேயிருபதுநூறாயிரத்தைத் *
தழுவியுறுமொருகோடிசமுத்திரநாயகத்தளவு *
குழுவிருளுமேழைஞ்சுகோடியினுங்கூறிடுவாம் *

எ - து அழகியஅண்டகடாகவோட்டுக்கனமொருகோடியோசனை பெரும்புறக்கடலினகலங்கோடியேயிருபத்தேழுநூறாயிரம்யோசனை, முற்கூறியவந்தகாரபூமினகலமுப்பத்தைந்துகோடியோசனை, அஃதன்றியின்னுமதனுடையவளவையைச்சொல்வாம் எ - று (எரு)

இருபதுநூறாயிரத்தினென்றான்மிவற்றுடனே *
வருவதுதாறைப்பதினுயிரமெனவேமதித்திடுக *

விருளொருபாலொளியொருபாலிசைந்தபெருவரைக்கயுத *
மொருபஃதுகோடியுறுங்கனகமயவொளிநிலனே *

எ-து முற்கூறியஅந்தகாரப்பூமியினளவுமுப்பத்தைந்துகோடியுடன்பத்தொன்பதுநூறுயிரத்துநாற்பதினுயிரம்யோசனை யுண்டெனவறிக, ஒருபாற்பிரகாசமாயும்ஒருபாலிருளாயுமிருக்கிறபெருமையையுடைய சக்கரவாளகிரிபதினுயிரம்யோசனைவிரிவையுடைத்தாயிருக்கும், முற்கூறியகனகபூமிபத்துக்கோடியோசனைவிரிவுண்டு எ-று

அந்தச்சக்கரவாளகிரி நூறுயிரம்யோசனையுயரத்தையுடைத்தா யொருபாற்சூரியன்சஞ்சரிக்கையாலும்-ஒருபாற்சஞ்சரியாமையாலு மொருபாலொளியும்-ஒருபால்இருளுமாயிற்று, மண்ணினுமண்டத்துக்குநடுவேசூரியன்சஞ்சரிக்கையாலவனுக்குமார்த்தாண்டனென்னும்பெயராயிற்று, அந்தக்கிரியிலட்டதிக்குப்பாலகரிருந்துதந்தந்திக்கைக்காத்துக்கொண்டிருப்பர்கள் (எசு)

எழுநூறுயிரத்துடனேயிருபதுநூறுயிரத்தைத் *
தழுவியுறுமொருகோடிசத்தசமுத்திரவிரிவு *
மெழுநிலமுமைம்பதினுயிரங்குறையவிவ்வளவே *
குழுமியுறும்பஞ்சாசத்கோடிபெருங்குன்றிறுவாய் *

எ-து முற்கூறியசத்தசமுத்திரங்களின்விரிவு கோடியேயிருபத்தேழுநூறுயிரம்யோசனை, ஜம்புத்தீவில்மகமேருமுதலாகத்தெற்கேழுதீவுங்கோடியேயிருபத்தாறுநூறுயிரத்துஐம்பதினுயிரம்யோசனை யுண்டெனவறிக, மகமேருமுதலாகக்கடாகமீறுகத்தொகுத்தறியுமிடத்தைம்பதுகோடியோசனைவிரிவைப் பொருந்தும் எ-று

அதன்வகை-சத்தசமுத்திரமுஞ் சத்ததீவுமாக-இரண்டுகோடியேயைம்பத்துமூன்றுநூறுயிரத்தைம்பதினுயிரம்-அதற்குப்புறம்பே கனகமயமானபூமி பத்துக்கோடி-யதற்குப்புறம்பே சக்கரவாளகிரிபதினுயிரம்-அதற்குப்புறம்பே யிருளுலகமுப்பத்தைந்துகோடியே பத்தொன்பதுநூறுயிரத்துநாற்பதினுயிரம்-அதற்குப்புறம்பேபெரும்புறக்கடல்கோடியேயிருபத்தேழுநூறுயிரம்-அதற்குப்புறம்பேயண்டகடாகங்கோடி-ஆகமகமேருநடுநின்றுந் தெற்குப்பாதியைம்பதுகோடியோசனைவிரிவுஞ்சரி, மற்றைத்திக்கினுங்காண்க (எஎ)

அளவுக்கோர்புறனடையுணர்த்துகிறூர்

தணைத்தலத்துக்கீழ்த்தலங்கள்பேதமுறச்சாற்றியிடும் *
தணைத்தலத்துமேற்றலமுந்தவறுணாயாசாத்திரமுந் *
தணைத்தலத்தும்பேதமுறச்சாற்றியிடுஞ்சாற்றிடினும் *
விருத்தமில்லைச்சிருட்டிதொறும்பேதமுறவிளைதலினால் *

எ - து இந்தப்பூமிக்குக்கீழானநரகபுவனங்களையாகமங்களிற்பேதமாகக்கூறும், பூமிக்குமேற்றலங்களையும்பேதித்துக்கூறும், ஆனாலொருபடித்தன்றிப்பலவாகப்பேதித்துச்சாத்திரஞ்சொல்லுமோவென்னிற்சிவன்சருவஞ்ஞனாகையாற்சாத்திரங்கள்பொய்சொல்லாது பூலோகத்தினிடத்தும் பேதமாகக்கூறும், ஈசுரனெவ்வொருசிருட்டிகாலங்களிலாகமங்களைப்பேதித்துக்கூறினாலுங்கடைத்தொகையளவொத்திருக்குமாகையாலந்தநூலுக்குமிந்தநூலுக்கும்விரோதமில்லையாதலால்மாறுகொளக்கூறுங்குற்றமில்லை எ - று

பேதம்யாதெனில், கீழ்முதலடுக்கில்-நரகம்பதின்மூன்று-இரண்டாமடுக்கு ஒன்றுக்குப்பத்து-மூன்றாமடுக்குஒன்றுக்கு-ஒன்பது-ஆக-அடுக்குமூன்றுக்கும்நரகம் முப்பத்திரண்டு-அதில்ரௌரவம்-கும்பீபாகம்-அவீசி-இந்த மூன்றுநரகமும்-இராசர்திராசநரகம்-இதிலொன்றைச்சூழ்ந்தவுபநரகம் ஒன்றுக்கொன்றெவ்வேழாகநரகமிருபத்தொன்று-நீக்கிநரகமிருபத்தொன்பதுமொவ்வொன்றைமும்மூன்றாகச்சூழ்ந்தவுபநரகம்எண்பத்தேழு ஆகநரகம்நூற்றுநாற்பதென்று ஆகமங்களிற், பேதித்துக்கூறியவற்றையுணர்க. (௭௮)

அண்டங்களளவில்லையென்பதனையுவமைமுகத்தாலுணர்த்துகின்றார்

எண்ணரியவாருயிர்களண்டமுமிப்படிதானே *
யெண்ணரியவெனுமமலனியலெனின்மற்றோரியலி *
னெண்ணியவனளவிடுதலென்னையெனில்வினைவித்தாற் *
பண்ணிடுவனண்டவிதஞ்சிருட்டிதொறும்பலபடியால் *

எ- து. எப்படியான்மாக்களளவிறந்தகோடியுண்டுஅப்படியேயிந்தவண்டவிதமுமளவிறந்தகோடியெனவறிக, மலமில்லாதசிவனருளிச்செய்ததிவ்வியாகமங்களுமளவிறந்ததாகையாலளவிடுதற்கரிது ஆனால் அவனருளிச்செய்ததிவ்வியாகமங்களிற் காமிகம். பரார்த்தம். யோகசம்இவைகள் நூறாயிரஞ்சுலோகமென்று அளவிட்டுக்கூ

றுதலென்னையோவென்னிற்கேட்கிறவர்களுடைய புத்திதாரதம்மியத்துக்கேடாகப் பெருகவுஞ்சிறுகவுங்கூறினன், அவர்களுக்குப்புத்திபெருத்துஞ் சிறுத்து மிருப்பானேனென்னில் ஆன்மாக்கள்செய்த கன்மானுகுணமாக அவர்களவர்கள் புத்தியையேற்றக்குறைச்சலாகப்பிரகாசிப்பிப்பன், அதுபோலச் சிருட்டிதொறும்பலபல விதமாகவண்டங்களையருளிச்செய்வன். எ- று. [எக]

இந்நூல். இவ்வாகமத்துட்சேர்ந்ததென்பதனை யுணர்த்துகின்றார்

ஏகனருள்சிவதருமோத்தரமெனு நூலெண் ணுங்கா ௱
லாகமத்துட்சருவோத்தத்துபபேதமதனாலே *
யாகமத்துட்படிபிதனுளருகிவருமெனவறிக *
வாகமத்தின்படிமற்றையியலுள்ளுமடைந்துறுமே *

எ-து. தனக்கொப்பொருவருமில்லாதசிவனருளிச்செய்த சிவதருமோத்தரம்,மூலாகமமோஉபாகமமோவென்னின்மூலாகமத்தி லிருபத்தைந்தாமாகமமாகியசருவோத்தமென்னு மாகமத்தில். ஈசானம். சிவதன்மம். சிவதரு மோத்தரம். திவ்வியப்புரோக்தம். குபேராக்கியம். எனப்பிறிந்தபேதமைந்துள், இந்தச்சிவதருமோத்தரமும்உபாகமமாகையாலே மற்றாகமத்திற்கூறியபொருள்களு மிதனுளருகிவருமெனவறிக, ஆதலாலிதுமிகைபடக்கூறலென்னுங் குற்றமன்று, அஃதன்றிச் சிவஞானயோகவியலினும்பரிகாரவியலினுங்கலந்தும்வரும். எ- று. (அய)

இனிப்புவலோகமுதல்மேல்அண்டகடாகம்வரை யுள்ளவுலகங்களும்அவற்றினளவுமுதலியனவும்பத்துச்செய்யுளாலுணர்த்துகின்றார்

தரைத்தலமுமுனிவரனேதகைபெறவேதொகையாக்கி *
யுரைத்தனமேற்புவலோகமுதலாயவுலகினையுந் *
தரித்திடுகதொகைசெய்தேசாற்றிடுவாந்தவறறவே *
விரித்தவுரைவிளம்புமவர்வினைவிரையவீட்டிடவே *

எ- து. வாராய்முனிவரனேபூலோகத்தின்சொரூபத்தை முறையாகத்தொகுத்துச்சொன்னோம், மேற்புவலோகமுதலியவுலகங்களை யைம்பதுகோடி யளவிற்குறையாமற்றொகுத்துச்சொல்வாமதனையறிவாயாக, இங்ஙனந்தொகுத்துக்கூறுமதனைக்குற்றமின்றியாதொருவர்விரித்து வியாக்கியானஞ்செய்வார வர்கள்வினைசடுதிக்குவிட்டுப்போம்படிக்குச்சொல்வாம். எ- று. [அக]

வேறு

தனாக்குமேற்புவலோகமதுதனி ❋
லருக்கன்சோமனெனுமிவரா்திய ❋
ரிருப்பா்தத்தம்பலத்தினையெய்தியே ❋
பரித்தநீளம்பதினைந்திலக்கமே ❋

எ- து. இந்தப்பூமிக்குமேற் புவலோகம், அப்புவலோகத்தி லாதித்தியன். சந்திரன். ஆதியா் தத்தம் பதங்களிற் சஞ்சரித்திருப்பா்கள், இவைத்தரிக்க ப்பட்டபுவலோகம்பதினைந்துநூறுயிரம்யோசனையுயரமுண்டு. எ- று.

சஞ்சரித்தலெத்தன்மையெனில். ஆதித்தன்பதத்துக்குக்கிழாகப்பத்துவாயுவும். ஏழுமேகங்களுங்கூடிச்சஞ்சரிக்கும்வகையாவன. விதன்னுவான். பிரசேதகன். அக்கினிப்பிரசேதகன்- செசனி - அவுத்தன் - வச்சிராங்கதன் - வயுத்தியுதன் - இராவதன்- சங்வா்த்தன். விசங்வா்த்தன். எனவாயுக்கள் பத்து, இவைகளுக்கு வியாபாரமாவன. விதன்னுவானென்னும் வாயுபூமிக்குமேலே பதினுயிரம்யோசனையளவாகச்சஞ்சரித்துஓஷதிகளுக்குப்பெலங்களையுமுண்டாக்கிக்கழுகுமுதலியபறவைகளுக்குப்பறப்பதற்காதாரமாயிருக்கும், பிரசேதனென்னும்வாயுஅதற்குமேலாகப்பதினுயிரம்யோசனையளவாகச்சஞ்சரித்துவிருக்ஷங்களையும்பயிர்களையுமந்தந்தக்காலங்களுக்கீடாகவாதைபினையும்பண்ணிமுறிக்கும், அக்கினிப்பிரசேதனென்னும்வாயுப்பதினுபிரம்யோசனையளவாகவியாபித்துமூற்கூறியமரங்களையும்பயிர்களையுமுலர்த்திவீட்டையுஞ்சுட்டுச் சமுத்திரச்செலத்தினுலேய தனைச் சமிப்பிக்கும், இந்தமூன்றுவாயுமேகங்களைப்பொருந்தாமற்றனே சஞ்சரிக்கும், இனிச்செசனி யென்னும்வாயு சத்துகனென்னுமேகத்துடனேபொருந்தி. மீன். ஆமை. தவளை. முதலியவெல்லாம் துயருறப்பொல்லாமழையைப் பொழியும், அவுத்தனென்னும் வாயு. ரோதகனென்னுமேகத்துடனேபொருந்திப்பதினுயிரம்யோசனையளவாக வியாபித்துவிடமாகியமழைதனைப்பொழிந்துஅதனுலான்மாக்களை நாசம்பண்ணும், வச்சிராங்கதனென்னும்வாயு. உபலகனென்னுமேகத்தைப் பொருந்தி யிரத்தம்ஆலாங்கட்டி. கல்லுக்களையும்பொழியும், வயித்தியுதனென்னும் வாயு. வயித்தியுதனென்னும் மேகத்தைப்பொருந்திப்பதினுயிரம்யோசனையளவாக மேலேசஞ்சரித்து இடிமின்முதலியவற்றையுண்டாக்கும், இராவதனென்னும்வாயு. புட்டிவதனென்னுமேகத்தைப்பொருந்திப்பதினுயிரம்யோசனையளவுசஞ்சரித்துஆன்மாக்களுக்குபயோகமாகியநல்லம

மழையைப்பொழியும், சங்வாதனென்னும்வாயு. விரோதமென்னுமேகத்தைப்பொரு ந்திப்பதிநாயிரம்யோசனையளவு வியாபித்து வியாதியையுண்டாக்கிற செலத்தைப் பொழியும், விசங்வாதனென்னும்வாயு. குரோதமென்னும் மேகத்தைப் பொருந்து மேற்பதிநாயிரம்யோசனையளவுசஞ்சரித்துஆன்மாக்களுக்கு யுத்தத்தாலும்வியாதி களாலுஞ்சஞ்சரிக்கிறமழையாகப்பொழியும், ஆகவாயுப்பத்து மேகமேழும் பூமிக் குமேலேயொன்றுக்கொன்றுபதிநாயிரம்யோசனையளவாகமேன்மேலாக ஆதித்தி யபதமளவாகச்சஞ்சரிக்கும், அந்தமேகமேழுமொவ்வொரு மேகத்தைமுப்பதி னாயிரங்கோடிமேகஞ்சூழ்ந்துசேவித்திருக்கும், விதன்னுவான்முதலியவொன்பது வாயுக்கள்பதத்திலு மடைவே யிருப்பார்கள். யாவரென்னில். சித்தர்களும், சத்த மாதாக்களும், சித்தசாரணரும். நாராசஞ். சங்கமுதலிய ஆயுததேவதைகளும், ஐ யிராவதம். புண்டரீகம். வாமனம். குமுதம். அஞ்சனம். புட்பதந்தம். சாருவபூம ம். சுப்பிரதீபமென்னுமட்டகெஜங்களும், பக்ஷிராசனாகிய கெருடனும். ஆகாசகெ ங்கையுந், தருமசொரூபமாயிருக்கிறவிடபதேவரும், தக்ஷப்பிரசாபதியு மென்க. ப த்தாம்வாயுவாகியவிசங்வர்த்தனில்ஆதித்தர்பன்னிருவர். அசுவனிகளிருவர். உருத் திரர்பதினொருவர். எண்வகைவசுக்களாவார். ஆகியமுப்பத்துமூவர்களும் வசித்தி ருப்பர்கள். அதிலாதித்தர்பன்னிருவராவார். வைகர்த்தனன். விபச்சுான்.மார்த்தாண் டன்-பாற்கரன். இரவி. உலோகப்பிரகாசன். உலோகசாக்ஷி. திரிவிக்கிரமன். ஆதித் தியன். சூரியன். அம்சுமாலி. திவாகரன்என்க.

உருத்திரர்கள் பதினொருவராவார்- மாதேவன்- அரன்- உருத்திரன்- சங்கரன்- நீ லலோகிதன்- ஈசானன். விசையன்- வீமதேவன்- பவோற்பவன்- கபாலி- சௌமி யன்- என்க- அட்டவசுக்களாவார்- அனலன். அனிலன்- ஆபச்சைவன்- சோமன் தரன்- துருவன்- பிரத்தியூசன்- பிரபாசன்- என்க- [அஉ]

ஓரிலக்கமருக்கனுலகமே ※
லோரிலக்கமுடுபதிலோகமே ※
லோரிலக்கமுடுக்களுலகமே ※
லீரிலக்கம்புதனுலகேயுமே ※

எ - து முற்கூறியபத்தாம்வாயுவில் நூறுயிரம்யோசனையுயரத்தில்யாகமய மாயிருக்கிறவோராழியையு மேழிசைமயமாயிருக்கிற வேழுபரிகளையும் நாகங்க ளானவடத் தையும் அருணனெனுந்தேர்ப் பாகனையும் பெற்று அமிர்தத்திற்றோன் றித் திவ்வியமயமாயிருக்கிற தேரின்மேலொன்பதிநாயிரம் யோசனையுயரத்தையு

டையஆதித்தியர்களெழுந்தருளியிருந்து சிவனதுஆக்கினையினாற்றொழிலை நடத்தவேண்டிமகமேருவைவலமாகவருவர், ஆனால்ஆதித்தியர்பன்னிருவர்களுமெக்காலத்துமொவ்வொருவராகச்சஞ்சரிப்பர்களோவன்றிப் பன்னிருவருங்கூடிச்சஞ்சரிப்பர்களோவெனிற் சித்திரைமாத முதற் பன்னிரண்டுமாதமும்வைகர்த்தனர் முதற் பன்னிருவருமத்தேரிலேறிச்சஞ்சரிப்பர்களெனவறிக, அந்தஆதித்தர்பதத்துக்குமேலேயிருபத்தேழுநாளுக்கும்நாயகனாகியசோமனுலகும் நூறாயிரம்யோசனையுயரம்பொருந்தும், அந்தச்சோமனுலகுக்குமேலே நூறாயிரம்யோசனையுயரத்தில் நக்ஷத்திரமண்டலங்களுமிராசிமண்டலங்களும்பொருந்தும், அந்தநக்ஷத்திரமண்டலத்துமேலிரண்டுநூறாயிரம்யோசனையுயரத்திற்புதனுலகம்பொருந்தும் எ-று (அரு)

ஈரிலக்கமொண்சுக்கிரனெல்லைமே *
லீரிலக்கமங்காரகனெல்லைமே *
லீரிலக்கஞ்சுரர்குருவெல்லைமே *
லீரிலக்கஞ்சனியுலகேயுமே *

எ-று முற்கூறியபுதனுலகத்துக்குமே லிரண்டுநூறாயிரம்யோசனையுயரஞ்சுக்கிரனுலகம்பொருந்தும், அந்தச்சுக்கிரனுலகத்துக்குமேலிரண்டுநூறாயிரம்யோசனையுயரஞ்செவ்வாயுலகம்பொருந்தும், அந்தச்செவ்வாயினுலகத்துக்குமேலிரண்டுநூறாயிரம்யோசனையுயரந்தேவகுருவாகிய வியாழபகவானுலகம்பொருந்தும், அந்தக் குருவுலகத்துக்குமேலிரண்டு நூறாயிரம்யோசனையுயரம் சனிபகவானுலகம் பொருந்தும் எ-று (அச)

ஓரிலக்கமேழ்மாதவரூர்மிசை *
யோரிலக்கந்துருவனுலகுயர் *
பாரின்மீதுபதினைந்திலக்கமுஞ் *
சேருமேபுவலோகஞ்சிறக்குமே *

எ-று அந்தச் சனியுலகத்துக்குமேல்-அத்திரி-வசிட்டர்-புலத்தியர்- புலகர்பிருகு-அங்கிரா-மரீசிஆகஇந்தவேழுவிருடிகளுமிருக்குமுலகம்நூறாயிரம்யோசனையுயரத்தைப்பொருந்தும், அந்தவிருடிகள்பதத்துக்குமேலாகத்துருவபதம்நூறாயிரம்யோசனையுயரத்தைப்பொருந்தும், அந்தத்துருவன் பதினாலுலகங்களுடன் கூடியிருப்பன்-முற்கூறியநக்ஷத்திரங்களெல்லாமிந்தத்துருவனாதாரமாகிக்கட்டப்பட்டுக்கொண்டிருந்துசஞ்சரிக்கும்-அவற்குத் துருவனென்னும்பெயர்பெற்றது எக்கார

ணத்தாலென்னிற்சிவசத்தியதிட்டித்தலையாமற்பண்ணுங்கயாலென்வறிக, ஆகப்பூமிக்குமேல்சிறப்பினையுடைய புவலோகம்பதினைந்து நூறாயிரம்யோசனையுயரமென்றறிவாயாக எ - று (ஷரு)

அதற்குமேல்மரோசன்றும்புரி *
யதற்குநீளமசீதிபுமைந்துமா *
மதற்குமேன்மகலோகமதுதனில் *
வதிப்பர்மாதவராதிமரீசியும் *

எ - து அந்தப்புவலோகத்துக்குமேற்சுவர்க்கலோகம் எண்பத்தஞ்சு நூறாயிரம்யோசனையுயரத்தைப்பொருந்தும், அதற்கு-அரசன்இந்திரன்-அவனைத்தேவர்களுமிருடிகளுந்தேவஸ்திரிகளுஞ்சேவித்திருப்பர்கள், அதில்க்கினிட்டோமமுதலிய யாகங்களைப்புரிந்தவர்களுந்தீர்த்தயாத்திரை பண்ணினவர்களுந்தான்மவிரதமுதலியவற்றைப்பண்ணினவர்களுமந்தலோகத்தையடைந்திருந்துஅதிலுண்டான்போகங்கள்பொசித்துத்தொலைந்தவாறேபூலோகத்தின்கண்வந்து நல்லமானுடராய்ப்பிறப்பர்கள்-அந்தச்சுவர்க்கத்துக்குமேல்மகலோகம், அதிலிருப்பார்-மரீசி-மார்க்கண்டர்-சித்தர்கள்முதலாயினோர் எ - று (அசு)

உயரந்தானிருகோடியுற்றதற் *
குயருமேல்லைசெனதல்முன்னத *
முயருநாலிருகோடியென்றுன்னுக *
வுயருமாபிதிர்தேவருறைவரோ *

எ - து முற்கூறியமகலோகம் இரண்டுகோடியோசனையுயரம் பொருந்தும் அந்தமகலோகத்துக்குமேல்செனலோகம் எட்டுக்கோடியோசனையுயரம்பொருந்துமென்றறிவாயாக, அதில்-கவ்வியவாகனர்-அனலர்-சோமர்-யமர்-அரியமனர்-அக்கினிவாக்கர்-பெரக்கிஷ்-ஆசியபர்-சோமபா-என்றுசொல்லப்பட்ட பிதிர்தேவர் பதின்மரும்-சங்கரிஷணர் வாசுதேவர் பிரத்தியும்னர் நிருத்தர் இவர்நால்வரும் அத்தசியசாரும்மதன்முதலாயினோருமிருப்பர்கள் எ - று (அஎ)

அதற்குமேற்றவலோகமருந்தவ *
மதற்குள்வாழ்வர்சனகனையாதிய *

ரதற்குநீள்மூமாறிருகோடியர் *
மதற்குமேலயன்றேசமென்றுய்கவே *

எ-து அந்தச்சென்லோகத்துக்குமேற்றவலோகம் பன்னிரண்டுகோடியோசனையுயரத்தைப்பொருந்தும், அதிலிருப்பார்கள் - சனகர்-சனந்தர்-சநாதர்-சனற்குமாரர்-சங்கு-திறிசங்கு-இரிபு-இந்தவிருடிகளெழுவரும் அரிதாகியதவசுகளைப்பண்ணியதைவந்தடைந்திருப்பர்கள், அந்தத்தவலோகத்துக்குமேற்சத்தியலோகமென்றறிவாயாக. எ-று

(அஅ)

அதற்குநீள்மூமாறுடன்பத்துறு *
மதற்குமேலரிதேசமென்றுய்கவே *
யதற்குநீளநாற்கோடியென்றுய்கவே *
யதற்குமேற்சிவலோகமோராறுறும் *

எ-து அந்தச்சத்தியலோகம் பதினாறுகோடியோசனையுயரத்தைப்பொருந்தும், அதினடுவேபிரமாவிருப்பர்-கிழக்கேயிந்திரநீலநிறம்போன்றவடிவையுடையஇருக்குவேதமிருக்கும்-வடக்கேபடிகநிறத்தையுடைய எசுர்வேதமிருக்கும்-மேற்கேபதுமராகநிறம்போன்றசாமவேதமிருக்கும் - தெற்கேமைநிறம்போன்றஅதர்வணவேதமிருக்கும் - மற்றுமுள்ளவிதிகாசபுராணமீமாங்கிசைமுதலியசாத்திரங்களுஞ்சாவித்திரியும்அங்கேயிருப்பர்கள், அந்தப்பிரமலோகத்துக்குமேல் அரியினுடையலோகமென்றறிக, அதுநாலுகோடியோசனையெனவறிக, அதில்மாயனிருந்துப்பிராணிகளைப்பரிபாலனம் பண்ணிக்கொண்டிருப்பன், அதிலவனைவழிபட்டபத்தர்கள் அடைந்திருப்பர்கள், அந்தலோகத்துக்குமேற்சிவலோகம்ஆறுகோடியோசனையுயரத்தைப்பொருந்தும், அந்தச்சிவலோகத்தின்வளத்தைவிரித்துக்கூறுதற்கரிது-அதிற்பார்வதியாருடன்விட்டுணு-பிரமா-முதலியதேவர்கள் சேவிக்க-உருத்திரமூர்த்தியெழுந்தருளியிருப்பர். எ-று

(அகூ)

அதற்குமேலுறுமண்டகடாகமோய்ம் *
பதற்கனந்தனைக்கோடியென்றுய்கவே *
மதிக்கவைம்பதுகோடியும்வாய்த்தமை *
கதித்தவண்டமேலைக்கடாகத்தொடும் *

எ-து அந்தச்சிவலோகத்தின்மேல்நெருங்கியஅண்டகடாகத்தினுயரங்கோ

டியோசனையெனவறிக, ஆகப்பூமிக்குமேலுயர்ந்தவண்டகடாகம்வரையைம்பஅ கோடியோசனையுயரமெனமதிப்பாயாக எ - று அதன்வகைபுவலோகம்பதினை ந்துநூறாயிரம்,சுவலோகம்-எண்பத்தைந்நூறாயிரம்மகலோகம்-இரண்டுகோடி,செ னலோகம்-எட்டுக்கோடி, தவலோகம்-பன்னிரண்டுகோடி, சத்தியலோகம்பதினா றுகோடி, விட்டுணுலோகம் - நாலுகோடி, உருத்திரலோகம்-ஆறுகோடி, அண்ட கடாகங்கோடி ஆகவைம்பதுகோடியென்க. (௯௰)

கோபுரமிருக்குந்தலத்தையுணர்த்துகின்றார்.

வேறு.

உரைத்தவிதவுலகத்துளொப்பிலிருப்புரத்தினையு ✻
மெரித்தவிறையெரியாகியிருவருறுமிகலினையும் ✻
மரித்தருள்செயமலனெலாநந்தைமுதலெந்தினையுந் ✻
தரித்திணையைத்தரியாததலமுடிவிற்றயங்கியதே ✻

எ - று இத்தன்மையாகச்சொல்லியசிவலோகத்தின்கண் ஒப்பிலாதவனுந்தி ரிபுரத்தையெரித்தவிறைவனும் அழலுருவாகியயனுமரியுந்தம்மிற்பொருந்துமா வமாகியமாறுபாட்டைக்கெடுத்துஅவர்க்கருள்செய்யுநின்மலனுமானசிவபெருமா னுடையதிருக்கோயிலின்முடிவிடத்தில்நந்தைமுதலியவைந்துபசுக்களையுந்தாங்கி யொப்பற்றகோபுரமானதுவிளங்காநின்றது எ - று கோபுரம்பசுப்புரை (௯௧)

சிவலோகத்தின்றன்மையைப்பதினெட்டுச்செய்யுளாலுணர்த் துகின்றார்.

ஒப்பரியன்புரிவளமுமுறைவிரிவினடங்காது ✻
செப்பரியவதன்வளத்திற்சிறிதுரைப்பன்றிந்தைசெய்க ✻
வெப்பொருளுந்தானேயாயாவையினுந்தோயாத ✻
வப்பொருளையமுக்கொழியவகத்துணர்ந்தவருந்தவனே ✻

எ - று எல்லாப்பொருள்களுந்தானேயாகியவற்றிற்றோய்தலைச்சிவத்தைமு ம்மலவழுக்குநீங்கவுள்ளத்திலுணர்ந்தவருந்தவனே, யொப்புச்சொல்லுதற்கருமை யானவவனதுசிவலோகத்தின்வளங்களும்விரித்துச்சொல்லினும்அடங்காது, ஆயி

னுஞ்சொல்லுதற்கரியவச்சிவலோகத்துவள்ங்களுட்சிறிதுசொல்லு வோஞ்சிந்தை செய்வாயாக. எ - று உம்மைவிகாரத்தாற்றொக்கது. (கஉ

வேறு.

இரவியைநிகர்பலவிரதமுமொருபாலெழின்மடவரலியரியலிசைமொ ருபாற், பரதமுமுறைமுறைபயிலுநவொருபாற்படகமுமுதலியபறையொலி யொருபான், மருமலர்விரவியமரநிரையொருபான்மறைபயில்விரதியர்வளவ னமொருபாற், புரிவரைவிரவியபுரிசைகள்பலபாற்பொருவிலிவர்விலிம ருவியபுரமே. *

எ - து ஒப்பில்லாதவன்மேருவைவில்லாகவுடையவனெழுந்தருளியசிவலோ கத்திற்சூரியப்பிரகாசம்போன்றபலதேர்களொருபாலிலும், அழகியவரம்பையர்க ள்பாடுமியலிசைகளொருபாலிலும், பரதவிதிப்படி நடனஞ்செய்யுமரம்பையர்க ளொருபாலிலுங், தம்பட்டமுதலானவாச்சியத்தொலியொருபாலிலும் மணமருவி யமலர்களையுடையமரத்திரளொழுங்கொருபாலிலும், வேதங்களையோதும்விரதியர் நிறைந்தவளத்தையுடையவனங்களொருபாலிலு, மலையையொத்துவிளங்கியமதி ல்கள். பலபாலிலும் விளங்கின. எ - று (கங)

நிலையொருபதுசதநெடுமடமொருபானெடியனகொடிமணிநிகழொலி யொருபால், விலையிலநவமணிவிரிதிணையொருபால்விழைவினர்விழைவன விளைநிதியொருபா, லலைமலிபுனனதியணியுறலொருபாலளிமுரல்குவளைக ளலர்சுனையொருபாற், பொலன்முடியமரர்கள்பொதுளியதொருபாற்புலியு ரியவரயினன்மருவியபுரமே. *

எ - று புலித்தோலுடுத்தவரையினனெழுந்தருளிய சிவலோகத்திலுன்னத மானவாயிரக்கான்மண்டப மொருபாலிலும், நீண்ட கொடியின்கட்டும்விளங்கி யமணியோசையொருபாலிலும், விலையில்லாதநவமணிகுயிற்றியதிண்ணைகளொரு பாலிலும், விருப்பினையுடையவர்கள்விரும்புவனவாகிய நவமணிகணிறைந்தசங்க நிதிபதுமநிதிகளொருபாலிலும், அலைமலிந்தபுனலையுடையநதியணிகளொருபாலி லும், வண்டுகண்முழங்கு நீலோற்பலம்விரிந்ததடாகங்களொருபாலிலும், பொன் முடிசூடியதேவர்கள்கூடுமிடங்களொருபாலிலும்-விளங்கின. எ - று (கச)

புதுவிரைமலர்கொடுபுனைமனையொருபாற்பொறிமணியணைகொடுபுனை
மனையொருபான், மதியெனவிதிவழிவனைமனையொருபான்மரகதவொளியி
னவனைமனையொருபாற், கதிரவனெனவிரிகடிமனையொருபாற்கனககன்மய
முறுகனமனையொருபாற், சதிவழிநடமிடுநகைமைய னிமையோர்தலைமைய
னிலவியதனைநிகர்தலமே. *

எ - று. தாளவொத்தின்படிநடனஞ்செய்யும்பெருமையையுடையவனுந் தேவர்கடேவனுமாகிய சிவபெருமானெழுந்தருளியதனைக்குத்தானேயொப்பாகிய சிவலோகத்தின்கண்மணத்தங்கியமலர்களாலலங்கரிக்கப்பட்டமாளிகைகளொருபாலினுந், தீப்பொறிபோன்றமாணிக்கங்களாலலங்கரிக்கப்பட்டமாளிகைகளொருபாலினுஞ், சிற்பநூல்விதிப்படிசெய்துசந்திரனைப்போன்றமாளிகைகளொருபாலினும் ஒளியையுடையமரகதப்பச்சையாலலங்கரிக்கப்பட்டமாளிகைகளொருபாலினுஞ், சூரியப்பிரகாசம்போன்றகாவலையுடையமாளிகைகளொருபாலினும்,மாற்றுயர்ந்தபொன்மயமானபெரியமாளிகைகளொருபாலினும், விளங்கின எ - று ()

வேறு

ஒருபாலரிபோலுடலார்சிலரே *
யொருபாலவரோபுலிபோலுடையா *
ரொருபாலுடையார்கரிபோலுடலே *
யொருபாற்பரிபோலவரோவுடையார் *

எ- று. அச்சிவலோகத்தின் கணொருபாற் சிங்கம் போன்ற வுருவத்தினையுடையசிலரேயொருபாற்புலியைப்போலவும் ஒருபால்யானையைப்போல வுருவத்தினையுடையவரோயொருபாலிற்குதிரையைப்போலவும்விளங்கினர். எ - று (கசள)

ஒருபாலுடலானெனவேயுடையா *
ரொருபாலுழைபோலவரேயுடையா *
ரொருபான்மயில்போலுடையார்சிலரே *
யொருபாலவரேகுயில்போலுடையார் *

எ- று அச்சிவலோகத்தின்கணொருபா லானைப்போல வுருவத்தையுடையவரேயொருபான்மானைப்போலவுருவத்தையுடையாராயு மொருபான்மயில்போலுருவத்தையுடையசிலரே யொருபாற் குயில்போ லுருவத்தை யுடையாராயும் விளங்கினர். எ- று.

(கஎ)

சிலரோவொருவாண்முகமேசெறிவார் *
சிலரோபலமாமுகமேசெறிவார் *
சிலரோவொருதாளுடனேசெறிவார் *
சிலரோபலதாளுடனேசெறிவார் *

எ- று. அச்சிவலோகத்திற்சிலர்களொளிபொருந்தியவொருமுகங்களையேபொருந்துவர்கள். சிலர்கள்பலமுகங்களையே பொருந்துவர்கள். சிலர்கள் ஒருகாலுடனேபொருந்துவர்கள். சிலர்கள்பலகாலுடனே பொருந்து வர்கள். எ- று. ஏகாரங்கள் - இசை நிறை. (௧௮)

சிலரோசெவியும்பெரிதேசெறிவார் *
சிலர்பாலஃதுமிலதேசிறிதுந் *
சிலரோபலவாமுருவஞ்செறிவார் *
சிலர்தாமியல்பாமுருவஞ்செறிவார் *

எ- று. சிலர்கள்பெரியகாதுகளையும் பொருந்துவர்கள். சிலரிடத்துச்சிறிதாயினுமக்காதுமிலதாயிற்று சிலர்கள்பலநிறம்பெறு முருவங்களைப் பொருந்துவர்கள் சிலர்களியல்பான வுருவங்களைப்பொருந்துவர்கள். எ- று. செவியுமென்னுமும்மைமற்றவங்கங்களுமென்க. (௧௯)

விதமேபலவேவிளையாடலினு *
விதமோவிதமோவிவர்பாலிவையு *
மதிமேதையரோயறியாதவரோ *
பதமேபணிவார்பரமேசனையே *

எ- று. பேரறிவினரா யொருகாலத்துங் கெடாதவராய்ப் பரமேசனது பதத்தைப்பணிபவராதலிற்பலவிதமான விவ்வுருவங்களியாவும் அப்பரமேசனதுதிருவிளையாட்டினுள்ளன்மைகட்கெல்லாமேலானநன்மைகளாகவே யச்சிவலோகத்துள்ளாரிடத்துப்பொருந்தும். எ- று. (௨0)

திணைமேயுடையார்சிவனேவியதே *
யெணைமேயுடையாரிடரேதுமிலார் *
கணைமேவிவரோகளிசேதுமிலார் *
நணைமேன்மையரோநலரோநலரோ *

எ-து. பத்திவயிராக்கியத்தினுறுதியையுடையார் சிவபெருமானருளியபணிவி டையினிடத்தேகருத்தினையுடையார் மலநோய்சற்றுமில்லாதவர். ஒருகுற்றமுமில் லாதவர். யாவருஞ்சேரவிரும்பு மேன்மையினையுடையார். மிகுந்தநலத்தினையுடை யார்இவரோகணங்களாவாரச்சிவலோகத்தின்கண். எ-று. (௱௧)

படிசேர்பலமேனியரோபடருஞ் *
சடைமாமுடியார்தருநீறுடையார் *
புடையேபுயமுமொருநாலுடையா *
ரடியாரவரோகணநாயகரோ *

எ-து. நற்குணமமைந்தபலதிருவுருவங்களையுடையார். படர்ந்தபெரியசடைமு டியினையுடையார். தருதியான திருநீற்றையுடையார். பக்கத்திற் சதுர்ப்புயங்களையு டையார். அடிமைத்தன்மையையுடையாரவரேயச்சிவலோகத்திற்கணநாதராய்விள ங்கினர். எ-று. (௱௨)

உடையார்விழியுமொருமூன்றினையு *
முடையார்புலியினுரியும்மரையி *
னுடையார்மழுவுமொளிர்வேலினையு *
மடியாரவரோகணநாயகரோ *

எ-து. மூன்றுகண்களையுமுடையார். அரையிற்புலித்தோலினையுமுடையார். மழு வினையுமொளிர்கின்றவேலினையுமுடையாரவரே யடியாராகியுங் கணநாதராகியுமச் சிவலோகத்துவிளங்கினர். எ-று. (௱௩)

வேறு

ஆதியுமந்தமுமிலனவனமரு *
மோதியும்வேதமுமுணர்வரும்பெருமையன் *
போதகன்வேதகன்பொருவிலனிருமலன் *
பாதபங்கயமுறுமவர்பலம்பகர்வமே *

எ-து. முதலுமீறுமில்லாதவன் தேவருமெவ்வகைநூலும் வேதமுமறிதற்கரு மையானபெருமையினையுடையன் தன்னடியருக்குத் தோன்றாத் துணையாயிருந்து ள்ளத்துணர்த்தும் போதகன் அவ்வடியர்களை மலத்தினின்றும் வேறுபடுத்துவோ ன்ஒப்பில்லாதவன்மலரகிதன் அவனதுபாததாமரையைச் சிந்திக்கும்பெரியவரது

பலத்தினைச்சொல்லுவாங்கேட்பாயாக. எ-று. (ாச)

உருவினுலுவமையுமொருவினார்மருவினர் *
திருவினுருருவினர்தெரிவைமார்செறியவே *
முரவமேமுதலவாமழலையுமுரலவே *
யிரவியாயிரமுநேரிரதமேசரதமே *

எ-று. சிவபெருமானதுபாதத்தைச்சிந்திக்குஞ் சிவகணங்கள் தங்களுருவத்தினுலொப்பற்றவராகித்திருமகளைப்போலு மழகினையுடையராகியதெய்வப்பெண்கள்தங்களிடத்துநெருங்கிப்பணிவிடைகள்செய்யவும் முரவமுதலிய வாச்சியங்கள் முழங்கவும் ஆயிரஞ்சூரியவுதையப்பிரகாசம்போன்றதேரினிடத்துமெய்மையாகவேமருவிவாழ்ந்தனர். எ-று. மழலை- ஆகுபெயர். (ாரு)

கொத்துலாங்குழலினர்குழலினேர்மொழியினர் *
முத்துலாமுறுவலார்முகையுநேர்முலையினர் *
சித்தமுங்கவரவேசிலரவர்செயலுகந் *
தெத்தினுற்குறைவெமக்கெனவுமங்கிசைவரே *

எ-று. பூங்கொத்துலவுங் கூந்தலினை யுடையார். குழல்போலு மொழியினையுடையார். முத்தைப்போலொளிவிடு நகையினை யுடையார். அரும்புபோன்றமுலையினையுடையாராகியசிலவரம்பையர்களது சித்தத்தையுங் கவர்தலினு லச்செயலைவிரும்பியெமக்கொன்றினுலுங் குறைவில்லை யென்று அவர்கள்சொல்லவும் அச்சிவலோகத்துள்ளார் அங்ஙனம்பொருந்துவர். எ-று. (ாசு)

ஓதுவார்வேதமுஞ்சிலருணாக்குறுபய *
னீதெனுவேதெனுவேகமாய்மோகமுங் *
காதுவார்காதுவார்குழையினன்கழலுனும் *
போதமேபூதியாய்வேறுனார்போகமே *

எ-று காதின்கணொள்ளியகுண்டலத்தையுடையசிவபெருமானதுபாதங்களைக்கருதுமறிவேயனுபூதியாய்மற்றைப்போகங்களையுண்ணுதவர்தனித்திருந்துமோகங்களைக்கெடுப்பார்வேதத்தினும்பொருந்தும்பயன்யாதெனக்கேட்குஞ்சிலர்விணுவிற்குப்பொருந்தும்பயனீதென்றும்விடைகூறுவார் எ-று (ாஎ)

பளிங்குமயமும்பெற வொள்ளியநவமணிகளாலும்பொன்னினாலுந் தோரணமாதி யானவெல்லாவங்கங்களையுஞ்செய்திடல்தானேயமைந்ததிருக்கோயில்விளங்கிற்ற தனழகுசொல்லுமளவன்று. எ - று (௱௰)

சுத்தவொளிப்படிகமயந் துளங்குமிளம்பிறைவிளங்கச்சூடிச்சூடு *
மத்தமலர்ச்சடைமுடியர்வரமுடையர்திரிநயனம்வாய்த்துளார்தங் *
கைத்தலங்களொருநான்கிற்கனன்மழுவுந்திரிசிகையுங்கதையும்வாளும் *
வைத்துடையகணநாதர்வரதனுக்குக்குணதிசைச்சன்னிதியின்வாய்த்தார் *

எ-று அச்சிவலோகத்தெழுந்தருளும்வரதனுக்குக் கீழ்த்திசைச்சன்னிதியின் கட்பரிசுத்தமானவொளியினையுடையபளிங்குமயமாய்விளங்கு மி ள ம் பி றை யை யொளிவிடச்சூடிப்பூமத்தமலரையணிந்தசடைமுடியர், வரங்கொடுக்குந்தகைமை யர் மூன்றுகண்களைப்பெற்றவர் திருக்கரநான்கினுங்கனல்போன்ற மழுவையுஞ்சூ லத்தையுந்தண்டத்தையும்வாளினையுந்தரித்தவராகியகணநாதர்கள்வாழ்ந் து ப ணி செய்தனர் எ - று (௱௰க)

பரமசிவமயமுணர்ந்தபாசுபதர்சைவர்காபாலர்பான்மை *
விரதியர்மெய்த்தவரொன்னுமவர்தாமுமேலுரைத்தமேனிமேவி *
விரவுவரத்திசைதன்னில்வியன்கமலத்தயன்றென்பால்விரவமெய்மமைச் *
சரசுவதிமுனிவரர்க்குத்தலைமையவங்கிரரிவருஞ்சார்வரங்கே *

எ - று மேலானசிவபெருமான் றன்மையையுணர்ந்த பாசுபதருஞ்சைவருங் காபாலரும் முறைமையினையுடையமாவிரதியரும்மெய்ம்மையானதவத்தினையுடை யருமானவவர்களுமுன்சொன்ன சொரூபத்தைப்பெற்று அந்தக்கீழ்த்திசைவாயிற் சன்னிதியிலிருந்துபணிசெய்வர், தென்றிசைவாயிற்சன்னிதியிற்பெரியதாமரையில் வாழும் பிரமாவிருந்துபணிசெய்யவவனுடனுண்மைச் சரசுவதியுமுனிவரர்க்குட்ட லைமையானவங்கிராவுமத்திசையிலிருந்துபணிசெய்வர் எ - று (௱௰உ)

செப்பியவத்தென்றிசையிற்கபிலாதிசித்தருமோசெறிவர்யோக *
நற்பரநற்சனகசனந்தரொழுவாயெழுவருமெய்த்தவருஞ்சார்வார் *
மெய்ப்பொருளுக்கொப்பாகிவேந்தருமாய்மாயைக்குவினையைவென்று *
பொய்ப்பொருளைமதியாதபூதேசராதியர்மேல்புடையிற்சார்வார் *

எ - று சொல்லியவத்தென்றிசையிற்கபிலராதியானசித்தர்களுங்கூடிப்பணி செயவரஃதன்றிநன்மையானதற்பரயோகத்தையுடைய சனகர்சனந்தராதியான

சத்தவிருடிகளுமுண்மையானதவத்தினரும்பணிசெய்வர். சாரூபத்தைப்பெறலாம் மெய்ம்மைப்பொருளுக்கொப்பாகி மாயாவினோதங்கட்காசாகியிருவினையொப்பவந்துபொய்யாகியவுலகத்தைமதியாத பூதங்கட்கதிபரானவர்மேற்றிசைவாயிற்சந்நிதியிற்சார்ந்துபணிசெய்வர் எ - று (௱௰௭)

அத்திசையிற்பிரமிதனையாதியரேழனையினருமவர்களோடே *
பத்திரையைப்பார்ப்பதியையெழுவாயவெண்மருமேபடைக்கவல்ல *
சத்திதரிக்குஞ்சண்டப்பிரசண்டவயிரவர்கடாமேமேலாரு *
முத்தரத்திற்றிருமாலுமுருத்திரரும்பருதியருமுள்ளாரன்றே *

எ - து அந்தமேற்றிசையிற்பிரமியாதியான சத்தமாதாக்களுமவர்களுடன் பத்திரைபார்ப்பதியாதியானவட்டகன்னியர்களு மெய்ப்பொருளும்படைக்கவல்லசத்தியையுடைய சண்டப்பிரசண்டவயிரவராகிய மேலோரும்பணிசெய்வர். வடதிசைவாயிற்சன்னிதியிற் றிருமாலும், பதினொருகோடி யுருத்திரரும், பன்னிரண்டுகோடியாதித்தரும்பணிசெய்வர் எ - று (௱௰௮)

அத்திசையிலெண்வசுக்களாமகளிர்காந்திருவியக்கரல்லாச் *
சித்தரியல்வித்தைதரர்பிறப்புடையருய்யாழ்ச்சேடரொன்று *
மித்தொகையோர்திசைவாயின்றுமுளரிவ்வியனையரிறைவன்றன்னை *
வித்தகனையுளத்திருத்திவிட்டாருந்தொட்டதுயர்வேட்கையெல்லாம் *

எ - து அவ்வடதிசையிலட்டவசுக்களுந்தெய்வமகளிருங்கந்திருவர்களும்யிக்கர்களுமவர்களல்லாத சித்தர்களுமல்லொழுக்கம்பெற்றவித்தியாதரர்களுநற்பிறப்பினையுடையருய்யகருமழல்போன்றசேடருமாகிய வித்தொகுதியரும்பொருந்திப்பணிசெய்வர். அவரன்றியொப்பில்லாதவனை மெய்ப்பொருட்குரிமையினை ஞானமூர்த்தியையுள்ளத்தின் கண்வைத்துத்தொன்றுதொட்டு வந்தசஞ்சிதமுதலிய துன்பங்களாசைகளெல்லாம்விட்டபெரியவருமவ்விடத்துளர் எ - று (௱௰௯)

சிவலோகத்திற் சிவபெருமானெழுந்தருளி யிருக்கும்
தன்மையை ஐந்துசெய்யுளா லுணர்த்துகின்றார்

இத்தகையோர்தொழுதேத்தவாயிரக்கான்மண்டபத்துவியிலையிலீசன்
முத்தனொருமுதலாகிமூவுலகாய்த்தழைத்தெழுந்துமுவாமூர்த்தி *

யத்தனரனணிகிளருமரிபரித்தவாதனத்நினலரின்மீதே *
வித்தகவேதகியுடனும்வீற்றிருப்பன்வினைப்பயனைவிளைக்கவேதான் *

எ - று இப்பண்பினையுடையோர் வணங்கித்துதிக்கும்படி யாயிரக்கான்மண்டபத்து நடுவிலழகினையுடைய சிங்கங்கடாங்குமாசனத்தாயிரமிதழை யுடைய தாமரைமலரின்மேன், முத்தனுகியுமொப்பற்றமுதன்மையாய் மூன்றுலகமாய்ந்தழைந்தெழுந்துகெடாத மூர்த்தியத்தனுகியுமரனுகியும் விளங்கிய வொப்பற்றபரமேசனடியவர்ப்பக்குவப்படுத்துந்தன்மையையுடைய வேதகியாகியபெருமாட்டியுடனுமெழுந்தருளியிருப்பன் எவ்வுயிருமிருவினைப்பயனையனுபவிக்க எ - று ()

கண்டனுக்குக்காட்டாயகதிருதையமொருகோடிகலந்ததென்ன *
வெண்டனுக்குக்காட்டாயவெழிலுருவமிசைந்திலங்கவிளக்குநீரும் *
விண்டனுக்குவிளக்காயவெண்மதியும்விரவுசடைமுடிதன்மீதே *
பண்டனுக்குப்பாடல்பயில்பறவைபுறமிதழிமுதற்பரிக்கபாங்கால் *

எ - று கட்பொறிக்குவிடையமாகியவுருவமனைத்தினையுங்காட்டுங்கதிரவனொருங்கொருகோடி கலந்துதையமானாற் போலமேலுமேலுஞ் சொல்லுமெண்களுக்கெடுத்துக்காட்டாகிய வழகினையுடையதிருவுருவம் பொருத்தமாய் விளங்கவும்மணமாகியகங்கையுமாகாய விளக்காகியவெள்ளைமதியுங் கலந்த சடைமுடிதன்மேற்பண்களுக்கொத்தவிசைப்பாட்டைப் பாடாநின்றவண்டுகள்பொருந்துங்கொன்றைமுதலிய மலர்களைப்பாங்குடன்றரிக்கவும் எ - று (௬௰எ)

சுடர்மூன்றுங்கண்மூன்றாய்த்துடர்ந்திலங்கக்குழைதோடுதுலங்கக்காதி, *
லிடர்மூன்றுமிரித்தருளுமிளமுறுவன்முகமலரினிலங்கவெய்திற் *
கடலுமிழும்விடமிடற்றிற்கலந்திலங்கமறிமழுவுங்கையில்வைத்த *
வடியவடைவாரிடரகலவமைத்தகரம்வரதகரமமரவாங்கே *

எ - று பருதிமதிதீயாகியமுச்சுடருமுக்கண்ணுயமைந்து விளங்கவுந்திருக்காதிற்குண்டலமுந்தோடும்விளங்கவுஞ்சஞ்சிதம்பிராரத்தமாகாமியமாகிய மூவகைத்துயரத்தையுங்கெடுத்தருளுமிளமையான புன்சிரிப்புத், திருமுகத் தாமரையின் விளங்கவுங்கொடிதாய்க்கடலினின்றெழுமாலாலவிடந்திருக்கண்டத்திற் சேர்ந்துவிளங்கவுந்திருக்கரத்தின்மானு மழுவுமடியார்களுடைய பிறவிப்பிணி நீங்கவமைத்தவபையமும் வரதமும் பொருந்தவும் எ - று (௬௰அ),

முதலிய பசுக்கள்விரும்பியிருக்கும், அவைகளைச்சிவபெருமான் சிற்றுயிர்க்கிரங்கிப்பூமியிற்பிறக்கும்படிசெய்த லாலழகினையுடையபாற்கடலிற்பிறந்திவ் வுலகத்தில் வாழ்வார்க்குப் பரமன ருளினபடி துன்பங்களைக் கெடுத்துவரங் களைக்கொடுக்கும் எ - று (௱உக)

நந்தைசுபத்திரைசுரபிநற்சுசிலைசுமனையெனநவின்றநாம *
மைந்நிறுக்குமறிகபிறங்காபிலமேகரியவுருவணிகொள்வெண்மை *
சுந்தரந்தாமிரமேதாமிரமேயெனத்துணிந்துநாமஞ்சொல்லி *
வந்தனைசெய்தவற்றுதித்தவிருமூன்றுமாட்டிடுகவரதற்கென்றும் *

எ - று மேற்கூறிய பசுக்களைந்துக்கு நந்தையென்றுஞ் சுபத்திரையென்றுஞ் சுரபியென்று நல்லசுசீலையென்றுஞ் சுமனையென்றுநாமத்தை யறிவாயாகஅவற்றுள் நந்தை கபிலநிறம் சுபத்திரை கருமைநிறம் சுரபி அழகியவெண்மை நிறம் சுசீலை சுந்தரமானதாமிரநிறம் சுமனை தாமிரநிறம் என்றுநிச்சயித்து அதனாதருமங்களைச்சொல்லிப்பூசைசெய்தவற்றிலுண்டான பால்-தயிர்-நெய்-கோமயம்-கோசலம் கோரோசனையாகியவாறு பொருளையும் வரதனாகிய சிவபெருமானுக்கென்றுமபிடேகஞ்செய்க எ - று [௱உஉ]

வேதாவுங்கரியவனுமாவினதுகோட்டடியின் விளங்கிவாழ்வர் *
கோதாவிமுதற்றீர்த்தங்கோட்டிறுதிச்சராசரமுங்கூடிநிற்கு *
மீதானசிரத்தமலன்விமலையதனடுநெற்றிவிசாகனுசி *
மீதானந்தவிலதனுண்ணுசிதவிறுகேசர்விளங்குவாரோ *

எ - று பிரமனுந்திருமாலுமப் பசுக்களினதுகொம்பினதடியின் விளங்கிவாழ்வர் கோதாவிரிமுதலிய தீர்த்தங்களுஞ்சரவசரவுயிர்களுங்கொம்புநுனியிற்கூடிநிற்கும், மேலானசிரசிற்சிவபெருமானு நெற்றிநடுவிற் சத்தியுமூக்குநுனியிற் சண்முகனு மூக்குக்குளிந்திரன் முதலிய தேவர்களும்விளங்கிவாழ்வர் எ - று (௱உ௩)

ஆசகலவிருகன்னநாப்புணச்சுவினிதேவரமர்ந்துவாழ்வர் *
தேசுதுடையபருதிமதியனத்திற்றந்தத்திற்செறியும்வாயு *
வோசையுறுநாவதனில்வருணனுமைமகளோங்கூங்காரநெஞ்சி *
னேசமுறுமயமனியக்கர்கெண்டதலத்தெந்நாளுநிலவுவாரோ *

எ - று குற்றநீங்கும்படி யிரண்டுகன்னநடுவிலச் சுவினிதேவர்கள் விரும்பி வாழ்வார்கள் இரண்டுகண்களிடத்தொளியினையுடைய பருதியுமதியுந் தந்தத்தில்

வாயுவும்பொருந்தும் ஒலிபொருந்துநாவில் வருணனு முன்னதமாகிய வூங்காரத்தையுடைய நெஞ்சிற்கலைமகளுமணிகளினிடத்திய மனுமியக் கருமெக்காலமுமன்புடன்வாழ்வர் எ - று [ாஉச]

ஓட்டத்திலுதையாத்தமனசந்தியிவையுறையுமுறைவன்கண்டத் *
தீட்டுடையவிந்திரனேயிமிலிருப்பாருக்கொனவியம்புந்தேவர் *
வாட்டமிலாச்சாத்தியரோவாழ்வார்களுரமதனிலனிலவாயு *
நீட்டியதாளொருநான்கின்மருத்தென்பர்முழந்தாளினிலவுவாரே *

எ - து உதட்டிலுதையாத்தமனத்துக்குரிய சந்திதேவதைதங்கும், கழுத்திற்பெருமையுடையவிந்திரனிருப்பன் முரிப்பிலருக்கதேவரிருப்பர் மார்பிற்சோர்வில்லாத சாத்தியர்வாழ்வர் நீட்டாநின்றநான்குகாலிலனிலனுகியவாயுவு, முழந்தாளின்மருத்துவரும், வாழ்வர் எ - று [ாஉரு]

குரத்தினுநிப்பன்னகரோகுடிகொள்வர்காந்திருவர்குரத்திறைப்ப *
ணிருப்பாரமகளிர்கணமிவரெல்லாமேற்குரத்தின்முதுகிநெல்லை *
யுருத்திரரோசந்துதொறுமுறைவார்கள்வசுதேவர்பிதிர்க்களோங்கிப் *
பருத்தவளைப்பலகைதன்னிற்பகத்துறைவரொழுமாதர்பரிவுகூர்ந்தே *

எ - து காற்குளம்புநுனியில்நாகர்கள் குடியாகவாழ்வர் அக்குளம்பு நடுவிற்கந்திருவர்தங்குவர் அக்குளம்பின்மேலிடத்திலரம்பையரும், முதுகிடத்திலுருத்திரருஞ் சந்துகடோறுமட்டவசுக்களுந்தங்குவர் உயர்ந்துபருத் தவளைப்பரப்பிற்பிதிர்தேவதைகளும், யோனியிற்சத்தமாதாக்களுமின்பமிகுந்துவாழ்வர் எ - று [ாஉசு]

திருமகளேயபானத்திறுகேசாடிவாலிற்சிறந்துவாழ்வ *
ரிரவியொளிவாலின்மயிரிலங்கியிடுஞ்சுரநதிதானேயுநீரின் *
வரமுடையயமுனைமயமதுதன்னின்மாதவர்களுரோமம்வாழ்வ *
ருரமுடையபூதேவியுதரத்திற்பயோதரத்தினுதநியெல்லாம் *

எ - து குதமாகியவபானத்திற்றிருமகளுமடிவாலினுகாதிபருஞ் சிறந்துவாழ்வர் ஒளியுடையவாலுரோமத்திலாதித்தன்விளங்கியிருப்பன் கோசலத்திலாகாயகங்கைபொருந்துங்கோமயத்திற்பெருமையுடையயமுனாநதிபொருநதும் உரோமங்களில்மாதவர்கள் வாழ்வர் வயிற்றிலாற்றலுடைய பூமிதேவியுங் கொங்கையிலெல்லாக்கடலும்பொருந்தும் எ - று [ாஉஎ]

சடரத்நினிதையத்திற்றழைத்தமுகமதுதன்னிற் றங்குமங்கி *
கடனுடனேகாருகபத்தியமேழுவாயொருமூன்றுங்கடினவெம்பி *
னுடலுறுசுக்கிலந்தனினுமுறைபுமகவினையனைத்துமுறுப்புத்தோறுந் *
திடமுறுகற்புடைமடவார்செறிந்திருப்பாரிம்முறையைச்சிந்தைசெய்தே *

எ- து. வயிற்றினுமிதையத்தினுஞ்செழுமையாகியமுகத்தினுமுறைமையானே காருகபத்தியமாகவனீயஞ்தெக்கணக்கினியமாகிய மூன்றுஅக்கினியும்பொருந்துங் கடினமான வெலும்பினிடத்து முடலுட்பொருந்திய சுக்கிலத்தினிடத்தும் யாகத் தொழின்முழுமையும்பொருந்துமெல்லாவங்கங்கடோறுங்கலங்காநிலைக்கற்புடை மடவார்பொருந்தியிருப்பர். ஆதலா லிம்முறைமையைத் தியானஞ்செய்து. எ- று (ஙஉஅ)

பசுக்களையோம்புதலோம்பாமையால் வருநன்மைதீமைகளையேழு
செய்யுளா லுணர்த்துகின்றார்

வேறு

ஆக்கடனையியக்கிடினு மார்வங்கூர்ந்தே யங்கையினிற்பலாசந்தண்டா லேமெல்ல, வோக்கியுடற்கொறுப்பறவே யொற்றியொற்றிக்கெச்சநெறிகெ ச்சநெறியென்றேயோதும், வாக்கியரேசிவபுரியின்வரத்தைபுற்றுமலரிரதத் தமலனெனமகிழ்ந்துவாழ்வர், தீக்குழியைச்செறிவார்கள் கருணையின்றிச் சினத்ததட்டியடித்தொறுக்குஞ்சிறியார்தாமே. *

எ- து. அப்பசுக்களைமேய்க்கினுமாசைமிகுந்தழகிய கையிலிருக்கும்புனமுருக் கங்கோலால்வருத்தநீங்கமெல்ல வொற்றியொற்றிப் பொருந்தாமலெறிந்துகெச்ச நெறிகெச்சநெறியென்றுசொல்லுமேன்மைச்சொல்லையுடையவரே சிவலோகத்தி ற்சிறப்பினைப்பொருந்திமலராநிறைந்தவிமானத்துநின்மலனைப்போலமகிழ்ச்சியுற் றுவாழ்வார்கள். அஃதன்றியிரக்கமில்லாமற்கோபித்துவன்சொல்லாலதட்டியடித் துவருத்துமறிவில்லாதசிறியார்தீக்குழியாகியநரகத்திற்றங்குவர்கள். எ- று. ()

வேறு

அரனுதியொருமூவரமரேசன்மருமானு *
மொருவாமலுறைவார்களுமையாதிமடவாரு *
மரிதாயமறையோர்களுடலாவினுடலார்வ *
மொருவாதுவழிபாடுபுரிவார்களுயர்வாரே *

எ- து. அரன்- அரி- அயன்- ஆகியமூவருமிந்திரனு மவன்வழிதோன்றுமற்றைத்தேவருமுமாதேவியாதியானபெண்களும் அருமையானவந்தணர்களும் அப்பசுவினுடலின்கணீங்காமல்வாசஞ்செய்வார்கள், ஆதலாலப்பசுவினுடலிலாசையாணீங்காதுபூசைசெய்வோர்கள்உயர்வாயிருப்பர்கள். எ- று. (௱௩௰)

பரியாதுபகையாளர்பணியாதுபழியாள *
ரெரிவாயநிரயவீழுமெளியார்களரியார்கள் *
பரிவார்கள்பணிவார்கள்பதமீதுபரமான *
வரிதாயசிவலோகமெளிதாகவடைவாரே *

எ- து. அப்பசுக்களை யோம்பாமலுந் தொழாமலு மிருக்கிற பழியாளராகியபகையாளர்கள் தீவாய்நரகத்தில்விழுதற்கெளியராகியு மந்நரகத்தினின்றுங் கரையேறுதற்கரியராகியும்பொருந்துவர். அவற்றையோம்புவார்களும்பாதங்களிற்றொழுவார்களுமேலானவருமையாகிய சிவலோகத்தை யெளிதாகப்பொருந்துவர்கள் எ- று. (௱௩௧)

வேறு

வலஞ்செய்தாக்களைவாழ்த்திவணங்கியே *
நலஞ்செய்தார்புல்லுநாவிற்கொடுத்துடல் *
விலங்கைவிட்டும்விமலன்புரத்துளே *
யிலங்கிச்சுற்றத்தொடுமிருப்பார்களே *

எ- து. அப்பசுக்கட்குப்புற்களைநாவிற்கொடுத்து வலஞ்செய்துவாழ்த்திவணங்கிப்பூசைசெய்தோர்யாக்கைகட்குவிலங்காகியவிருவினைகளைநீங்கியு மச்சிவபெருமானுலகத்திற்சுற்றத்தாரோடும் விளங்கியிருப்பர்கள். எ- று. [௱௩௨]

பருகினார்கபிலைத்திகழ்பாலினை *
யெரிவரோயெரிவாய்நிரயத்தெழிற் *
பரமனுக்கபிடேகமும்பண்ணினர் *
விரவுவார்கள்விமலன்புரத்துளே *

எ து. அப்பசுக்களினது விளங்கியபாலினைப் பொசித்தோர் தீவாய்நரகத்தெரிவார்கள். அப்பாலையழகாகியசிவபெருமானுக்கபிடேகமுஞ் செய்தோர்களந்நிருமலனுலகத்தினுட்சேர்வார்கள். எ- று. [௱௩௩]

தீண்டப்பாவங்கடேய்ந்தறுநல்வினை
யீண்டும்புற்றனை யீயவிரங்கியே
வேண்டுநற்பொருள்வேறிலையானலாற்
காண்டகைப்பொருடானுங்கருதிலே

எ- து. அப்பசுக்களைக்கையாற்றீண்டினவுட னெல்லாப்பாவங்களுங்குறைந்து கெடும், மனதிரங்கிப்புல்லைக்கொடுத்தவுடனல்வினையாலாகிய புண்ணியங்களெல்லாம்பொருந்தும், ஆதலாலெண்ணுங்காலத்தியாவரும்விரும்புந்தன்மையானபொருளுணுந்தாகுதிங்கயையுடையபொருளுமப்பசுக்களல்லதுவேறில்லை. எ- று. ()

இங்குமின்சுவையீயுமிறைஞ்சுவார்க்
கங்குமின்பமடைகைக்குக்காரணம்
பொங்குதண்புனலுண்டுபுற்றின்றுநன்
மங்கலந்தருங்கோவெனும்வான்பொருள்

எ- து. பொலிவாகியகுளிர்ச்சியினையுடைய நீரைப்பருகிப் புல்லைத்தின்றுயாவருக்குநல்லமங்களங்களைக்கொடுக்கும் பசுக்களென்றுசொல்லும் பெருமையினையுடையபொருளானதுதொழுது பூசிப்பார்க்கிவ்வுலகின் கண்ணுமினிமையான்சுவையையுடையபால்முதலியவற்றைக்கொடுக்கும். அவையன்றியச்சிவலோகத்துநிரதிசயானந்தம்பெறுகைக்குங்காரணமாம். எ- று. (௲௩௫)

பசுக்கள்வசிக்குங்கொட்டில்கட்டி யலங்கரிக்குந்தன்மையையொன்பதுசெய்யுளாலுணர்த்துகின்றார்

இட்டிகாதியிற்சாலையியற்றுக
விட்டுவாய்தலும்பூருவமேவவே
குட்டிகைப்புறநான்கிலுங்கோலுக
விட்டதேவர்க்கிசைந்தவிடங்களே

எ- து. கீழ்த்திசைக்கண்வாயில்பொருந்தவிட்டுச்செங்கல்முதலியவற்றாலான்கொட்டிலாகிய கோபுரத்தைச்செய்க. அக்கொட்டிலினது சிறியசுவர்ப்புறத்துநான்குதிசையினும்பொருத்தமானதேவர்கட்கிசைந்தவிடங்களைவளைக. எ- று.[௲௩௬

கொற்றவைக்குறுகோட்டமும்பூருவஞ்
சொற்றவைந்திற்குந்தொக்கிடந்தக்கண

மொற்றைக்கொம்பனுக்குன்னதமேற்றிசை *
மற்றைச்சோமற்குநந்திக்குமற்றிடம் *

எ-து. கோபுரமாகியவான்கொட்டிற்குக் கீழ்த்திசையிற்றுர்க்கைக்குப்பொருந்தியகோயிலுந்தென்றிசையின் முன்சொல்லியவைந்திற்குந் தொகுத்தவிடமுமேற்றிசையிற்கணபதிக்குன்னதமானகோயிலும்வடதிசையிற் சந்திரனுக்குநந்திக்குங்கோயிலுஞ்செய்க. எ-று. முன்சொல்லியவைந்தாவன- பால்- தயிர்- நெய்- கோமயம்- கோசலம்-என்க (௱௩எ)

பூர்வவாய்தற்புறத்திருபாகத்து *
மார்வங்கூரவிருவனையாக்குக *
வாரபாலகர்நந்திமாகாளரை *
யேருறச்செய்கமீதுவெள்ளேற்றையே *

எ-து. கிழைவாயதலிற்கடுத்தவிருபக்கத்திலுநந்திமாகாளரென்றுசொல்லுந்துவாரபாலரிருவரையுமனவிருப்பமிகும்படி பிரதிட்டைசெய்க. திருமதிலின்மேல்வெள்ளியவிடவங்களையழகுறச்செய்க. எ-று. (௱௩அ)

உத்தமத்தநதியின்மண்ணோடைமண் *
வித்தகத்தநல்வில்லத்தடியின்மண் *
பொத்தைப்புற்றின்மண்போதியின்கீழ்மணன் *
றித்தகைத்தநற்கெவ்வியத்தேய்க்கவே *

எ-து உத்தமமானநதிமிருத்திகை-யோடைமிருத்திகை-வித்தகத்தன்மையையுடையநல்லவில்லத்தடிமிருத்திகை-மலையையொத்தபுற்றுமிருத்திகை-யரசடிமிருத்திகையென்றுசொல்லுமித்தகுதியையுடையனவற்றைநல்லகௌவியத்தாலிசைவிக்க. எ-று. (௱௩௯)

குயிற்றிமுன்சொன்னகோலமனைத்தையும் *
பயிற்றியங்கவர்க்கெய்தநற்பால்களின் *
முயற்சியோடயனாதியர்மூவர்க்கு *
மயற்சிதீரவுள்ளற்சனையாக்கவே *

எ-து. முன்சொன்ன மிருத்திகையாலுங் கௌவியத்தாலு மெல்லாவழகும்பொருந்தவவ்வான்கொட்டிலைச்செய்துவிதிப்படி அயனரியரனாகியமூவருக் கும்

அவரவர்க்குரியபடிநல்லவிடங்களிற்றுபித்துச் சேர்வுபொருந்தாதருச்சனைபண்ணுக .எ- று. (ராசய)

கற்றினங்களுந்தங்கிடங்கட்டுக *
மற்றிடங்குழக்கன்றுகள்வைகவு *
முற்றநோய்களொடுங்குமிடங்களு *
முற்றுமாசெய்கமுற்றுமுயற்சியால் *

எ – து ஆகமத்திற்சொல்லிமுடிந்தவுழப்பான் முதிர்ந்தகன்றுக் கூட்டங்கடங்குமிடங்களுங்கட்டுக இளங்கன்றுகடங்கும் வேறிடங்களுமவ்வாகக்கள் முதலியவற்றைப்பொருந்திய நோய்கணீங்குமிடங்களுங்குறைவின்றிச் செய்க எ - று (ராசக)

செய்கவேறிடஞ்சீர்மையதாகவே *
வெய்யநோய்கள்விரவிடிலாக்களைப் *
பையவங்கணுறுகனைப்பாற்றுக *
மையறீரமருந்துமருத்தியே *

எ – து அப்பசுக்களைக்கொடுமையான வியாதிகள் பொருந்திடிலழகாகவேறிடத்தைச்செய்ததிற்கட்டுக அப்பசுக்களின் மயக்கநோய்கடீர மருந்துகளைக்கொடுத்துவிரைவன்றியவ்விடத்துப் பொருந்துநோய்களைத்தீர்க்க எ – று (ராசஉ)

கண்ணிவாய்தலுநாற்றிசைகாணவே *
பண்ணிக்கோமயம்பாற்றுகநீற்றினுற் *
றிண்ணிதாகவுஞ்சோதனைசெய்தபி *
னண்ணிடாமன்மசகமுநாடொறும் *

எ- து. நோய்தீரச்செய்தவான்கொட்டிற்கு நாற்றிசையிலும்வாயில்கள்விதிப்படிகருதிச்செய்து சுண்ணநீற்றாலழகுற நீவுதல் செய்ததன்பின்பு தினந்தோறுங்கொதுகுகளும்பொருந்தாமற்கோமயங்களைநீக்குக. எ-று. மசகமுமென்றவும்மையாற்புழுவுமீயுமெனக. (ராசங)

தூபந்தன்னைத்துதைக்கதுலங்கவே *
தீபந்தானுஞ்சிறக்கச்செறிக்கநற் *

பூவிற்றொடையெங்கணும்பூட்டுக *
கோவினைப்புகச்செய்கக்குறிப்பொடே *

எ-று. அக்கொட்டிலில் அநேகதூபங்களைவிளங்க நிறைத்தல்செய்க தீபங்களையும்விளங்கநிறைத்தல்செய்க. மங்கலமலராற்கட்டிய மாலைகளை யெவ்விடத்துந்தூக்குக. பின்புயெண்ணத்துடனப்பசுக்களையுட்புகச்செய்க. எ-று. (௱௪௪)

பசுவைக்கொட்டிலிற் புகுவிக்குந் தன்மையையுணர்த்துகின்றார்

சொல்லிமெல்லச்சுவத்தியெனுஞ்சொலை *
மெல்லமெல்லச்செலுத்துகவேமிட *
வல்லிதாம்வளைப்பாயலும்வாய்க்கவே *
நல்லபுல்லுங்கொடுக்கநயத்தொடே *

எ-று. சுவத்தியென்றுசொல்லும்வாக்கியத்தைமெல்லச்சொல்லிக்கொட்டிலிற்பையப்பையப்போகும்படிசெய்க. வலுமையான வள்ளைக்கொடியாற்செய்தபாயுந்தகுதியாகச்செய்க. அன்புடனல்லவறுகம்புல்லையு மிசைவிக்க. எ-று.
சுவத்தி எ-து மங்கலமொழி—வடபதம் (௱௪௫)

பசுவைப்பூசிக்குமுறையை யுணர்த்துகின்றார்

ஆட்டிமஞ்சனமட்டமிதோறும்பூச் *
சூட்டியோதனமாதியுந்தோயமு *
மூட்டியாக்களையோகையுறத்துக *
காட்டித்தூபமுந்தீபமுங்கர்தலால் *

எ-று. ஆதரவாலட்டமிதோறும் திருமஞ்சனங்கொண் டபிஷேகித்துப்பூவாலருச்சித்துத்தூபமுந்தீபமுங்காட்டியன்னமுதலியவைகளையுந்தண்ணீருமூட்டி யப்பசுக்களையுவகைபொருந்தச்செய்க. எ-று. (௱௪௬)

பசுக்கள்வசிக்குங்கொட்டில்கட்டினவர்பெறும்பயனை கூறுசெய்யுளாலுணர்த்துகின்றார்

சாலையானினந்தங்கச்சமைத்தவர் *
காலகாலன்புரத்தைக்கலப்பர்தா *

மேலவேண்டியயாவையுமின்புறும் *
வேலைவெங்கதிரோற்கும்விதித்ததே *

எ- து. பசுவினினங்கள்வசிக்கக் கொட்டிலைச்செய்தவர்கள் வெவ்வியசூரியனுக்குவிதித்தகாலம்வரையுமின்பம்பொருந்து மெல்லாப்போகங்களும்விரும்பியபடி பொசிக்கக்காலனுக்குக்காலனானசிவபெருமானுலகிற்சேர்வர்கள். எ- று. (௱சஎ)

முடியநாளுமுருகுந்தன்புரத்தினை *
யடைவர்மற்றையராளும்புரிகளும் *
வடவரைக்கண்மருவிக்குருவெனும் *
படியைப்பற்றிப்பின்பாரதம்பற்றுவார் *

எ- து. முன்வரையறுத்தநாளுமுடிவாகப்பின்புதிருமால்பிரமனிந்திரன்முதலியருலகத்தப்போகங்களைப்பொசித்துப்பின்பு மேருவரையைச் சேர்ந்துகுருகண்டத்திலெய்தப்பயன்களைநுகர்ந்துபின்புபாரதகண்டத்திற்பிறப்பர்கள். எ- று.(௱சஅ)

பண்டைவாசனைப்பாங்குறவோங்கிய *
மண்டபத்தைவகுப்பர்வரமுற *
மண்டுகாதலினானிமைகவே *
யண்டர்நாயகற்கற்சனையாக்கவே *

எ- து. பழையவாசனையினுரிமைபொருந்த நிறைந்தவாதரவாலப்பாரதகண்டத்திற்கோவினங்கடங்கவுந்தேவதேவனாகிய சிவபெருமானுக்கருச்சனைநடக்கவுமுன்னெதுமானமண்டபங்களைமேன்மைபொருந்தச்செய்வர். எ- று. (௱சகூ)

ஆட்டிப்பான்முதலைந்துமரன்முடிக் *
கூட்டிப்பாயதமண்டர்க்குமோகையி *
னூட்டிமுன்னையவூனமுலகினுட் *
டேட்டமாச்சிவமாகத்தெருள்வரோ *

எ- து. சிவபெருமானது திருமுடிக்குப்பசுவின்பான்முதலியவற்றையபிடேகித்துமவகையினுலடியார்களுக்குப் பாயசத்துடனமுதூட்டிப் பழையசஞ்சிதமுதலியகுற்றங்களையோட்டியுலகினுள்ள வாஞ்சையறச் சிவசாயுச்சியம்பெற்றுவிளங்குவர். எ- று. (௱௫௰)

பசுவைக்காக்கும்படிசெய்தஅரசனுறும்பலத்தையுணர்த்துகின்றார்

ஆக்கடன்னையருமறைநூன்முறை ※
காக்ககாக்ககிலாரையக்காசினி ※
காக்குங்காவலன்காய்ந்துகாப்பித்திடி ※
னோக்கியேசிவலோகத்துறைவனே ※

எ- து. அப்பசுக்களையரியவேதநூல்விதிப்படி யுலகிலுள்ளார்காக்கக் கடவர்அப்படிக்காவாதவர்களையவ்வுலகத்தைக்காத்தாளுமரசன் கோபித்துக் காக்கும்படி செய்யிற்சிவலோகத்துயர்ந்துவாழ்வன். எ- று. (௫௧)

அரசன்றண்டியாளுகிற்பசுவைக்காவாதாருறும்பலத்தையுணர்த்துகின்றார்

காக்கிலாரையுங்காக்குமவரையு ※
நோக்குநாடொறுநோக்கிலனாகிலுங் ※
காக்கிலாரைக்கடிகிலனாகிலுந் ※
தீக்குக்காட்டமெனக்கனல்சேர்வரோ ※

எ- து. பசுவைக்காவாதவரையுங் காப்பவரையு மரசன்நாடோறும்பார்ப்பன் அப்படிப்பாராதவனாயிருந்தாலும். அப்பசுவைக்காவாதாரைத் தண்டியாதவனாயிருந்தாலுமக்கினிக்குவிறகுபொருத்தமானதுபோலத் தீக்குநிரகத்திற்குப்பொருத்தமாய்ச்சேர்வர். எ- று. (௫௨)

பசுவைக்கால மறிந்துகாக்குந் திற மிரண்டுசெய்யுளா லுணர்த்துகின்றார்

தழைத்தசோலைத்தடத்தினடத்துக ※
பழுத்தவேனிற்பருவத்திலாக்களை ※
மழைக்குமாமலைச்சாரல்வனத்திடை ※
யொழிக்கவச்சமுறுத்துமுழுவையே ※

எ- து. அப்பசுக்களைமுதுவேனிற்காலத்திற் குளிர்ச்சியையுடையபெரியமலைப்பக்கமாகியகாட்டினிடத்தாத்தழைத்திருக்குஞ்சோலைப்பரப்பில்மேய்த்தல்செய்க அதுவன்றியவற்றைக்கொல்லவரும்புலியைக்கெடுத்தல்செய்க. எ- று.
முதுவேனில் - ஆனி - ஆடி - (௫௩)

இமத்தில்வெய்யில்வெளியிலியக்குக ❊
வமைக்கமற்றும்பருவத்தலலறத் ❊
தமக்குநல்லனதாமறிவார்கடாஞ் ❊
சமைக்கநல்லனசாருந்தகையெலாம் ❊

எ - று தங்கட்குநல்வினைகளிவையென்றறியு மறிவுடையோர்கள் அப்பசுக்களைமுன்பனிபின்பனியாகியகாலத்திற் சூரியகிரணம்பரந்தவெளிப்ப ரப்பில்மேய்த்தல் செய்க மற்றைக்கார் காலமுதலியகாலங்களினுந்துன்ப நீங்கத்தகுந்த விடங்களில் மேய்த்தல்செய்க அதுவன்றிநன்மைகள் பொருந்துந் த.சுதியான தொழில்களையெல்லாஞ்செய்க எ று (ருசு)

பசுவைக்காப்பார் காவாதாருறும்பலத்தையிரண்
டுசெய்யுளாலுணர்த்துகிருர்

ஆக்கடன்னையலலறவன்புடன் ❊
காக்குங்காவலர்செய்தகடுவினை ❊
போக்கித்தேசன்புரத்நிலருந்துவர் ❊
வாக்கிலுலாயாதமகிழ்ச்சியே ❊

எ - று அப்பசுக்களைத்துன்பநீங்கும்படியாதரவுடன் காத்தளிக்குமரசர்கடாங்கள்செய்ததீவினைகளைக்கெடுத்துச்சிவபெருமானுலகத்துவாக்காற்சொல்லொணுதவானந்தத்தையனுபவிப்பர்கள் எ - று (ருரு)

ஆக்களல்லலறவளியார்களும் ❊
பூக்களாற்புரியார்களும்பூசனை ❊
காக்கிலாருங்கசிந்துகடும்பிணி ❊
நீக்குக்காட்டமெனக்கனல்சேர்வரோ ❊

எ - று அப்பசுக்களைத்துன்பநீங்கும்படி காவாதவர்களும்லாாலருச்சனைசெய்யாதவர்களுங்கடுமையானநோய்வந்திடிலுள்ளமுருகித்தீராதவர்களுமக்கினிக்குவிறகுரிமையானதுபோலத்தீக்குழிநரகத்துக்குரிமையாவர்கள் எ - று (ருசு)

ஆவுரிஞ்சுதறிநட்டவர்கோதானஞ்செய்தவருறும்ப
லத்தைமூன்றுசெய்யுளாலுணர்த்துகிருர்

ஆவுரிஞ்சுகன்றாட்டியவன்பினர் *
கோவினைப்பரமற்குக்கொடுத்தவர் *
தேவர்தேவன்புரத்திற்யினைப்பர்க *
ளுவிறாலுணாயாதநலத்தையே *

எ - து பசுக்கடினவுக்குரிஞ்சுங்கற்றூண்களைமர்த்தைமுதலியவிடங்களிலொருரவாய்நாட்டினவர்களும்பசுக்களைச்சிவபெருமானுக்குத்தானங்கொடுத்தவர்களுந்தேவதேவனாகியவச் சிவபெருமானுலகில் வாக்காற்சொல்லொணாதநிரதிசயானந்தத்தையனுபவிப்பர்கள் எ - று (௱௫௭)

கொடுத்துச்சங்கரற்கன்பொடுகோதன *
மெடுத்துமுய்யக்கொள்ளென்றுமுனேத்தினர் *
விடுத்துமுன்செய்ததீயவினைவிதம் *
விடைக்குப்பாகன்புரத்தினைமேவியே *

எ - து சிவபெருமானுக்கன்புடன்பசுக்களைக்கொடுத்தியானுய்யும்வண்ணமங்கீகரித்துமொப்புக்கொள்வாயென்றுசன்னிதிமுன்புநின்றுதுதித்தவர்கள், மூற்காலத்திற்செய்ததீவினையின்றிறங்களை நீக்கிவிடையிலெழுந்தருளுமப் பெருமானதுலகத்திற்றங்கி எ - று (௱௫௮)

ஒப்பில்போகமருந்திபுறைவர்கள் *
கற்பமும்பதினாயிரங்காணவே *
யிப்பலத்தினையெய்துவரானினைத் *
தப்பில்போதகன்பாலளித்தாருமே *

எ - து பதினாயிரம்பிரமகற்ப மொப்பில்லாதபோகங்களை யனுபவித்துறைவார்கள் குற்றமில்லாதவாசானிடத்தப்பசுக்களைக்கொடுத்தவர்களு மிந்தப்பலன்களைப்பொருந்துவார்கள் எ - று (௱௫௯)

சிவபெருமானுக்கானேறுதானஞ்செய் தவருறும்
பலத்தையிரண்டுசெய்யுளாலுணர்த்துகிறார்

ஊனமற்றவுறுப்புறுமொள்ளிய *
வானலேற்றையரனதுசன்னிதித் *
தானஞ்செய்கசமைத்தவணியுடன் *
காவமாடிபுரத்துறுங்காதலார் *

எ-று மாலயன்மாண்டமயானத்திலாடிய சிவபெருமானுலகத்தில்வாழுங் காதலையுடையாரவன் சன்னிதியிற் குற்றமில்லாதவவை யவங்களை யுடையநல்ல வொளி பெற்றவானேற்றைத்தானஞ்செய்க எ-று. (ாகூ௰)

உற்றபெற்றத்துரோமத்திெனொன்றற்கு *
மற்றைத்தேவர்வருடமோராயிரம் *
பெற்றவந்தப்புரத்திற்பெறுவர்கண் *
முற்றவேறறுவாரறுமோகமே *

எ-று. தானஞ்செய்து பொருந்திய வானேற்றினு ரோமங்களுளொன்றுக்குத் தான்பெற்றவச்சிவலோகத்திலாயிரந்தேவவருடமாகப்போகங்களைப்பெற்றுவாழ் வர்கள். அப்போகங்கள்பொசித்தமுடியவேமோகங்கள் அற்றொப்பில்லாதவராவ ர்கள். எ-று. [ாகூக]

சிவபெருமானதுபசுநிரைகளில்ஆனேறும்பசுவுந்தானஞ்செய்துவி
ட்டவருறும்பலத்தையுணர்த்துகின்றார்

இத்தகைத்தபலத்தினையெய்துவர் *
வித்தகத்தவிடையுமோர்தேனுவு *
நித்தனுக்கணிரையினிறுத்தின *
ருத்தரப்பிரசைப்பலத்தோடுமே *

எ-று. சிவபெருமானதுபசுநிரைகளினல்ஆனேறுமொப்பற்றபசுவுந்தானஞ் செய்துநிறுத்தினவர்கண்மேலுமேலும் புத்திரபவுத்திரபலன்களுடன் இத்தன்மை யனவென்றுமுற்கூறியபலன்களைப்பெறுவர்கள். எ-று. (ாகூ௨)

ஆனேறுமுதலியவற்றுக்கு வருத்தஞ்செய்தவரை யரசன்தண்டஞ்
செய்தல்செய்யாமையால்வருவனவற்றைமூன்றுசெய்யுளாலுணர்
த்துகின்றார்

இடபமூருனரொய்துவர்வெய்யதீக் *
கடிகமன்னவன்காய்ந்தவரத்தின *
னடைவன்மேலையமருலகந்தனைத் *
தடைசெய்யாமன்னன்றீக்குழிச்சார்வனே *

எ-று. வாகனமாகவேறி யிடபங்களைச்செலுத்துகிறவர்கள், வெவ்வியதீரகு

த்தைசசேர்வர்கள். ஆதலாலவைற்றிலேறிச்செலுத்தாதமன்னவனொறுத்தல்செய்க அத்தன்மையினொறுத்தசிறப்பினையுடைய வம்மன்னவன்மேலாகியதேவவுலகத்தினைச்சேர்வன். அவ்விடவமொருதலைத்தடைபடுத்தாதமன்னவன்றீக்குழிநரகத்தைச் சேர்வன். எ- று. (ாசுா)

பாவகாரிகள்வந்தைப்பசுவினைச் ✻
சேவுயர்த்தசிவனிடபத்தினைக் ✻
காவுவிக்கிற்கனத்தையக்காசினிக் ✻
காவலாளனவனையுங்காய்கவே ✻

எ - து பாவவான்மாவானவர்கள் மலட்டுப்பசுவையாயினும் விடைக்கொடியையுடையசிவபெருமானதிடபங்களையாயினும்பாரமான பண்டங்களைச்சுமக்கும்படிசெய்விக்கிலப்பாவிகளையும் அவ்வுலகத்தரசன்றண்டனைசெய்க எ-று (ாசுசு)

காய்ந்தமன்னன்கடியவினையினைத் ✻
தீர்ந்துசேர்வன்சிவபுரந்திண்ணமே ✻
யோர்ந்தொறுப்பவர்தம்மையொருமனன் ✻
கூர்ந்ததீநிரையக்குழிகூடுவன் ✻

எ - து அப்பாவிகளைத்தண்டஞ்செய்தஅரசன்கடுமையானதீவினைகளைநீங்கியுறுதியாகவே சிவலோகத்தைச்சேர்வன் அப்பசுக்களைவருத்துவோர்களை வருத்தஞ்செய்யாதஅரசன் மிகுந்ததீக்குழிநரகத்தில்விழுவன் எ - று (ாசுரு)

ஆனேற்றிற்பாரங்களையேற்றிற்பரிகாரமுணர்த்துகின்றார்

பரிப்பித்தாரிடபத்திடைப்பாரத்தை ✻
யரிக்கப்பாவமுமாறுடனேந்துற ✻
வுரத்தவெள்விடையீசர்க்குதவுக ✻
விரித்தவானினங்காக்கவோர்வற்சரம் ✻

எ- து. அந்தஇடபத்தின் மேற்பாரங்களைச்சுமத்தினோர் அப்பாவங்கெடச்சிவபெருமானுக்குவலியினையும்வெண்மையினையுமுடைய பதினொருஇடபங்களைத்தானஞ்செய்க. அதுவுமன்றிநியமித்தபசுநிரையையுமொருவருடமேய்த்தல்செய்க. எ- று (ாசுசு)

ஆலயப்பணிக்கானேறுதவினோர்பலத்தையுணர்த்துகின்றார்

ஈடுபெற்றவெருத்தினையீபவர் ❊
பாடுபெற்றசகடைபரிக்கவு ❊
மாடுங்கூத்தனமலன்பணிக்கவ ❊
ஞடுபெற்றுநலத்தைநவில்வரோ ❊

எ- து சிற்சபையினிருத்தஞ்செய்யுதிருமலனதாலயப்பணிவிடைக்குரியபெருமைநந்நியபண்டிகளைச்சுமந்திழுக்கும்படிக்குமாற்றலையுடையவிடபங்களைத்தானஞ்செய்தவராவனுலகுணிரதிசயானந்தத்தைப் பெற்றவனுமங்களைத் துதித்திருப்பர் எ- று.
[ாசுஎ]

இளைத்தபசுவைவளர்த்தவன் பலத்தையுணர்த்துகின்றார்

இளைத்தவாவினைக்கண்டுளிரங்கியே ❊
தளர்ச்சிதீர்க்கத்தருகெனவாங்கியே ❊
வளர்த்தவன்சிவலோகமருவியே ❊
யுளத்துளோகையுறையவுறைவனே ❊

எ- து. உடம்பிளைத்தபசுக்களைப்பார்த்து மனமிரக்கமுற்றிவற்றின்மெலிவைத்தீர்க்கத்தாவென்றுகேட்டுவாங்கி யவற்றைவளர்த்தவன்சிவலோகத்தைச்சேர்ந்துள்ளத்துளுவகைபொருந்தவிருப்பன். எ- று. (ாசுஅ)

பசுவிற்பால்கறக்குமுறையையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

சேர்வராதிசிவபுரங்கன்றினை ❊
யாரமாதமிரண்டுமெருத்தியே ❊
பீரின்வாய்நுரைநீக்கிக்கறந்திறைக் ❊
கீரநெஞ்சமோடாட்டினரொண்ணியே ❊

எ- து. கன்றுகட்கிரண்டுமாதம்வயிறுநிறையப்பால்குடிக்கும்படிசெய்துபின்புஅவற்றின்வாய்நுரைகளைநீராற்கழுவிப் பசுவின்பாலைக்கறந்துசிவபெருமானுக்குக்கருதியன்பானநெஞ்சத்துடனபிடேகித்தோர்சிவலோகத்திற்சேர்வர்கள். எ-று
[ாசுக]

ஆரக்கன்றுமருந்திமுலையினைத் ✻
தீரும்வேலைதெரிந்துகறந்தவர் ✻
சேருமெல்லைமுன்சொன்னசிவபுரந் ✻
தீருமெல்லையுமண்ணிதுதிண்ணமே ✻

எ-து. கன்றுகளுந் தாய்முலைப்பாலைவயிறுநிறையக்குடித்துநீங்குங்காலந்தெரிந்தப்பாலைக்கறந்தவர்களுறுதியாகச்சேருமிடனியாதெனின்முற்கூறியசிவலோகமே நீங்குமிடமுமியாதெனினிம்மண்ணுலகே. எ-று [௱எ0]

கன்றுக்குவயிறுநிறையவூட்டாதுபால்கறந்தவருறுந்தீங்கையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

உற்றவாசையிற்கன்றுக்கொறுப்புறப் ✻
பற்றியான்முலைப்பால்கொளும்பாதகர் ✻
முற்றித்தீயுதரத்தினுமூளவே ✻
பற்றுமின்றிநரகிற்படிவரோ ✻

எ-து. உள்ளத்திற்பொருந்திய வாசையினாற்கன்றுக்குப்பால்குறைவாகப்பசுவைப்பிடித்தப்பாலைக்கறந்துகொள்ளும்பாதகரானவர். வயிற்றினின்றும்பசியாகியதீமிகுந்துமூளப்பற்றொன்றுமில்லையாகிநரகத்தின்முழுகுவர். எ-று. (௱எக)

தொலைந்தபின்னுந்தொடுத்தவுடலெலாங் ✻
கலந்துநின்றுகடும்பசிகாயவே ✻
யுலர்ந்துமானிடயோனியிலுற்பவித் ✻
திலங்கடோறுமிரப்பரிளைப்பரோ ✻

எ-து. நரகத்தின்முழுகுதலொழிந்த பிற்காலத்து மப்பாவத்தாற் றொடுத்துவராநின்றசரீரங்களெல்லாங்கடுமையான பசிப்பிணிசேர்ந்துநின்றுவருத்துதலால் வாடிப்பின்புமானிடயோனியிற்பிறந்து வீடுகடோறு மிரப்பாரந்தும்பிச்சைகிடையாததினாலுடல்மெலிவர். எ-று (௱எ௨)

ஆன்கொட்டிலிற்புகுஞ்சண்டாளர்தன்மையுணர்த்துகின்றார்

புலையரானினச்சாலையுட்புக்கிடி ✻
லெலையில்காலமெரிநிரையக்குழி ✻

தொலைவிலாத்துயர்தொக்குச்சுழல்வார்க *
ளிலையவர்க்குப்பரிகாரமெண்ணிலே *

எ- து. சண்டாளரானவர்கள் ஆனினங்களைக்கட்டுங்கொட்டிலுட்புகுந்தாலளவில்லாதகாலந்தொலைவில்லாததுன்பங்களுடன்கூடித்தீக்குழிநரகத்திற்கலங்குவர்கள்கருதுங்காலவர்களுக்குப்பரிகாரங்களுமில்லை. எ- று. [ளஎங]

பகைவர்கவரும்பசுக்களைக்காப்பார்தன்மையுணர்த்துகின்றார்

ஆக்களைக்கவரின்னடையார்சென்று *
காக்ககாக்கவரிதெனிற்றம்முயிர் *
போக்கியும்புகழாக்கியபுண்ணியர் *
தேக்குநீர்ச்சடையான்புரஞ்சேர்வரே *

எ- து. பகைவர்கள்வந்து பசுக்களைத்திருடவரின் விரைந்துகாத்தலைச்செய்க அஃதரிதாயிற்றங்களுயிரைக்கொடுத்தாகிலுங் கீர்த்தியையுண்டுபண்ணின புண்ணியர்கணிறைந்தகங்கையணிந்தசடாமகுடத்தையுடைய சிவபெருமானுலகிற்சேர்வர்கள். எ- று. (ளஎச)

புண்ணியபேதங்களின்வகையும்பலமும்பதினேழுசெய்யுளாலுணர்த்துகின்றார்

வேறு

இருவிதந்தருமநீதியெனவறிந்திடுகயார்க்கு *
மொருவிதம்புலன்களைந்துமொடுக்கியுளரனையுன்னல் *
பரிவுடன்பசுக்கடன்னைப்பசுபதிக்கன்பர்தம்மை *
யுரிமையிற்புரிகபூசையெனுமிஃதொழிந்தவொன்றே *

எ- து. யாவர்களுக்குந்தருமத்தின்முறைமையிரண்டுவிதமென்றறிதல்செய்க அவற்றுளைம்புலன்களையுமுள்ளத்தொடுக்கிச் சிவபெருமானைத் தியானஞ்செய்தலொருவிதம், அன்புடனாக்களையும் பசுபதியினதடியார்களையும் விதிப்படிபூசைசெய்கவென்றுசொல்லுமிஃதுமற்றொருவிதம்- எ- று- (ளஎரு)

ஆதலாற்பசுக்கடன்னையரனடிக்கன்பர்தம்மைக்
காதலாற்புரிகபூசைகடுவினைகளையவெண்ணின்

விரவியேசிவலோகம்விரும்பிய *
பரமபோகமனைத்தும்பயில்வரோ *

எ - து பிரமசரியவிரதமனுட்டிப்போனையும்பெரியதருமங் களைக்காத்தல் செய்யுமில்வாழ்வோனையும் அன்னமுலியவற்றையுண்கும்படிசெய் தவுரிமையையுடையவர்சிவலோகத்தைச்சேர்ந்துதாம்விரும்பியமேலானபோகங்களையெல்லாம் பொருந்துவர்கள் எ - று [௱௭௯]

வனத்தின்வைகியமாதவரங்கையிற் *
புனத்திற்காய்கனியாதிபுரிவொடுந் *
தினக்கொடுத்தவர்சேர்ந்துசிவபுர *
மனத்தில்வேண்டும்விமானத்தில்வாழ்வரோ *

எ - து காட்டிற்றங்கியமாதவராகியவானப்பிரத்தரதழகியகையிற் காட்டிலுண்டான காய்கனியாதிகளை யன்பாய்பொசிக்கக் கொடுத்தவர்கள் சிவலோகத்தைச்சேர்ந்துமனத்தில் விரும்பும் விமானங்களில்வாழ்வர்கள் எ -று (௱௮௰)

பரிந்துபாசுபதனையும்பண்புற *
வருந்துவித்தவர்தாமுமரன்புரி *
பொருந்திவாழ்வர்புரிவுடன்பிச்சையை *
யருந்துமாவிரதர்க்களித்தாருமே *

எ - து பாசுபதவேடத்தனையும் பண்பாகவிரும்பித் திருவமுதுண்ணும்படி செய்தவர்களும்மாவிரதவேடத்தருக்குவிரும்பித்திருவமுதுண்ணக்கொடுத்தவர்களுஞ்சிவலோகத்தைச்சேர்ந்துவாழ்வர்கள் எ - று பாசுபதம்—மாவிரதம் என்பன—அகச்சமயமாறினுள்ளமைந்தன (௱௮௧)

திகழும்வெண்பிறைச்செஞ்சடைத்தேவர்க்குக் *
காமுறக்கல்லவடமிடுவார்களை *
மகிழுமுடி வல்லவர்தாமுமண் *
புகழுஞ்சிவலோகம்புகுவரே *

எ - து ஒளிவிடும்வெண்மதியையணிந்திவந்தசடையினையுடைய சிவபெருமானுக்கு ஆசையுண்டாகக்கல்லவடமிடுவோர்களையுள்ளமகிழும் வண்ணந்திருவ

விரவியேசிவலோகம்விரும்பிய ✻
பரமபோகமனைத்தும்பயில்வரோ ✻

எ - து பிரமசரியவிரதமனுட்டிப்போரையும்பெரியதருமங் களைக்காத்தல் செய்யுமில்வாழ்வோரையும் அன்னமுலியவற்றையுண்ணும்படிசெய் தவுரிமையையு டையவர்சிவலோகத்தைச்சேர்ந்துதாம்விரும்பியமேலானபோகங்களையெல்லாம் பொருந்துவர்கள் எ - று [௱௭௯]

வனத்தின்வைகியமாதவரங்கையிற் ✻
புனத்தின்காய்கனியாதிபுரிவொடுங் ✻
தினக்கொடுத்தவர்சேர்ந்துசிவபுர ✻
மனத்தில்வேண்டும்விமானத்தில்வாழ்வரோ ✻

எ - து காட்டிலிருக்கியமாதவராகியவானப்பிரத்தாதழகியகையிற் காட்டி லுண்டான காய்கனியாதிகளை யன்பாய்பொசிக்கக் கொடுத்தவர்கள் சிவலோகத் தைச்சேர்ந்துமனத்தில் விரும்பும் விமானங்களில்வாழ்வர்கள் எ - று (௱௮௰)

பரிந்துபாசுபதரையும்பண்புற ✻
வருந்துவித்தவர்தாமுமாவ்புரி ✻
பொருந்திவாழ்வர்புரிவுடன்பிச்சையை ✻
யருந்துமாவிரதர்க்களித்தாருமே ✻

எ - து பாசுபதவேடத்தரையும் பண்பாகவிரும்பித் திருவமுதுண்ணும்படி செய்தவர்களும்மாவிரதவேடத்தருக்குவிரும்பித்திருவமுதன்னக்கொடுத்தவர்க ளுஞ்சிவலோகத்தைச்சேர்ந்துவாழ்வர்கள் எ - று பாசுபதம்—மாவிரதம் என்பன—அகச்சமயமாறினுளமைந்தன (௱௮௧)

திகழும்வெண்பிறைச்செஞ்சடைத்தேவர்க்கு ✻
காமக்கல்லவடயிடுவோர்களை ✻
மகிழ்வுற்றிடவல்லவர்தாமுமன் ✻
புகழ்சிவலோகம்புகுவரோ ✻

எ - து ஒளிவிடும்வெண்மதியையணிந்தசிவந்தசடையினையுடைய சிவபெரு மானுக்குமாலையுண்டாகக்கல்லவடயிடுவோர்களையுள்ளமகிழும் வண்ணந்திருவ

முதுசெய்விக்கவல்லவர்களும் மண்ணுலகோர் புகழுஞ்சிவலோகத்தைச்சேர்வர் எ - று [௱௮௨]

அனகரானவருந்தவர்கையுறக் *
கனகபாத்திரங்காதலோடுந்தவ *
ரனகலோகத்தமர்வர்கள்கற்பமூன்
செனகனுக்கொருகோடிசெறியவே *

எ - து பாவச்செய்கையற்ற வரியதவத்தர்கையிற் பொருந்தப்பொற்பாத்திரத்தையன்புடனேகொடுத்தவர்கள் பிரமாவுடனொருகோடிபொருந்துங் கற்பகாலம்வரையுஞ்சிவலோகத்திலிருப்பார்கள் எ - று (௱௮௩)

இத்தகைத்தபலத்தினையெய்துவர் *
பத்தரங்கைப்பரிக்கப்பலாசுறு *
பத்திரத்திற்புடகம்பரிவுற *
வைத்தவுத்தமர்தாமுமகிழவே *

எ - து சிவபத்தர்களதழகியகையிற்றாங் கப்பலாசவிலையிலாம் பாத்திரஞ்சமைத்தன்புடன்கொடுத்தவுத்தமர்கள்மேற் சொல்லுந்தகுதியான பலத்தினை மகிழ்ச்சியுறும்படிபெறுவர்கள் எ - று [௱௮௪]

நாத்தழும்புறநாதனைநாடொறு *
மேத்துவார்கரத்தேந்திடத்தாமிர *
பாத்திரங்கொடுத்தார்முனைப்பாவமுந் *
தீர்த்துச்செஞ்சடையான்புரிசேர்வரே *

எ - து நாடோறுநாவின்கட்டழும்பு பொருந்துமவண்ணஞ்சிவபெருமானைத்துதிக்குமடியார்கையிலேந்தச்செப்புப்பாத்திரங்களைக்கொடுத்தவர்கள் முற்பிறப்பிலீட்டியபாவங்களைநீங்கிச்சிவந்தசடையையுடைய வச்சிவபெருமானுலகிற்சேர்வர்கள் எ - று [௱௮௫]

தெத்தியோதனம்பாத்திரஞ்சேர்த்தியே *
யுத்தமத்தவர்கையினுதவினர் *
வித்தகன்புரிவாழ்வர்விடுதர்க்கு *
வைத்தகோடிவருடமும்வாய்க்கவே *

எ - து தயிரன்னத்தைப்பாத்திரத்தில்வைத்துமுதன்மையான சிவனடியார்கையிற்கொடுத்தவர்கள் தேவர்க்குரியமித்தகோடிவருடம் பொருந்துங்காலம்வரையும் அச்சிவபெருமானுலகில்வாழ்வர்கள் எ - று (ாஅசு)

முற்றக்காலமுறையுறப்பாரதம் *
பற்றிப்பார்த்திவராய்ப்பசுபாசமு *
மற்றுச்சங்கரனோடமர்வாரவர் *
பெற்றபேறதுபேசப்படுவதே *

எ - து கோடிதேவவருடமுறைமையாகமுடியப்பாரதகண்டத்திலரசனுய்ப்பிறந்தாண்டுள்ளபோகம் பொசித்துப்பசுபாசமுங்கழன்றுசிவபெருமானுடன் கூடிவாழ்வர்கள் அவர்கள்பெற்றபேறுபேசுந்தரமன்று எ - று [ாஅஎ]

இத்தகைத்தபலத்தினையெய்துவர் *
முத்தனைப்பசுபாசமுருக்கியைச் *
சித்தம்வைத்தவரங்கைச்செறித்தவர் *
சுத்ததோயகரகந்துலங்கவே *

எ - து முத்தனுயினனைப்பசுவினது பாசங்களைக்கெடுக் கப்பட்டவனைச்சித்தத்திற்றியானித்தவடியார்களதழகியகையிற்றூயதாணீர்க்கமண்டலம்விளங்கக்கொடுத்தவர்களித்தன்மையானமுற்கூறியபலத்தைப்பெறுவர்கள் எ - று [ாஅஅ]

ஊட்டினார்களுதவியதேதெனுங் *
காட்டுளாடிகழறங்கருத்தினு *
ளோட்டினாரைத்தமைநலியும்வினை *
யோட்டியேசிவலோகத்துறைவரே *

எ - து சுடலைக்கண்ணுடுஞ்சிவபெருமானதுபாதங்களைத் தங்கள்கருத் தினுணிறுத்தினார்க்குத்தம்பாலமைந்தபொருள்யாதொன்றாயினும்பொசிப்பித்தார்கள் தங்களைவருத்துந்தீவினைகளையோட்டிச்சிவலோகத்துள்வாழ்வர்கள் எ - று [ாஅகூ]

மாதவர்க்குறவற்கலையீந்தவர் *
சீதவாரிதவாடையுஞ்சேர்த்தினர் *
சோதிலாவசிறுதியுங்கோல்வளை *
மாதோர்பாகன்புரத்தினுள்வாழ்ந்தபின் *

எ - அ மாதவத்தினர்க்குப்பொருந்தமாவுரிகொடுத்தவர்கள் குளிர்ச்சியினை யுடையமேகம் போன்றவெண்மையானவாடைகளையு மான்றோல்முதலியவைகளை யுங்கொடுத்தவர்கள், திரண்டவளையிலையணிந் தவுமாதேவிபாகனுன சிவபெருமா னுலகில்வாழ்வர்கள் மேற்கூறியபடிவாழ்ந்தபின்பு எ - று (௱௯௦)

நண்ணிப்பாரதநான்மறையாறங்க ❊
மெண்ணிப்பாசவிருளறத்தேசிகன் ❊
கண்ணிறுற்கருதற்கரிதாகிய ❊
வுண்மைதன்னெடிரண்டறவொன்றுவார் ❊

எ - அ பாரதகண்டத்திலுற்பவித்து நான்குவேதமும் ஆறுசாத் திரமுங்கற் றுணர்ந்தியாசிரியன தருட்கண்ணு லிருவினைப்பாசமயக்கங்கெட நினைத்தற்கருமை யானவுண்மைச்சிவத்துடனிரண்டறப்பொருந்துவர்கள் எ - று [௱௯௧]

மகாசிவலோக முதலியனவிருக்குந் தானமுமவற் றையடைகுநர்தன்மைமுதலியனவும் பதினெருசெ ய்யுளாலுணர்த்துகின்றார்

ஆக்கமெல்லையறைந்தனுடாடணைத் ❊
தாக்கணைந்துமமலன்றிருமுடிக் ❊
காக்குமன்பர்க்கும்பூசையறைந்தினி ❊
மீக்குணச்சிவலோகம்விளம்புவாம் ❊

எ - அ ஆக்கத்துறையுமெல்லையைச் சொல்லிப்பின்பு இனிமையானவசனத் தாலந்த ஆக்கமிடத்துண்டாகியகௌவியந் தனைக் கையும்பிருமனையுந்திருமுடிக்கு அபிடேகிக்கும் அடியார்களுக்குஞ்செய்யும்பூசையை ச்சொல்லிப்பின்மேலானதன் மையையுடையமகாசிவலோகத்தைச்சொல்லுவாம் எ - று (௱௯௨)

ஐந்துபூதத்துமற்றகங்காரத்தும் ❊
புந்திதன்னிலுமண்டம்பொருந்திடும் ❊
முந்திச்சொன்னமுறையுறுமூலத்தும் ❊
பந்தித்தெட்டுமுறையுறும்பாங்கினல் ❊

எ - அ பிருதிவிமுதலியபஞ்ச பூதத்திலுமதற்குமேலாகிய அகங்காரதத்து த்திலும் புத்திதத்துவத்திலும் அண்டமொன்றுக் கொன்றுவிரி வுயர்ந்தபொருந்

தும், அஃதன்றிமுன்சொன்னமுறையிற்பிரகிருதிதத்துவத்திலும்அண்டங்கள்பொருந்தும், ஆகவிந்தப்பகுப்பிற் சேர்ந்து எட்டுவிதமான வண்டங்களும்பொருந்தும் எ-று. அவையாவனபூமியிற் காலாக்கினிமுதலானபுவனம்நூற்றெட்டு. அப்புவில்அமரேசன்முதலியகுய்யாட்டகரும். தேயுவில். அரிச்சந்திரன்முதலிய குய்யாட்டகரும். வாயுவில்தேயைமுதலியகுய்யாட்டகரும். ஆகாசத்தில் வத்திரபாதாதிமுதலியபவித்திராட்டகரும். அகங்காரதத்துவத்திற் சகலண்டாதி முதலியதானுவாட்டகரும். புத்தியிற்பைசாசியான அட்டகரும். பிரகிருதியில் அகிருதாதியானபுவனுட்டகரும். ஆகத்தத்துவமெட்டிலும் புவனுதியர்களும் நூற்றறுபத்துநால்வரிருப்பர்களிப்படியங்கங்கேயநேககோடியண்டங்களுண்டெனவறிக. (௱௬௩)

பேசுமூலப்பிரகிருதிக்குளே *
மூசுமண்டகடாகமுகட்டினுள் *
ஈசன்றேவியிளையனரியயன் *
வாசதேசமோரைந்தும்வகுப்பமே *

எ-து அசுத்தமாயைகாரணமாகிய மூலப்பிரகிருதித் துவத்தில்நெருங்கியிருக்கப்படாநின்றஅண்டகடாக முகட்டையடுத்து அதனுள் பிரமன்முதலியவைவர்வசிக்கும்புரத்தைமேற்சொல்வாம் -எ று [௱௬௪]

காடவண்டகடாகமுகட்டினுட் *
கூடும்வேதாற்குக்கொயிலதற்குமேற் *
கூடுமாலுக்குங்கோயிலதற்குமேற் *
கூடும்வென்றிக்குமரற்குக்கோயிலே *

எ-து அந்தப்பிரகிருதிதத்துவத்திற்றிடமாயவண்டகடாகத்தைத்தீண்டியிருக்கிறஅகிருதைமுதலியபுவனுட்டகத்துக்குமேற்பதுமராகநிறம்போன்றபிரமலோகமிருக்கும், அதற்குமேல்மாயனுக்கிந்திரநீலநிறம்போன்று மகத்தாகியபோகங்களினலலங்கரிக்கப்பட்டிருக்கிறவிட்டுணுலோகமிருக்கும், அதற்குமேல்வெற்றிப்பாட்டையுடையகுமாரசுவாமிக்குமுத்தின்பிரபைபோன்று விசிட்டமான போகங்களுடனுங்கூடியிருக்கிறகௌமாரபுரியிருக்கும் எ.று (௱௬௫)

அதற்குமேலுமையாள்புரமற்புத *
மதற்குமேற்சிவலோகமென்றுய்கவே *
யதற்குறும்வளம்வாக்கினடங்கிடா *
அதற்குப்புக்கவர்மீள்பவரல்லரே *

எ - து அந்தக்கௌமாரபுரிக்குமேலுமாதேவியினுடையபுரிகாருணியமான ஆச்சரியத்துடன்பொருந்தும்அதற்குமேற்கோடியாதித்தியப்பிரகாசம் போன்றது அளவிடப்படாதவளத்தையுமுடைத்தாயுவமையில்லாததாய் அரியயிரணியகெர்ப்பன் அட்டவசுக்கள்உருத்திராகள்ஆதித்தியர்முதலாயினோர்களாலேசேவிக்கப்பட்டுக்கொண்டுசீகண்டபரமேசுரனெழுந்தருளியிருக்கு மகாசிவலோகம்பொருந்தும் அந்தச்சிவலோகத்தின்வளத்தையளவிட்டுரைக்கப்படாது அந்தப்பிர சித்திச்சிவலோகத்தைஞானயோகத்தினாலேயடைந்தவர்கள்மீளார்கள் எ று

சிறிதுகாலஞானநிட்டையையனுட்டித்திருந்தவர்கள் உமாதேவியுலகத்திலே பதினாயிரங்கற்பமாண்டங் குள்ளபோகம்பொசித்துத் தொலைந்தவாறே பிருதிவிச்சிவலோகம் வந்து பின்புகிரமத்தில் வந்து பூமியையடைந்து சிவயோகியாயத்தச்சரீரமொழிந்தவாறேமேலைச்சிவலோ கத்திலுண்டான போகம் பொசித்திருப்பார்களெனவறிக (௱௯௨)

விடுத்துவாட்கையைமெய்யுணர்ந்தையமுங் *
கொடுக்குமிற்றொறுங்கொண்டுண்டுகோவணே *
முடுத்துப்பாரிலுறவுபகையிலை *
கெடுத்தகேள்வியரவ்விடங்கிட்டுவார் *

எ- து. இல்லறவாழ்க்கையைநீங்கி மெய்ப்பொருளையுணர்ந்தில்லங்கடோறுங் கொடுக்கும்பிச்சையையுமேற்றுண்டு கோவணத்தையுடுத்துப் பூமிக்குளுள்ள பொருள்களிலுறவையும் பகையையுங்கெடுத்த கேள்வியினையுடையரோவச்சிவலோகத்திற்பொருந்திவாழ்வர்கள். எ- று. தேற்றேகாரம்வியாரத்தாற்றொக்கது. (௱௯௩)

முற்றக்காலமுமுன்னுடல்பின்னிடப் *
பெற்றுமேற்பதம்பெற்றதுமற்றிட *
வெற்றிப்பாசவிருள்வலியீடறத் *
துற்றுவார்கள்சொரூபசுகோதையம் *

எ- து. அந்தப்பிரகிருதிச்சிவலோகத்திலிருந்துமுந்தினபிரளயமளவாகவாண்டுள்ளபோகங்களைத்தினைத்துஅந்தப்பிரகிருதிசம்பந்தமானசரீரத்தைவிட்டுமேற்பதமானசுத்ததத்துவபுவனங்களை யடைந்திருந்து ஆண்டுள்ள போகம் பொசித்துத்தொலைந்தவாறேமகாசங்கார காலத்திலேவயிந்தவபாசமாகிய தேகத்தையும்விட்டுவெற்றிப்பாடுடையவாணவாதிகளின் சத்திகெடப்பரமேசுரன்றிருக்கண்சாத்தியருளமுத்திபதமாகிய சிவனுடையசீபாதத்தை யடைந்திருந்துதங்களிடத்துண்டாகியசிவானந்தானுபூதியிற்றிளைப்பர்கள். எ- று.

சித்தியார்சுபக்ஷம்எட்டாஞ்சூத்திரம். கவி. உரு

தானம்யாகந்தீர்த்தமாச்சிரமந்தவங்கள்சாந்திவிரதங்கன்மயோகங்கள்சரித்தோ
ரீனமிலாச்சுவர்க்கம்பெற்றிமைப்பளவின்மீள்வரீசன்யோகக்கிரியாசரிதையினின்
முயன்றோ, ரூனமிலாமுத்திபதம்பெற் றுலகமெல்லா மொடுங்கும்போதரன்மு
னிலாதொளியினுற்பவித்து, ஞானநெறியடைந்திடுவர்சிவனையங்குநாதனே முன்
னிற்கினனுருவர் நற்றுளே. எனவறிக

திருச்சிரபுரம் - பண் - நட்டராகம் - சம்பந்தர்

கோலமாகரியுரித்தவரரவொடுமேனக் கொம்பிளவாமை
சாலப்பூண்டுதண்மதியதுசூடியசங்கரனூர்தம்மைப்
போலத்தம்மடியார்க்குமின்பளிப்பவர்பொருகடல்விடமுண்ட
நீலத்தார்மிடற்றண்ணலார்சிரபுரந்தொழுவினைநில்லாவே

என்னும்மகாவாக்கியத்தானுங்காண்க- (ாகஅ)

ஈசனைவவிசைத்தவியற்பொருட் *
டேசணர்ந்தவருஞ்செறிவாரங்க *
வாசகத்தைமுன்சொன்னவடிவுற *
வாசைமுற்றுமறுத்தவளவிலே *

எ- து- எல்லாவாசைகளையுங்கெடுத்தகாலத்துரித்தாகுமிவையென்றுசிவபெருமானருளிச்செய்யஅதனால்யான்சொல்லியஅவ்வாசுமப்பொருட்டெளிவையறிந்தவரும்அவ்வாகமவாக்கியத்தின்முன்சொல்லியசாரூபம்பொருந்தஅச்சிவலோகத்தில்வாழ்வார்கள். எ- று. ஐகாரம்- சாரியை. (ாகக)

சிறந்ததேசத்துச்சித்திரைமாதமுன் *
பிறந்தவாரத்துட்பெற்றுச்சிரத்தைபு *

நிறைந்தநெய்யினைநின்மலர்க்காட்டிமுன் *
கறந்தபான்முதன்மற்றுங்களிப்பொடே *

எ - து- மூர்த்திவிசேடமுதலியமுச்சிறப்பும்பெற்றதலங்களிற்சித்திரைமாதம் ஆதிவாரத்தன்றன்மையுமுள்ளத்தமைத்தாக்களிப்புடனின்மலனாஞசிவபெருமானு க்குமுன்கறந்தபால்வாசனைநிறைந்தநெய்முதலியகௌவியங்களையுமற்றுந்திரவிய ங்களையும்அபிடேகித்து. - எ-று (உ௱)

செய்துமற்றவினைகளுஞ்செய்தபின் *
துய்யபாயதமாதியசொன்றியு *
மூய்யவாயிரம்பத்தரையூட்டியுண் *
மையறீர்ந்தபதின்மரும்வாய்க்கவே *

எ - து- மற்றவுபசாரக்கிரியைகளையுஞ்செய்ததற்குப்பின்புள்ளத்தின்மயக்கநீ ங்கினவாயிரத்துப்பத்தடியார்களுக்குமாட்சிமைபொருந்தப்பரிசுத்தமான பாயச முதலியவன்னங்களையும்படைத்தருத்தி எ - று- (உ௱க)

அற்றைவாரத்தரனுக்கோராயிரம் *
பெற்றம்பாதிகருவுட்பிறங்கவே *
வெற்றிவெள்விடைபத்தொடும்விட்டவர் *
்றுவாரச்சிவபுரம்பாங்கொடே *

ா - து - அந்தவாதிவாரத்தன்றுவெற்றியினையுடையவெண்மையானவானேறு டனாயிரம்பசுக்களைப்பாதிக்கருப்பம்வயிற்றுள்விளங்கும்படிசிவபெருமானுக் ்தானங்கொடுத்தவர்கள்உரிமையாகச்சிவலோகத்தைப்பெறுவார்கள் எ - று(

ஆக்களின்மகிமையுணர்த்துகிறார்

ஆக்கண்முத்தியடைவிக்குங்காரண *
மாக்களாதலிறைற்றுணையாயின *
வாக்களாக்கையிறெயுமறுத்திடு *
மாக்களேயிருளேறைய்க்குமவுடதம் *

எ - து - பசுக்களேமுத்தியைச்சேரும்படிசெய்யுங்காரணமாகும்பசுக்களேபி

றந்திறக்குமு டவிஞேனயைக்கெடுத்தல்செய்யும்பசுக்களேமயக்கத்தால்வருமிருவி னைநோய்கருமருந்தாகுமாதலினப்பசுக்களேசிற்றுயிர்க்குநற்றுணையாயின. எ-று()

இதற்குப்பினிதனைச்சொன்னேமென்றுணர்த்துகிருர்

பத்தர்காருகபத்தியர்தாங்களு *
முத்தியெய்தும்வழியுமொழிந்தனஞ் *
சித்தந்தனைச்சிறந்தபொருடனில் *
வைத்தசித்தர்பலத்தைவகுத்தபின் *

எ - து - பத்தியையுடையவடியார்களுங்காருகபத்தியமாகியவேதாக்கினியை யுடை யவந்தணருஞ்சித்தத்தைச்சிறப்பானபரம்பொருளிடத்துவைத்தசித்தர்களு ம்பொருந்தும்பலத்தைவகுத்துச் சொல்லியபின்புமுத்தியைச்சேரும்வழியுஞ்சொ ன்னேம் எ - று-
(உ௱௪)

ஞானிகள்ஒழுக்கந்தவறினுமிழுக்குருரொன்றுணர்த்துகிருர்

மெய்யுணர்ந்தசிவாகமவேதகர் *
கையிழந்திடிற்போகக்கருத்திஞு *
லேயமின்றியவருமடைவரங் *
குய்வர்மேலையுலகமொடுங்குநாள் *

எ-து. சிவாகமங்களைக் கற்றுண்மையறிந்த ஞானிக ளொருகாற் போகத்திலிச் சைவைத்தகருத்திஞு லொழுக்கந்தவறிடிற் சந்தேகமில்லாம லந்த ஞானிகளுமப் போகத்தையனுபவிப்பர்கள். அதுதொலையுநாண்மேலைச்சிவலோகத்தைப்பொருந் தியுய்வர்கள். எ-று
(உ௱௫)

ஒருபகற்பொழுதுமெய்ப்பொருளைத்தியானஞ்செய்தோர்பலத்தை
யிரண்டுசெய்யுளா லுணர்த்துகின்ருர்

உன்னிஞருமொருபகலுண்மையை *
யன்னயாரும்புரத்தையடைந்ததன் *
மன்னுபோகவிதத்தைமருவியே *
துன்னுகற்பவபுதந்தொலையவே *

எ-து. ஒருநாட்பகற்பொழுது மெய்ப்பொருளைத் தியானஞ்செய்தவரு மூலக மாதாவாண்டருளுஞ்சத்தியுலகத்தைச்சேர்ந்த தனதுபோகப்பகுப்பைபெருகிய பதினாயிரம் பிரமகற்பம் வரையும் பொசித்துத் தொலைந்துபோகப் பின்பு. எ-று. [உாகசு]

குமரன்வாழ்திருக்கோயிறுடங்கியே *
யமர்வர்பொன்னசலாந்தத்தமர்ந்தபி *
னிமையத்தென்றிசைப்பாரதமெய்துவர் *
தமையுணர்ந்தமலன்பதஞ்சாரவே *

எ-து. குமரக்கடவுள்வாழுந்திருக்கோயிலாகியகந்தவுலகுமுதல்மேருவரைய ந்தமுண்டானபோகங்களையங்கங்கமர்ந்துபொசித்தபின்புதம்மையறிந்துபின்மல னானதலைவனதுபதங்களைச்சார்ந்து பொருந்தவிமயகிரிக்குத் தென்றிசையிலுள்ள பாரதகண்டத்திற்பிறப்பர். எ-று. [உாஎ]

இந்நூலைப்படித்தவரும் அவருடன்கூடினவரும்பெறும்பலத்தையி ரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

கருமயோகத்தைக்கற்பனைநீங்கிய *
பரமயோகத்தைப்பாவவிதத்தினைத் *
தருமபேதத்தைப்பேற்றினைச்சாற்றுமிந் *
தருமவுத்தரங்கற்றவர்தாமுமே *

எ-து. கருமயோகங்களையுங் கற்பனையில்லாதபாமயோகங்களையும்பாவத் திறங்களையும் புண்ணியத்திறங்களையும் அவற்றின் பலன்களையுங் கூறுமிச்சிவதரு மோத்தரநூலைப் படித்தவர்களும். எ-று. (உாஅ)

விட்டுமுன்னையதீயவினையினை *
யட்டமூர்த்தியமருமகப்புறத் *
திட்டபோகமிதத்தொடிருப்பர்க *
ளொட்டினருமவருடனுண்மையே *

எ-து. அவர்களுடன்கூடினவர்களும் மெய்யாகமுற்பிறப்புகளிலீட்டியதீ வினைகளைக்கெடுத்தெட்டுருவாகி யெழுந்தருளுஞ் சிவபெருமானதுமிய வுலகத்த மைந்தபோகப்பகுப்புடன்வாழ்ந்திருப்பர்கள். எ-று (உாகூ)

இந்நூல்விதியையனுட்டித்தோர்முதலியர்பலத்தையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

இந்தநூன்முறைநீதியியற்றின *
ரந்தநீதிதனையறிவித்தவர் *
சிந்தைகூர்தரச்செய்வித்ததெள்ளிய *
ரிந்தமூவகையாருமங்கெய்தியே *

எ-து. இச்சிவதருமோத்தரநூலிற்கூறியபடி நீதிகளைச்செய்யுஞ் சன்மார்க்கருமந்நீதிகளையுலகிலுள்ளோருக்கறிவித்தபுலவரும்அதிற்புத்திமிகுந்துபுகும்படிசெய்வித்ததெள்ளியவுணர்வினையுடையவாசிரியருமாகியமுப்பகுப்பினரும்அச்சிவலோகத்திற்சேர்ந்து. எ-று. [௨௱௰]

அருந்தியங்குளபோகமனைத்தையும் *
பிரிந்திடாதுறப்பேணியசுற்றமும் *
பரிந்தபாசங்கள்பாற்றித்திளைப்பர்க *
ளொருங்குநாளுலகின்புதஞ்சத்தியுள் *

எ-து. விரும்பியசுற்றத்தார்களுந் தன்னைப்பிரியாமற் பொருந்தவச்சிவலோகத்திலுள்ளவெல்லாப்போகங்களையும் பொசித்துச் சுமந்தபாசங்களைக்கெடுத்தெல்லாவுலகமுமொருங்குசேருநாட்சிவசத்தியிலுண்டானபரைதெரிசனமாகியவின்பத்தையனுபவிப்பர். எ-று. (௨௱௰௧)

இந்நூலைச்சிவதீர்த்தக்கரையிற் படிப்பித்தோர் பலத்தையுணர்த்துகின்றார்

அருக்கமீந்துமமலன்றிருவேலைத் *
திருக்குளத்துமொய்த்தீர்த்தத்தினாடொறுந் *
தெரித்தவிந்தச்சிவதருமோத்தரம் *
விரிப்பிப்பார்களுமுற்பலமேவுவார் *

எ-து. பொன்களைக்கொடுத்துநிருமலனதுசிவாலயத்திருவெல்லைக்குளிருக்குந்திருக்குளத்தழகார்ந்த கரையிற்றினந்தோறும்யாந்தெரிவித்தவிச்சிவதருமோத்தரநூலைவிரித்தருத்தஞ்சொல்லும்படிசெய்விப்பவர்களுமுற்கூறியபலத்தைப்பொ

ருந்துவர்கள். எ. று. அருத்தமீந்துமென்றவும்மை - நிலமுதலியவற்றைக் கொடுத் துமென்க. (உ௱௰உ)

இந்நூல்வாசித்துமுடிக்குந்தன்மையை நான்குசெய்யுளாலுணர்த் துகின்றார்

அந்தந்தன்னிலவனிதலத்துக்கு *
நந்தநன்மைகளுண்டாவிற்றாக *
பந்தபாசம்பறிக்கும்பரமனைச் *
சிந்தைசெய்கதுதிவிதஞ்செப்பியே *

எ-து. இந்நூல்முடிவுபெறுநாளிற்பூமியிலுள்ளார்க்குமங்கலங்கண்மேன்மே லும்பெருகத் தெரிந்துசெய்க. அதுவன்றித் தொன்றுதொட்டடர்ந்த பாசங்களைக் கெடுக்குஞ்சிவபெருமானைப்பலவிதமான துதிகளைக் கூறித்தியானஞ்செய்க. எ-று. [உ௱௰௩]

பேசுநூலியன்முற்றுதல்பெற்றபின் *
கோசந்தன்னையுமுன்சொன்னகொள்கையிற் *
பூசைசாலப்புரிகபரிவுடன் *
வாசமாமலராதிமலியவே *

எ-து. யாவரும்புகழுமிச்சிவதருமோத்தரநூலினியல்கண்முடிவுபெற்றபின்ப ந்நூலையுமுன்சிவஞானதானவியலிற்கூறியவிதிப்படி மணம்நிறைந்தமலர்மாலையா திகள்பெருகும்படி பூசையைச்சிறப்புமிகச்செய்க. எ-று. [உ௱௰௪]

தேசனுக்குமெய்த்தேசிகற்குமியல் *
வாசகற்குமறையறைவார்கட்கு *
மீசனேசர்க்குங்கால்கணிலார்கட்கும் *
பூசைமுன்சொன்முறையிற் புரிகவே *

எ-து. ஞானவொளியாகியசிவபெருமானுக்கு முண்மையையுபதேசஞ்செய்யு மாசிரியனுக்குமிந்நூலிற்பொருளைச் சொல்லும் வாக்கினையுடையோனுக்கும்வேத முணர்ந்தவந்தணர்க்குஞ்சிவனடியார்கட்குங் கால்கண்முதலியவுறுப்பில்லார்கட் குமிந்நூல் முடிவுறுங் காண்முன் சொன்ன விதிப்படி பூசையைச் செய்க. எ-று. [உ௱௰௫]

இந்தவாறுபுரியிலெடரிலை *
நந்துநன்மைகளொடொறுநாடெலா *
மந்தராற்வருயர்வர்மதியுளா *
ரந்தமேலுலகாள்கையுமாகுமே *

எ-று. இந்தன்மையாகப்பூசைசெய்யிற் றுன்பங்களில்லையெல்லாநாட்டின்கண்ணுநாடோறுமங்களங்கள்பெருகுங் கூரியபுத்தியில்லார் குறைவர்கூரியபுத்தியுள்ளாருயர்வர்அதுவன்றிஅந்தமேலுலகையாளுந்தன்மையும்பொருந்தும். எ-று [உாயகூ]

ஆகமநூன்முதலியவற்றைப்பூசிப்பார் பூசியாதார்பலத்தையிரண்டுசெய்யுளாலுணர்த்துகின்றார்

புத்தகத்தினைப்பூசைபுரிகிலார் *
சித்தங்கூர்தரத்தேசிகன்றன்னையு *
மத்தகைப்பலநீங்குவதன்றியுங் *
கொத்தைபோனிரையக்குழிகூடுவார் *

எ-று. சித்தத்துஅன்புமிகுதியாகச் சிவாகம நூலினையு மாசாரியனையும்பூசைசெய்யாதவர்கண் மேற்கூறிய தகுதியான பலங்களைநீங்குவர்கள். அஃதன்றியும்பழுதானபாவிகளைப்போல நரகக்குழியினிடத்தும்வீழ்வர்கள். எ-று. உம்மைவிகாரத்தாற்றொக்கது. [உாயஎ]

ஆதலாம்புத்தகாதியருச்சனை *
காதலாற்செய்ககாமுறுவார்பலம் *
வேதனைநரகக்குழிவேண்டிலா *
ரோதெனுந்தமசத்திக்கிசையவே *

எ-று. இத்தன்மையானதான்மேலானபலன்களைவிரும்புவார்களுந்துன்பமிகுநரகக்குழியைவிரும்பாதவர்களுந் தங்கள்சத்திக்குப் பொருந்தும் வகையெவ்விதமாயினுமாகமநூலாதிகட்கருச்சனையையாசையுடன்செய்க. எ-று. [உாயஅ]

ஆகமநூலையெழுதுந்தன்மையுணர்த்துகிருர்

வேறு

அக்கரமொன்றினுக்கொன் ருடகப்பணம்வையாரியன்மு *
னக்கரமொன்றினுக்குமிடியாளன்செம்பாங்காசொன் *
றக்கரமொன்றினுக்கவிழொன்றருத்துவிக்கவாசையிலா *
ளிக்கணக்குத்தமம்பதத்துக்கிடைகடை பாட்டினுக்கியற்றின் *

எ-து இந்தஆகமநூலையெழுதவேண்டிற் பொருளுடையோனிதையெழுதும்வல்லமை யுடையநல்லோர்பாலோரொழுத்துக்கொரு பொற்காசாகவும் வறிஞராலோ ரொழுத்துக்கொருசெம்புக்காசாகவும்விருப்பற்றமெய்ஞ்ஞானியோரொழுத்துக்கோ ரவிழாகவுங்கொடுத்தும்பொசிப்பித்துமெழுதுக விக்கணக்காற்செய்தலுத்தமம்அஃதன்றியிந்நூலிலொருபதத்துக்கிவ்விதங்கொடுத்தெழுதல் மத்திமம்அஃதன்றியிந்நூற்கவியொன்றுக்கிவ்விதங்கொடுத்தெழுதலதமமாகும் எ று [உாயகூ]

ஆசிரியன்ஆகமநூலையறிவிக்குந் தன்மையுமாணாக்கன் கேட்குந்தன்மையுமுணர்த்துகின்ருர்

ஆரியனும்பலன்கருதாதறிவிக்கவாராயுங் *
ரியனுமிதற்கிதுகைம்மாறென்றுகுறியற்க *
ாரியினுக்குண்டோகைம்மாறிந்தவையகத்து *
ரியனுக்கடிமையலாலாடகங்கைம்மாருமோ *

து - ஆசாரியனுமொருபலத்தைப்பெறவேண்டுமென்றுநினையாது சீடனுக் கமநூலையுபதேசஞ்செய்க அவ்வுபதேசத்தை யாராய்ந்துகேட்குங் கூரியபுத்தி டையானுமிவ்வுபதேசத்துக்கிப்பொருளேகைம்மாறென்றுகுறித்தலையொழிக த்துக்குக்கைம்மாறிப்பூமிக்குளுண்டோவதுபோலவாசாரியனுக்கடிமையாதல ப்பொன்னுதவுதல்கைம்மாருகுமோவாகாது எ று (உாஉ0)

இந்நூலியலின்பகுப்புணர்த்துகின்ருர்

வேறு

பரமதருமமுபதேசம்பஞ்சமகாற்பலகாரணந் *
தருமங்கரிசுதற்பலங்கள்சரதமறுமைசேடவிதம் *
பரமயோகம்பரிகாரம்பசுக்கணிலவும்பதமுமென *
விருமூன்றிருமூன்றியலாகித்தருமோத்தரநூலிலங்கிடுமே *

எ-று பரமதருமாதியியல்சிவஞானதானவியல்.ஐவகையாகவியல்-பலவிசிட்ட காரணவியல்.சிவதருமவியல்.பாவவியல்.சுவர்க்கநாகவியல்.செனனமரண வியல். சுவர்க்கநரகசேடவியல்.சிவஞானயோகவியல்.பரிகாரவியல்.கோபுரவியல்.என்று சொல்லும்பன்னிரண்டியலுடன்பொருந்தியிச்சிவதருமோத்தரமென்னுமாகமம்விளங்காநிற்கும் எ-று [உ௱உக]

முடிந்ததனுமுடித்தலென்னுந்தந்திரவுத்தியாலுணர்த்துகின்றார்

வேறு

என்றுசுரபிக்குமுறுமெல்லையுமிசைத்தான் *
குன்றுவர்மடக்கொடிதனக்கருள்கொடுத்தான் *
வென்றுபுலனைந்தினையும்வெய்யவினையைய *
நின்றமுனியன்றுணரநிற்குணனினைந்தே *

எ-று வெளி (உ௱உஉ)

சிவத்துதிநான்குசெய்யுளாலுணர்த்துகிறார்

வேறு

மேலையாரிடர்போக்கியவில்லனேவிரும்புவாருளமேவியவில்லனே *
காலனாருயிர்போக்கியகாலனேகளைந்துகாப்புலகாக்கியகாலனே
யாலநீழலறஞ்சொனவாதியேயன்றயன்சிரமொன்றறவாதியே
ஞாலநீவியொடாடியசோதியேதுடர்ந்தவெங்கள்பிறப்பறச்சோ

எ-று அந்தரத்தின்மேலுலவுந்திரிபுராதிகளைக்கெடுத்தமேரு டையவனேதன்னைவிரும்புமடியார்களுள்ளத்தைஎப்பொழுதுந் யிலாகவுடையவனே காலனதுயிரைக்கெடுத்தபாதத்தையுடையவ

காத்துச்சங்கரித்துமறுத்துமுண்டுபண்ணுங்கால தத்துவத்தை யுடையவனே, கல்லானிழற்கீழிருந்துசனகராதியர்க்கறநூலையுபதேசித்தவாதியேஅக்காலத்துப்பிரமன்சிரமைந்திலொன்றறும்படிவருத்தஞ்செய்தவனேசூலத்தையுடையவ ளாகியுநீலநிறத்தையுடையவளாகியுமிருக்கிறகாளியுடனேநடனஞ்செய்ததசோதியே,தொடர்ச்சியாகவந்தவெங்கள்பிறப்பறும்படிசோதிப்பாயாக. எ று [உ௱உ௩]

சங்கைதீர்த்திடவானவர்தம்மையே யையனையவருந்திய தம்மையே *
யங்கியாகியளத்தற்கரியனேயணுக்கள்செய்யுஞ்செயலிற்கரியனே *
பங்கயத்தயன்பாம்பணைப்பள்ளியான்பயிலுமெல்லைத்திருச்சிராப்பள்ளியா *
னெங்கள்பாசமிருக்கும்விருப்பமேயாங்கள்பேரின்பிலங்கவிருப்பமே *

எ-து தேவர்கடங்களைப்பொருந்துமச்சத்தைத்தீர்த்திடவுமுமாதேவிமனையவுமுண்டதுஅந்தவிடமே.அழலுருவாகியயனுமரியுமளவிடற்கருமையானவனே.ஆன்மாக்கள்செய்யுங்கன்மங்களுக்குச்சான்றாகி யிருப்பவனே.தாமரையில் வாழும்பிரமனும்பாம்பணையிற்பள்ளி கொள்ளுமாலும்பணிவிடைசெய்யு மெல்லையாகிய திருச்சிராப்பள்ளியென்னுந்திருப்படைவீட்டையுடையவனே.எங்க ளிருவினைப்பாசங்களைக்கெடுக்கும்விருப்பமுனக்குடைமையில்யாங்கள் நிரதிசயாநந்தத்தி லென்றும்விளங்கவிருப்போம் எ று
(உ௱உச)

எனக்குண்மாசையிரித்தவியலனேயியலுமேயமுமானவியலனே *
மனத்தினுமதிக்கவரியனேமயக்கமன்பர்க்கரிக்குமரியனே *
தனக்குத்தானிணையானதமியனேசசிதனைப்பதத்தாலேதமியனே *
பனைக்கையானையுரித்தபலத்தனேபரதஞ்செய்யுந்திருவம்பலத்தனே *

எ-து எனக்குள்ளிருந்தகுற்றத்தையோட்டினவியல்பையுடையவனே,உபமானமுபமேயமுமானபொருள்விரிவையுடையவனேமனத்தினுலுந்தியானிக்கவருமையானவனே,அன்பர்களதுமயக்கமாகியவாணவவிருளைக்கெடுக்குஞானசூரியனேதனக்குத்தானே யொப்பானவொருவனேசந்திரனைப்பாதத்தாற்றேய்த்துக்கிரணங்களைப்போக்கிவறுமைப்படுத்தினவனே பனைபோன்ற புழைக்கையையுடையயானையையுரித்தவலியையுடையவனே,திருப்பாதங்களாற்பரதவிதி ப்படிநடனஞ்செய்யுந்திருவம்பலத்தையுடையவனே எ று - பாதஞ்செய்யுந்திருவம்பல த்தனேயென்றுபாடமாயின் அடியார்களுக்கு த்திருப்பாதங்களா லருள்செய்யுஞ் சிறப்பானவழகியசாயுச்சியபலத்தையுடையவனென்றுகூறுக
(உ௱உ௫)

மாலைமாற்று

வேறு

காலமேகோலமே
சீலமேபாலமே ❋
மேலபாமேலசி ❋
மேலகோமேலகா ❋
❋

எ - து முக்காலமென்னும்பொருளே, அழகென்னும் பொருளே, முக்குண மென்னும்பொருளே, மழுவைக்கரத்திலேந்தும்பொருளே, அன்பான வுள்ளத்தின் மேல்வாழும்பொருளே, உபநிடதமாகியபாவின்மேல்விளங்கும்பொருளே, யெல் லாச்சிறப்புகளின்மேலுஞ்சிறப்பான பொருளே இடபத்தின் மேலெழுந்தருளும் பொருளே, என்னைக்காத்தல்செய் வாயாக எ - று (உ௱உகூ)

குமரன்றுதியுணர்த்துகிறார்

வேறு

இருவினையாலேயிருநிதியூர்பேரினமேயோ ❋
மருவலர்மாநோய்மரணமேனுவேவருபேதம் ❋
பரிபுரபாதாபனுவலவேதாபரனேயோ ❋
சரவணசாதாவறுமுகநாதாதணிநீயே ❋

எ - து சிலம்பணிந்தபாதங்களையுடையவனே, ஆகமவேதங்களை யுடையவ னே, பரனே, சரவணப்பொய்கையிற் பிறந்தவனே, ஆறுமுகத்தை யுடைய நாத னே, இருவினைகளாற்பொருந் திப்பெருஞ்செல்வங்களென்றும் ஊரொன்றும் பெய ரொன்றும் இனங்களென்றும் பகைவரொன்றும் பெரியநோயென்றும் மரணமென் றும் வருகின்ற பேதங்களை நீயேகெடுப்பாயாக எ - று

ஏகாரங்கள் - இசைநிறை (உ௱உஎ)

அகஸ்த்தியர்துதியுணர்த்துகின்றார்

விதிநிகழ்வேதாகமவுணர்வாயேவினைதீரக் ❋
கதமுகமாமோகமுமுகமாயாகருவேயோ ❋
மதகரிபேழ்வாய்வலிமுகமாமாமனைவாழும் ❋
பொதிமலைமீதேபுரிமுனிதாளேபுகழ்வாமே ❋

எ - து மதத்தையுடையயானையும் பிளந்தவாயையுடைய சூரங்குங் காட்டுப்பசுவுமாமிருகமும் வாழாநின்றபொதியமலையிலெழுந்தருளியிருந்து தவஞ்செய்யும் அகத்தியமுனிவனதுபாதத்தை {யிருவினைதீரவுங் கோபமொழியவும் பெரியமோகமுமாயாகருவுங்கெடவும் விதிவிலக்குள்விளங்கும்வேதாகமத்தினெறியுடனே துதித்தல்செய்வாம் எ - று

ஏகாரவோகாரங்கள் இசைநிறை (உ௱உ.அ)



| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௱௪௬ | ௰௭ | எநதிழை | ஏந்திழை |
| ௩௱௫௪ | ௯ | நர்ட் | நாட் |
| ௩௱௫௫ | ௨௮ | ரன்னமூ | ரன்னமு |
| ௩௱௬௰ | ௨ | லபபாண்ட | லப்பாண்ட |
| " | " | கமுவி | கழுவி |
| " | ௨௰ | விலவத்தின் | வில்வத்தின் |
| " | ௨௧ | பொன்மாதி | போனமாகி |
| " | ௨௯ | ஓப்பில் | ஓப்பில் |
| ௩௱௬௪ | ௰௬ | சிருபதி | கிருபதி |
| ௩௱௬௫ | ௩ | பசுத்திரு | பசுதிரு |
| ௩௱௬௬ | ௩ | மெமூவா | மெழுவா |
| " | ௨௮ | களைப்ப | களைப் |
| ௩௱௬௭ | ௰௧ | தெவதை | தேவதை |
| ௩௱௭௧ | ௰௨ | யதனைக | யதனைக் |
| " | ௨௮ | மெனனு | மென்னு |
| ௩௱௭௩ | ௰௬ | அக்கினை | அக்கினி |
| ௩௱௭௫ | ௪ | வாழவுற | வாழ்வுற |
| ௩௱௭௬ | ௫ | தீவினை | தீவினை |
| ௩௱௭௭ | ௨௨ | போகுதுதல் | போகுதல் |
| ௩௱௮௨ | ௭ | தொடங்க | தோடங்க |
| " | ௨௯ | கூர்ச்சரம் | கூர்ச்சம் |
| ௩௱௮௩ | ௮ | நேரயில்லா | நோயில்லா |
| ௩௱௮௪ | ௬ | பிட்டங் | யிட்டங் |
| " | ௯ | லேப்படி | லெப்படி |
| ௩௱௮௭ | ௰௯ | வருக்யத்தை | வருக்கியத்தை |
| ௪௱௪ | ௨ | கட்கமும் | கடகமும் |
| ௪௱௫ | ௨௪ | ராதிய | ராகிய |
| ௪௱௭ | ௨௫ | அபபாதா | அப்பாதா |
| ௪௱௰ | ௰௯ | மிசைத்தாதி | மிசைத்தாகி |
| ௪௱௧௨ | ௨௪ | வாள்புரி | வாழ்புரி |
| ௪௨௯ | ௰௧ | மன்பது | மைம்பது |
| ௪௩0 | ௮ | சாகதீவு | சாகத்தீவு |
| ௪௩௧ | ௨௭ | பூமினகல | பூமியினகல |
| ௪௩௨ | ௨௭ | புறக்க்டல் | புறக்கடல் |
| ௪௫௨ | ௨௬ | ஒளியுடை | ஒளியுடை |
| ௪௫௩ | ௩ | மேமூவா | மெழுவா |
| ௪௫௫ | ௯ | ணுந்தாகுதிங்க | ங்காணுந்தகுதி |

# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ,, | ௰௬ | யான் | யான |
| ௬௫௭ | ௨௩ | நிற்ரு | நீற்ரு |
| ௬௭௩ | ௨௫ | கரிக்கப்ட்டி | கரிக்கப்பட்டி |
| ௬௭௪ | ௯ | உருத்திராகள் | உருத்திரர்கள் |
| ,, | ௨௨ | நீங்கி | நீக்கி |
| ௬௮௪ | ௨௧ | செய்யுந் | செய்யுந் |

## நிலமண்டிலவாசிரியத்தில்

| | | | |
|---|---|---|---|
| ௨ | ௨௭ | மீயுர் | மீயுயர் |
| ,, | ௨௯ | யன்ன் | யன்ன |
| ௩ | ௰௫ | னேய்து | னெய்து |
| ௯ | ௮ | தாமனும் | தானனும் |

## பிழைதிருத்தம்முற்றும்